மாணிக்கவாசகர் அருளிய

# திருக்கோவையார்

மூலமும் உரையும்



ச. தண்டபாணி தேசிகர்



மாணிக்கவாசகர் அருளிய

# திருக்கோவையார்

மூலமும் உரையும்

ச.தண்டபாணி தேசிகர்




சாரதா பதிப்பகம், சென்னை-14
☎ 044 2811 4402 / 044 2844 3791 / 97907 06548

நூல் கிடைக்குமிடம் :

AVAILABLE @ :

**கௌரா புத்தக மையம்**
9, செயின்ட் ஜான் சர்ச்சு வணிக
வளாகம், ராக்கின்ஸ் சாலை,
திருச்சி - 620 001.
9952034876 / 9943428994
04312419584.

**GOWRA PUTHAGA MAIYAM**
9, SAINT JOHN CHURCH COMPLEX,
ROCKINS ROAD, TRICHY - 620 001
99520 34876 / 04312419584.
gowraputhagamaiyam@gmail.com

**கௌரா ஏஜென்ஸீஸ்**
4A/186, V.R. பிள்ளை தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 05.
9790706548 / 9790706549
044 28443791.

**GOWRA AGENCIES**
4A/186, V.R. PILLAI STREET,
TRIPLICANE, CHENNAI - 05.
9790706548 / 044 28443791.
gowra09@gmail.com


# திருக்கோவையார் மூலமும் உரையும்

# THIRUKOVAIYAR MOOLAMUM URAIUM


விலை : ரூ. **180.00**   CODE : **1010**

எழுதியவர் :
உரை. ச.தண்டபாணி தேசிகர்
பொருள் : இலக்கியம்



பதிப்பாசிரியர் :
எஸ். கௌமாரீஸ்வரி M.A., M.L.I.S.,
பதிப்பு :
முதற் பதிப்பு – 2011
4ஆம் பதிப்பு – 2016
வெளியீடு :
சாரதா பதிப்பகம்
ஜி–4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை – 600 014.
பக்கம் : 320
ஒளி அச்சு : ஜெய் ஜீனா
அச்சிட்டோர் :
கிளாசிக் பிரிண்டர்ஸ், சென்னை–2.
ISBN :

AUTHOR :
URAI SA.THANDAPANI DESIGAR
SUBJECT : ILAKKIYAM



PUBLISHER :
S.GOWMARIESWARI M.A., M.L.I.S.,
EDITION :
FIRST EDITION - 2011
4RD EDITION - 2016
PUBLISHED @ :
SARATHA PATHIPPAGAM
G-4 SHANTHI APARTMENTS,
#3 SRI KRISHNA PURAM STREET,
ROYAPETTAH, CHENNAI - 600 014.
PAGES : 320
TYPESET BY : JAIJEENA
PRINTED @ :
CLASSIC PRINTERS, CHENNAI - 2.
ISBN :

# பதிப்புரை

சைவ நன்மக்கள் நாளும் கொண்டாடும் திருவாசகம் அருளிய மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த அருள் நூலே திருக்கோவையார். ஊனுருக உயிருருக உருகி உருகிப் பாடிய அருள் திருவாயால் தான் பெண்மைக் குணங்கொண்டு பேசிய பெருநிலையே திருக்கோவையார் என்பர். படிப்பவர் எண்ணங்களுக் கேற்ப நுகர்ச்சி இன்ப உணர்வுகளைத் தூண்டும் நிலையது. அனுபவ நிலையில் உயிராகிய தானும், நுகரப்படுகின்றன பேரருள் இன்பமாக சிவமும் என அநுபவிக்கின்ற நுட்பம் உடையது.

பன்னிரு திருமுறைகளுள் எட்டாந் திருமுறையாக திருவாசகமும் திருக்கோவையாரும் இடம் பெற்றுள்ளது. உயிராகிய தான் ஆணாக, சிவம் பெண்ணாகச் சிந்திக்க வைக்கின்ற சீரிய நூல்.

இந்நூல் சிறந்த சிவானுப நூலாகவும், காம நன்னூலாகவும் மிகச்சிறந்த இலக்கணக் கருவூலமாகவும் திகழும் அரிய நூல். திருவெம்பாவை என்னும் பாவை பாடிய வாயால் பாடப்பெற்ற கோவை நூல் இஃது என்பர். கோவைக்கு இலக்கியமாகவும் இலக்கண மாகவும் திகழும் பெற்றியது.

திருவாவடுதுறை இருபத்தொன்றாம் ஆதீனம், ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் அருளிய கட்டளையின்படி திரு. ச. தண்டபாணி தேசிகர் எழுதிய 'உண்மை விளக்கம்' என ஏற்கெனவே வெளிவந்துள்ள இந்நூல் இப்பொழுது 'திருக்கோவையார் மூலமும் உரையும்' என எமது பதிப்பகத்தின் மூலம் வெளிவந்துள்ளது. வழக்கம் போல் அருளாளர்களும் திருவாளர்களும் இந்நூலையும் படித்து இலக்கிய இலக்கண அறிவுடன் சைவப்பேரருள் சித்திக்கப் பெறுவார்களாக.

பதிப்பகத்தார்.

# முன்னுரை

------

பெற்றசிற் றின்பமே பேரின்ப மாமங்கே
முற்ற வரும்பரிசு உந்தீபற
முளையாது மாயையென்று உந்தீபற.

*மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த நூல்களில் ஒன்று திருக்கோவையார். 'திருவாசகம் திருக்கோவையார்' என இரண்டையும் ஒன்றுசேர்த்து வழங்கும் ஒருமுறையும் பழைய உரையாசிரியர்களால் கையாளப்பெற்றுவந்ததை முத்தி நிச்சயப் பேருரையிலும் ஞானாவரண விளக்கத்திலுங் காணலாம். திருக்கோவையார் சிற்றின்ப நோக்குடையானுக்குச் சிற்றின்ப நூலாகத் தோன்றும்; கணக்கறிஞனுக்குக் கணக்கு நூலாகக் காணப்படும்; அந்தணர்க்கு வேதமாம்; யோகியர்க்கு ஆகமத்தின் காரணமாம். இயற்றமிழ்ப் பேரறிஞராகிய சுவாமிநாததேசிகர் "பல்காற் பழகினும் தெரியாவுளவேல், தொல்காப்பியம் திருவள்ளுவர் கோவையார், மூன்றினும் முழங்கும்; ஆண்டினும் இலையேல், வட மொழி வெளிபெற வழங்கும் என்ப" என்பதால் இலக்கண அறிவுக்கு மிக இன்றியமையாத துணையென்று பெறப்படுகின்றதன்றோ? ஞான நூற்புலவர் இதனைச் சிவானுபவ நூல் என்பர். காமநன்னூலாகவும் இலக்கணக் கருவூலமாகவும் கண்டு காட்டியவர் நச்சினார்க்கினியரும், பேராசிரியரும் ஆவர்.*

*இந் நூற்கு ஞானபரமான கொளு ஒன்று மிகப் பழையகாலம் தொட்டே உண்டு. அதனை நன்கு விளக்கி விரித்தும் தொகுத்தும் பொருள் புலப்படுத்தியவர், திருவாசக வியாக்கியானம் செய்த காழித்தாண்டவராயர். பேரின்பங்கருதிய கொளு இன்னாரது என்று அறியப்படவில்லை ஆயினும், திருவாசக வியாக்கியான ஆசிரியர்க்கு முந்தியது என்பதுமட்டும் பல சான்றுகளால் துணியப்பெறும் உண்மை.*

*இந்நூற்கு இக்கொளுவை ஆதாரமாகக்கொண்டு பேரின்பம் கருதிய உரை இதுவரை எழுந்திலது. அந்தக் குறையைப் போக்க ஸ்ரீ - ல - ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் இவ்வுரையை எழுதப் பணித்தார்கள். இவ்வுரை பொதுவாகப் பேராசிரியர் உரையைத் தழுவி எழுதப்பெற்றது; பேரின்ப நிலையைப் புலப்படுத்த ஆங்காங்கே கூறுவோரையும் கூற்றுக்களையும் சைவசித்தாந்த சாத்திர அடிப்படையில் சிந்திக்கச் செய்கின்றது; தேவையான இடங்களில் திருவாசகம் திருமுறைகள் ஒப்புமைப்பகுதியும் விரவ*

ஆக்கப்பெற்றுள்ளது. இந்த உரையின் இன்றியமையாமையையும் அருமையையும் உரைக்கிடையில் கண்டுகளிக்கும்வண்ணம் கேட்டுக்கொள்கிறேன்.

அநுபவஞானியான மாணிக்கவாசகர் அநுபவஞான நூலாகச் செய்த இதனைக் காமநூலாகக் கருதுவது எத்துணைப் பெரும்பிழை. அதனின்று யாம் உய்ய உதவிய கொளு ஆசிரியரை மனமொழி மெய்களால் வந்தித்து வாழ்த்துகிறேன். இரண்டாவது திருவாசக மாநாட்டு மலராக இந்த அருள்நூல் வெளிவருவது மிகப் பொருத்தமானது. திருவாசகம் மணிவாசகர் தாம் பெண்மை யினின்று பேசிய பேச்சுக்கள். அநுபவ நிலையிலே நுகர்வான் உயிராகிய தானும், நுகரப்படுகின்ற பொருள் சிவமாகிய பேரின்பமுமாக இருக்கும் பெற்றியைத் திருவுளத் தெண்ணி, உயிராகிய தான் ஆணாகச், சிவம் பெண்ணாகச் சிந்திக்கவைக் கின்ற அநுபவத் திரு நூல் திருக்கோவையார். திருக்கோவை யாரைப் படிக்குந்தோறும் பேரின்ப வடிவாகிய சிவத்தை, நுகராமல் நுகரும் பெற்றியை யாம் பெற்று யாம் என்றும் நீங்காப் பேரின்ப வாழ்வில் திளைக்க வேண்டுமென்பதே வாதவூரடிகள் உள்ளக்குறிப்பு. பண்டைய மரபு கெடாது ஓரளவு அக் கருத்தை நிறைவேற்ற உதவும் உரை இது எனலாம். இதனை அச்சிடுங்காலத்துத் 'திருக்கோவையார் உண்மை' என்னும் சுவாமிநாத பண்டிதர் அவர்கள் பதிப்பும், கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் பதிப்பும் மிகவும் துணைசெய்தன. இவற்றுள் சிவக்கொழுந்து தேசிகர் பதிப்பால் கொளுவின் உண்மைப் பாடங்கள் துணியப்பெற்றன. கண்ட பாடங்கள் தாம் உண்மையென்று துணியத் திருவாசக வியாக்கியானம் பெருந்துணைசெய்தது.

திருப்பெருந்துறையைத் தம் ஆதீனத்தின் சிறப்புத்தலமாகக் கொண்டு விளங்கும் திருவாவடுதுறை ஆதீனத்து ஆதிகுரு மூர்த்திகளாகிய ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் நல்லருளும், இப்போது ஞானபீடத்து எழுந்தருளியிருந்து செங்கோல் செலுத்தும் இருபத்தொன்றாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் பேரருளும் துணைசெய்ய இவ்வுரைநூல் இனிது முற்றுப் பெற்றது. இவ்வுரையில், விரைவாலும் தளர்வாலும் பல பிழைகள் நேர்ந்திருக்கலாம். அவற்றை அறிஞருலகம் கண்டு காட்டினால் அடியேன் திருந்தியும் திருத்தியும் உய்வேன் என்பதைத் தாழ்மையுடன் விண்ணப்பித்துக்கொள்கிறேன்.

இங்ஙனம்

திருவாவடுதுறை
23.06.1965

ஆதீன மகாவித்துவான்,
**ச. தண்டபாணி தேசிகர்.**

# உள்ளே...

## நூற்சிறப்பு

உருவாருந் தமிழ்ச்சங்கத் தடம்பொய்கைத் தோன்றி
உயர்ந்தோங்கு மெய்ஞ்ஞான ஒளியையுடைத் தாகி

மருவாருங் கிளவியிதழ் நானூ(று) ஆகி
மதுப்பொருள்வாய் மதிப்புலவர் வண்டாய் உண்ணத்

தருவாரும் புலியூரின் உலகுய்யக் குனிப்போன்
தடங்கருணை எனும்இரவி தன்கதிரால் அலரும்

திருவாத வூராளி திருச்சிற்றம் பலவன்
திருவடித்தா மரைச்சாத்துந் திருவளர்தா மரையே.

------------

# திருக்கோவையார்

------------

### விநாயக வணக்கம்

எண்ணிறைந்த தில்லை யெழுகோ புரந்திகழக்
கண்ணிறைந்து நின்றருளுங் கற்பகமே - நண்ணியசீர்த்
தேனூறு செஞ்சொல் திருக்கோவை யென்கின்ற
நானூறும் என்மனத்தே நல்கு.

### நூற்சிறப்பு

ஆரணங் காணென்பர் அந்தணர் யோகியர் ஆகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்பர்
ஏரணங் காணென்பர் எண்ணர் எழுத்தென்பர் இன்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருக்கோவையார் மூலமும் உரையும்

--------------

## 1. இயற்கைப் புணர்ச்சி

------

**'இயற்கைப் புணர்ச்சித் துறையீ ரொன்பதும்**
**சத்தி நிபாதம் ஒத்திடுங் காலத்து**
**உத்தம சற்குரு தரிசன மாகும்'**

*அஃதாவது தலைமகனும் தலைமகளும் தெய்வம் இடைநிற்பப் பான்மைவழி ஓடித் தம்முட்டலைப்பெய்தாற்போலச் சத்திநிபாதமாகிய திருவருட்பதிவுபெற்ற ஆன்மா திருவருள் இடைநின்று கூட்டுவிக்கச் சற்குருவைத் தரிசித்தலாம்.*

*சத்திநிபாதமாவது மலம் பரிபாகம் எய்துதற்பொருட்டு அதற்கு அனுகூலமாய்நின்று நடத்திய திரோதானசத்தி, மலம் பரிபாகம் எய்தியவழி அக் கருணை மறமாகிய செய்கைமாறிக் கருணை யெனப்படும் முன்னைப் பராசத்தி ரூபமேயாய், ஆன்மாக்கள்மாட்டுப் பதிதலாம். இது சோபானமுறையான் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நால்வகைப்பட்டு நிகழும் என்க.*

*சத்தி நி பாதம் - சத்தியினது வீழ்ச்சி. 'நி' என்பது 'ஏற்றமாக' என்னும் பொருள்பயக்கும் இடைச்சொல். ஓரவைக்களத்தின் நடுவே ஒருகல் வீழ்ந்தால் அவ்வீழ்ச்சி அந்த அவைக்களத் துள்ளாரை ஆண்டுநின்று அகல்விக்குமதுபோல, சத்திநிபாதம் நிகழ்ந்தமாத்திரையே அஃது, அவ்வான்மாவை மனைவி மக்கள் முதலிய உலகத்துழனியின் அச்சம் நிகழ்ந்து உலகவாழ்க்கையி னின்று வெரீஇப் போந்து உண்மைக்குரவனை நாடிச்செல்லுமாறு செய்வித்தலின் அவ்வொப்புமை தோன்றச் சத்திநிகழ்ச்சி என்னாது சத்திவீழ்ச்சி என்று ஓதப்பெற்றது என விளக்கந்தருவர் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள்.*

*இங்ஙனம் இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்தி நிபாதமும் பெற்ற உயிர் சற்குருவை நாடிச்சென்று அடைதலே ஈண்டு இயற்கைப் புணர்ச்சி எனப்பட்டது. இது காட்சி முதல் பாங்கியை அறிதல் ஈறான பதினெட்டுத் துறைகளை உடையதாம்.*

## காட்சி

## 'குருவின் திருமேனி காண்டல்'

*சத்திநிபாதம் பெற்ற ஆன்மா சற்குருவை நாடி அலைந்து திருவருள் கூட்ட, அவர் திருமேனியை நன்கு கண்டு வியத்தலாம். முதற்பாட்டு என்னுதலிற்றோவெனின், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளினும் வீட்டின்பத்தை நுதலிய திருக்கோவையின்கண் கைக்கிளைப் பாலதாகிய காட்சியை உணர்த்துதல் நுதலிற்று.*

*இது கைக்கிளையாமாறு யாங்ஙனமெனின், திருவருட்பதிவு பெற்ற உயிர் பேரின்ப வாயிலான சற்குருவை நாடிக்கண்டு இன்பந் துய்க்க விரையுமாதலின் உயிரொன்றன்மாட்டே நிகழும் காமமாகக் கைக்கிளையாகிய ஒருமருங்குபற்றிய விருப்பாயிற்று என்க.*

**திருவளர் தாமரை சீர்வளர் காவிகள் ஈசர்தில்லைக்**
**குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ**
**மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்(து)**
**உருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே. 1**

*பொழிப்புரை:* சிவஞானம் மேன்மேலும் வளரும் தாமரைபோலும் முகத்தையும், கருணையாகிய அழகுமிகும் நீலமலர் போலும் கண்களையும், ஈசர் தில்லைவரைப்பின்கண் உண்டாகிய ஆசிரியத்தன்மை வளரும் குமிழ் போலும் மூக்கினையும், கோங்கமலர் போலும் மார்பினையும், செவ்விய காந்தள்மலர் போலும் கைகளையும் கொண்டு, மேம்பட்ட தெய்வமணம் கமழும் மாலை ஒரு மின்கொடிபோல் நுடங்கி, ஹம்ச நடையாகிய அசபையைப் பொருந்தி, அச்சமிடுகின்ற காமனை வெல்லும் வெற்றிக்கொடிபோல் விளங்கா நின்றது; இஃது என்ன வியப்போ என்றவாறு.

திரு என்பது ஞானம். 'பொன்னும் மெய்ப்பொருளும் தருவானை' என்னும் திருமறையில் 'திருவும் புணர்ப்பானை' என்ற பகுதிக்கண்ணும் இப் பொருட்டாதல் காண்க. ஆகவே ஈண்டுத் திருவளர்தாமரை என்றது சிவஞானம் ஒருகாலைக் கொருகால் மிக்கு வளர்ந்து கொண்டேயிருக்கும் திருமுகத்தாமரை என்பதாம். சற்குருநாதன் திருமுகம் சிவஞானத்தேன் பிலிற்றும் செந்தாமரை என வியந்தவாறாம்.

*சீர் வளர் காவிகள்* - கருணையாகிய அழகு மிகும் நீலமலர் போலும் கண்கள். சீர் - அழகு. காவி - காவிமலர் போலும் கண். கண்களே கருணையைப் பொழிந்து பரிபாகமுற்ற சீடனை வசிக்கும் அழகுடையதாகலின் இங்ஙனம் கூறினார்.

குரு - ஆசிரியத்தன்மை. கூர்த்த நாசி பிராணாயாமப் பயிற்சியையும் அதனால் விளைந்த அறிவின் பெருக்கையும் உணர்த்தி ஆசிரியத்தன்மைக்கு அணிசெய்வது ஆதலின் 'குரு வளர் பூங்குமிழ்' எனப்பட்டது. குமிழ் விளைந்த நிலம் அம்பல வாணப்பெருமான் ஞான நடம்புரியும் ஞான பூமியாகவே, குமிழ் போன்ற நாசியும் கூர்மையும் அழகும் பெற்றது. தில்லைப் பெருமானை இடையீடின்றிச் சிந்தித்ததால் விளைந்த பயன் எனக் குறிப்பார் 'ஈசர்தில்லைக் குருவளர் பூங்குமிழ்' என்றருளினர்.

கோங்கு - கோங்கமலர். பூங்குமிழ் பைங்காந்தள் என முன்னும் பின்னும் பூத்த மலர்களே அமைய நின்றமையின் கோங்கும் மலராகவே கொள்ளப்பெற்றது. கோங்கமலர் பொன்னிறத்ததாய் மலர்ந்து அகன்ற மார்பிற்கு உவமை ஆயிற்று. இடைவிடாது சிவத்தியானமும் அதனாலே உயிர்களைக் கவரும் ஒளியும் பெற்றதாகலின் மார்பைக் கோங்கமலருக்கு ஒப்புக் கூறினார்.

பசுமையாவது தன் தன்மையிற் குன்றாமை. காந்தளுக்குள்ள தன்மை ஐந்து இதழுடைமையும் அமைப்புமாகிய வடிவும், நிறமும், வண்டுகளுக்கு வரையாது தேன் சுரக்கும் வள்ளன்மையும் முதலியன. காந்தள் அவ்வகையழகோடு பரிபாகமுற்ற ஆன்மாக்களுக்குச் சிவானந்தத்தேனைப் பிலிற்றிச் சிவகந்தம் மகிழ்ந்துநாறும் சந்குருநாதன் கைகளை ஒத்தன என்க.

கொண்டு - உறுப்பாகக்கொண்டு என ஏற்றன வருவிக்க. தெய்வமரு - தெய்வமணம். மணத்தில் காமத்தை விளைவிப்பனவும், தெய்வ சிந்தனையை மிகுவிப்பனவும், கோப தாபங்களை விளைவிப்பனவும் ஆகப் பல வகையுண்டு. தாமரை முதலிய அனைத்துங்கூடிய இம் மாலை சிவசந்நிதானத்தில் அன்பர் சூட்டிய பன்மலரும் கலந்து கமழும் மணம்போலத் தெய்வ மணமாயிற்று என்பார் 'தெய்வ மரு வளர் மாலை' என்றார். எல்லா மலர்களும் விரவியமைந்த உருவொப்பு மாலை. நுடக்கமாகிய செயலொப்பு வல்லி என்க. வல்லி - மின்கொடி. மின்னல் நுடங்கித் தோன்றுவதுபோலச் சற்குருவின் திருமேனி கண்ணொளி பறிக்கும் விண்ணொளியாய்க் காணக்கிடந்தது நுடக்கத்தால் அறியப்படுவதாயிற்று என்பார் 'வல்லியின் ஒல்கி' என்றார்.

அனம் - அன்னம். அன நடை - அன்னத்தினது நடை. அனநடை என்றது ஈண்டு ஹம்சத்தியானத்தை. அசபை மந்திரத் தியானத்துடன் அனவரதமும் நடக்கும் உயிர்ப்பு. சதா சிவசிந்தனையிலிருப்பார்க்கு ரேசக பூரக கும்பகங்களாகிய உயிர்ப்பியக்கங்கள் 'அவன் நான்' என்ற அனுபவத்திலே இயங்கும். இதுவே அசபை. இதுவே அன்னம் 'ஹம்ச' எனப்படுவது. இத்தகைய நடையே அனநடை என்றது என்க.

உரு வளர் கொடி - அச்சம் மிகுகின்ற கொடி. காமன்றன் வென்றிக் கொடி. காமனை வென்ற வெற்றிக்கொடி. தன்: தவிர்வழிவந்த சாரியை.

சற்குரு மிகக் குறியனும் மிக நெடியனும் மிகப் பருத்தவனும் மிக இளைத்தவனும் ஆகாது அழகிய அவயவப் பாகுபாடுகளோடு விளங்குபவன் என்பது ஆசாரிய இலக்கணமாதலின் அங்ஙனம் அமைந்தான் என்பார் மாலையின் ஒல்கி வென்றிக்கொடிபோல ஒளிர்பவன் என்றார்.

கொடியாக உருவகித்தமைக்கு ஏற்ப ஒளிர்கின்றதே என அஃறிணை முடிபு தந்தனர். காமன் என்றது அவித்தையின் காரியமாய காம மோக மத மாற்சரியங்களை. அவை ஒளிமுன் இருள்போலச் சற்குருவின் முன்னிலையிற் கெட்டொழிதலின் அவனைக் காமன்றன் வென்றிக்கொடி என்றதாம்.

திருக்கோவையாருள் தலைவியாவாள் பேரின்ப நிலைக் களனாகிய சிவமேயாதலான் சிவத்தைக் கண்டது காட்சி என்னாது சற்குருவைக் கண்டது எனல் இயையுமாறு யாங்ஙனமெனின் "சிவமே குருஎனக் கூறினன் நந்தி" எனவும், "ஆசார்ய சிவ ஏவஸ்யாத்" எனவும் தமிழும் ஆரியமும் ஆகிய ஆகமங்கள் அறிவித்தலின் குருவைக் காண்டலே சிவமாகிய தலைவியைக் கண்டதோடொக்கும் ஆதலானும், சிவம் முதற்கண் குருவுருவிலே காணப்பெறுமாதலானும் இயையும் என்க. ஒளியான திருமேனி கண்ணைவிட்டகலாவே என்பான் ஒளிர்கின்றதே என நிகழ்கால வினைமுற்றான் ஓதினான்.

தாமரையாகிய மருதநிலத்து நீர்ப்பூவும், நீலமாகிய நெய்தனிலத்து நீர்ப்பூவும், குமிழாகிய முல்லைநிலக் கோட்டுப் பூவும், கோங்கெனப் பாலை நிலக் கோட்டுப்பூவும், காந்தளெனக் குறிஞ்சிநிலப்பூவும் ஒருங்கு தாமே இயையாவாயினும் மாலை தொடுப்போனால் ஒருங்கியையுமாறுபோல, சுத்த சாக்கிர தரிசனமும், சொப்பனத்தான போதாதீதரிசனமும், அருளாதிக் கந்தானேயான சுத்தசுழுத்தித்தான தரிசனமும், அருளுருவபேத சுத்த துரியத்தான தரிசனமும், பரமசிவ இன்பச் சுத்தாதீத தரிசனமும் ஆகிய இவற்றான் எய்தும் இன்பசுகம் அனைத்தையும் சற்குருவாகிய இவன், முதற்கண் வாயிலாகநின்று பின் சிவனேயாய்த் தருவன் என்பது உணரநின்றமை காண்க.

## ஐயம்

### 'திருமேனியை வியந்து ஐயமுறுதல்'

கண்ணுற்ற பின்னர் இங்ஙனம் அறியவரிய பரசிவம் என் போக்கியப் பொருளாகத் தெரியவந்ததே; தெரியும் இத் திருமேனி எங்குள்ளதோ என ஐயுறா நிற்றால்.

**போதோ விசும்போ புனலோ பணிக ளதுபதியோ**
**யாதோ அறிகுவ தேது மிரிதி யமன்விடுத்த**
**தூதோ அணங்கன் துணையோ இணையிலி தொல்லைத்தில்லை**
**மாதோ மடமயி லோவென நின்றவர் வாழ்பதியே. 2**

*(பொ-ரை) யமனால் விடுக்கப்பெற்ற தூதோ! வசித்தற்கரியாரை வசித்தற்கு அனங்கற்கு உண்டாயதோர் துணையோ! ஒப்பில்லாதானது பழையதாகிய இத் தில்லைக்கண் வாழ்வார் ஓர் மாதரோ! மடப்பத்தையுடைய மயிலோ! என்று கூறும்வண்ணம் நின்ற சற்குருநாதர் வாழும் இடம் தாமரைப் பூவோ? விண்ணோ? நீரோ? நாகருலகமோ? யாதோ? சிறிதும் துணிதல் அரிது என்றவாறு.*

*யமன் - விதிவழி நின்று இறைவன் ஆணையின்வண்ணம் ஊனுயிர் வேறு செய்பவன். காட்சியொன்றானே சற்குருநாதன் ஊனையும் உயிரையும் வேறுவேறாக உணரச்செய்தலின் யமன்விடுத்த தூதோ என்றானாம்.*

*மலகன்மங்கள் தம் வலிகுன்றி, வீடும் வேண்டா விறலின் நிற்கும் அடியேனையும் தன்வயப்படுத்தலின், அரூப சிவத்தின் துணையாகிய உருவச் சிவமோ என்றானாம்.*

*தெய்வ நகரமாகிய தில்லையுள் தேவரும் மக்களும் முத்தரும் பத்தரும் எஞ்ஞான்றும் கூடியிருப்பர்; அவர்களுள் இவர் யாரோ! தில்லை மாதோ! என்றானாம். சற்குரு திருவருளே வடிவாகக் காணப்பெறுவதால் 'மாதோ' என்றான்.*

*தமக்கு மலச்சார்பால் விளைந்த மயக்கத்தைத் தெளிவித்தலின் மடமயிலோ என்றான். பித்தமயக்கமுற்றார்க்கு மயிலைக் காண்டலே அது தணிக்கும் வாயிலாம் என்பது மருத்துவ மரபு. ஆதலான் இவ்வாறு கூறினன் என்க.*

*நின்றவர் - எமக்குப் பேரின்ப வாயிலாக என்முன்னே திருமேனி கொண்டு நின்றவராகிய இவர். ஊனொடு ஒன்றி ஊனே தானென மயங்கி ஊன் வளர்ச்சிக்கு உற்றனவே செய்யும் உயிரை, நீ ஊனின் வேறாவாய் என உணர்த்திப் பிரித்தும், பேரழகுப் பொருளாகிய சொக்கலிங்கத்தையே விரும்பும்வண்ணம் துணைசெய்தும், திருவருளே தானாயிருந்தும், மலமாயா கன்மங்களில் மயங்கி நிற்கின்ற நிலையைத் தரிசனமாத்திரத் தானே ஒழித்தும், இவ்வொருவரே எல்லாமாயிருத்தலின் இவ்வரிய பெருமான் நித்தியவாசம் பண்ணுவது போதிடமோ நாகருலகமோ ஏதும் அறிவது அரிது என்று ஐயுற்றான் என்க.*

*போது - தாமரை. இதயத்தாமரையில் எஞ்ஞான்றும் எழுந்தருளியிருக்கும் பரசிவமோ என்பான் 'போதோ' என்றான்.*

*எங்கும் பரந்து எல்லாம் தோன்றுதற்கும் நிற்றற்கும் இடந்தந்து அருவாய் அறிவாய் விளங்குதலின் ஞானாகாயமோ என்பான் 'விசும்போ' என்றான்.*

*புனல் - தண்ணீர். தண்ணிதாய், பிறவித்தாபம் தணிப்பதாய், கருணையே வடிவாக விளங்குதலின் வாழ்பதி 'புனலோ' என்று ஐயுற்றான்.*

*பணிகள் - நாகர்கள். பணிகள் அது பதி - போகபூமி. சற்குருநாதன் ஆனந்தமே வடிவாக விளங்குதலின் அவன் வாழ்கின்ற பூமி போகபூமியோ என்றானாம்.*

*இங்ஙனம் யாவுமாக விளங்குகின்ற சற்குருநாதன் அனைத்தியல்புகளையும் ஒருசேரப்பெற்று விளங்குதலின் அவன் வாழுமிடம் போது முதலிய குறித்த ஒன்றாகக் கொள்ளமாட்டாது; ஆகவே 'யாதோ அறிகுவது ஏதும் அரிது' என்று செயலற்று ஐயுற்றானாம். இதனால் அவன் விளங்குவது எங்கும் என்று உணரவைத்தானாம். (2)*

## தெளிதல்

### 'பார்வை போலும் வடிவென் றறிந்தது'

*எங்குமாய் நிற்கும் எம் குருநாதன் மானைக்காட்டி மானைப் பிடிப்பதுபோல எம்பொருட்டுத் திருமேனி தாங்கிவந்தான் என்று தெளிந்ததாம்.*

**பாயும் விடையரன் தில்லையன் னாள்படைக் கண்ணிமைக்கும்**
**தோயும் நிலத்தடி தூமலர் வாடும் துயரமெய்தி**
**ஆயும் மனனே அணங்கல்லள் அம்மா முலைசுமந்து**
**தேயும் மருங்குற் பெரும்பணைத் தோளிச் சிறுநுதலே. 3**

*பொ - ரை: பாய்ந்துசெல்லும் விடையையுடைய அரனது தில்லையை ஒப்பானது படைபோலும் கண்கள் இமையாநின்றன; நிலத்தின்கண் திருவடிகள் தோய்கின்றன; அணிந்த தூய்மையான மலர்கள் வாடுகின்றன; ஆதலான், இச் சற்குருநாதனை அடுத்துப் பேரின்பம் துய்த்தல் கிட்டுவதாமோ என்று துன்பப்பட்டு ஆய்கின்ற மனமே! பரஞானம் அபரஞானமாகிற தனங்களைச் சுமந்து அதனால் வருந்தித் தேய்கின்ற இடையினையும் பெரிய மூங்கில்போலும் தோள்களையும் உடைய இச் சிறிய நுதலையுடையார் போலும் குருநாதன் எங்கும் பரந்த சிவம் அல்லன்; யாம் அடியடைந்து உய்வதற்குரிய ஆசானேயாவன் என்றவாறு.*

*கண் இமைத்தலும், அடி நிலந்தோய்தலும், மலர் வாடுதலும் ஆகிய இவற்றால், எங்கும் நிறைந்த பொருளாகிய சிவம் எம்பொருட்டுத் தான் குருவாய் முன்னுணர்த்தும்*

கருணையைக் காட்டியது; அதனால் தெளிவு பெற்றேன் என்றானாம். சிறுநுதல் என்ற உருவகத்திற்கியைய அல்லள் என்று பெண்பால் முடிபு ஏற்றது. (3)

## நயப்பு

### 'திருமேனியால் பயன்பெறலாம் என்றறிந்தது'

நயப்பு என்பது விரும்புதல். அஃதாவது, எங்கும் நிறைந்த சிவயோக நாயகி எம்பொருட்டுத் திருமேனி தாங்கிச் சற்குரு நாதனாக எழுந்தருளி வந்தமையான் அத் திருமேனியால் நாம் பெறற்கு அரிய பெரும் பேறு எய்தலாம் என்று விரும்பியதாம்.

அகல்கின்ற அல்குற் றடமது கொங்கை யவையவநீ
புகல்கின்ற தென்னைநெஞ் சுண்டே யிடையடை யார்புரங்கள்
இகல்குன்ற வில்லிற்செற் றோன்றில்லை யீசனெம் மானெதிர்ந்த
பகல்குன்றப் பல்லுகுத் தோன்பழ னம்மன்ன பல்வளைக்கே. 4

பொ - ரை: அகலாநின்ற அல்குலாகிய தடம் அது; கொங்கைகள் அவை; மனமே! நீ காரணமின்றிச் சொல்வது என்னையோ? பகைவர்களுடைய முப்புரங்களின் பகைமையை மேருமலையாகிற வில்லால் செற்றவனும், தில்லைக்கண்ணுள்ள ஈசனும், எம் இறைவனும், மாறுபட்ட சூரியனது பெருமை குறைய அவன் பல்லை உகுத்தவனும் ஆகிய சிவபெருமானுடைய திருப்பழனம் என்னும் தலத்தை ஒத்த பல வளையல்களை அணிந்துள்ள திருவருட்சத்தியேயான சற்குருநாதர்க்கு இடை உண்டு என்றவாறு.

போகநிலையமாகிற அல்குலும் கொங்கைகளும் உடைமையின் இடை உண்டு எனத் துணிந்து சிறப்புநோக்கின் வாயிலாக எய்த விரும்பிய தலைவனைப்போல, ஆன்மாவும் சற்குருநாதனுடைய சிவாநந்தநிலையும் பர அபர ஞானங்களும் கண்டு நாமும் இவரை அடைதற்குரிய சந்தர்ப்பம் உண்டு என விரும்பியதாம்.

பெரும் போகத்தை எல்லையின்றி உதவும் அல்குற்றடம் போன்ற கருணை உள்ளமும், அதில் விளங்கும் ஞானங்களும் எம்மை ஏற்றுக்கொண்டு ஈடேற்றும் குறிப்பின என்று உணர்த்தியவாறு.

திரிபுராதிகள் இகல்கெடுத்ததும், சூரியன் பல்லுகுத்ததும் உயிர்களின் பொல்லாக்குணமாகிய ஆணவத்தைப் போக்கி ஆட்கொண்ட மறக்கருணை என்க. ஈசன் என்றது எல்லாம் உடைமை என்னும் குணம் உணர்த்தியது. எம்மான் என்றது ஆன்மாக்களாகிய நமக்கும் இறைவனுக்குமுள்ள அநாதி நித்திய சம்பந்தம். இத்தகைய இறைவனது பழனம், வந்த சீடனுடைய மல பரிபாகம் செய்து சத்திநிபாதம் பெறுவிக்கும் சற்குருவிற்கு வமையாயிற்று.

*பல் வளை - பலவாகிய வளையல்களை அணிந்தவளாகிய சிவசத்தி. சிவசத்தி அருளால் குருவுருக்கொண்டு வந்தமை விளக்கியவாறு.* *(4)*

## உட்கோள்

### 'தன்னிடத்தில் கருணை உண்டென்றறிந்தது'

*சற்குருநாதர்க்குத் தம்மீது அருள் சிறிது உண்டு என்பதை மலபரிபாகமுற்ற மாணவன் அறிந்ததாம்.*

அணியும் அமிழ்துமென் னாவியும் ஆயவன் றில்லைச்சிந்தா
மணியும்ப ராரறி யாமறை யோனடி வாழ்த்தலரின்
பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழமின்னும்
பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே. 5

*பொ - ரை: மின்னலையும் பாம்பினையும் ஒக்கும் இடையையும் பெருந்தோளையும் உடைய தலைவியின் படைபோலும் கண்கள், எனக்கு ஆபரணமும் அமுதமும் என் உயிரும் ஆயவனும், தில்லைக்கண் விளங்கும் சிந்தாமணி போல்பவனும், அன்பு பூணாத தேவர்களினாலும் அறியப்படாத அந்தணனும் ஆகிய அம்பலவாணப் பெருமானுடைய திருவடியை வழுத்தாதவர்களைப் போலப் பிறழுந்தோறும் பொதுநோக்கால் பிணியும் மன விருப்பை வெளிப்படுத்தும் சிறப்புநோக்கால் அதற்கு உரிய மருந்தும் ஆகாநின்றன என்றவாறு.*

*அணி என்றார் ஆன்மாவாகிய ஒளிதந்து அழகுசெய்து வேறாக நிற்றலின். அமிழ்து என்றார் சிவயோக நெறியாற் சிரத்துச்சியிலுள்ள ஆயிர இதழ்த்தாமரையில் ஊறும் அமுதமாகி உடனாய் அண்ணித்தலான். ஆவி என்றார் உயிர்க்குள் உயிராய் ஒன்றாயிருந்து உணருமா உணர்த்தலின் எனலுமாம்.*

*நடராசப்பெருமானுடைய திருவடியை வழுத்தாதார்க்கு உடற்பிணியும் உயிர்ப்பிணியும் நீங்கா ஆதலின், வாழ்த்தாதவர் களைப்போலப் பிணியாயிற்று பொதுநோக்கு என்றான்.*

*மின் புரையும் மருங்குல் என்றது தோன்றி மறைதலான்; பணி புரையும் மருங்குல் என்றது பாம்பின் படம்போலும் வடிவு ஒத்திருத்தலான் என்க.* *(5)*

## தெய்வத்தை மகிழ்தல்

### 'தன் தவத்தினை வியந்தது'

*இங்ஙனம் சிவகுருவிற்குத் தன்பால் கருணை உண்டென்று அறிந்த தலைவனாகிய சத்திநிபாதம் பெற்ற ஆன்மா, அதற்குக் காரணமான தன் பதிபுண்ணியங்களைத் தான் வியந்தது.*

**வளைபயில் கீழ்கட னின்றிட மேல்கடல் வான்நுகத்தின்
துளைவழி நேர்கழி கோத்தெனத் தில்லைத்தொல் லோன்கயிலைக்
கிளைவயின் நீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த
விளைவையல் லால்விய வேன்நய வேன்தெய்வ மிக்கனவே. 6**

*பொ - ரை: சங்கு நெருங்கின கீழ்த்திரைக்கடலிலே நின்று ஒத்த கடைக்குச்சியை இட, அது மேற்றிசைக் கடலிலிட்ட பெரிய நுகத்தினது துளைக்கண் சென்று கோத்தாற்போல, தில்லைக்கண் எழுந்தருளியுள்ள பழையோனாகிய கூத்தப்பெருமானது திருக்கயிலையிலிருந்து தேவர்களும் முனிவர்களுமாகிய அன்பர்கள் பல்லாயிரவர் கூட்டத்திலிருந்து பிரித்து, இக் கெண்டைமீன்போலும் கண்களையுடைய சிவமாகிய தலைவியைக் கொண்டுவந்து தந்த நல்வினைப்பயனையன்றி, வேறு சிறந்த தெய்வத்தை வியப்பதும் செய்யேன், விரும்புவதும் செய்யேன் என்றவாறு.*

*கீழ்கடற்கண் இட்ட கழிபோல மல மாயா கன்மங்களினிடைப்பட்டுப் பிறவிக்கடலில் தள்ளப்பட்டவன் யான் என்றும், மேல்கடற்கணிடப்பட்ட நுகம்போலத் தலைவியாகிய சிவம் அடியேனை ஏற்றுக்கொள்ளத் துளையும் கருணையும் உடைத்தாயிருந்தது என்றும், கழியை அலைத்தலைத்து நகர்த்திச் செல்லும் அலைபோல அடியேன் செய்த பதிபுண்ணியங்கள் பயன்பட்டன என்றும், நுகத்தை நகர்த்திச் செல்லச் சிவகருணை பயன்பட்டது என்றும், கோத்துக் கலக்கவேண்டுமாயின் இரண்டும் தெற்கு அல்லது வடக்காகிய ஒருதிசைக்கண் இயங்கவேண்டுமாகவே வடதிசைக் கயிலைக்கண் இயன்றது என்றும், அதுவும் என் தலைவியாகிய ஆனந்தக்கூத்தனுடைய மலையே என்றும் வியந்தானாயிற்று.*

*சிவபெருமானுக்குக் கிளைகளாவார் அரி பிரமனாதி தேவர்களும், சனகர் சனாதனர் முதலான ஞான மாணவர்களாகிய முனிவர்களும், நந்தி முதலிய கணத்தவர்களும், கங்கையும் உமையும் முதலிய தோழியரும் ஆவர். அவரிற் பிரித்து என் மாட்டுக்கூட்டிய பதிபுண்ணியப்பயனை வியந்தேன் என்பதாம்.*

*விளைவாவது பதிபுண்ணியம், அவையாவன ஞானத்தில் சரியையும், கிரியையும், யோகமும், ஞானமுமான சிவதன்மங்கள்.*

**'நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்
நல்லசிவ ஞானத்தால் நானழிய - வல்லதனை
ஆரேனும் அன்புசெய அங்கே தலைப்படுங்காண்
ஆரேனும் காணா அரன்'**

*என்றதும் காண்க.*

கெண்டையங்கண்ணி எனக் காமத்தலைவிக்கு ஏற்பக் கூறினாரேனும், கருணையால் அன்பர் மனத்தைக் கவரும் கண்களையுடையாள் எனச் சிவத்தலைவிக்கும் ஏற்பக் கூறுக.

பதிபுண்ணியத்தை வியப்பதல்லது பிற தெய்வங்களை வியவேன் நயவேன் என மறந்தும் புறந்தொழாத உறுதி கூறப்பட்டது. "பரிமேற் கொண்ட சேவகனார் ஒருவரையன்றி உருவறியாதென்றன் உள்ளமதே" "உன்னையல்லாது உள்ளம் உள்ளாது உத்தமனே" என்ற மணிவாசகமும் எண்ணுக. தெய்வங்களையே வியவாத எனக்குப் பால்வரை தெய்வம் எத்துணைத்து என்பதாம். (6)

## புணர்ச்சி துணிதல்

### 'இன்பம்பெற நினைந்தது'

பதிபுண்ணியத்தால் விளைந்த பயனாகிய சிவகுரு தரிசனத்தை மகிழ்ந்த தலைவனாகிய ஆன்மா, இது சிவன் அருளால் கிடைத்த சிவபோகம் எனத் தன் மனத்திற்குச் சொல்லிச் சிவத்தொடுகூடி இன்பம் பெறத் துணியா நிற்றல்.

**ஏழுடை யான்பொழில் எட்டுடை யான்புயம் என்னைமுன்னாள்**
**ஊழுடை யான்புலி யூரன்ன பொன்னிவ் வுயர்பொழில்வாய்ச்**
**சூழுடை யாயத்தை நீக்கும் விதிதுணை யாமனனே**
**யாழுடை யார்மணங் காணணங் காய்வந் தகப்பட்டதே.** 7

*பொ - ரை:* ஏழுலகங்களையும் உடையவனும் திக்குகள் எட்டையும் புயமாக உடையவனும் கருத்து அறியாக்காலத்திலே என்னை ஆளாக உடையவனும் ஆகிய சிவன் எழுந்தருளியுள்ள புலியூரை ஒத்த பொன் போலும் சிவமாகிய தலைவி, இடைவிடாமல் சூழ்ந்தேயுள்ள அடியார் கூட்டத்தை நீக்குதற்குக் காரணமாகிய கைம்மாறு வேண்டாத கருணையாகிற நியதியே காரணமாக மனமே! கந்தருவர் மணங்காண் இந்தப் பொழிலில் தெய்வமாக வந்து எதிர்ப்பட்டது; இனிக் கூட்டத்திற்கு உடம்படுக எ-று.

கருணையே நியதியாகச் சிவம் இப் பூமியில் எனக்கு எளிதாக எதிர்ப்பட்டது. ஆதலால், மனமே! சென்று கூடிச் சிவபோகத்தைத் துய்ப்பாயாக என்று நெஞ்சினைத் துணியக் கூறினானாம்.

ஏழுடையான் பொழில், எட்டுடையான் புயம் என்பன இறைவனுடைய உலகமேயாயிருக்கும் விராட்சொரூபத்தை உணர்த்துவன. என்னை முன்னாள் ஊழுடையான் என்பது ஆன்மாவிற்கும் இறைவற்கும் அநாதி நித்திய சம்பந்தமான ஆண்டான் அடிமைத்திறத்தை அறிவித்தது.

*புலியூர் பூமிக்கு இதயத்தானமான தகராகாசமாதலின் அது சிவன் என்றும் எழுந்தருளியிருக்கும் தலமாதல்போல இவளும் இமைப்போது என் நெஞ்சில் நீங்காதவளாக விளங்குவள், என்னால் போற்றத்தக்கவள் ஆவள் என்கின்றான்.*

*ஆயம் முன்னர்க் கூறப்பட்டது. விதி - நியதி. சிவத்தலைவிக்கு வினையும் அதுபற்றிவரும் ஊழாகிய நியதியும் இல்லை ஆகலின், பரிபாகமுற்ற ஆன்மாக்களைச் சிவபோகத்திருத்த வேண்டும் என்ற கைம்மாறு வேண்டாத கருணையே ஈண்டு நியதியாம் என்க.*

*மனனே என்றவிளி, சிவத்தைத் தலைப்பெய்யலாமா? கூடாதா? என்று ஐயமுற்ற மனமே என்பது விளங்க நின்றது.*

*யாழுடையார் - கந்தருவர். மணம் - கொடுப்பாரும் எடுப்பாருமின்றித் தாமே கூடும் கூட்டம். சிவத்தலைவி தாயுமிலி தந்தையிலித் தனிப்பெரியளாகையால் அவளைக் கொடுப்பார் யார்? பரிபாகமுற்ற ஆன்மாவிற்கும் குற்றாலத்துறை கூத்தனல்லால் உற்றார் யாருளர்? ஆகவே, இவ்விருவர் கூடும்கூட்டம் யாழோர் மணம் போல்வதாயிற்று.*

*அணங்காய் - தெய்வமாக. கும்பிடப்போன தெய்வம் குறுக்கிட்டது போல எதிர்ப்பட்டது என்பதாம். (7)*

## கலவி உரைத்தல்

### 'பெற்ற இன்பத்தை வியந்தது'

*அங்ஙனம் சிவபோகத்தழுந்திய உயிர், சிவத்தோடு இரண்டறக் கலந்தமையால் விளைந்த நிரதிசயானந்த இன்பத்தை வியந்து கூறியது.*

**சொற்பா லமுதிவள் யான்சுவை யென்னத் துணிந்திங்ஙனே**
**நற்பால் வினைத்தெய்வந் தந்தின்று நானிவ ளாம்பகுதிப்**
**பொற்பா ரறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில்வெற்பில்**
**கற்பா வியவரை வாய்க்கடி தொட்ட களவகத்தே. 8**

*பொ - ரை: பெரும்பற்றப்புலியூர் என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற அநாதியே நித்தசுத்தனாகிய அம்பல வாணப் பெருமானுடைய பொதிய மலையின்கண் உள்ள கற்பரந்த மலையிடத்துக் காவலையகன்ற களவுப் புணர்ச்சிக்கண், சொல்லின்கண்ணதாகிய அமுதுபோல்வாள் சிவமாகிய தலைவி; துய்ப்பவனாகிய யான் அவ்வமுதினை விட்டுநீங்காத சுவைபோல் வேன் என்று இங்ஙனம் துணிந்து சொல்லும்வண்ணம் நற்பகுதிக் கண் உய்ப்பதாகிய வினையாகிய தெய்வம் தந்தது என்றவாறு.*

*களவகத்துப் பொற்பு ஆர் அறிவார் எனக் கூட்டுக. தந்தின்று என்பதில் தந்து எனும் செய்தெனெச்சத்தைத் தர எனத் திரிக்க. தந்தன்று எனப் பாடம் ஓதி, தந்தது எனப் பொருள் கோடலுமாம்.*

கடி தொட்ட - காவல் அகன்ற. கடி என்னும் உரிச்சொல் காவல் எனும் பொருளது. தொட்ட - தோண்டி நீக்கிய. கடி தோட்ட என்று பாடம் ஓதி நீக்கப்பட்ட தொகுதியையுடைய களவு என்பாருமுளர். இப் பொருள் இரண்டும் சிற்றின்பக் கருத்தின தாமேயன்றி, பேரின்பம் ஆகாமை உணர்க. ஆகவே, தெய்வத்தன்மை பொருந்திய தொகுதியான உயிர்ப்பிணைப்பாகிற களவுமணம் எனக் கொள்க. இறைவன் ஆன்மாக்களை ஆட்கொள்கின்ற காலத்து ஊமைத்தகம்புள் நீர் நிறைந்தாற்போல, உயிரினிடத்து அஃது அறியாமலே உணர்வாக நிறைந்து இன்பம் பயத்தலின் இங்ஙனம் கூறினார் என்க.

சிவகுரு எதிர்ப்பட்ட காலத்து உயிர் உணர்வற்றுச் சிவமேயாய், தன் நாமமும் கெட்டு, அதுவதுவாய்க் கலக்கும் ஆதலின் 'பொற்பு ஆரறிவார்' என்றார். (8)

## இருவயினொத்தல்

### 'பெற்ற இன்பம் புதிதாய்ப் பேணியது'

சிவகுருவைத் தலைப்படாத காலத்திருந்த வேட்கை தலைப்பட்டபின்னும் குறையாது அப்பெற்றியே நின்று வளர்தலால், நுகரநுகரப் புதிதாகவே தோன்றியது என்பதாம். இருவயின் - குருவைக் கூடுதற்கு முன்னும் கூடிய பின்னும், ஒத்தல் - இன்பம் ஒத்திருத்தல் என ஒரு சொல் வருவிக்க.

**உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்**
**குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடியிடைதோள்**
**புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்**
**மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே.** 9

பொ - ரை: சிவஞானத்தால் ஒருமுறை உணர்ந்தார்க்கு மீட்டும் உணரவேண்டாமையின் உணர்தற்கு அரியவனும் தில்லைக்கண் உள்ள ஞானவெளியில் நடம்புரியும் ஒருவனும் ஆகிய இறைவனது குணமாகிய ஆனந்தம் வெளிப்பட்டாற் போலும், கொவ்வைக் கனிபோலும் சிவந்த வாயையுடைய இந்தக் கொடிபோல்வானாகிய சிவத்தலைவியின் இடையையும் தோளையும் கூடினால் கூடுந்தோறும் பேரின்பம் பின்னும் பின்னும் புதிதாக மணத்தோடு தாழ்கின்ற சுருண்ட குழலையுடையாளாகிய சிவத்தலைவியின் ஆனந்தநிலைக் களனாகிய அல்குலைப்போல வளராநின்றது என்றவாறு.

உணர்ந்தார்க்கு உணர்வரியோன் என்ற பகுதிக்குப் பேராசிரியர் 'ஒருகால் தன்னை உணர்ந்தவர்களுக்குப் பின் உணர்தற்குக் கருவியாகிய சித்தவிருத்தியும் ஒடுங்குதலான் மீட்டு உணர்வரியோன்' என்று உரை காண்பர். இவ்வுரையின்வண்ணம் இறைவனை உணர்தற்குச் சித்தவிருத்தி கருவியாதல் பெறுதும்.

*சித்தவிருத்தி என்பது உணர்த்த உணரும் சித்தாகிய உயிரின் துணையோடு அந்தக்கரணங்களுள் ஒன்றாயும், சடமாயும், ஆணவத்தின் துணையினால் கைக்கருவிபோலச் செயற்படுத்தக் காரியப்படுவதாயும் உள்ளது. அது சிவஞானம் ஒன்றானே அறியப்படுவதாகிய சிவத்தை உணர்தற்குக் கருவி ஆகாமை காண்க. 'ஊனக்கண் பாசம் உணராப் பதியை' என்ற மெய்கண்டார் வாக்கும் சிந்திக்க. ஆதலால், இவ்வுரை வழுவுடைத்தென்பர் வெள்ளியம்பலவாணர். 'ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள், ஞானத்தால் தொழுவேன் உனை நானலேன்' என்ற அப்பர் திருவாக்கும் சிந்திக்க. இங்ஙனமே இந்தப் பகுதிக்கு அவர் கூறும் பிற உரைகளும் பொருந்தாமை உணர்க.*

*பெரும் போகம் என்றது தனக்கு ஒப்பும் உயர்வும் இல்லாத சிவ போகத்தை. அது பூவினில் கந்தம் பொருந்தியவாறுபோலச் சிவத்திற்கே உரியதாய் மலம் நீங்கிய உயிரால் உணரப்படுவது. ஆதலால், சிவம் போக நிலையாகிய தலைவி ஆயிற்று. நுகர்வோன் ஆன்மாவாகிய தலைவன் ஆயினன் என்க. (9)*

## கிளவி வேட்டல்

### 'குருமொழி வேண்டிக் குறையிரந்துரைத்தது'

*சிவகுருவும் பரிபாகமுற்ற சீடனுமாகிய இருவரும் காண்டலாகிய சட்சு தீட்சையும், தீண்டலாகிய ஸ்பரிச தீட்சையும் பெற்றும், உபதேசமாகிய மந்திர தீட்சை பெறாமையின் திருவைந்தெழுத்துப தேசமாகிய ஒரு சொல்லை வேட்டு வருந்தாநிற்றல்.*

**அளவியை யார்க்கு மறிவரி யோன்றில்லை யம்பலம்போல்**
**வளவிய வான்கொங்கை வாட்டடங் கண்ணுதல் மாமதியின்**
**பிளவியல் மின்னிடை பேரமை தோளிது பெற்றியென்றால்**
**கிளவியை யென்னோ இனிக்கிள்ளை யார்வாயிற் கேட்கின்றதே. 10**

*பொ - ரை: யார்க்கும் எல்லை அறியப்படாதவனாகிய இறைவனது தில்லையம்பலம் போல, சிவகுருவினது மார்பு பரஞானம் அபரஞானமாகிய வளப்பத்தை உடையன; அவருடைய தடங்கண்கள் ஞான வாளாய்ப் பாசங்களை அறுப்பன; நெற்றி பெரிய மதிமண்டலத்தின் பிளவின் இயல்பினதாக அமுதத்தைச் சொரிவன; அவருடைய இடை மின்னொளிபோல் குண்டலினி சக்தி விளங்குவது; அவருடைய தோள்கள் பெரிய மூங்கிலைப்போல ஊறுணர்ச்சி பயப்பன; இங்ஙனம் அவருடைய தன்மை இதுவென்றால் கிளிபோல்வாராகிய அக் குருவின் வாய்மொழியைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமோ? அதுவும் இதுபோல இன்பம் பயப்பதாகவே இருக்கும் எ-று.*

இறைவன் மாற்ற மனங்கழிய நின்ற மறையோனாக, எல்லை காண்பரிய பிரானாக இருத்தலின் 'அளவியை யார்க்கும் அறிவரியோன்' என்றார்.

தில்லையம்பலம் போல் வான்கொங்கை வளவிய என்க. கொங்கை பரஞானமும் அபரஞானமுமாக உலகியல் இன்பத்தையும், சிவானந்தப் பேரின்பத்தையும் உதவும் சிவகுருவின் நெஞ்சாகக் கொள்க. பரஞானம் முத்திக்கு ஏது; அபரஞானம் உலகியல் வளப்பத்திற்கு ஏது. ஆகவே, சிவகுரு இம்மை மறுமை இன்பங்களை உதவுபவன் என்பதாம்.

வாள் - ஞானவாள். 'ஞானவாள் ஏந்தும் ஐயர்' என்னும் திருவாசகப் பகுதியையும் இங்கு நோக்குக. மாணாக்கனுடைய மல மாயா கன்மங்களாகிற கஞ்சுகங்களை அறுத்து நீக்கும் சிவகுருவினுடைய திருவருள் நோக்கமும் அச் செயல்களைச் செய்தலின் கண்களை வாளாகக் காட்டினார்.

நுதல் மா மதியின் பிளவு: நெற்றியின்மேல் காணப்படுகின்ற மதிமண்டலமாகிய ஆயிரம் இதழ்த் தாமரைவடிவாகிய சக்கரமும், அதில் பிறை மதிபோலும் உச்சியாகிய பிரமரந்திரமும். அதிலிருந்து யோகப்பயிற்சியால் ஒழுகுகின்ற அமுதத்தால் சாவா மூவாப் பெருவாழ்வை மாணவன் எய்துதலின் 'மாமதியின் பிளவு இயல்' என்றார்.

இடை : இடுப்பின் பகுதியாகிய மூலாதாரம். அங்கிருந்து தோன்றும் மூன்றரை வட்டவடிவான குண்டலினி மின்னொளி போலத் தோன்றி மறைதலின் 'மின் இடை' என்றார்.

அமை : முள் இல்லா மூங்கில். "அமையொடு வேய்கலாம் வெற்ப" என்னும் பழமொழிப் பகுதியிலும் இப் பொருட்டாதல் காண்க. அமையை ஒத்த சிவகுருவின் தோள்கள் தண்மையும், மென்மையும், பிறவித் தாபம் போக்கும் வன்மையும் உடைமையின் 'தோள் பேர் அமை' என்றார்.

கிள்ளை - கிளி. திருவருள் வடிவான சிவசக்தியின் திருக்கரத்தில் இருக்கின்ற கிளிபோல, இறைவன் திருவைந்தெழுத்தையே ஓதுதலின் 'கிள்ளையார் வாயின் கிளவி கேட்கின்றது என்' என்று விதந்து கூறினார். சிவகுருநாதருடைய பிற உறுப்புக்கள் சிவஞானத்தைத் தந்து, சிவபோகத்தைத் தருவதுபோல இதுவும் அவ்வனுபவ நிலையில் பிறழாதிருக்க வாசனாமலத்தைத் தடுத்துக் காக்கும் என்பதாம். (10)

## நலம் புனைந்துரைத்தல்

### 'அன்பால் நலம் கொண்டாடியது'

உபதேசத்தை விரும்பி மாணவன் வருந்துதலைக்கண்ட சிவகுருநாதன் புன்முறுவல் பூப்ப, அதைப்பெற்றுக் கிளவி

*பெறாமையால் உண்டாகிய வருத்தம் நீங்கி, வாயின் நலத்தைப் புனைந்துரைத்தல்.*

கூம்பலங் கைத்தலத் தன்பரென் பூடுரு கக்குனிக்கும்
பாம்பலங் காரப் பரன்றில்லை யம்பலம் பாடலரின்
தேம்பலஞ் சிற்றிடை யீங்கிவள் தீங்கனி வாய்கமழும்
ஆம்பலம் போதுள வோஅளி காள்நும் அகன்பணையே. 11

*பொ - ரை: வண்டுகளே! கைகுவித்து வணங்கும் அன்பர்களின் என்பும் உள்ளுருகத் திருநடம்புரியும் பாம்பாகிய அணிகளையுடைய கூத்தப் பெருமானது தில்லையம்பலத்தைப் பாடாதவர்களைப்போலத் தேம்புகின்ற சிற்றிடையையுடைய இவரது கனிந்த வாய்போலக் கமழுகின்ற ஆம்பற் பூக்கள் நுமது அகன்ற மருதநிலத்தே உளவோ? சொல்லுமின் எ-று.*

*கூம்பலம் கைத்தலம் - குவித்த கரம். கை குவித்து வணங்கும் அன்பருடைய எலும்பும் உருகும்படியாகக் கூத்தப்பெருமானுடைய திருநடனம் அமைந்திருக்கிறது என்பார் 'என்பும் ஊடுருகக் குனிக்கும் பரன்' என்றார். அவர் நடிக்கும்பொழுது பாம்பணிகளே நமது காட்சிக்கு மிக எளிமையாக விளங்குதலின் 'பாம்பலங்காரப் பரன்' என்றார்.*

*தில்லையம்பலத்தைப் பாடாதவர்கள் சித்தம் சிதைந்து அறிவு திரிந்து நிலைகொள்ளாது தடுமாறுவார்கள் ஆதலின், இடையின் தடுமாற்றத்திற்கு அவர்களை உவமையாகக் கொடுத்தார்.*

*அளிகாள் என்றது, பல பூக்களையும் மணத்தையும் தேனையும் நாடி அலையும் வண்டுகள்போல, அனுபவநிலையான் வேறுபட்ட ஆசிரியரிடத்து அலைந்து அலைந்து தெளிந்த சாதகர்களைக் குறித்துநின்றது.*

*மருதநிலத்து வயலை நினைவூட்டினார் பண்படுத்தப்பட்ட நிலமாதலின். பரிபாகமுற்ற இடம் என்பது குறிப்பித்தவாறு. (11)*

## பிரிவுணர்த்தல்

### 'திருமேனிப் பிரிவால் மயங்கியது'

*எல்லாவகையான தீட்சைகளையும் பெற்றுக் குருநாதனைக் கூடுவதற்கு முன்னும் பின்னும் ஒத்த அன்பினதாகிய உயிரை, இதுவரையும் இடைநின்று கூட்டுவித்த திருவருளே, இருவரின் கூட்டம் இடையீடின்றி நெடுங்காலம் இயல்வதற்காகப் பிரியாமல் பிரிக்கும்; அது பிரிவித்தவாறு ஆன்மா சிவத்தினிடம் கொண்ட இணையிலாப் பேரன்பால் இவன் பாராட்டக் கேட்டு 'இவன் பாராட்ட இருந்தோமே' என்று நாண, அதுகண்ட உயிர்*

*யான் பிரிந்து விடுவேன் என்று எண்ணியோ இவர் கவல்வது என்று உட்கொண்டு பிரியேன் என்று பிரிவின்மை கூறாநிற்றல்.*

**சிந்தா மணிதெண் கடலமிர் தந்தில்லை யானருளால்**
**வந்தா லிகழப் படுமே மடமான் விழிமயிலே**
**அந்தா மரையன்ன மேநின்னை யானகன் றாற்றுவனோ**
**சிந்தா குலவுற்றென் னோவென்னை வாட்டந் திருத்துவதே.** 12

*பொ - ரை: சிந்தாமணியும் தெளிந்த பாற்கடலினின்று எழுந்த அமுதமும் உழைப்பின்றித் தில்லையான் அருளால் தாமே கிடைக்கப்பெற்றால் அவை பெற்றவனால் அவமதிக்கப்படுமோ? இளைய மான் கண்போன்ற கண்ணினையும், மயில்போன்ற சாயலையும் உடையவளே! அழகிய தாமரையில் வாழும் அன்னமே! உன்னை யான் பிரிந்து உயிர் தரித்திருப்பேனோ? சிந்தை கலங்கி என்னை வாட்டுவது என்? என்றவாறு.*

*கிடைத்தற்கரிய பெரும்பொருள் உழைப்பின்றிக் கிடைத்தால் உவகை மீதுருமேயன்றி இகழப்படுவது இல்லை. அதுபோலக் கிடைத்தற்கு அரிய சிவகுரு கிடைத்தால் யான் ஒருபொழுதும் அவரைப் பிரிந்து இகழேன் என்பதாம்.*

*சிந்தாமணி: நினைத்தன எல்லாவற்றையும் கொடுக்கும் ஒரு தெய்மாணிக்கம்.*

*மடமான் விழி மயிலே என்று சிவகுருவாகிய தலைவியை விளித்தார். தம் மருண்ட தன்மையால் தம்மையே நோக்கச்செய்து மன ஒருமைப்பாட்டை விளைவிக்கும் கண்களையும், மயக்கம் போக்கித் தெளிவுபெறுத்தும் மயிலையும் ஒப்புக்கூறியது இந்த இரு தன்மைகளும் சிவகுருவினிடத்தும் இருத்தலால் என்க.*

*அந்தாமரை அன்னமே; தனது இதயத்தாமரையில் என்றும் வீற்றிருக்கின்ற அன்ன வடிவாகிய சிவகுருநாதனே என்பதாம். இதயத்தாமரையிலுள்ள அன்னம்போல்வாராகிய தேவரீரைப் பிரிந்து ஒருகணமும் இருக்க முடியாது என்பான் 'ஆற்றுவனோ' என்றான்.*

*எதற்கும் கலங்காத நெஞ்சமுடைய தேவரீர் பரிபாகக் குறைவால் பிரிந்துபோவேனோ என்று ஐயுறுவது எனக்கே வாட்டமாகின்றது; இங்ஙனம் செய்யற்க என்று வேண்டிக் கொண்டானாம்.* *(12)*

**பருவர லறிதல்**

**'திருவுளத்திரக்கங் கண்டது'**

*பிரியேன் என்று ஆன்மா சொல்லக்கேட்ட சிவமாகிய தலைவி, சிதானந்தப் பொருளாகிய எம்மை, உணர்த்த உணரும்*

*சித்தாகிய ஆன்மா பாராட்டுகிறதே என்று நாணிய வருத்தம் நீங்கிப் பின்னும் பெரிதும் வருந்த; ஆன்மா, சிவநாயகி வருந்துவது பிரிந்தாற் புணருதல் அரிது என்றோ? கூடியேயிருந்தால் அகலிடத் தாசாரத்திற்கு ஒவ்வாது என்றோ? இங்ஙனம் வருந்தியது என்று சிவநாயகியின் வருத்தம் அறியாநிற்றல்.*

**கோங்கிற் பொலியரும் பேய்கொங்கை பங்கன் குறுகலரூர்**
**தீங்கிற் புகச்செற்ற கொற்றவன் சிற்றம் பலமனையாள்**
**நீங்கிற் புணர்வரி தென்றோ நெடிதிங்ங னேயிருந்தால்**
**ஆங்கிற் பழியா மெனவோ அறியேன் அயர்கின்றதே. 13**

*பொ - ரை: கோங்கின்கண் உண்டாகிய பொலிந்த அரும்பை ஒத்த பரஞான அபரஞானமாகிற முலையையுடைய உமாதேவியாரை ஒருபாகமுடையவனும், பகைவரூர்களாகிய முப்புரங்களும் தீமையிற்புக்கு அழியவென்றவனும் ஆகிய அம்பலவாணப் பெருமானது சிற்றம்பலத்தை ஒத்த சிவமாகிய தலைவி வருந்துவது பிரியின் கூடுதலரிதென்று நினைந்தோ, நெடும்பொழுது இங்ஙனம் கூடியேயிருந்தால் பிறந்த இல்லுக்குப் பழி விளையும் என்றோ அறியேன் என்றவாறு.*

*உமாதேவியாரின் இரு தனங்களும் பர அபரஞானங்களாம் என்க. அருளாதலே கருத்தாக அம்மையோடு எழுந்தருளியிருப்பவன் என்பார் 'கொங்கைபங்கன்' என்றார்.*

*சிவபூசையும் சிவத்தொண்டும் செய்யும் புண்ணியத்தைப் பெற்றும் பாசண்டக் கொள்கையைப்பற்றிச் சிவநெறியினின்று விலகினார்களாதலின் 'குறுகலர்' என்றார்.*

*சிற்றம்பலம் பரஞான வெளியாய்ப் பேரின்ப நிலைக்களனாதல் போலச் சிவமாகிய தலைவியும் விளங்குதலின் 'சிற்றம்பலமனையாள்' என்றார்.*

*நீங்கில்: இருவினையொப்பும் மலபரிபாகமும் பெற்றுத் தன்னை வந்தடைந்த உயிர் வாசனை தாக்கப் பிரியுமாயின் தடுத்தாட்கொண்டாலன்றித் தன்னைச் சாராதொழியும் என்று இரங்கியோ என்பார் 'நீங்கில் புணர்வரிதென்றோ' என்றார்.*

*இங்ஙனம் நெடுநேரம் சிவபோகத்தழுந்தி அசைவற்று இருந்தால் இவன் உலகியலுக்கு ஒவ்வான் பித்தர் பிசாசர் போன்றிருக்கின்றானே என்று ஆன்மா பழிதூற்றப்படும் என்று இரங்கியோ வருந்துவதன் காரணம் யாதோ அறியேன் என்றதாம்.*

*பரங்கருணைத் தடங்கடலாகிய பரசிவம் தன்னைச்சார்ந்த உயிர் பிரியாதிருக்கவும், உலகு தூற்றாதிருக்கவும் ஆன்மாவைச் செய்து தன்னடிக் கீழிருத்தும் என்றவாறு. (13)*

## அருட்குணம் உரைத்தல்

**'அருட்குப் பிரிவில்லை என்றறிந்தது'**

*இவ்வண்ணம், இற்பழியாம் என்று கூறக்கேட்ட தலைமகளாகிய சிவம், எம்மோடு எஞ்ஞான்றும் உடனுறையும் திருவருட்சத்தி அறியின் விளைவதுயாதோ என்றுட்கொண்டு பிரிவிற்கு ஒப்பிப் பிரிவையாற்றாது வருந்த, சிவானுபூதி பெற்ற ஆன்மா, சிவத்தலைவி பிரிவிற்குத் துணியும்வண்ணம் யாம் பிரிந்தேமாயினும் பிரிவில்லை எனக் கூறுதல்.*

**தேவரிற் பெற்றநம் செல்வக் கடிவடி வார்திருவே**
**யாவரிற் பெற்றினி யார்சிதைப் பாரிமை யாதமுக்கண்**
**மூவரிற் பெற்றவர் சிற்றம் பலமணி மொய்பொழில்வாய்ப்**
**பூவரிற் பெற்ற குழலியென் வாடிப் புலம்புவதே. 14**

*பொ - ரை: அழகுமிக்க அறிவான சிவத்தலைவியே! குருதேவரால் பெற்ற நமது செல்வத் திருமணத்தைப் பிரிக்கக்கூடிய வன்மையை யாரிடமிருந்து யார் பெற்று பிரிப்பவர்? மூன்று சுடரையும் இமையாத மூன்று கண்களாகப் பெற்ற ஆனந்தக் கூத்தப்பெருமானுடைய சிற்றம்பலத்தை அழகுசெய்த, செறிந்தபொழிலிடத்து உண்டாகிய பூக்கள் பிணைந்த கூந்தலையுடையாய்! நீ வருந்திப் புலம்புவது எற்றுக்கோ? என்றவாறு.*

*தேவர் என்றது நல்லூழை. தந்தையைக் குழவிக்கு அறிவிக்கும் தாய் போலச் சிவத்தைச் சீவனுக்கு அறிவித்து இவளே உனது இன்பத் தலைவி என்று ஞானதீட்சையாகிய திருமணம் செய்விப்பது பதிபுண்ணியமாதலின் 'தேவரிற்பெற்ற தம் செல்வக்கடி' என்றார். செல்வக்கடி - செல்வத்திருமணம் கட்டாயத்திற்கன்றிக் கனிந்து இருவரும் மணந்த மணம்.*

*திரு - ஞானம்; ஞானத்திற்குத் தனி வடிவின்றாதலின் ஞானம் வடிவு பொருந்தினால் இன்னது ஆம் என்பார் 'வடிவார் திருவே' என்றார்.*

*யாவரின் பெற்று: ஆசாரியன் கருணைக்கண்ணோக்கம் செய்தருளிச் சேர்த்துவைத்த சிவசீவ சம்பந்தத்தை வேறுபடுத்தும் வன்மை எவர்க்கும் இல்லை என்ற துணிபுபற்றிக் கூறியதாம்.*

*'இனி' என்பதன் குறிப்பு சிவசீவர்கள் இயைவதன் முன்பாயின் தடைகளால் இணையாதவண்ணம் பிரிக்கலாம்; தடைகளை நீக்கிக் குருநாதன் சேர்க்கக் கலந்து ஈருடலின் ஒருயிரேமாயினபின் என்பது விளங்க நின்றது.*

*யார் என்றது, சிவனருளின்முன்பு நின்று, அதன் செயலைத் தடுக்க வல்லவர் ஒருவருமிலர் என்பது விளங்க நின்றது.*

அவரவர்கள்செய்த புண்ணியத்தால் மண்வளமும் மழையும் பாரும் துணைக் காரணங்களாக நிற்க, மழையால் நெல் விளைந்தது என்றதுபோல மூன்று கண்ணையும் மூவராலே பெற்றவர் என்றாரேனும் இறைவன் மூன்று சுடரையும் முக்கண்களாக ஏற்றுயர்த்தினர் எனக்கொள்க.

பூ அரில் பெற்ற குழலி - அன்பர்கள் சாத்திய பூக்கள் பிணங்கிக் கிடக்கும் குழலையுடையாளாகிய சிவநாயகி.

பரிபாகமுற்ற ஆன்மாவாகிய தலைவன் பிரிந்துவிடுவானோ என்று கருணையினால் இரங்கித் துன்புறுவது என்னோ எனச் சிவநாயகிக்குள்ள வாட்டமும் துன்பமும் கூறினானாம்; இது கருணையின் விளைவு எனக் கருதுக.

## இடமணித்துக் கூறி வற்புறுத்தல்

### 'பிரிதல்போல் அன்றிப் பிரிவில்லை என்றது'

பிரிவுண்மை கேட்ட சிவத்தலைவி கருணைமிக்குப் பிரிவாற்றாது வருந்த, எள்ளினுள் எண்ணெயும், பாலில் நெய்யும், மணியுள் ஒளியும் போல எம்மிடை நும்மிடைப் பிரிவென்பது ஏது? இது பிரிதல் போலுமேயன்றி உண்மையிற் பிரிவில்லையாம் என்று தெளிய விண்ணப்பித்ததாம்.

**வருங்குன்ற மொன்றுரித் தோன்றில்லை யம்பல வன்மலயத்(து)**
**இருங்குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்தலெம்மூர்ப்**
**பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும்மூர்க்**
**கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே. 15**

பொ - ரை: நடைமலையாகிய யானையை உரித்துப் போர்த்தவனாகிய தில்லையம்பலத்தானது பெரிய மலையாகிய பொதியின்மலையின்கண் வாழும் கயிலைவாணராகிய மகளே! கருணையால் விளைந்த இரக்கத்தை விடு; கனங்குழாய்! எம்மூரிடத்துள்ள பெரிய மலைபோலும் மாளிகைகளின் நுண்ணிய சாந்தினொளி பரந்து நுமது ஊர்க்கண்ணதாகிய கரியமலை வெண்ணிறச் சட்டையிட்டதனோடு ஒக்கும் என்றவாறு.

குன்றம் - மலை. உவம ஆகுபெயராகவும் வருங்குன்றம் என்ற குறிப்பாலும் யானையை உணர்த்திற்று.

உரித்தோன் - உரித்துப் போர்த்தோன். யானைத்தோலை உரித்துப் பச்சைத்தோலைப் போர்த்தியும் இறவாதிருந்து தன் முதன்மையை அனைவருக்கும் உணர்த்தியவன் என்க.

வீரட்டானத்தில் உருமேனிதாங்கி வீரம் புரியினும், ஞானாகாயமான சிற்றம்பலத்தே மந்திரவடிவாயும், ஞான

வடிவாயும் எழுந்தருளியிருப்பவன் என்பார் அடுத்துத் 'தில்லை அம்பலவன்' என்றார். அம்பலம் - வெளி.

இரும் குன்றவாணர் இளம் கொடியே - பெரிய கயிலை மலையாகிய ஞானபூமியில் வாழ்தலையுடைய சிவபெருமானாகிய கொடியே என இவ்வுரைக்கு ஏற்பக்கொள்க.

இடர் - ஏனைய தலைவியர் உறுவதுபோலப் பிரிவால் விளையும் இடர் அன்று; கருணையால் விளைந்த இரக்கம்.

இரசவாசனை பெற்றுச் செம்பு பொன்னாயினாற்போலச் சிவகருணை பெற்றே சீவன் சிவனாகவும் எம் ஊர் மாளிகையின் வெள்ளொளிபாய நும்மூர்க் கருங்குன்றம் வெள்ளைச்சட்டை அணிந்ததுபோலாம் எனத் தன் சிறப்புத்தோன்றக் கூறுகிறான்; தான் நுகர்வோன் என்ற சாத்துவிக அகங்காரம் சிறிது தலை தூக்கலின். உண்மை அறிந்து ஒன்றுவனாயின் பின் நான் இவளாம் பகுதிப் பொற்பு ஆரறிவார் என மடங்குதல் காண்க. (15)

## ஆடிடத்து உய்த்தல்

### 'சிவம் அருளுடனே சேர்தலறிந்தது'

இங்ஙனம் அணுமைகூறி அகலாநின்ற ஆன்மாவாகிய தலைவன், சிவத்தலைவியை நோக்கி, நீ விளையாடுகின்ற இடத்திற்போய் விளையாடு என இடத்து அடைவிக்கச் சிவத் தலைவி திருவருளோடு கூடிக் குலாவுதலை அறிந்து இன்புற்றது.

**தெளிவளர் வான்சிலை செங்கனி வெண்முத்தந் திங்களின்வாய்ந்**
**தளிவளர் வல்லியன் னாய்முன்னி யாடுபின் யானளவா**
**ஒளிவளர் தில்லை யொருவன் கயிலை யுகுபெருந்தேன்**
**துளிவளர் சாரற் கரந்துங்ங னேவந்து தோன்றுவனே.** 16

பொ - ரை: கால்நிமிர்ந்த பெரிய சிலைகளை ஒத்த புருவமும், சிவந்த கொவ்வைக்கனியை ஒத்த இதழும், வெண்முத்துக்களைப் போன்ற பற்களும், ஒரு முழுமதிபோலும் முகத்திலே பொருந்தக், கருணைமிகுந்த பூங்கொடியையொத்த தலைவியே! யான் சொன்னவற்றைத் தெளிவாயாக; ஆயத்துடன் சேர்ந்து முற்பட்டு விளையாடுவாயாக; ஒளி வளராநின்ற தில்லைக்கண் எழுந்தருளியுள்ள யாரானும் அளக்கப்படாத ஒருவனது திருக்கயிலைக்கண் சிந்துகின்ற பெரிய தேன்துளிகள் இடைவிடாது பெருகுகின்ற சாரற்கண் உள்ள சோலையில் மறைந்து, யான், பின்னும் உவ்விடத்தே வந்து தோன்றுவன் என்றவாறு.

சிலை முதலியவற்றைத் திங்களின் வாய்ந்த வல்லி எனக்கூட்டுக.

கண்களின் புருவங்கள் நெற்றியின்மேலேறி வளையின் சினத்தையும், வளைவின்றிக் கிடக்கையிலே கிடப்பின்

அமைதியாகிய சாந்தத்தையும் அறிவிப்பன; ஆகவே ஈண்டுச் சிவத்தலைவியின் புருவங்கள் நிறைமதியின்கண் கால்நிமிர்ந்த வில்லைப்போலக் கிடக்கின்றன என உருவகிக்கும் தலைவன் அமைதிக்கு நிலைக்களனாய் அருட்பார்வையாய்க் கிடப்பன அத் தலைவியின் கண்கள் எனக் குறிப்பித்தானாம்.

நிறத்தால் வசித்து, சுவையால் இன்புறுத்தும் கொவ்வைக் கனி போன்றன உதடுகள் என்றதால் தலைவன் தான் சுகம் ஆயினமை தோன்ற உரைத்தானாம் என்க.

அளிவளர் வல்லியன்னாய் என்பதில் வளர் என்னும் வினைத்தொகையை அன்னாய் என்பதனோடு கூட்டிக் கருணை மிகுகின்ற கொடியை ஒத்த சிவத்தலைவியே என்க. சிவத்தலைவியை வல்லியென்றான் சாதகருள்ளத்து மின்னற் கொடிபோன்று தோன்றி மறைதலின்.

சிவப் பேரொளி, கருவி கரணங்களாகிய மாயேயங்கள் துணைக்கொண்டும் வேத மிருதி ஆகமங்களாகிற பாச ஞானத்தானும் அளந்தறிய ஒண்ணாதாதலானும் அளந்தறியுந் தரத்தினர் எவரும் இலராதலானும் 'அளவா ஒளிவளர் ஒருவன்' என்றான். ஒருவன் என்றதற்குத் திருவண்டப்பகுதியில் 'ஒருவன் என்னும் ஒருவன்' என்ற பகுதிக்கு உரைத்தாங்குக் கொள்க. 'ஏகன்' என்னும் சொல் காரணக்குறியாய் அவரவரும் தத்தம் தெய்வங்கட்கு உபசார முதலியவற்றான் இடப்படுவதாகவுமன்றி அச்சொல்லுக்கே உரிய பொருளானவன் என்ற நயமும் ஓர்க.

இதுவரை நிஷ்கள சிவமாகிய தலைவியோடு கூடிச் சிவானந்தமுற்றுப் பிரிகின்ற தலைமகனாகிய பரிபாகம்பெற்ற ஆன்மா, யானை படுத்தால் குதிரை மட்டமாதல்போல, நிரதிசயானந்த இன்பத்தினின்று பிரியின் எவ்விடத்துப் பிரிவன்? நிஷ்களசிவம் சகளத் திருமேனிகொண்டு சகலான்மாக்களுக்குக் கருணைபண்ணும் கயிலைமலைச் சாரற்கே பிரிவன்; ஆதலால் கயிலைச் சாரற்கரந்து உங்ஙனே வந்து தோன்றுவன் என்றான்.

கயிலைச் சாரலிலே வேறாயிருந்து கண்டு கேட்டு உண்டு உயிர்த்த அநுபவ முதிர்ச்சியால் உவ்விடத்தே வந்து அவனே தானேயாகிய நெறியாகிய இன்பக் கலவியில் உன்னோடு கலப்பேன். தெளி, விளையாடு என்றானாம். அநாதியே தெளிந்த சிவத்தலைவியைத் தெளி என்றது தன்சொற்கண் உறுதிகாட்டக் கூறிய உபசார வழக்காம் என்க.

ஆன்மாவை ஆட்கொண்டு அருளனுபவந் தந்த பேருபகாரத்தையே எண்ணி ஒதுங்கியிராது ஆயத்தாரோடு கலந்து முற்பட்டு விளையாடுக என வேண்டிக்கொண்டவாறாம். 'முன்னி ஆடு' என்றது. (16)

## அருமை அறிதல்

**'கண்ட இன்பம் கனவென வியந்தது'**

*சிவத்தலைவி வாழ்கிற பரமானந்தப் பெருவெளியாகிய சூழலையும், உடனாடுகின்ற ஆயமாகிய மெய்ஞ்ஞானிகளின் கூட்டத்தையும் கண்டு இத்துணைப் பெரிய பிராட்டியோ எம்மால் அடையப்பெற்றவள்! இவளை யானெய்தினேன் என்பது மாயமோ? கனவோ? என்று வியவாநின்றது.*

**புணர்ப்போன் நிலனும் விசும்பும் பொருப்புந்தன் பூங்கழலின்**
**துணர்ப்போ தெனக்கணி யாக்குந் தொல்லோன்றில்லைச் சூழ்பொழில்வாய்**
**இணர்ப்போ தணிகுழ லேழைதன் நீர்மையிந் நீர்மையென்றால்**
**புணர்ப்போ கனவோ பிறிதோ அறியேன் புகுந்ததுவே.** 17

*பொ - ரை: மண்ணையும் விண்ணையும் இவற்றிடை விளங்கும் மலைகளையும் படைப்போனும், தன்னுடைய பொலிவினையுடைய திருவடிகளாகிற பூங்கொத்துக்களை எனக்கு அணியாக அளித்தருளும் தொல்லோனுமாகிய அம்பலவாணப் பெருமான் எழுந்தருளியுள்ள சிதாகாசப் பெருவெளியாகிய தண்ணிய பொழிலிலே பூங்கொத்துக்களை அணிந்த கூந்தலையுடைய சிவத்தலைவியின் தன்மை இதுவாம் எனின், இவளை யான் பெற்றது உள்ளபடி புணர்ச்சிதானோ? அன்றிக் கனவோ? வேறு எதுவோ? புகுந்த இன்பம் எத்தகைத்தென்று அறியேன் என்றவாறு.*

*நிலன் என்றது மண்ணையும் அதனைப் போகத்தானமாக்கி வினைகளை நுகரும் மக்கள் முதலாய உயிர்களையும் என்க. அங்ஙனமே விசும்பு முதலிய ஏனையவற்றிற்கும் கருதுக. பருப்பொருட்டாகிய மண்ணையும் அதனைத் தன் வியாபகத்துள் அடக்கிநிற்கும் நுண்பொருட்டாகிய விண்ணையும், இடைப்பட வளர்வும் தேய்வும் மாற்றமும் தோற்றமும் உடைய மலையையும் கூறவே ஏனைய பூத பௌதிகங்களையும் படைப்போன் பரமன் எனக்கொள்க. மலைக்கு ஆதாரமாக நிலனையும் வியாபகமாக விண்ணையும் புணர்ந்தவன் எனலுமாம். இதனால் போந்தபயன் தாங்கும் பொருளையும் தரிக்கும் பொருளையும் தந்து உதவுபவன் என்பதாம். எனக்குத் திருவடிதீக்கை செய்தலால் திருவடி மலரை முடிக்கு அணியாக்கக் குருமேனிதாங்கி எழுந்தருளிவந்த மிகமிகப் பழையோன் என்பதாம்.*

*தன் சங்கற்ப மாத்திரையானே படைத்தலும், குருமேனிதாங்கி வந்து அருளுதலும் உடையவன் எழுந்தருளியிருப்பது ஞானவெளியே ஆதலின் அவனது தில்லை என்றான். தில்லை - சிதாகாசம்.*

*மெய்ஞ்ஞானியர் தம்மை வாசனை தாக்காதிருத்தற்காக இடைவிடாது சாத்தும் பூங்கொத்துக்களைத் தம் சடாபாரத்து*

உடைமை சிவத்தலைவிக்கு இயல்பாதலின் அவளை 'இணர்ப் போது அணிகுழல் ஏழை' என்றான்.

சிவபோகம் இங்ஙனம் இருந்தது என்று உரைக்க மாட்டாமையின் தானறியளவைப் புலப்படுக்க 'நீர்மை இந்நீர்மை என்றால்' என்றான்.

புணர்ப்பு - கலவி. கனவு - இடைவிடாத எண்ணமுதிர்ச்சியால் விளைந்த சொப்பனம். புணர்ப்பாயின் என் இழிநிலைக்கு இத்தகைய பர சிவத்தலைவி கிடைத்திருக்கமாட்டாள் என்பது துணிவு. சிவபோக நுகர்ச்சி உயிரனுபவமாக உணர்வாக ஒட்டி நிற்கின்றது. ஆகவே கனவாக இருக்கலாம்; ஆயின் கனவாய்ப் பொய்த்தோற்றமாகாது உண்மையாய் இதோ உணர்கின்றேன் ஆதலான் இவை இரண்டும் அல்லாத ஏதோ சொல்ல இயலாத ஒன்றாகவே இருக்குமோ என்று வியக்கின்றான்.

புகுந்தது - புகுந்ததாகிய இன்பம். (17)

## பாங்கியை அறிதல்

### 'சிவம் அறிவிக்கத் திருவருளைக் கண்டது'

அருமையை அறிந்து வருந்தாநின்ற ஆன்மத்தலைவன், மெய்ஞ்ஞானியர் கூட்டத்தில் புகுந்த சிவத்தலைவியின் கண்களில் கருணை நிறைதலைக்கண்டு, இவளுக்குத் தோழிபோல்வாள் இவளைவிட்டு நீங்காத திருவருள்போலும் என உட்கொண்டு, அவள்வாயிலாக இனி நாம் இவளை எய்தலாம் என அறிதல்.

**உயிரொன் றுளமுமொன் றொன்றே சிறப்பிவட் கென்னொடென்னப்**
**பயில்கின்ற சென்று செவியுற நீள்படைக் கண்கள்விண்வாய்ச்**
**செயிரொன்று முப்புரஞ் செற்றவன் தில்லைச்சிற் றம்பலத்துப்**
**பயில்கின்ற கூத்த னருளென லாகும் பணிமொழிக்கே.** 18

பொ - ரை: விண்ணிடத்துக் குற்றம்பொருந்திய மூன்று புரங்களையும் அழித்தவனும், தில்லைக்கண் உள்ள சிதாகாயப் பெருவெளியில் இடைவிடாது ஞானநடம் புரிகின்றவனுமான அம்பலவாணப் பெருமானுக்கு அருள்போல என்னோடு இவட்கு, உயிரும் உளமும், இருமுது குரவர்களால் செய்யப்பெறும் சிறப்புக்களுமாய எல்லாம் ஒன்றே என்று சொல்லிப் பணிந்த மொழியினை உடையாளாகிய தலைவிக்கு, செவியுறநீண்ட வேற்படைபோலும் கண்கள் இவள்பாற்சென்று பயில்கின்றன; அதனால் இக்கூட்டத்தில் இவள்போலும் சிறந்தாள் என்றவாறு.

அம்பலவாணப் பெருமானுக்கு அருள் சிறந்தாதல்போல இவளுக்குப் பாங்கி சிறந்தவள் எனத் தலைவன் திருவருளைச் சிவத்தைப் புணரும் வாயிலாக அறிந்தான் என்பது கருத்து.

திருவருள் சிவத்தலைவியோடு, அதுபழச் சுவையென அமுதெனப் பிரித்துணர முடியாது பூவண்ணம் பூவின்மணம் போலக் கலந்திருப்பதொன்றாதலின் எல்லாம் இவட்கு என்னொடு ஒன்றென்று எண்ணும் இயல்பினவாயிற்று என்பதாம்.

சிவன் முப்புரங்களையும் அழித்துத் திரிபுராரிகளுக்கு வாயிற்காவல் நல்கி நித்தியசேவை அளித்ததுபோல, சிவனருள் ஆன்மாக்களின் மும்மல காரியங்களை அழித்துத் தூய்மை யுறுத்திச் சிவபோகத்தை அருளும் வாயிலாவதை ஆன்மத் தலைவன் தெளிந்தான் என்பதாம்.

இங்ஙனம் இப் பதினெட்டுக் கட்டளைக் கலித்துறைகளும், சத்திநிபாதம் ஒத்தகாலத்து உத்தம சற்குருவைக்கண்டு இடைவிடாது கூடிநின்று சிவத்தலைவியைப் புணர்ந்து அவள் காட்டத் திருவருளாகிற பாங்கியை உணர்ந்த அநுபவங்களை அறிவிப்பன. (18)

## உ. பாங்கற் கூட்டம்

*தெய்வப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் 'யாம் சிவத்தலைவியை என்றும் பிரியாதே வாழ்தல்வேண்டும்' எனத் தெளிந்து, சிவ தீக்கைகளானும் உபதேசங்களானும் சிவயோகத்தானும் வரைந்துகொள்ளும் கடப்பாடு உடையவனாவன். அங்ஙனம் அறிவு தெளியானாயின் பாங்கன்போல்வதாகிய தற்போத அகற்சியானாதல், தந்ததெய்வம் தருமெனத் துணிந்து இடந்தலைப்படுவதானாதல் எய்துவன். அவற்றுள் தற்போதம் அகறலாகிய பாங்கற்கூட்டம் உணர்த்துகின்றார்.*

**'பாங்கற் கூட்டம் பதினெட்டின்பம்**
**தாங்குதற் போதம் தான்கண் டகறல்'**

அஃதாவது பாங்கற் கூட்டமாகிய பாங்கனை நினைதல் முதல் அவ்விடத்தேகல் ஈறான பதினெட்டுத் துறைகளும் சிவத்தலைவி யோடு, கலந்துநின்றகாலையில் அநுபவமான சிவபோகத்தை ஆன்மாவாகிய தன்னறிவால் காணலாம் என்றெண்ணித் தற்போதத்தைத் துணையாக்கொண்டு சென்று, அது முற்றப் பயன்படாமை கண்டு தெளிந்து திருவருள் ஒன்றே இறுதிவரை துணைசெய்வது என்று தேறித் தற்போதம் அகறலாம்.

### பாங்கனை நினைதல்

**'அருள்போற் போதம் ஆமென நினைந்தது'**

இயற்கைப்புணர்ச்சியறுதிக்கண் இடமும் சூழலும் நோக்கி இவள் எய்துதற்கு அரியாள் என்றெண்ணி வருந்திய தலைமகன் சிவத்தலைவியின் காதற்றோழி திருவருளே என்றறிந்தும், அத் தோழி எனக்குச் சிறந்தாளல்லள்; எனக்குச் சிறந்தான் என் ஆன்ம

*அறிவாகிய பாங்கனே; அவனைக்கண்டு என்னிலையை உரைத்தால் அவன்வாயிலாகச் சிவத்தலைவியை எய்தலாம் எனத் தற்போதமாகிய காதற்பாங்கனை நினைதல்.*

**பூங்கனை யார்புனற் றென்புலி யூர்புரிந் தம்பலத்துள்**
**ஆங்கெனை யாண்டுகொண் டாடும் பிரானடித் தாமரைக்கே**
**பாங்கனை யானன்ன பண்பனைக் கண்டிப் பரிசுரைத்தால்**
**ஈங்கெனை யார்தடுப் பார்மடப் பாவையை யெய்துதற்கே. 19**

*பொ - ரை: பூக்களையுடைத்தாய் முழங்குகின்ற புனலையுடைய அழகிய புலியூர்க்கண்ணதாகிய சிற்றம்பலத்தே விரும்பி எழுந்தருளியிருந்து, அவ்விடத்தே என்னையும் அடிமையாக ஏற்று, ஞானநடம்புரியும் அம்பலவாணப்பெருமான் திருவடித்தாமரைகட்குப் பாங்காயுள்ளவனும், என்னை ஒக்கும் இயல்புகளுடையானும் ஆகிய என் பாங்கனைக்கண்டு நிகழ்ந்த இத் தன்மைகளைச் சொன்னால், இளமைபொருந்திய இச்சிவத் தலைவியை எய்துதற்கு என்னைத் தடுப்பார் இவ்வுலகத்தில் யாவர்? ஒருவருமிலர் என்றவாறு.*

*தன் பாங்கன் தன்னைப்போலவே இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் உடையவனாகச் சிவன் திருவடிகட்கு அணுக்கமாயுள்ளவன். தன் அறிவே அவன் அறிவு; ஆகவே, அவனிடத்தில் சிவபோகமாகிய இத் தன்மையைச் சொன்னால், அவன்துணையால் இப் போகத்தை என்றும் இடையீடின்றி எய்தலாம் என்று எண்ணினானாம். இதனால் திருவருளால் எய்தும் சிவத்தலைவியைத் தற்போதத்தால் அடையலாம் என்று எண்ணுகிறான் என்பது பெறப்பட்டது.*

*இறைவன் தன்னை ஆண்டுகொண்ட இடம் சிதாகாயமாய ஞானப் பெருவெளி என்பான் 'புலியூர் புரிந்து அம்பலத்துள் என்னை ஆண்டு கொண்டு' என்றான்.*

*யான் அன்ன பண்பனை என்பதால், பாங்கன் பண்புகளால் தானே யாவன் என அவன் தற்போதமாதலை வெளிப்படுத்தியவாறு.*

*என்றும் புதிதான பெரும் போகம் விளைத்தலான் சிவத்தலைவியை 'மடப்பாவை' என்றான். மடம் - இளமை.*

*அருளால் எய்தவேண்டிய சிவத்தைத் தற்போதத்தினால் எய்தலாம் என்று எண்ணியதால் ஆன்ம அறிவே அருள்போல உபகாரப்படும் என்றானாம். (1)*

## பாங்கன் வினாதல்

### 'மனத்தாற்கண்டு இஃதென்னென வருந்தல்'

*தன்னைத் துணையாகக் கொள்ளக் கருதும் தலைமகனாகிய ஆன்மாவைத் தற்போதமாகிய பாங்கன், மனத்தை*

வாயிலாகவைத்து அடிமுதல் முடிகாறும் கண்டு, உடல் மெலிந்து நீ இவ்வாறாதற்குக் காரணம் என்? என வினாவாநிற்றல்.

**சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்ப லத்துமென் சிந்தையுள்ளும்**
**உறைவான் உயர்மதிற் கூடலி னாய்ந்தவொண் டீந்தமிழின்**
**துறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச் சூழல்புக்கோ**
**இறைவா தடவரைத் தோட்கென்கொ லாம்புகுந் தெய்தியதே. 20**

பொ - ரை: இறைவா! காவலாகவுள்ள மிக்க நீரையுடைய சிற்றம்பலப் பெருவெளியிலும், என் சிந்தையுள்ளும் ஒப்பத்தங்கும் அம்பலவாணப் பெருமான், உயர்ந்த மதில்கள் சூழ்ந்த மதுரை மாநகரில் சங்கத்திருந்து ஆராய்ந்த ஒள்ளிய இனிய தமிழின் துறைகளிடத்து நுழைந்தாயோ? அன்றி ஏழிசையின்சூழலிற் புகுந்ததாலோ? பெரிய மலைபோலும் தோள்களுக்கு மெலியப் புகுந்து எய்தியது என்னோ? என்றவாறு.

சிறைவான் புனல் தில்லைச்சிற்றம்பலம் என்பது விராட் புருடனுக்கு இதயத்தானமான மண்ணுலகச் சிற்றம்பலத்தைக் குறிக்கும்போது பெரிய நீரைக் காவலாக உடைய சிற்றம்பலம் எனப் பொருள்படும். அஃதாவது, கடலை எல்லையாகவுடைய நீரரண் மிக்க சிற்றம்பலம் என்பதாம்.

ஞானவெளியாகிய பராகாயத்தைக் குறிக்கும்போது அனைத்துவகையான அறிவும் தன் எல்லைக்குள் அடங்கும் வண்ணம் சிறை செய்வதான ஞானவானும், அதனுள் விளங்கும் கருணைப்புனலும் பெற்ற தில்லைச் சிதாகாயம் எனக் கொள்ளப்படும். ஈரிடத்தும் இங்ஙனம் ஞானவெளியான சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான் என்றதால், தன் சிந்தையின் இழிவு தோன்றக் கூறினானாம். பாசத்தடையுடைமை, உணர்த்த உணர்ந்தாலும் முற்றும் அறியாமை, திரிபறிவு முதலியவற்றால் இழிந்தமை என்க. பெரிய பெருமானுடைய கருணை இரண்டை ஒப்ப எண்ணி உறைகின்றது என்பதாம். ஒப்ப எண்ணுதலாவது ஈரிடத்தும் பாலில் நெய்போலாது, மணியின்கண் ஒளிபோல விளங்கித் தோன்றுதலாம்.

கூடல் விராட்புருடனுடைய துவாதசாந்தத்தானம். அதுவே உடற்றுணை நீங்கி, உயிர் பரத்தைத் தியானிக்கக்கூடிய தியானத்தானம். அங்கே மெய்ஞ்ஞானியர் பலருடன் இருந்து ஆயப்பெற்றது இன்ப அன்புத் தமிழ், அதுவே ஒளித்தமிழ். அதன் வகைகளாகிற துறைகளிற்புகின், இடைவிடாத தியானத்தால் உடல் இளைப்புக் காணப்பெறுமாதலின் 'தமிழின் துறைவாய் நுழைந்தனையோ' என்றான்.

ஏழிசை மனோலயத்தை விளைப்பது. அதன் சூழல் ஒன்றிய மனத்தைச் சிதறவிடாமல் உள்ளொளி பெருகச் செய்வதால்

*ஊன் சுருங்கும்; அதனால் இசைச்சூழல் புக்கோ இளைத்தது தோள் என்றான்.*

*நுழைந்தனையோ என்று முதற்கண் வினைமுதல் வினை முற்றாக வினவிய பாங்கன் பின் புக்கோ என வினையெச்சமாக வினவுகிறான் ஆயினும், புக்கதனாலோ என வினைப்பெயராக்கி உரை கண்டார் பேராசிரியர். ஆயினும், புக்கனையோ என்பது கருத்தாகக் கொள்க.*

*உடல்மெலிவு தோள்களான் புலப்படுதலின் தோட்குப் புகுந்து எய்தியது என்கொலோ என்று வினாவினான். புகுந்து என்றதால் இங்ஙனம் மெலிதல் உன் தோள்களுக்கு இயல்பன்று, வந்த இளைப்பு என்றானாம்.*

*இதனால் உயிர்த்தலைமகன் தன்னறிவைக்கொண்டு சிவத்தலைவியைச் சாரக் கருதியபோது தற்போதம் மனத்தைக் கொண்டு உயிர் இயல்பை உற்றுநோக்கி உண்மையறிவு திரிதலாகிய மெலிவு எங்ஙன் விளைந்தது என்று ஆய்ந்தது என்பதே பாங்கன் வினாதலாயவாறு காண்க.* (2)

## உற்றதுரைத்தல்

### 'உயிருளத்துடனே உற்றதுரைத்தது'

*அங்ஙனம் வினாவிய தற்போதமாகிய பாங்கனை நோக்கி, உயிர்த்தலைமகன் 'கயிலைக்கட் சென்றேன்; சிவத் தலைவியைக் கண்டேன்; இவ்வாறாயினேன்' என்று தனக்கு உற்றது உரையா நிற்றல்.*

**கோம்பிக் கொதுங்கிமே யாமஞ்ஞை குஞ்சரங் கோளிழைக்கும்**
**பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கப் பணைமுலைக்கே**
**தேம்பற் றுடியிடை மான்மட நோக்கிதில் லைச்சிவன்றாள்**
**ஆம்பொற் றடமலர் சூடுமென் ஆற்றல் அகற்றியதே.** 21

*பொ - ரை: பச்சோந்திக்குப் பயந்து வெளிப்போந்து இரை கவராத மயில், யானைக்கே தீங்கு விளைக்கும் பாம்பைப் பிடித்துப் படங்கிழித்தாற் போல, மடமான்போலும் நோக்கினை யுடையாளாகிய சிவத்தலைவியினது பணைத்த முலையால் மெலியும் துடிபோலும் இடையானது, தில்லைக்கண் எழுந்தருளியுள்ள அம்பலவாணப் பெருமானுடைய திருவடித் தாமரைகளைச் சூடிக்கொள்ளும் என் ஞான ஆற்றலை நீக்கிற்று என்றவாறு.*

*தில்லைக்கண் ஆடலரசாகச் சகளத்திருமேனிகொண்டு எழுந்தருளியிருக்கும் அவனுடைய திருவடியாகிய குஞ்சித பாதத்தைச் சூடும் என் கிரியை யோக ஆற்றல்களை அகற்றி,*

அருவமாய இடை சிவபோகத்தைத் தந்து நிஷ்களத் தியானத்தில் நிலைக்கச்செய்தது என்றானாம்.

மஞ்ஞை பாம்பைப்பிடித்துப் படம் கிழித்ததுபோலத் துடியிடை என் ஆற்றலகற்றியது என்றதில், மஞ்ஞை துடியிடைக்கும், பாம்பு தலைவற்கும், படம் அவன் ஆற்றலுக்கும் உவமமாயிற்று. ஆகவே, பாச பசு ஞானங்களாகிற மயக்க உணர்வைப்போக்கித் தெளிவுறுத்தும் சிவஞான நிலைக்களனாகிய துடியிடை எனவும், பொல்லா மூக்கப்பாம்பாய்ப் பொறிகட்கே இரை தேடித் திரியும் ஆன்மாவாகிய என்னை எனவும், பாம்பிற்குச் சிறந்த உறுப்பாயும் தற்காப்புக் கருவியாயும் உள்ள படத்தைக் கிழித்தது போல என் சகளத் தியான அனுபவத்தை அகற்றியது எனவும், அதனால் ஊன் மெலிந்தது உணர்வு வளர்ந்தது எனவும் கொள்ளக்கிடத்தல் காண்க. (3)

## கழறியுரைத்தல்

### 'மனம் உயிருடனே மயங்கி உரைத்தது'

தற்போத வடிவான மனம் வேதாகம புராண மிருதிகளைக் கற்றுக் கலை ஞானம்பெற்றுச் சரியை கிரியை யோகங்களில் நிலைபெற்ற ஞானியான உனக்கு இவ் வண்ணம் நிலையிழத்தல் தகாது என இடித்துரைத்தல் ஈண்டு மனம் - பாங்கன். உயிர் - தலைவன். மயங்கி உரைத்தது - திருவருளால் நிகழ்ந்தவற்றைத் தற்போத முனைப்பால் தகாது என இடித்துரைத்தல் எனக்கொள்க.

**உளமாம் வகைநம்மை யுய்யவந் தாண்டுசென் றும்பருய்யக்**
**களமாம் விடமிர் தாக்கிய தில்லைத்தொல் லோன்கயிலை**
**வளமாம் பொதும்பரின் வஞ்சித்து நின்றொர்வஞ் சிம்மருங்குல்**
**இளமான் விழித்ததென் றோவின்றெம் மண்ணல் இரங்கியதே.** 22

பொ - ரை: நாம் என்றும் நிரதிசயானந்தத்தே இருக்கும் வகையால் உய்ய எளிவந்த கருணையால் எம் உளத்தே வலியவந்து ஆட்கொண்டும், தேவர்கள் ஓடிப் பிழைக்கத் தம் திருமிடற்றிலே அடக்கிய நஞ்சை அமுதாக்கியும் அருள்செய்த தில்லைக்கண் உள்ளோனாகிய பழைமைக்கெல்லாம் பழைமையோனாகிய அம்பலவாணப் பெருமானது கயிலைக்கண்ணதாகிய வளமார்ந்த மாஞ்சோலையிடத்து, வருத்துவதென்றறியாமல் நின்று, கொடி போலும் இடையினையுடைய ஒரிளையமான் விழித்தது என்றோ எம் அண்ணல் இரங்கியது? இது நின் பெருமைக்கு ஏலாது என்றவாறு.

ஆன்மா என்றும் உள்ள பொருளாயினும் அதனை 'உளமாம் வகை ஆண்டு' என்றது ஆன்மா பாசத்தைச்சார்ந்து பாசமாயும் பதியைச்சார்ந்து நிரதிசயானந்தமாயும் இருக்கும்

இருதிறனுளதாகலின் அந் நிலை நீங்கி என்றும் சிவானந்தத்தே இருக்கும் வகையில் வகையில் ஆண்டு என்றவாறாம்.

துன்ப இன்பங்கட்கு நிலைக்களனாய் அறிவு அறியாமைகளில் சிக்கிக் கிடக்கும் உயிர்களாகிய நாம் உய்யும்வகையான் வலியவந்து ஆட்கொண்டு என்பார் 'வந்து ஆண்டு' என்றார்.

உம்பர் - தேவர்கள். அவர்கள்மீது வைத்த கருணையால் இறைவன் விடத்தை உண்டு கண்டத்திருத்தி, அவ்விடத்தைக் தமக்கு அமுதாக்கியும் அவர்கள் அறியாமையால் ஓடிப் பிழைத்தார்கள் என்பார் 'உம்பர் சென்று உய்ய' என்றார்.

களம் - கழுத்து. அது இடைகழி போன்றதால் அதன்வழியே செல்லும் பிற உணவுகளையும் நஞ்சாக்கிக் கொண்டேயிருக்கும்; அந்த நிலையைப் போக்கி, அதனையே அமுதாக்கினான் என்பார் 'களம் ஆம் விடம் அமிர்து ஆக்கிய தொல்லோன்' என்றார்.

விடம் கொல்லும் தன்மையது என்பதை விடம் அறியாது. வேல் குத்தும் என்பதை வேல் அறியாது. அவை போல மாஞ்சோலையில் தான் தனியே நின்றால் கண்டார் வருந்தி மடிவர் என்பதைத் தலைவி அறியாள் என்பது புலப்படுக்க 'வஞ்சித்து நின்று' என்றார். சிவதரிசனமாத்திரத்தே தற்போதம் கழன்று சிவபோகத்திருந்து சிவபோகம் தன்னிடமிருந்து வெளிப்படுதலால், சிவபோகத்திருந்து பிரிந்த உயிர் இரங்கியதைப் பாங்கனாகிய மனம் அறியாமையால் இங்ஙனம் இடித்துரைத்தது என்பதாம். (4)

## கழற்றெதிர் மறுத்தல்

### 'போதத்தாற்காணும் பொருளன்று என்றது'

யான் பெற்ற சிவதரிசனத்தை நீ பெற்றாயல்லை; பெற்றாயாயின், இவ் வண்ணம் நீ இடித்துரையாய் என்று எதிர்மறுத்துக் கூறுதல். யான் பெற்ற சிவதரிசனம் பதிஞானம் ஒன்றானே உணரப்படுவது. பாங்கனாகிய நீயோ தற்போதம். ஆதலால், தற்போதமாகிய உன்னால் அது உணரப்படுந்தரத்ததன்று என்று மறுத்தானாம்.

**சேணிற் பொலிசெம்பொன் மாளிகைத் தில்லைச்சிற் றம்பலத்து**
**மாணிக்கக் கூத்தன் வடவான் கயிலை மயிலைமன்னும்**
**பூணிற் பொலிகொங்கை ஆவியை ஓவியப் பொற்கொழுந்தைக்**
**காணிற் கழறலை கண்டிலை மென்றோட் கரும்பினையே. 23**

பொ - ரை: விண்ணளாவி விளங்குகின்ற, செம்பொன்னா லியன்ற மாளிகைகளையுடைய தில்லைக்கண்ணதாகிய திருச்சிற்றம் பலத்து எழுந்தருளியுள்ள மாணிக்கக்கூத்தனுடைய வடக்கின்

*கண்ணதாகிய கயிலைக் கண் வாழும் மயிலை, பொருந்திய பூண்களாற் பொலிகின்ற கொங்கைகளையுடைய என்னுயிரை, ஓவியமாகிய பொற்கொழுந்தை நீ கண்டனையாயின் இவ் வண்ணம் இடித்துரையாய்; ஆதலால் மெல்லிய தோள் களையுடைய கரும்பினைக் கண்டிலை என்றவாறு.*

*கயிலைக்கண் வாழும் மயிலை, என் உயிரை, உள்ளத்து எழுதிய ஓவியப் பொற்கொழுந்தைக் கண்டனையாயின் கழறாய்: ஆகவே, நீ கரும்பினைக் கண்டிலை என்று மறுத்தான். சேண் - சேய்மையுமாம். மாணிக்கக்கூத்து திருமந்திரத்துள் கூறப்பட்டுள்ளது:-*

"மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப்பொன் மன்றினில் ஆடுந் திருக்கூத்தைப்
பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே."

"மாணிக்கக் கூத்தனை வண்தில்லைக் கூத்தனைப்
பூணுற்ற மன்றுட் புரிசடைக் கூத்தனைச்
சேணுற்ற சோதிச் சிவானந்தக் கூத்தனை
ஆணிப்பொற் கூத்தனை யாருரைப் பாரே."

*இஃது அறியார் மாணிக்கம்போலும் கூத்தன் எனவும், கூத்தெனவும் கொண்டு அருமை தோன்ற நின்றதாக அமைதியும் கூறி அவதிப்படுவர்.*

*கயிலைக்கண் மயிலை என இடம் உவமை முதலியன கூறிச் சகளமேனியைத் தூலாருந்ததி நியாயமாகத் தெரிவித்தானாம். பின்னர், கொங்கை ஆவி எனப் பரஞான அபரஞானங்களோடு கூடிய உயிர் என்று நிஷ்கள மேனியை நினைப்பித்தானாம். ஓவியப் பொற்கொழுந்தை என உள்ளத்து அவள் உருவம் பதிந்துள்ளமையைத் தெரிவித்தானாம். இதில் ஓவியத்தை மட்டும் குறியாது ஓவியப் பொற்கொழுந்து என அருவுருவத்தை நினைக்கச் செய்வதறிக. இங்ஙனம் உரு, அரு, அருவுரு என்ற மூன்று நிலைகளையும் காட்டியதோடு அமையாது, மென்றோட் கரும்பினை எனத் தன் அனுபவத்தில் கரும்பை ஒத்திருந்த நிலையையும் உணர்த்தினானாம்.*

*ஆகவே, சிவத்தலைவி சிவஞானச் சேர்க்கையுடைய தனக்கு உருவாயும் அருவாயும் அருவுருவாயும், அனுபவப்பண்பாகவும் வெளிப்பட்டருளியவாற்றை அறிவித்தவாறு உன்னுக. இந் நிலை மனம் சாகாத தற்போத நிலைக்குப் புலப்படாதாகலின் 'காணலை காணிற் கழறலை' என்றான். (5)*

## கவன்றுரைத்தல்

### 'பின்னும் போதம் தன்னிலை சொன்னது'

*மறுத்து உரைக்கக் கேட்ட ஆன்மபோதம், மீட்டும் பரிபாக முற்ற ஆன்மாவின் அனுபவநிலை உணர மாட்டாது தன்னிலையி னின்றே தான் கண்டனைத்து இவ்வுலகு என்னும் தரத்தினதாய்க் கலங்காத உள்ளம் கலங்கியது என்னே எனக் கூறாநிற்றல்.*

**விலங்கலைக் கால்விண்டு மேன்மே லிடவிண்ணு மண்ணுமுந்நீர்க்**
**கலங்கலைச் சென்றவன் றுங்கலங் காய்கமழ் கொன்றைதுன்றும்**
**அலங்கலைச் சூழ்ந்தசிற் றம்பலத் தானரு ளில்லவர்போல்**
**துலங்கலைச் சென்றிதென் னோவள்ள லுள்ளம் துயர்கின்றதே. 24**

*பொ - ரை: வள்ளலே! மலைகளைக் காற்றுப் பிளந்து மேன்மேலும் இட விண்ணுலகும் மண்ணுலகும் கடலாற் கலங்கிய பேரூழிக் காலத்தும் கலங்காய்; அத்தகைய நீ மணங்கமழும் கொன்றைப்பூ நெருங்கிய மாலை அணிந்த சிற்றம்பலத்தானருள் இல்லாதவர்கள்போலக் கலங்கி, உள்ளம் வருந்துவது என்னோ! என்றவாறு.*

*இறைவன் தில்லையாகிய ஓர் இடத்தில் உருவுகொண்டு எழுந்தருளி இருக்க, அவன் அருளைத் தொழுதும் பாடியும் ஆடியும் பெற்ற அன்பர்கள் நிலையை உட்கொண்டு அது பெறாதார்போல நீ கவல்வது என் என்றான்; தலைவன் பரிபாகமுற்ற சிவஞானியர்கள் நிலையிலிருந்து ஞானத்தால் காண்டலைத் தற்போதம் அறிய மாட்டாமையால் என்க. இதனாலேயே கொளு 'பின்னும் போதம் தன்னிலை சொன்னது' என்றது. (6)*

## வலியழிவுரைத்தல்

### 'உயிர் நெஞ்சுடன்பட்டு உருகி உரைத்தது'

*சிவபோதம் தன்னிலையில் நின்று ஆன்மாவைநோக்கி 'நீ கலங்கியது என்னோ' என்று வருந்தியுரைக்க, உயிர்த்தலைவன் சிவபோதமாகிய தன் நெஞ்சோடு ஒன்றி, எதற்கும் கலங்காத யான் இன்று இச் சிறுமான் விழிக்கு இவ்வாறாயினேன் என்று உருகியுரைத்தல்.*

**தலைப்படு சால்பினுக் குந்தள ரேன்சித்தம் பித்தனென்று**
**மலைத்தறி வாரில்லை யாரையுந் தேற்றுவன் எத்துணையும்**
**கலைச்சிறு திங்கள் மிலைத்தசிற் றம்பல வன்கயிலை**
**மலைச்சிறு மான்விழி யாலழி வுற்று மயங்கினனே. 25**

*பொ - ரை: தலைசிறந்த சால்பழிந்து மனம் தளர்ந்திலேன்; இவன் சித்தம் பித்தேறினான் என்று என்னொடு மாறுபட்டு அறிவாரும் இல்லை; அங்ஙனம் மாறுபட உணர்ந்தார் யாவரையும் எவ்வளவும் தெளிவிக்கும் வலிமையுடையேன்; அங்ஙனமாய யான் இப்போது ஒருகலைப்பிறையை அணிந்த சிற்றம்பலத்தானது கயிலைமலைக்கண் வாழும் சிறிய மானின் விழியால் அறிவு அழிந்து மயங்கினேன் என்றவாறு.*

*ஈண்டுச் சிறுமான் என்றது சிவத் தலைவியை. அவள் விழி என்றது கருணையை. சிவத்தலைவி காட்டிய கருணையால் சீவபோதம் கழன்று, சிவ போதம் எய்தியும் நிலையாமையால் கலங்கினேன் என்றான்.*

*சிவஞானப்பேறெய்தியமையின் என்சால்பு முதலியவற்றிற்குச் சிறிதும் இழுக்கு இல்லை. உலகவர் எவரும் என் உண்மைநிலை உணரமாட்டாமையின், சித்தம் பித்தன் என்று உரையார். என் நிலை தெளிந்தநிலை ஆதலின், யாரையும் தெளிவித்துச் சிவஞானத்தைச் சேர்ப்பிக்கும் உயர்போதநிலையும் என்பால் உள்ளது. ஆயினும், சிவத்தலைவியின் கருணைக்கண்ணால் மயங்கினேன்; கலங்கினேன் என்கின்றான். (7)*

## விதியொடு வெறுத்தல்

### 'பின்னும் மனத்தொடு பேதுற்றுநின்றது'

*சீவன் தற்போதத்தோடு ஒன்றி நின்று, அது பயன்படாமை கண்டு புலந்து, நாணி, யான்செய்த நல்வினைகளாகிய பசு புண்ணியங்களும் பயன் தந்திலவே என்று பேதுற்றுக் கூறாநிற்றல்.*

**நல்வினை யுந்நயம் தந்தின்று வந்து நடுங்குமின்மேல்**
**கொல்வினை வல்லன கோங்கரும் பாமென்று பாங்கன்சொல்ல**
**வில்வினை மேருவில் வைத்தவன் தில்லை தொழாரின்வெள்கித்**
**தொல்வினை யாற்றுய ரும்மென தாருயிர் துப்புறவே. 26**

*பொ - ரை: நுடங்குகின்ற மின்மேலுண்டாகிய கோங்கரும்புகள் கொல்லுந்தொழிற்கண் வல்லனவாம் என்று பற்றுக்கோடாக எண்ணியிருந்த தற்போதமே இடித்துரைத்தலால், யான், வில்லின் கொலைத் தொழிலை மேருமலைக்கண் வைத்தவனாகிய அம்பலவாணப் பெருமான் எழுந்தருளியுள்ள தில்லையைத் தொழாதாரைப்போல வெட்கி, பழவினையால் வருந்தும் எனது பெறுதற்கரிய உயிர் வலியுறும்வண்ணம், யான் செய்த பசுபுண்ணியங்களும் வந்து பயன் தந்ததில்லை என்றவாறு.*

*இந்த நிலையில் எனக்கு என் அறிவு உறுதுணையாம் என்று எண்ணினேன். அதுவும் யான் செய்த புண்ணியத்தால் பயன் தந்ததில்லை என்கின்றான்.*

*ஆகவே, சிவானுபவத்திற்குத் தற்போதமும் பசுபுண்ணியங்களும் பயன்படாமையை அறிந்து, ஆற்றைக் கடக்க மணற்குதிரையை நம்பியது போலாயிற்று என்னிலை எனக் கவன்றானாம் என்பது.*

*நல்வினையும் நயம் தந்தின்று என்பதற்கு நல்வினை தீவினையைக் கெடுக்குமாயினும் யான் செய்த நல்வினை அது செய்ததில்லை என்பது கருத்து என்று உரைப்பாரும் உளர். புண்ணியம் பாவத்தினை அழிக்காது. அதனதன் பயன் உயிரைச் சார்ந்தே இருக்கும்; நுகர்ச்சிக்காலத்து வெளிப்படும்; பயன் ஊட்டும்; ஆதலால் இக் கருத்து ஒவ்வாமை உணர்க.* (8)

## பாங்கன் நொந்துரைத்தல்

### 'போதம் பின்னும் புகன்று தான் அழிந்தது'

*தற்போதமும் தமக்குப் பயன்படவில்லை; தாம் செய்த நல்வினைகளும் பயன்படவில்லை என உயிர் வருந்தியதைக் கேட்டுத் தற்போதம் 'ஏதோ பின்னும் ஒருமுறை முயன்று பார்ப்போம்' என உட்கொண்டு உயிரை நோக்கிச் 'சிவத்தலைவியின் பொருட்டாக நீ சீலத்தைக் கைவிடுவது யான்செய்த பாவம்' என நொந்து உரைப்பது.*

**ஆலத்தி னாலமிர் தாக்கிய கோன்றில்லை யம்பலம்போல்**
**கோலத்தி னாள்பொருட் டாக அமிர்தம் குணங்கெடினும்**
**காலத்தி னான்மழை மாறினும் மாறாக் கவிகைநின்பொற்**
**சீலத்தை நீயும் நினையா தொழிவதென் தீவினையே.** 27

*பொ - ரை: நஞ்சால் அமிர்தத்தை உண்டாக்கிய அம்பலவாணப் பெருமானது சிற்றம்பலம்போலும் அழகியின்பொருட்டு, அமிர்தம் தன் இனிமை மாறினும், மழை உரியகாலத்துப் பெய்யா திருப்பினும், மாறாத வள்ளன்மையுடைய நினது பொன்போலும் சீரிய ஒழுக்கத்தை அறிய வேண்டுவன அனைத்தையும் அறிந்த நீயும் அறியாதொழிகின்றது எனது தீவினைப்பயன் என்றவாறு.*

*கவி கை - ஈவதற்காகக் கீழ்நோக்கிக் கவிந்த கை: வினைத்தொகை. நின் பொற்சீலம் என்றது ஆன்ம இயல்பை. அதனை ஒழிதலாவது 'தன்னை மறந்தாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன்தாளே' என்புழிப்போலத் தற்போதம் அழிந்து சிவத்தலைவியின் மயமாக ஆனது. தற்போதம் தன்னையன்றிச் சிவபோதத்தையும் சிறந்ததாக எண்ணாது ஆதலின் 'அங்ஙனம் நீ ஆனது என் தீவினையே' என்று நொந்துகொண்டதாம் என்க.* (9)

## இயலிடம் கேட்டல்

### 'உறுதிகண்டு இன்பிடம் எங்கென்றுரைத்தது'

*உயிர் சிவத்தலைவியிடம் கொண்டுள்ள மாறாக் காதன்மையைக்கண்டு தற்போதம், யாமும் உயிருடன் சேர்ந்து*

*வருந்தின் ஆவதொரு பயனுமின்றாம் என உட்கொண்டு, உயிரை ஆற்றுவித்தல் காரணமாகத் தான் ஆறிநின்று, 'அது கிடக்க; நின்னாற் காணப்பட்ட சிவத்தலைவிக்குரிய இடம் எது? இயல் யாது' என வினவா நிற்றல்.*

**நின்னுடை நீர்மையும் நீயுமிவ் வாறு நினைத்தெருட்டும்**
**என்னுடை நீர்மையி தென்னென்ப தேதில்லை யேர்கொண்முக்கண்**
**மன்னுடை மால்வரை யோமல ரோவிசும் போசிலம்பா**
**என்னிடம் யாதியல் நின்னையின் னேசெய்த ஈர்ங்கொடிக்கே.** 28

*பொ - ரை: நின் குணமும் இவ்வாறாயிற்று; ஒருகாலத்தும் ஒன்றற்கும் கலங்காத நீயும் இத் தன்மையாயினை; உன்னைத் தெளிவிக்கும் என் நிலைமையோ இது; என் என்று சொல்வது. அது கிடக்க; சிலம்பா! உன்னை இத் தன்மையாக்கிய கருணையோடு கூடிய கொடிபோல்வாளாகிய சிவத்தலைவிக்கு இடம் தில்லைக்கண் எழுந்தருளியுள்ள அழகுமிக்க மூன்று கண்களையுடைய அம்பலவாணப் பெருமானது பெரிய கயிலை மலையோ? தாமரை மலரோ? விண்ணோ? எது? அவளுடைய இலக்கணம் என்ன? கூறுக என்றவாறு.*

*ஆன்மபோதம் அழிந்து, சிவபோதமாய், தலைவன் என்ற பண்டைய சீர்மைகெட்டு நீ சிவப்பித்தனாய் விட்டனை; நானோ உலகம் உடல் பொறிபோகங்களையே நுகர்ந்து தன்முனைப்புடன் இருக்கின்றேன்; நான் சிவபோதத்தினின்று உன்னை மீட்க முயல்கின்றேன்; இதனை என்ன என்று சொல்வது என்று நொந்துகொள்ளுகின்றவன், தன்னிலைக்கு அவன் வாரான்; அவன் நிலைக்கு நாம் போவதேமேல் என்று சிவத்தலைவியின் இடம் எது இயல் யாது என வினவுகின்றான்.*

*உலகவர்க்கு உறுப்புக்குறையும் மிகுதியும் அழகைக் கெடுப்பனவாகவும் தில்லைக் கூத்தப்பெருமானுக்குக் கண்கள் மூன்று இருப்பினும் அவை அழகு மிகுவிக்கின்றன என்பார் 'ஏர் கொள் முக்கண்' என்றார்.*

*நீ விரும்பியதலைவி திருமகளோ என்பான் மலரோ என்றும், அரம்பையரோ என்பான் விசும்போ என்றும் வினவினன். கயிலையோ என்று மிக உயர்ந்த இடத்தை வினவியன் பின்னர் அதைவிட உயர்ந்த இடத்தை வினவலே முறையாகவும் தாழ்ந்த இடத்தை வினவினான் ஆன்மபோதம் அவ்வளவே ஆதலான் என்க.*

*ஈர்ங்கொடி - ஈரிய கொடிபோல்வாள். ஈரமாவது கருணை. இன்னே செய்த - ஆன்மபோதத்தைக் கெடுத்துச் சிவபோதமாக்கிய தலைவி என்க.* *(10)*

## இயலிடம் கூறல்

### 'மகிழ்ந்திட நெஞ்சுக்கு வாழ்வெடுத்துரைத்தது'

*இயலும் இடமும் வினவிய தற்போதமாகிய நெஞ்சுக்கு, மகிழ்ச்சி மிகும்வண்ணம், உயிர் தனக்கு வாழ்வாகக் கிடைத்த சிவத்தலைவியின் இடமும் இயலும் இவை எனக் கூறியது.*

விழியாற் பிணையாம் விளங்கிய லான்மயி லாமிழற்றும்
மொழியாற் கிளியாம் முதுவா னவர்தம் முடித்தொகைகள்
கழியாக் கழற்றில்லைக் கூத்தன் கயிலைமுத் தம்மலைத்தேன்
கொழியாத் திகழும் பொழிற்கெழி லாமெங் குலதெய்வமே. 29

*பொ - ரை: இந்திரன் பிரமன் மால் முதலிய எழிலார்மிகு தேவர்களுடைய மணிமுடிகளின் திரள்கள் நீங்காத கழலையுடைய தில்லைக்கூத்தனது திருக்கயிலை மலையிடத்து, முத்துக்களைக் கொழிக்கும் தேன்திகழும் பொழிற்கு அழகாகிய எம் குலதெய்வ மாகிய சிவத்தலைவி, விழிகளால் பெண்மானாம்; விளங்குகின்ற சாயலால் மயிலாம்; கொஞ்சுகின்ற மொழிகளால் கிளியாம் என்றவாறு.*

*சிறந்த தேவர்கள் அனைவரும் வந்து அடிவணங்குதலின், அவர்கள் முடித்தொகைகள் கயிலைநாதனுடைய கழலில் என்றும் விளங்குகின்றன என்பார் 'முடித்தொகைகள் கழியாக் கழல்' என்றார்.*

*தலைவி பொழிலுக்கே ஒரு எழிலைத் தந்து நிற்பாள் எனத் தனிப்பட்டதோர் இயல் விளக்கினான் என்பது. 'எம் குலதெய்வம்' என்றான் ஆன்மக்குலத்தை ஈடேற்றும் தெய்வம் சிவம் ஒன்றே ஆதலின் என்க.*

*ஐந்து பேரறிவும் என் கண்களே கொள்ளச்செய்து, தன் வயமாக்கித் தற்போதம் இழக்கச்செய்து தன்னையே நோக்கச் செய்தமையின் 'விழியால் பிணையாம்' என்றும், அநாதியேயுள்ள ஆணவமல மயக்கத்தைத் தெளிவித்தலின் 'இயலான் மயிலாம்' என்றும், ஒரு சொல்லையே சொல்லி என்னையும் சொல்லச் செய்து என்னை வாசனாமலமும் தாக்காதவண்ணம் தடுத்தாட் கொள்ளுதலான் 'மொழியால் கிளியாம்' என்றும் கூறினான். (11)*

## வற்புறுத்தல்

### 'போதம்போய்க் காணும் பொலிவெடுத்துரைத்தது'

*இயலிடங்கூறிய உயிர்த்தலைவனை நோக்கித் தற்போதமாகிய பாங்கன், 'அத்தகைய சிவமாகிய தலைவியை நீ கூறிய கயிலைக் கண் சென்று யானே கண்டு வருவேன்! அத்துணையும் நீ ஆற்றியிரு' என்று வற்புறுத்திக்கூறியது.*

குயிலைச் சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான்
கயிலைச் சிலம்பிற்பைம் பூம்புனங் காக்குங் கருங்கட்செவ்வாய்
மயிலைச் சிலம்பகண் டியான்போய் வருவன்வண் பூங்கொடிகள்
பயிலச் சிலம்பெதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறையே. 30

*பொ - ரை: குயில்போற் குரலையும், சிலம்பணிந்த அடியினை யுடைய பூக்கொம்பினையும் தில்லைக்கண் அனவரத தாண்டவம் புரிபவனாகிய கூத்தப்பிரானது கயிலைமலைக்கண் பசிய தினைப் புனத்தைக் காக்கும் கரிய கண்ணையும் சிவந்த வாயையும் உடைய மயிலையும் ஒத்த சிவத்தலைவியை, வளம் பொருந்திய பூங்கொடிகள் போலும் ஆயத்தார் நெருங்க, அவர்களோடு சிலம்பிற்கு எதிராகக் கூவி விளையாடும் பளிக்குப் பாறைக்கண் யான் சென்று கண்டுவருவேன்; அதுகாறும் நீ ஆற்றுவாயாக என்றவாறு.*

*சிவபோதத்தால் காணத்தக்க சிவத்தலைவியைத் தற்போதம் தான் சென்று கண்டு வருவதாகக் கூறி ஆற்றுவித்தமை கருத்தாம்.*

*பரிபாகமுற்ற ஆன்மாவாகிய தலைவன் தற்போதங்கெட்டுச் சிவத்தின் அருமை நினைந்து யாம் மீட்டும் கூடுமாறு எங்ஙனே என்று வருந்திநிற்க, தற்போதமாகிய பாங்கன் இதோ இந்த மலையிலே உன் தலைவி சிலம்பெதிர் கூவிப் பளிக்கறைக்கண் விளையாடுவள் என இடமும் வடிவும் குறித்து அவளை நானே கண்டு வருவேன் என்று முனைத்துக் கூறியவாறு அறிக.*

*சிவத் தலைவியைக் குயில் என்றான்; குயில் கூகூ என நாதகாரிய ஒலியை எழுப்பித் தன்வசப்படுத்தி நிற்பதால் என்க. அங்ஙனமே பரநாதமாகிய சிலம்பினை அணிந்து, பூத்த கொம்பாய்க் கண் மூக்கு காது முதலான இந்திரியங்களுக்குப் புலனும் ஆதலின் 'சிலம்படிக் கொம்பினை' என்றான்.*

*புனங்காத்தலாகிய செயலைப்பொருந்தி, கருணை ததும்புங் கண்களையும், அருளுபதேசம் நல்கும் சிவந்தவாயையும் உடையதாய், மயில்போல மயக்கம் தெளிவிக்கும் வாயிலாதலின் 'புனங்காக்கும் கருங்கண் செவ்வாய் மயிலை' என்றான். இத்துணையும் தானறிந்த அளவு கூறியதாம்.*

*'கண்டு' எனப் பொறி கருவியாகக் காணுதலைக் கூறினான்; சிவத்தலைவி கருவிகரணங்களால் ஆன்மபோதங்கொண்டு அறிய முடியாதவள் என்பதை அறியாத தற்போதமாகிய பாங்கன் என்க.*

*பூங்கொடிகள் பயில: ஏனைய தோழியரோடு உடனாடுவன் எனப் பலருள் ஒருத்தியாகப் பாவித்தமை தற்போத முனைப்பாலென்க.*

*இதனால் தற்போதம் தன்னளவில் முனைத்துநின்று அறிந்துவருவதாகக் கூறியது காண்க.* (12)

## குறிவழிச்சேறல்

### 'நெஞ்சாற்கண்ட இன்பந்தேடல்'

*சிவத்தின் பிரிவால் துன்புற்று மீளவும் கூடலாமோ என்று வருந்திய உயிரை நோக்கி 'எங்ஙன மேனும் கூடலாம் வருந்தற்க' என வற்புறுத்தி, பரிபாகமுற்ற உயிர் உரைத்த குறிவழிச் செல்லாநின்ற தற்போதம், சிவத்தை இவ்விடத்துக் காணலாங்கொல்லோ? என அந் நினைவோடு செல்லாநிற்றல்.*

**கொடுங்கால் குலவரை யேழேழ் பொழிலெழில் குன்றுமன்றும்**
**நடுங்கா தவனை நடுங்க நுடங்கு நடுவுடைய**
**விடங்கா லயிற்கண்ணி மேவுங்கொ லாந்தில்லை யீசன்வெற்பில்**
**தடங்கார் தருபெரு வான்பொழி னீழலந் தண்புனத்தே. 31**

*பொ - ரை: கொடிய காற்றால் குலமலைகளும் பதினான்கு உலகங்களும் தம்மழகு கெடும் ஊழியிறுதியிலும் நடுங்காத மனத்துணிவுடைய ஆன்மா, நடுங்கும்வண்ணம் அசைகின்ற இடையினையுடைய - விடம் கக்கும் வேல்போலும் கண்களை யுடையாளாகிய சிவத்தலைவி, தில்லைக்கூத்தன் வெற்பிடத்துப் பெரிய மேகம்போலும் தண்மையைத் தருகின்ற மிகப்பெரிய பொழிலினிடத்து நீழலையுடைய குளிர்ந்த புனத்தின்கண் இருப்பாளோ என்றவாறு.*

*உயிர் உரைத்த பொழிலிடத்துச் சிவம் இருக்குமோ என்று எண்ணிச் சென்றது தற்போதம் என்பது கருத்து.*

*பரிபாகமுற்ற ஆன்மா மலையே வந்து வீழினும் நிலையில் கலங்காது ஆதலின், மலைகளும் பதினான்கு புவனங்களும் நிலை குலையும் அன்றும் நடுங்காதாயினமை காண்க. இவ்வுரைக்கு ஏற்பக் கால் என்றது இரண்டாட்டமுற்றுச் சலித்த அறிவாகவும், மலை உலகம் என்பன ஆன்மா அடைந்த நிலைவேறுபாடுகளாகவும், உயிரை நடுங்கவைத்தமை அறிவு திரிந்து சிவபோகத்தில் கொண்ட விருப்பாகவும், நுடங்கும் நடு என்றது சிவத்தின் கருணையாகவும், பொழில் நிலம் என்பது துரியாதீதமாகிய பேரின்பத்தானமாகவும் கொள்க. ஏனைய வெளி. (13)*

## குறிவழிக்காண்டல்

### 'போதம் அருளாற்போய் இன்பங்கண்டது'

*ஆன்மா அறிவித்தவண்ணம் சென்ற தற்போதம் சிவத்தைக்கண்டு ஆனந்திக்கும் அணுமைக்கண் நின்று, ஆன்மா கூறிய இடமும் இயலும் இவையே, சிவமும் இதுவே என்று தெளிந்து அறிதலாம். தற்போதம் அறியும் என்றல் அமையுடைத் தாமோ எனின், அருள்கூடிய கண்டான் காட்டக் காணுமதன்றி நுகருந்தரத்தினதன்று என்பதே கருத்தாதலால் அமையும் என்க.*

வடிக்கண் இவைவஞ்சி யஞ்சு மிடையிது வாய்பவளம்
துடிக்கின்ற வாவெற்பன் சொற்பரி சேயான் தொடர்ந்துவிடா
அடிச்சந்த மாமல ரண்ணல்விண் ணோர்வணங் கம்பலம்போல்
படிச்சந் தமுமிது வேயிவ ளேயப் பணிமொழியே. 32

*பொ - ரை:* கூரிய கண்கள் இவை; கொம்பும் கூசும் கொடியிடை இது; ஆன்மா அறிவித்தவண்ணமே வாயாகிய பவளம் துடிக்கின்றவாறு என்? அதனால் ஒன்றுக்கும் பற்றாத அடியேனும் பற்றி அகலமாட்டாத திருவடியாகிய அழகிய தாமரைமலர் களையுடைய தலைவனது தேவர்கள் வந்து வணங்கும் அம்பலம் போலும் இடம் இதுவே, இவளே அவள் என்றவாறு.

ஆன்மா அறிவித்தவாறு அனைத்தும் ஒத்திருத்தலின் ஆன்மாவால் நுகரப்பெற்ற சிவமே இது என்று தேறியவாறு.

கண்ணே கருணைவழிய பல-கன்மங்களை வாட்டி அருள் ஊட்டுதலின், அதனை முதற்கண் கண்டு வியந்த தற்போதம் அடுத்துச் சிவபோகம் விளைக்கும் இடையையும், அருளுபதேசம் செய்யும் உதட்டையும், பேரின்ப நிலைக்களனாய அடியையும் வியந்தது என்க. (14)

## தலைவனை வியந்துரைத்தல்

### 'நெஞ்சம் உயிர்நினை வறிவெனப் புகழ்ந்தது'

தற்போதம், 'ஆன்மா இத்தகைய சிவத்தைப் பிரிந்து வந்து, இதன் அருமையறியாது, இடித்துரைத்தவற்றையும் பொருட் படுத்தாது, கூறிய அறிவே தலையாய சிவஞானமாம்' என்றது.

குவளைக் களத்தம் பலவன் குரைகழல் போற்கமலத்
தவளைப் பயங்கர மாகநின் றாண்ட அவயவத்தின்
இவளைக்கண் டிங்குநின் றங்குவந் தத்துணை யும்பகர்ந்த
கவளக் களிற்றண்ண லேதிண்ணி யானிக் கடலிடத்தே. 33

*பொ - ரை:* குவளைமலர் போலும் நீலகண்டத்தையுடைய அம்பலவாண சுவாமியின் திருவடிபோலும் செந்தாமரைப் பூவின்மேல் இருக்கும் சீதேவியைப் பயங்கரமாக அடக்கி ஆண்ட அவயவத்தையுடைய சிவத்தைக் கண்டுவைத்தும், இங்கு நின்றும் பிரிந்துதற்போத முனைப்புநிலைக்குவந்தும்நினைவோடுஅவ்வளவும் கூறிய ஆன்மாவே இவ்வுலகத்துத் திண்ணியதாம் என்றவாறு.

சிவத்தைப் பிரிந்தும் ஆன்மா அறிவிழந்துபோகாது புடைபெயர்ந்து இத்துணையும் கூறியது அதன் உறுதியை உணர்த்துவதாம் எனத் தற்போதம் வியந்தவாறாம்.

குரை கழல் போல் கமலம்; அதன்கண் வீற்றிருப்பவள் கமலத்தவள் என்க. போல் என்னும் உவம வாசகத்தைக் கமலத்தவள் என்பதன் பகுதியொடு முடிக்க.

*பயங்கரமாக - அச்சுறுத்துவதாக. கமலத்தவள் முதலாயினோர் போகமாகிய மாயாகாரியம் ஆதலின், சிவத்தின் அவயவம் கண்டு தான் நித்திய போகமன்மையின் அஞ்சுவதாயிற்று என்க.* *(15)*

## கண்டமை கூறல்

**'போதம் நம்மால் பொருந்துவ தன்றென**
**ஆதரவாய் உயிர்க்கு அறிய வுரைத்தது'**

*தற்போதம் சிவத்தைத் தாம் பொருந்த இயலாதென்று தெளிந்து, சிவம் பரிபாகமுற்ற ஆன்மாவின் வரவுநோக்கி ஞானபூமியில் நிற்கின்றதென்று ஆன்மாவிற்கு ஆதரவாக அஃதறிந்து விரைந்துசென்று பொருந்த அறிவித்தவாறாம்.*

**பணந்தாழ் அரவரைச் சிற்றம் பலவர்பைம் பொற்கயிலைப்**
**புணர்ந்தாங் ககன்ற பொருகரி யுன்னிப் புனத்தயலே**
**மணந்தாழ் பொழிற்கண் வடிக்கண் பரப்பி மடப்பிடிவாய்**
**நிணந்தாழ் சுடரிலை வேலகண் டேனொன்று நின்றதுவே.** 34

*பொ - ரை: வாய்க்கண் நிணந்தங்கிய சுடர்விடுகின்ற இலை வடிவாகிய தகட்டினையுடைய வேலவனே! படம் விரியப்பெற்ற பாம்புகளை அணிந்த திருவரையையுடைய சிற்றம்பல நாதரது பொன்னையுடைய கயிலைக்கண், தம்மைக் கூடிப்பிரிந்த களிற்றை எண்ணி எதிர்நோக்கி, உலகிற்கு அயலதான சிவஞானப் பொழிலிலே அருள்கொழிக்கும் கண்களை வீசிக்கொண்டு இளமைபொருந்திய பெண்யானை ஒன்று நின்றது எ - று.*

*தன்னைக் கூடிப் பிரிந்த ஆன்மா மீட்டும் பேரின்பவயப்பட்டு வரும் என்று எதிர்நோக்கிக் கருணைக்கண்ணால் நோக்கிச் சிவபரம்பொருள் ஞானப் பொழிலிலே நிற்கின்றது என்பது கருத்து.*

*ஆன்மாவைக் கரி என்றமைக்கேற்பச் சிவத்தை அதனால் நுகரப்படும் பிடியாக உருவகித்தவாறு. பிடியும் சிவபோகத்தான மாகிய ஞானப்பொழிலுக்குத் தன்னிலைவிட்டு இறங்கி வந்தது; ஆன்மாவும் தற்போதவாயிலாக உணர்ந்து, அது கெட்டுச் சிவபோதமிக்கு, ஞானபூமியைச் சார்ந்து, சிவத்தைக்கூடும் உயர்நிலையை ஏறிக் கூடும் என்ற இருவரின் ஒத்த புடைபெயர்ச்சி அறிக.* *(16)*

## செவ்வி செப்பல்

'இன்பம் அறியும் இயல்பன் றெனினும்
நெஞ்சம் அணியெலாம் நின்றெடுத் துரைத்தது'

*சிவத்தலைவியிடத்து ஆன்மா எய்தும் இன்பம் தற்போதத்தால் அறியுந்தரத்தது அன்று எனினும், தற்போத முனைப்பான நெஞ்சம்,*

சிவத்தலைவியின் அழகாவன அனைத்தையும் எடுத்தியம்பித் தான் கண்டது சிவத்தையேயென ஆன்மாவைத் தெளிவித்தது.

கயலுள வேகம லத்தலர் மீது கனிபவளத்
தயலுள வேமுத்த மொத்த நிரையர ணம்பலத்தின்
இயலுள வேயிணைச் செப்புவெற் பாநின தீர்ங்கொடிமேற்
புயலுள வேமலர் சூழ்ந்திருள் தூங்கிப் புரள்வனவே. 35

பொ - ரை: வெற்பா! நின் தலைவியாகிய ஈரியகொடியின்மீது கமல மலர்மேல் கயல்மீன்கள் உள்ளன; முற்றிய பவளத்தயலில் இனமொத்த வரிசையாகிய முத்துக்கள் உள்ளன; இரண்டாகிய செப்புகள் சிவபெருமான் வீற்றிருக்கின்ற அம்பலத்தின் இயல்புடையன உள; மாலைகள் சுற்றப்பட்டு இருள்போல் செறிந்துகிடந்து புரள்வனவாகிய புயல்கள் உள; இங்ஙனம் யான் கூறிய அனைத்தும் உளவாயின் யான் கண்டது நீ கூறிய உருவமேயாகும் என்றவாறு.

சிவத்தை ஈர்ங்கொடி என்றது மின்னற்கொடிபோல இடைவிடாத சிந்தனையுடையார் மனத்தும் தோன்றி மறைதலின் என்க.

கமலம் - செந்தாமரை. தண்ணிய கருணைத்தேன் பொழிதலானும், மலர்ந்து மனத்தை மற்றொன்றை நோக்காதவாறு கவர்ந்து நிற்றலானும் 'கமலத்தலர்' என்றான் சிவத்தின் திருமுகத்தை. பிறழ்ந்து பிறழ்ந்து கண்டு காட்டும் இயல்புடைய கண்களைக் கயல் என்றானாம்.

கனி பவளம் - முதிர்ந்து செந்நிறம்கொண்ட பவழம். அதன் அயலே வரிவரியான அளவொத்த முத்துக்கள்; என்றது கண்டார் கண்ணைக் கவர்ந்து சொல்லையே எதிர்நோக்கச் செய்யும் பற்களை.

இணைச் செப்பு - இரண்டான செப்புக்கள்; என்றது தனங்களை. அவை பரஞானமும், அபரஞானமும் ஆதலின் அவை இருவகை ஞானத்தையும் அவரவர்கள் பரிபாக நிலைக்கு ஏற்ப நல்கும் தில்லையம்பலத்திற்கு உருவோடு பண்பும் ஒத்தது.

வெப்பொழித்து, தாகம் தணித்து, பொறிகளுக்கு இன்பூட்டுதலின் மலர்சூழ்ந்து இருள் தூங்கிப் புரள்வனவாகிய புயலுள என்றான் சிவத்தலைவியின் கூந்தலை. இங்ஙனம் இருமருங்கும் இயைபப் பொருள்கொள்க. (17)

## அவ்விடத்தேகல்

**'போதம் நீங்கப் பொற்பாங் குரவன்**
**தரிசனங் காணச் சென்ற தன்மை'**

ஆற்றுவிப்பது காரணமாக அணியும் அவயவமுங்கூறிய அளவில் தற்போதங் கழன்றுபோக, ஆன்மாவின் பூருவக்காட்சி

*அனுபவம் சிவகுரு தரிசனங்காணும் விழைவை விரைவிக்க, ஆன்மா குருதரிசனம் காணச்சென்ற தன்மையாம்.*

**எயிற்குல மூன்றிருந் தீயெய்த எய்தவன் தில்லையொத்துக்**
**குயிற்குலங் கொண்டுதொண் டைக்கனி வாய்க்குளிர் முத்தநிரைத்**
**தயிற்குல வேல்கம லத்திற் கிடத்தி அனநடக்கும்**
**மயிற்குலங் கண்டதுண் டேலது வென்னுடை மன்னுயிரே. 36**

*பொ - ரை: திரிபுரங்கள் தீயில் வேவ அம்பெய்த சிவனது தில்லை நகரையொத்து, குயிற்கூட்டம் போலும் இனிமையான குரலைக்கொண்டு, தொண்டைக்கனியிடத்து குளிர்ந்த முத்துக் களை வரியாகப் பதித்து, கூரிய வேலைச் செந்தாமரை மலரில் குறுக்காகத் தலைமாறிக் கிடத்தி, அன்னம் போல் நடக்கும் மயிற்சாதி உண்டாயின் அது எனக்கு நிலைபேறருளும் உயிராம் என்றவாறு.*

*மயில், கண்டார்க்கு மயக்கம் தெளிவிப்பதுபோல என் ஆணவமல மயக்கத்தை அறுத்துத் தெளிவு உண்டாக்கலின் தலைவியாகிய சிவத்தை 'மயிற்குலம்' என்றான். உருவத்தில் வேறுவேறான நிறக்கலவை உடையதாயினும் அண்டநிலையுள் எல்லா நிறங்களும் கலந்து வேறுபிரிக்க ஒண்ணாததாயும், கரு முற்றாத நிலையில் எல்லாவற்றையும் அடக்கி, ஒன்றாய்த் தோன்றும் நீராயும் இருத்தல்போல உருவும் அருவுருவும் அருவும் கொண்டிருத்தலின் மயில் சிவத்திற்குப் பெரிதும் இயைபுடைத்தாயிற்று.*

*முப்புரம் என்பது மும்மலகாரியம் ஆதலின், மூவெயிலும் தீ எய்த எரித்தமை ஆணவாதி மும்மலச்சேட்டையை ஒடுக்கி ஆண்டதை அறிவிப்பது.*

*ஒத்து முதலான செய்தெனெச்சங்களை நடக்கும் என்ற பெயரெச்சத்தோடு முடித்து, அதனை மயிற்குலம் என்ற பெயரோடு முடிக்க.*

*ஏனைய அவயவங்களையும் முறையே உபதேச மொழியாகவும், குமிண் சிரிப்பாகவும், அருட்கண்நோக்காகவும், உயிர் இயக்கத்திற்கு ஏற்ப நடைபயிலும் அம்சநடையாகவும் கொள்க. (18)*

## மின்னிடை மெலிதல்

### 'சிவம் உயிர்நோக்கித் திருவுளத் தெண்ணல்'

*கருணையே வடிவான சிவம் பரிபாக விசேடத்தால் வந்து கூடப் பேரின்பந் துய்த்து வாசனாமலந்தாக்கச் சிறிதகன்ற ஆன்மா சிவம் மீண்டும்வருங்கொல்லோ என்று எண்ணி, முன் எதிர்ப்பட்ட ஞானபூமியிலே இன்றும் எதிர்நோக்கி உளங்கனிதல்.*

ஆவியன் னாய்கவ லேலக லேமென் றளித்தொளித்த
ஆவியன் னார்மிக் கவாவின ராய்க்கெழு மற்கழிவுற்
றாவியன் னார்மன்னி யாடிடஞ் சேர்வர்கொல் அம்பலத்தெம்
ஆவியன் னான்பயி லுங்கயி லாயத் தருவரையே. 37

*பொ - ரை: 'கலந்து என் உயிர்க்குயிராகிய சிவமே! இவ்வான்மா மீளவும் வந்து கூடுங்கொல்லோ என்று கவலாதொழிக; நின்னை என்றும் விடேன்' என்று சொல்லிச்சென்ற என் ஆவியன்ன ஆன்மா, மிகுந்த வேட்கையுடையதாய், கூடுதல் காரணமாக நெஞ்சழிதலால், இடம் அறியாது, திருவம்பலத்து என் ஆவியன்னானாகிய கூத்தப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கயிலாயத்துத் தாழ்வரையிலே என் உயிர்க்குயிராகிய பாங்கியர் கூடி விளையாடுகின்ற இடத்தில் வந்துவிடுமோ என்றவாறு.*

*சிவம், தலைநாள் எம்மொடு கலந்து பிரிந்த ஆன்மா காதன்மிகுதியால் இடம் அறியாமல் திருவருள் இருக்கும் இடம் தேடி வந்துவிடுமோ என்று எண்ணிற்று என்பதாம்.*

*ஆன்மா சிவத்தை நோக்கி 'ஆவியன்னாய்' என்றது இன்றியமையாமை நோக்கி. சிவம் ஆன்மாவை 'ஆவியன்னார்' என்றது கருணைமிகுதியால் பாராட்டியவாறாம். சிவம் பாங்கியரை 'ஆவியன்னார்' என்றது சிவகுணமே அருளாம் பெற்றிமையாம். சிவம், கூத்தப்பெருமானை 'ஆவியன்னான்' என்றது தானே தானேயாம் பான்மையால் என இங்ஙனம் வேறுபாடு அறிக.*

*அவனே தானேயாகிய அந் நெறி ஏகனாகி இறைபணி நின்றபோது விளைந்த மெய்ப்போகம் கலைந்ததே என்று வருந்தி, மீட்டும் கெழுமற்கு விரைந்து உயிர் வருந்தியது என்பார் 'கெழுமற்கு அழிவுற்று' என்றார். (19)*

## பொழில்கண்டு மகிழ்தல்

### 'பார்க்குமிடம் எங்கும் பரனாக் கண்டது'

*ஆன்மாவும் சீபஞ்சாக்கர சிந்தனையும் திருவருளுபகாரமும் தற்போத வீழ்ச்சியுமாகிய இவற்றால் வாசனைகழிந்து தூயநிலையுற்றவழி, முன்னர்க்கலந்த சிவஞானத் தலத்திடையே சென்று சேர்ந்து எங்கும் சிவத்தையே தரிசித்து இன்புறுதல்.*

காம்பிணை யாற்களி மாமயி லாற்கதிர் மாமணியால்
வாம்பிணை யால்வல்லி யொல்குத லான்மன்னு மம்பலவன்
பாம்பிணை யாக்குழை கொண்டோன் கயிலைப் பயில்புனமும்
தேம்பிணை வார்குழ லாளெனத் தோன்றுமென் சிந்தனைக்கே. 38

*பொ - ரை: பாம்பினை ஒன்றும் ஒவ்வாத காதணியாகக் கொண்ட தில்லையம்பலவன் என்றும் எழுந்தருளியுள்ள*

*கயிலையைச்சார்ந்த புனமும், வேயினை ஒத்த தோளிரண்டாலும், களித்த நீலமயில்போலும் சாயலாலும், ஒளிவிடுகின்ற பெரிய மணியாலும், தாவுகின்ற மானாலும், வல்லிபோல நுடங்குதலானும் சிவத்தலைவியாகவே காட்சி தருவதாயிருந்தது எ - று.*

*காம்பு - மலர்க்காம்பு. அவற்றின் இணையாவது பிணையல் மாலை. ஆகவே, பிணையலாகிய மாலை சடைக்கட் கிடத்தலானும், களித்த மயிலின் தோகையைத் தலையின்மீதும் திருவரையின் கண்ணும் அணிந்து பிஞ்ஞகனாக விளங்குதலானும், ஒளிவிடுகின்ற நீலமணி போன்ற கண்டத்தையுடைமையானும், தம் திருக்கரத்துத் தாவுகின்ற மான்மறியை ஏந்தியிருத்தலானும், வல்லிக்கொடி போன்ற உமாதேவியார் ஒருபால் நுடங்கி உடங்கியைதலானும், சிவமாகிய தலைவி வேய், மயில், மணி, மான் முதலியவற்றையுடைய புனத்தை ஒத்தனள் எனக்கொள்க.* *(20)*

## உயிரென வியத்தல்

### 'அநாதி யின்பம் அரனெனக் காண்டல்'

*முதலும் இறுதியும் இல்லாத பேரின்பம் சிவமேயெனத் துணிந்து, அப் பெரும்பெயர்த் தெய்வம் அடியேன்மீது வைத்த கருணையால் இங்ஙனம் இதோ வந்து நிற்கின்றதே; இதுவே என் உயிர் என வியத்தல்.*

**நேயத்த தாய்நென்ன லென்னைப் புணர்ந்துநெஞ் சந்நெகப்போய்**
**ஆயத்த தாயமிழ் தாயணங் காயரன் அம்பலம்போல்**
**தேயத்த தாயென்றன் சிந்தைய தாய்த்தெரி யிற்பெரிதும்**
**மாயத்த தாகி யிதோவந்து நின்றதென் மன்னுயிரே.** 39

*பொ - ரை: நேற்று மனம்நெகிழ்ந்து என்னொடு கலந்து, பின்பு மனநெகிழ்ச்சி இல்லாததுபோல என் மனம் உடைந்து போம்வண்ணம் என்னின் நீங்கிப்போய், அடியார்கூட்டத்தின் கண்ணதாய், அமுதம்போல மிக இனிப்பதாய், பிரிவால் துன்பந்தருவதாய், தில்லையம்பலம்போலும் தேசுடையதாய், என் மனத்தகத்ததாய், ஆராயும்போது பெரிதும் மாயம் உடையதாய் வந்து நிற்கின்றதே இதுவோ என் மன்னுயிராகிய சிவம் என்றவாறு.*

*சிவம் ஆன்மாவிடம் செலுத்துவது எதிர்நோக்கில்லாக் கருணையாதலின் 'நேயத்ததாய்' என்றும், சாவா மூவாப் பேரின்பக்கலவியைட்' பரிபாக காலத்து அளித்தமையின் 'நென்னல் என்னைப் புணர்ந்து' என்றும், அவ்வின்பத்தையே எண்ணி ஏமாக்க இன்று பிரிந்தமையின் 'நெஞ்சம் நெகப்போய்' என்றும், மெய்யடியார் கூட்டத்தில் கலந்து எனக்கு அரிதானமையின் 'ஆயத்ததாய்' என்றும், உள்ளுதோறும் இன்பம் விளைத்தலின்*

'அமிழ்தாய்' என்றும், கட்புலனாகாமையின் 'அணங்காய்' என்றும், மனத்தினுள் மன்னிய மன்னாகவும் ஒளிவடிவாயும் உணரப்பெறுதலின் 'தேயத்ததாய்ச் சிந்தையதாய்' என்றும், இங்ஙனம் அருளும் அருளிலாமையும் இன்பமுந்துன்பமுமாக மாறுபட்ட குணங்கள் தம்மிடம் வெளிப்பட இருப்பதால் இன்னதென்று அறியவாராமையின் 'மாயத்ததாய்' என்றும் சிவத்தின் இயல்பு தெரியவைத்தமை காண்க. பேராசிரியரும் 'வேறும் ஒரு பொருள் விளங்கியவாறு கண்டுகொள்க' என இக் கருத்தை வெளிப்படுத்துதல் காண்க. (21)

## தளர்வகன்றுரைத்தல்

**'திருவிகாரமாய் நிலைபெறல் கண்டது'**

அங்ஙனம் வியந்த ஆன்மா, சிவமாகிய பேரின்பப் பிழம்பு தானுகர்தற்கு உரியதாகி எச் சூழலினும் சிக்கி இடந்தராது சார்பின்றி ஞானபூமியில் நிலைத்து நிற்றலைக் கண்டது.

**தாதிவர் போதுகொய் யார்தைய லாரங்கை கூப்பநின்று**
**சோதி வரிப்பந் தடியார் சுனைப்புன லாடல்செய்யார்**
**போதிவர் கற்பக நாடுபுல் லென்னத்தம் பொன்னடிப்பாய்**
**யாதிவர் மாதவம் அம்பலத் தான்மலை யெய்துதற்கே.** 40

பொ - ரை: போது கொய்தலும், பந்தடித்தலும், புனலாடலும், தம்மிடம் உறைதலும் செய்யாது எளிவந்து பூமிக்கண் கயிலையைச்சார வந்தமைக்கு யான்செய்த தவம் யாதோ என்றான் என்றவாறு.

போது கொய்தல் - பூப்பறித்தல். இச் செயல் போககாரண மாதலின் அதனைச் செய்யாமை ஆன்மாவிற்கு ஞானத்தை நல்கியதாம் என்க.

பந்து அடித்தல் புனலாடல் முதலியன விளையாட்டும் காலக்கழிவும் ஆதலின், அவற்றைச் செய்யாது அருள்தருதலே குறிக்கோளாகக்கொண்டு கயிலைக்கண் சிவம் எழுந்தருளியதைக் குறித்தவாறு.

கற்பக நாட்டை விடுத்துக் கயிலைக்கு எழுந்தருளியது போகபூமியை விட்டு ஞானபூமியை நாடியதை உணர்த்துவது.

இங்ஙனம் உயர்ந்தநிலையிலிருந்த சிவம் தன்னிலையில் வந்து அருளியதற்கு யான் செய்த தவம் யாது என்றான். இப் பொருளில் பொன்னடிப்பாய் இவர் மலை எய்துதற்கு மாதவம் யாது என இயைத்து, யான் செய்த தவம் யாதோ எனத் தலைவன் வியப்பாகக் கூறுதலே சிவம் தலைவியான நிலைக்கு ஏற்றதாம் என்க.

*அகப்பொருள் தோன்ற உரைகண்ட பேராசிரியர் முதலியோர் தலைவி செய்யக் கருதிய தவம் யாதோ என உரைப்பார். அப் பொருட்கு அதுசாலும் என்க.* *(22)*

## மொழிபெற வருந்தல்

### 'திருவாய் மலராவிடின் உய்யேன் என்றது'

*தளர்வகன்று உரைத்த ஆன்மா மேலும் சிவஞான உபதேசம் பெற வேண்டி வருந்தாநிற்றல்.*

**காவிநின் றேர்தரு கண்டர்வண் டில்லைக்கண் ணார்கமலத்**
**தேவியென் றேயையஞ் சென்றதன் றேயறி யச்சிறிது**
**மாவியன் றன்னமென் னோக்கிநின் வாய்திற வாவிடினென்**
**ஆவியன் றேயமிழ் தேயணங் கேயின் றழிகின்றதே.** 41

*பொ - ரை: நின் புறப்பொலிவுநோக்கக் காத்தலாகிய அதிகார மலத்துள் தங்கும் சீதேவியோ என்று ஐயந் தோன்றாநின்றது; இன்பும் துன்பும் ஒருங்கு நிகழ்த்தும் நீ உண்மைஞானத்தை உதவாவிடின் என் உயிர் அதிகாரமலத்துட்பட்டார் வழிப்பட்டு அல்லலுறும் என்றவாறு.*

*கமலத்தேவி - காத்தலாகிய தொழிலை இறையருளாற் புரியும் அதிகாரமலத்துளகப்பட்ட திருமாலின் போகசத்தி. அவளோ என்று ஐயந்தோன்றா நின்றது என்றது உண்மைஞானம் பெறாது வருந்துதலான் என்க.*

*அமிழ்தே அணங்கே என விளித்தான் இன்பும் துன்பும் ஒருங்கே விளைத்தலின். துன்பும் இன்புமாகிய இரண்டினையும் ஒருங்கே விளைக்கும் உமக்கு என் ஆவியை அழித்தல் கூடாது என்று வற்புறுத்தியவாறு.*

*இதனால் ஆன்மா சிவத்தின் கருணை நிறைந்த உபதேச மொழியைப் பெறவிரும்பியவாறு காண்க.* *(23)*

## நாணிக்கண் புதைத்தல்

### 'இன்பநாணுதல்போல் உயிர் இன்னல் எய்தியது'

*இங்ஙனம் முன்னின்று புகழ்தலைக் கேட்ட இன்பவடிவான தூய சிவம் முன்னிற்கலாற்றாது நாணியதுபோல் ஒருவழி ஒதுங்க, உயிர் அருளுரை வேட்டு அருட்பார்வையையும் இழந்தோமே! அடுப்பு நெருப்பும்போய் வாய்த் தவிடும் போயதுபோலாயிற்றே நம் நிலை என்று வருந்தாநிற்றல்.*

*இன்பநாணுதல் அருளின் மறைந்ததைக் கண்டதுபோல உயிர் இன்னல் எய்தியது என்பது காழித்தாண்டவராயர் குறிப்பு.*

*அகத்துறையில் இது தலைவி நாணி ஒரு கொடியின் ஒதுங்கித் தன்கண் புதைத்து வருந்தாநிற்றல் எனத் தலைவியின் செயலாகக்*

கூறியிருக்கவும், பின்வரும் கலித்துறைப்போக்கும் இக் கருத்தையே விளக்கவும், பேரின்பக்கொளு தலைவி கண்புதைக்கத் தலைவன் வருந்தியது என்கின்றது. காழித்தாண்டவராயர் குறிப்பும் இதனையே விளக்குகிறது; ஆதலின், அவள் கண்புதைக்கத் தலைவன் வருந்துதலை இப் பாடலும், மிக வருந்திக் கூறுதலை அடுத்த பாடலும் விளக்கியதாகக்கொள்க.

அகலிடந் தாவிய வானோன் அறிந்திறைஞ் சம்பலத்தின்
இகலிடந் தாவிடை யீசற் றொழாரினின் னற்கிடமாய்
உகலிடந் தான்சென் றெனதுயிர் நையா வகையொதுங்கப்
புகலிடந் தாபொழில் வாயெழில் வாய்தரு பூங்கொடியே. 42

பொ - ரை: மூவுலகும் ஈரடியால் தாவிய திருமால் நம்மால் வணங்கப்படும் இடம் இதுவொன்றேயாம் என்றறிந்து வணங்கும் சிற்றம்பலத்தில் உள்ளவனாகிய, பகையுடைய இடங்களிற்சென்று பாயும் இடபவாகனத்தையுடைய இறைவனைத் தொழாதாரைப் போலத் தானே அழியுமளவு துன்பம் அடைந்து என் உயிர் நையாதவண்ணம், சோலைக்கண் அழகு வாய்ந்த பூங்கொடியே! யான் ஒதுங்குதற்குப் புகலிடம் தருவாயாக எ-று.

பேரின்பக்கொளு தலைவி கண்புதைத்தலால் தலைவன் வருந்திய அளவில் இப் பாடற்பொருணோக்கு அமைந்ததாகக் கூறும். இதன் அமைதி ஆராய்தற்கு உரியது. (24)

## கண்புதைக்க வருந்தல்

### 'உயிர்தன் வருத்தம் உற்றுற் றுரைத்தது'

சிவத்தலைவி அருட்குணமறைந்து கண்ணைப்புதைக்க உயிர் அச் செயலுக்கு ஆற்றாது மிகமிக வருந்தி உரைத்தது. அருட்குணமறைய உயிர் வருத்தமுற்றது என்பது பழையவுரை.

தாழச்செய் தார்முடி தன்னடிக் கீழ்வைத் தவரைவிண்ணோர்
சூழச்செய் தானம் பலங்கை தொழாரினுள் ளந்துளங்கப்
போழச்செய் யாமல்வை வேற்கண் புதைத்துப்பொன் னேயென்னைநீ
வாழச்செய் தாய்சுற்று முற்றும் புதைநின்னை வாணுதலே. 43

பொ - ரை: தன்கண் தாழ்ந்தவர்களுடைய முடிகளைத் திருவடிக்கீழ் வைத்து, அவரைத் தேவர்கள் என்றும் புடைசூழ்ந்திருக்கச்செய்த அம்பலவாணப் பெருமானது சிற்றம் பலத்தைக் கைதொழாதாரைப்போல, என் நெஞ்சம் நடுங்கப் பிளவுறாவண்ணம் தன் கூரிய கண்களைப் புதைத்து, பொன்னே! நீ என்னை வாழவைத்தாய்; ஒள்ளிய நெற்றியையுடையவளே! என் உள்ளம் கலங்காதவண்ணம் நின் மேனி முழுதையும் மறைப்பாயாக என்றவாறு.

*கண்களை மறைத்து என் உள்ளம் பிளந்துபோகாமல் காத்த நீ, யான் கலங்காதவண்ணம் உன் மேனி முழுவதையும் மறைக்க என்றானாம். இதன் குறிப்பு, திருவருட்பார்வை இழந்தமை ஒன்றானே என் துயர் எல்லை கடந்தது; திருமேனியையும் மறைத்தால் இனி பெறுதற்கரியது சிவம் என்று உயிரகலத் துன்பு ஒழிவேன் என்று விண்ணப்பித்தவாறாம்.*

*தாழச்செய்தார் - முழுமுதற்கடவுள் சிவனே எனத் தெளிந்து, அவன் அடியே நாம் வணங்குதற்கு உரியது எனத் தேர்ந்து, அகங்காரம் ஒடுங்கி, முடியைத் தாழ்த்தியவர்கள்; அவர்களை உயர்த்தித் தேவர்கள் புடைசூழச் செய்தவன் என்பதாம்.*

*கண்களில் வழியும் கருணையைக் கண்டு என் உள்ளம் நெக்குருகியது; தன்வசமற்றது; அந் நிலை இனி விளையாத வண்ணம் கண்களை மறைத்தாய் என்றானாம். இங்ஙனம் கண்களை மறைத்துத் துன்புறுத்துதலைக் காட்டிலும் அருள் வடிவான மேனி முழுவதையும் மறைத்தால் கவலையே இல்லை; யான் அழிதலால் என்றானாம். (25)*

## நாண்விட வருந்தல்

### 'இன்ப நாணின்றி எய்தல்கண் டின்புறல்'

*'விட்டிடுதிகண்டாய் விறல்வேங்கையின்தோல் உடையவனே' 'தரியேன் தரியேனே' எனச் சிவத்தைவிட்டுத் தனித்திருக்கலாற்றாமல் புலம்பிய உயிரின் பரிபாக மிகுதியைத் திருவுளத்தெண்ணிய சிவம், தன்னை என்றும் விட்டுநீங்காது சிவகுணமாய் விளங்கிய இன்பநாண் நெகிழ்தலைக்கண்டு திருவுளம் இரங்கிக் கூறியது.*

குருநாண் மலர்ப்பொழில் சூழ்தில்லைக் கூத்தனை யேத்தலர்போல்
வருநாள் பிறவற்க வாழிய ரோமற்றென் கண்மணிபோன்
றொருநாள் பிரியா துயிரிற் பழகி யுடன்வளர்ந்த
அருநா ணளிய அழல்சேர் மெழுகொத் தழிகின்றதே. 44

*பொ - ரை: என் கண்ணுள் விளங்கும் மணியைப்போன்று, உயிரோடு ஒன்றிப்பழகி ஒருபோதும் பிரியாமல் என்னுடனே வளர்ந்த பெறுதற்கரிய அளித்தாகிய நாண் தீசேர் மெழுகொப்ப உருகாநின்றது; அதனால் நிறம்பொருந்திய அன்றலரும் பூக்களையுடைய பொழில்சூழ்ந்த தில்லையில் எழுந்தருளியுள்ள கூத்தப்பெருமானை வணங்காத பரிபாகமில்லாதாரைப் போல, எனக்கு இனி வரக்கடவ நாள்கள் பிறவாதொழிக என்றவாறு.*

*அம்பலவாணப் பெருமானை ஏத்தாதார் எய்தும் துன்பப் பிறவி எனக்கு இனி உண்டாகாதிருக்க என வேண்டினளாம்.*

*சிவகுணமான அளி, இன்பவடிவினதாகப் பரிபாகமுடைய ஆன்மாவினிடத்தே செலுத்தப்படுவதாயிருந்தது; இன்று இவ்வுயிரிடத்தும் இரங்கிச் செல்வதாயிற்று என்பதாம். அங்ஙனம் செல்லும் கருணை தீயைச்சேர்ந்த மெழுகொப்பத் தானே கரைவதாயிற்று என்க.* *(26)*

## மருங்கணைதல்

### 'திருவுருப் பரிவாற் பெருகு சுகம்பெறல்'

*இங்ஙனம் கருணையாற்கனிந்து விளங்கியபோது, உயிர் இதுவே இதனைச் சார்தற்குரிய காலம் என எண்ணி, ஒருகாலைக் கொருகால் பெருகுவதான இன்ப சுகத்தைச் சார அணுகுதல்.*

**கோலத் தனிக்கொம்ப ரும்பர்புக் கஃதே குறைப்பவர்தம்**
**சீலத் தனகொங்கை தேற்றகி லேஞ்சிவன் தில்லையன்னாள்**
**நூலொத்த நேரிடை நொய்ம்மையெண் ணாதுநுண் டேனசையால்**
**சாலத் தகாதுகண் டீர்வண்டு காள்கொண்டை சார்வதுவே. 45**

*பொ - ரை: அழகிய நுனிக்கொம்பில் ஏறியிருந்துகொண்டு அடிக்கொம்பை வெட்டுவாரின் தன்மையை உடையனவாயிருந்தன பர அபர ஞானங்களாகிற கொங்கைகள்; இச் செயலை யாம் அறியேம்; அதனால் வண்டுகளே! சிவபெருமான் எழுந்தருளியுள்ள தில்லையை ஒப்பாளுடைய நூல்போன்ற இடையின் நுண்மையை எண்ணாமல், நீவிர் தேனை நுகரும் விருப்பால் கொண்டையில் மொய்ப்பது தகாது என்றவாறு.*

*பொறியின்பமே கருதிச் சிவபரம்பொருளைச் சாரும் பரிபாகமில்லாத உயிர்களை விலக்கித் தன் பரிபாகம் தோற்ற - சிவகருணையும் நெகிழ்ந்து உடன்பாடு தெரிவிக்க உயிர் மருங்கணைந்தவாற்றை உணர்க.*

*பேரின்பம் கருதிச் சேரவேண்டிய சிவத்தை நாவின்பமாகிய பொறியின்பமொன்றே கருதி மொய்ப்பன ஆணவத்தாற்கரிய உயிர்கள் என்ற நயம் உணர்க.* *(27)*

## இன்றியமையாமை கூறல்

### 'சித்தி யாவையும் சேர்ந்திடு மாயினும் இத்தகை யின்பம் இகழேன் என்றது'

*வீட்டின்பத்தை எய்துதற்குத் தடையான அட்டமாசித்திகள் அனைத்தும் தாமேவந்து பொருந்துமாயினும், சிவத்தைச்சார்ந்து சிவமேயாம் பேரின்பத்தை ஒருபோதும் இகழேன் என்று உயிர் உரைத்தது.*

**நீங்கரும் பொற்கழற் சிற்றம் பலவர் நெடுவிசும்பும்**
**வாங்கிருந் தெண்கடல் வையமும் எய்தினும் யான்மறவேன்**

தீங்கரும் பும்மமிழ் துஞ்செழுந் தேனும் பொதிந்துசெப்பும்
கோங்கரும் புந்தொலைத் தென்னையும் ஆட்கொண்ட கொங்கைகளே. 46

*பொ - ரை: என்றும் பிரியாத பரநாதமாகிய கழலையுடைய சிற்றம்பலநாதன் படைப்புக்கு உட்பட்ட விண்ணுலகும், வட்டமான கடலால் சூழப்பட்ட மண்ணுலகும் ஒருசேரவந்து இயைவதாயினும், இனிய கருப்பஞ்சாற்றையும், அமிழ்தத்தையும், முதிர்ந்த தேனையும் பொதிந்துவைத்து, செப்பினையும் கோங்கரும்புகளையும் வென்று, என்னையும் தமக்கு அடிமைப் படுத்தியவான கொங்கைகளை யான் மறவேன் என்றவாறு.*

*கொங்கைகளே ஞானமாய்ப் பேரின்ப வாயிலாகி, கரும்பைத் தேனைப் பாலைக் கட்டியை அமிழ்தை ஒத்த முத்தியின்பத்தை உதவின ஆதலால் அவ்விருவகை ஞானங்களையும் மறவேன் என்றான். அறிவு மறக்கின் அனுபவம் குன்றுமாதலின் என்க.*

*விண்ணும் மண்ணும் ஆளும் இன்பம் இவ்வின்பத்திற்கு எட்டுணையும் ஈடாகாது என்று அனுபவமுதிர்ச்சி அறிவித்தவாறு. (28)*

## ஆயத்து உய்த்தல்

'மெய்யடியாரிடை வேறறக் கலந்து
ஐயமின்றி அமர்தலை அறிதல்'

*தன்பால் வந்து தன்னொடு கலந்து தனிப்பேரின்பத்தை அளித்த சிவம், உண்மையடியார்கூட்டத்துக் கலந்து விளங்குதலை மெய்யுணர்வான் அறிந்து அதன்பால் விண்ணப்பித்தல்.*

சூளா மணியும்பர்க் காயவன் சூழ்பொழிற் றில்லையன்னாய்க்
காளா யொழிந்ததென் னாருயி ராரமிழ் தேயணங்கே
தோளா மணியே பிணையே பலசொல்லி யென்னைதுன்னும்
நாளார் மலர்ப்பொழில் வாயெழி லாயம் நணுகுகவே. 47

*பொ - ரை: தேவர்க்குச் சூடாமணியான அம்பலவாணப் பெருமான் எழுந்தருளியுள்ள தில்லையை ஒத்த நினக்கு எனது அரிய உயிர் அடிமையாயிற்று; பல சொல்லி என்னை? நிறைந்த அமிழ்தே! அணங்கே! துளைக்கப்படாத மாணிக்கமே! பெண்மானே! நீ பலகாலும் விளையாடும் அன்றலர்ந்த பூக்களையுடைய பொழிலிடத்து அழகிய மகளிர் கூட்டத்தைச் சென்று அணுகுவாயாக என்றவாறு.*

*பெற்ற பேரின்பம் இத்துணைத்தென்று சொல்லிக் காட்டலாகாமையின் அமிழ்தே அணங்கே எனப் பல்லாற்றானும் புகழ்கின்றானாம். ஆயம் - மெய்யடியார் கூட்டம்.*

இறைவற்குத் தேவசூடாமணி என ஒரு பெயர் உண்மையின் 'உம்பர் சூளாமணி' என்றான். தில்லை கண்டார்க்கு முத்திதருதல் போலச் சிவத் தலைவியும் கண்ட தனக்குப் பேரின்பந் தருதலின் 'தில்லையன்னாய்' என்றான்.

என்றும் மீளா ஆளாதலின் 'என் ஆருயிர் ஆளாய் ஒழிந்தது' என்றான். ஒழிந்தது என்றது ஆளான பிறகு ஆண்டாள் குறிப்பின் வழி ஒழுகுதலன்றித் தனக்கு ஒரு சுதந்திரமும் இன்மையின் என்க; "பணிசெய்து கிடப்பதே" என்புழிப்போல.

தோளாமணி - முழுமணி. சிவம் முழுமணியாய் இயற்கையே ஞான ஒளி நல்குவதாகலின் இங்ஙனம் கூறினான்.

இங்ஙனம் சிவத்தைப் பலவேறுவகையினும் பாராட்டவும், நுகர்ச்சியை உணர்த்தவுங்கூடிய தகுதி சிவனருள்பெற்ற பரிபாகமுற்ற ஆன்மாவிற்கே உரியது என்பான் 'ஆருயிர்' என்றான். (29)

## நின்று வருந்தல்

### 'திருவுரு நீங்குந் திறம் அரிது என்றது'

மெய்யடியார்கள் கூட்டத்துக் கலந்தபின் சிவத்தின் பிரிவு உள்ளத்தைக் கவற்ற அழகும் ஞானமுமேயான திருவுரு எத்துணையும் பிரியுந்தரத்தது அன்று என்று வருந்தா நிற்றல்.

**பொய்யுடை யார்க்கரன் போலக லும்மகன் றாற்புணரின்**
**மெய்யுடை யார்க்கவன் அம்பலம் போல மிகநணுகும்**
**மையுடை வாட்கண் மணியுடைப் பூண்முலை வாணுதல்வான்**
**பையுடை வாளர வத்தல்குல் காக்கும்பைம் பூம்புனமே. 48**

பொ - ரை: மை பூசப்பெற்ற வாள்போலும் கண்ணையும், மணிகள் அழுத்தப்பெற்ற அணிகலன்களை அணிந்த முலைகளையும், ஒளி பொருந்திய நெற்றியினையும், பெரிய படத்தையுடைய ஒளி பொருந்திய அரவுபோலும் அல்குலையும் உடைய தலைவி காக்கும் பசிய பூம்புனம், பொய்யன்பர்க்குச் சிவபெருமான்போல அகலும்; மெய்யன்பர்க்கு அவன் எழுந்தருளியுள்ள சிற்றம்பலம்போல மிக அணுகும் என்றவாறு.

சிவத்தலைவி இருக்கும் ஞானபூமியாகிய புனம் சிவபெருமான் போலக், கரவாடும் நெஞ்சர்க்கு மிகச் சேய்மையாகவும், உறவாடும் மெய்யன்பர்க்கு அணித்தாகவுமிருக்கும் என்பதாம். சுவாமிகள் 'புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க" என்றதும் காண்க. (30)

## 3. இடந்தலைப்பாடு

**'இடந்தலைப் பாடு ஈராறும் ஒன்றும்**
**அருட்குரு தரிசனத் தன்பு மிகுதியால்**
**பேரா னந்தம் பெற்றனு பவித்தல்'**

அஃதாவது, மின்னிடைமெலிதல் முதல் நின்றுவருந்தல் ஈறாகக் கூறப்பட்ட தற்போதங்கண்டகறலாகிய பாங்கற் கூட்டத்திற்குரிய கிளவிகள் பன்னிரண்டும், இடந்தலைப்பாட்டிற்கே உரியதான பொழிலிடைச்சேறலாகிய ஒன்றும், சிவ குருதரிசனம் பெற்றநாள்முதல் ஆன்மாவிற்கு உண்டான பத்தி விசேடத்தினால் வேறு எவற்றானும் பெறுதற்கரிய பேரானந்தத்தைப் பெற்று அனுபவம் கைவரப் பெறுதலாம்.

### பொழிலிடைச் சேறல்

**'கைம்மா றின்றிக் கருணை செய்தலால்**
**இன்னமும் இவ்விடை இன்புறும் என்றது'**

சிவகுருநாதன் முன்னொருக்கால் அடியேன்மாட்டு எவ்விதக் கைம்மாறும் வேண்டாதே நிரதிசயானந்தத்தை அளிக்கவல்ல பேரருளைச் செய்தான் ஆகையால், அத்தகைய கருணைக்கு இன்றும் ஓர் இடையீடின்மையால் யான் அதனைக் கண்டு அனுபவித்த சிவஞானபூமிக்கே செல்லின் மீட்டும் பெறலாம் இன்பு எய்தலாம் என்று தன் நெஞ்சொடு கூறாநிற்றல்.

**என்னறி வால்வந்த தன்றிது முன்னுமின் னும்முயன்றால்**
**மன்னெறி தந்த திருந்தன்று தெய்வம் வருந்தனெஞ்சே**
**மின்னெறி செஞ்சடைக் கூத்தப் பிரான்வியன் தில்லைமுந்நீர்**
**பொன்னெறி வார்துறை வாய்ச்சென்று மின்றோய் பொழிலிடத்தே. 49**

பொ - ரை: முன்னும், ஒன்றற்கும் பற்றாத அடியேன் சிவகுரு தரிசனம்செய்து அவனொடு கலந்த இந்தக் கலப்பு தற்போத முனைப்பால் விளைந்ததன்று; திருவருள் இடைநின்று கூட்டுவிக்க விளைந்தது; திருவருளைத் துணைநிற்கவேண்டி மேலும் சிறிது முயன்றால், சிவகுருதரிசனமாகிய பேரின்பப் புணர்ச்சியைத் தந்த திருவருள் இன்னும் இருக்கத்தான் செய்கிறது; அது முன்னின்று முடிக்கும்; அதனால் நெஞ்சே! நீ வருந்தற்க; மின்னொளியைத் தன்னொளியினால் வெல்லும் சிவந்த சடையையுடைய கூத்தப்பிரானது தில்லையைச் சூழ்ந்த கடற்றிரை பொன்னைக் கொணர்ந்து கொழிக்கின்ற நீண்ட துறையிடத்து மின்னுகின்ற முகில் தோயும் பொழிலிடத்து அடைவேம் என்றவாறு.

பாசஞானமும் பசுஞானமுமாகிய இரண்டானும் பேரின்பம் எய்தற்கு அரிதாகலின் 'என் அறிவால் வந்ததன்று இது' என்றான்.

ஆன்மாவிற்கு மலமறைப்பு உள்ளவரை திருவருளால் நடப்பன வற்றையும் தன் அறிவால் நடந்ததாக எண்ணுதலும், மலம் வலிகுன்றி ஒடுங்கியவழி எல்லாம் சிவன் செயல் என்றிருத்தலும் இயல்பாதலின் என் அறிவால் வந்தது அன்று என்றானாம்.

மீட்டும் திருவருள் கூட்டிய இடத்திற்கே சென்று திருவருளை வேண்டி நின்றால் பேரின்பம்பெறுதற்கு எளிதாம் என்பான் 'நெறி தந்தது தெய்வம் இருந்தன்று' என்றான். சிவானந்தம் என்றும் நிலைபேறானமையின் அதனை 'மன் நெறி' என்றான்.

வருத்தமும் மகிழ்ச்சியுமாகிய வேறுபாட்டுணர்வு மலமறைப் பால் மாயாகாரியமாய் வேண்டுதல் வேண்டாமை அடியாக விளைவன ஆகலின் அவ்வுணர்வு அகன்ற சிவானந்தப்பேறு, அடியார் நேசமும் சிவபூசையும் சீபஞ்சாக்கர சிந்தனையுமாகிய உபாயங்களான் என்றும் நீங்காதே நிலைபெறும்; அதனை அடியேற்குக் கூட்டுவித்த திருவருள் எங்கே போய்விட்டது? இருக்கத்தானே செய்கிறது. அதனால் இன்பினை யான் அடைய என்ன தடை? என்று நெஞ்சத்தைத் தெளிவித்தவாறு காண்க. (1)

## 4. மதியுடம்படுத்தல்

**'மதியுடம் படுத்தல் வருமீ ரைந்தும்**
**குருவறி வித்த திருவரு ளதனைச்**
**சிவத்துடன் கலந்து தெரிசனம் புரிதல்'**

அஃதாவது, பாங்கியிடைச்சேறல் முதல் இடைவினாதல் ஈறாகக் கூறப்பெற்ற பத்துக் கிளவிகளும் சிவகுரு எஞ்ஞான்றும் சிவத்தை அடைந்து பேரின்பந் துய்த்தற்கு உபகாரப்படும் வாயிலாகத் தெரிவித்த திருவருளைச் சிவத்தோடு கலந்து நின்று தரிசனம் செய்தலாம்.

### பாங்கியிடைச் சேறல்

**'திருவருளாற் சிவம் பெறுதலறிந்தது'**

தற்போதம் அகன்றதாலோ, தலைநாட்கூட்டிய புண்ணியம் இன்றும் தரக்கூடும் என்று எதிர்நோக்கிச் சிவஞானநிலைக் களத்துச்சென்று எதிர்ப்பட்டதாலோ வழிநாளும் சிவத்தோடு கூடிப் பேரின்பந்துய்த்த உயிர், சிற்றறிவும் சிறுதொழிலும் மலமறைப்பும் மாயாகாரிய நுகர்ச்சியும் உடைய யாம் எங்கே? அவை அநாதியேயில்லாமல் பேரின்பப்பிழம்பாய் அடியார் கூட்டத்தினிடையே சிவஞானபூமியில் திகழும் சிவத்தலைவி எங்கே? அவளை யாம் தலைப்பெய்யுமாறு யாங்ஙனம்? என்று கவன்று, சிவத்தலைவி திருக் கடைக்கண்ணா லுணர்த்திய திருவருளாகிய தோழியின் பக்கல் செல்வேன் என் குறையை அவளிடத்துத் தெரிவிப்பேன் என்று திருவருள் வழிப்படுத்தலாம்.

**எளிதன் றினிக்கனி வாய்வல்லி புல்லல் எழின்மதிக்கீற்**
**றொளிசென்ற செஞ்சடைக் கூத்தப் பிரானையுன் னாரினென்கண்**
**தெளிசென்ற வேற்கண் வருவித்த செல்லலெல் லாந்தெளிவித்**
**தளிசென்ற பூங்குழற் றோழிக்கு வாழி யறிவிப்பனே. 50**

*பொ - ரை: சிவத்தலைவியை யாம் என்றும் இடையீடின்றிக் கலக்கப்பெறுதல் அத்துணை எளியதொரு செயல் அன்று; இளம் பிறையை அணிந்த கூத்தப் பிரானைத் தியானியாதாரைப் போல யான் வருத்தமுற, என்னிடத்துத் தெளிதலையடைந்த வேல்போலும் என் பாசக்ஷயத்தை விளைவிப்பனவாகிய அருள்பொழியும் கண்கள் தந்த நோயனைத்தையும், இரக்கமே வடிவான கூந்தலையுடைய தோழியாகிய திருவருளுக்கு விண்ணப்பிப்பேன் என்றவாறு.*

*பற்பல பிறவிகளில் யான் ஈட்டிய சிவபுண்ணியத்திரட்சியால் சிவத் தலைவியை ஆன்ம போதத்தானும், யதேச்சையாகச் சிவதலங்களிற்சென்று அடைதலானும், தலைநாளும் வழிநாளும் தலைப்பெய்து பேரின்பம் பெற்றேமாயினும், எஞ்ஞான்றும் கூடுதல் எளிதன்று என்றுணர்ந்து பரிபாகமுற்ற ஆன்மா சிவத்தை யுறும் உபாயமாகச் சிவம் உணர்த்திய திருவருளினிடம் சென்று தன் குறையைத் தெரிவித்து உய்வேன் என்று எண்ணியவாறாம்.*

*திருவருளிற் றலைப்பெய்து சிவதரிசனம் செய்து இன்பமுறுதல் சிவத்தியானம் இல்லாதார்க்கு என்றும் சித்தியாதாம் என்பார் 'கூத்தப் பிரானை உன்னாரின் செல்லல் வருவித்த வேற்கண்' என்றான். திருவருளைக் காட்டும் உபகாரத்தையும் சிவமே செய்தது என்பான் 'என்கண் தெளி சென்ற வேற்கண்' என்றான். வேல் பகைநீக்கி இன்பம் அளித்தமைபோலக் கண்கள் என் மலமறைப்பைப் போக்கி 'உனக்குத் திருவருளே சிவத்தை அடைதற்குப் புகலிடம் என்று' உணர்த்தியது என்றவாறு.*

*அளி சென்ற தோழி பூங்குழல் தோழி என இயைத்துப் பூங்குழலையுடைய இரக்கமே வடிவான திருவருள்தோழி என்க.*

*திருவருள் வேண்டத் தக்கதறிந்து வேண்ட முழுதும் தருவதாகலின் நின்ற நிலையில் என்றும் எல்லாவற்றையும் அறிந்து உய்க்குமாயினும், அதற்கும் விண்ணப்பித்தல் இன்றியமையாத தாயிற்று என்க. (1)*

## குறையுறத் துணிதல்

### 'சிவமே காட்டத் திருவருளை உணர்தல்'

*திருவருளைத் துணைக்கொள்ளலாம் என்று கருதிச்சென்ற உயிர், திருவருளும் சிவமும் பிரிப்பின்றியிருத்தலை உணர்ந்து, திருவருளே சிவத்திற்குகந்தது திருவருளானன்றிச் சிவம் எய்தற்கு*

எளிதன்று ஆதலின் திருவருளிடம் என் குறையை விண்ணப்பிப்பேன் என்று துணியாநிற்றல்.

**குவளைக் கருங்கட் கொடியே ரிடையிக் கொடிகடைக்கண்**
**உவளைத் தனதுயி ரென்றது தன்னோ டுவமையில்லா**
**தவளைத்தன் பால்வைத்த சிற்றம் பலத்தான் அருளிலர்போல்**
**துவளத் தலைவந்த இன்னலின் னேயினிச் சொல்லுவனே. 51**

*பொ - ரை: சிவத்தின் கடைக்கண்கள் திருவருளே எமக்கு உயிர் போல்வது என்று உணர்த்தாநின்றன; ஆதலால் சிற்றம்பலநாதன் திருவருளைப் பெறாதவர்போல் யான் வருந்த, என்னிடம் வந்த பிரிவுத்துன்பத்தை, இனி இப்போதே திருவருளுக்கு விண்ணப்பிப்பேன் என்றவாறு.*

*அருள்நோக்கம் காட்ட அருளை உணர்ந்தேன்; அருள் வாயிலாகவே அரனடி இன்பத்தை அனவரதமும் எய்துவேன் என்பது கருத்து.*

*அம்பலத்தான் திருவருளைப் பெறாதார் மலமறைப்பால் மாயாகாரியத் திடைப்பட்டுச் சுக துக்கங்களாகிற துன்பங்களில் உழல்வார்கள் ஆதலின் 'சிற்றம்பலத்தான் அருளிலர்போல் துவள' என்றான்.*

*உபாயங்கண்டு உணர்த்தின் தெளியாத இன்னல் இன்றாகலின் 'இனி இன்னல் சொல்லுவன்' என்றான். (2)*

## வேழம் வினாதல்

### 'அருள்சிவம் கலந்த அருமையுயிர் தேர்தல்'

*திருவருள் வடிவான பாங்கி, சிவமாகிய தலைவியோடு கலந்துள்ள அருமையை உணர்ந்த உயிர், திருவருளே சிவத்திற்கு இன்றியமையாததும் பிரிக்க முடியாததுமான துணையாம் என உட்கொண்டு, அதனையே கூட்டத்திற்குத் துணையாகக் கொள்ளக்கருதி, என்னை உம்மை அணுகமுடியாதவண்ணம் தடுத்து நின்ற ஆணவமென்னுங் களிற்றை யான் பதிபுண்ணிய விசேடத்தால் வந்த சிவ ஞான பாணத்தால் எய்தேன்; அது வலி ஒடுங்கித் தப்பியுய்ய இவ்வழி ஓடியதோ? அதனை யான் கொல்லாதுவிடின் என் சோர்வு பார்த்து மீட்டும் அது என்னை வருத்தவுங்கூடும் என்று வினாவி அறிவான்போல அணுகுதல்.*

**இருங்களி யாயின் றியானிறு மாப்பவின் பம்பணிவோர்**
**மருங்களி யாவன லாடவல் லோன்றில்லை யாண்மலையீங்**
**கொருங்களி யார்ப்ப வுமிழ்மும் மதத்திரு கோட்டொருநீள்**
**கருங்களி யார்மத யானையுண் டோவரக் கண்டதுவே. 52**

*பொ - ரை: தம்மைப் பணிவோர்களாகிய அடியார்கள் பக்கல்கூடிப் பெரிய களிப்போடு யான் இறுமாக்கும்வண்ணம்*

பேரின்பத்தை எனக்கு அளித்து அனலின்கண் ஆடவல்லோனாகிய கூத்தப்பெருமானுடைய மலையாகிய இவ்விடத்து, வண்டுகள் ஒருங்கு ஆரவாரிக்க மும்மதத்தைக் கக்குகின்ற இரண்டு கொம்பினையுடைய ஒப்பற்ற நீண்ட களியார்ந்த மதயானை ஒன்று வரக்கண்டதுண்டோ என்றவாறு.

கூத்தப் பெருமானுடைய மலையிடத்து மத யானை ஒன்று வர நீவிர் கண்டதுண்டோ என்றானாம்.

யானை ஆணவத்திற்கும், மதம் அதன் செருக்கிற்கும், வண்டு மொய்த்தல் செருக்கையே போகமாகக்கொண்டு மயங்கி ஆரவாரிக்கும் உயிர்கட்கும், இரண்டு கோடுகளும் ஆணவத்தின் தன்மைகளாகிய தன்னைக் காட்டாமையும் தலைவனை மறைத்தலுமாகிய இரண்டு கொடுந்தொழில்களுக்குமாக உருவகம் கொள்க.

அடியார் கூட்டமும், ஈசனிடம் நேசமும் பரிபாகம் பெற்றமைக்கு அடையாளம் ஆதலின் பரிபாகம்பெற்றுச் சிவபோகம் துய்த்தற்கு உரியதான ஆன்மா தலைவனாம் என்றவாறு.

இறுமாப்ப என்றது சுத்த அகங்காரத்தினாலே விளைந்த செருக்கு. ஆணவம் வலி குன்றச் சிவஞானம் தலைப்பட ஆன்மா அருள்வாயிலாகச் சிவத்தைக் கூடஎண்ணி, சிவஞான அம்பால் எய்து விரட்டப்பெற்ற ஆணவக்களிறு வந்ததோ என வினாவியவாறு காண்க. ஒளி இருளை அறியாதவாறு போல அருளாகிய பாங்கி ஆணவமாகிய களிற்றை அறியாள்; ஆயினும், உரைவேட்டு உற்றுப்பழக உபாயமாக இவ் வினாவைக் கையாண்டவாறாம். (3)

## கலைமான் வினாதல்

### 'அருள்விடை பெறாமல் பின்னும் புகறல்'

யான் ஆணவத்தை வினாவவும் அருள் மறுமொழி கூறாமைக்குக் காரணம் சித்தாகிய அருள் சடமாகிய ஆணவத்தை அறியாமையானாகும் என உட்கொண்டு, விரைவும் நுணுக்கமும் உடைய கலைமானான பாசஞானத்தைத் தாம் கண்டது உண்டோ என வினவுதலாம். கலைமான் - பாசஞானம்; வேதமொடாகமங்களும் அறுபத்து நான்கென்னும் கலைகளுமான நூலறிவு. அதனை அருள் அறியாது, அருளை அது அறியாது ஆதலால் கலைமானை வினாவியது.

**கருங்கண் ணனையறி யாமைநின் றோன்றில்லைக் காப்பொழில்வாய்**
**வருங்கண் ணனையவண் டாடும் வளரிள வல்லியன்னீர்**
**இருங்கண் ணனைய கணைபொரு புண்புண ரிப்புனத்தின்**
**மருங்கண் ணனையதுண் டோவந்த தீங்கொரு வான்கலையே. 53**

*பொ - ரை: கரிய மால் அறிய இயலாவண்ணம் தன்னை ஒளித்து நின்ற கூத்தப்பிரானது தில்லையில் உண்டான பொழிலிடத்து, சுரக்கின்ற தேனால் நனையும்வண்ணம் வண்டுகள் ஆடுகின்ற வளருங்கொடியை ஒத்த பெண்களே! உங்கள் கண்களைப்போன்ற அம்புகள் தைத்தலாலுண்டான புண்ணோடுகூடின பெரிய மான் ஒன்று இப் புனத்தின்கண் வந்ததுண்டோ என்றவாறு.*

*கருங்கண்ணன் - திருமால். அவன் அதிகாரமலத்தான் மறைப்புண்டு தலைவனை அறியானாதலின் இறைவன் அவன் அறிவினைக் கடந்து நின்றான் என்பார் 'கண்ணனை அறியாமை நின்றோன்' என்றார். கலைஞானமாகிய பாசஞானம் திருவருளும் சிவமுமாகிய உங்கள் கண்ணம்பு தாக்கப் புண்பட்டு நிலைகுலைந்து ஓடத்தொடங்கியது என்பான் 'கண் அனைய கணை ஒரு புண்புணர் வான்கலை வந்தது உண்டோ' என்றான். (4)*

## வழி வினாதல்

### 'வழிமேல் வைத்துப் புகலிலை என்றது'

*கலை வினாவியும், அருள் அதனை அறிவேன் என்றோ அறியேன் என்றோ மறுமொழி தராமையின், தம் கருத்து வேழமும் கலையும் வினாவுதலன்று; சிவத்தோடு தலைப்பெய்தலே என்று திருவருள் திருவுளங்கொள்ளவேண்டி நுமது ஊராகிய சிவஞான பூமிக்குச் செல்லும்வழி யாது கூறுமின் என்று வினாவியது.*

**சிலம்பணி கொண்டசெஞ் சீறடி பங்கன்றன் சீரடியார்**
**குலம்பணி கொள்ள எனைக்கொடுத் தோன்கொண்டு தானணியும்**
**கலம்பணி கொண்டிடம் அம்பலங் கொண்டவன் கார்க்கயிலைச்**
**சிலம்பணி கொண்டநுஞ் சீறூர்க் குரைமின்கள் சென்னெறியே.** 54

*பொ - ரை: சிலம்பு தான் அழகுபெற்ற சிவந்த சிறிய திருவடிகளையுடைய சிவகாமித் தேவியை இடப்பாகங்காண்ட வரும், தன்னடியார் ஏவல் கொள்ள என்னை அவர்களுக்குத் தொண்டனாகக் கொடுத்தவரும், தான் அணியும் கலன்கள் யாவும் பாம்பாகக்கொண்டு, வாழுமிடம் அம்பலமாகக் கொண்டவரும் ஆகிய கூத்தப் பெருமானுடைய திருக்கயிலை மலையை அழகு செய்யும் நும்மூர்க்குச் செல்லும் வழியைக் கூறுமின் என்றவாறு.*

*கூத்தப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கயிலையை அழகுசெய்யும் நும் சிற்றூர்க்குச் செல்லும் வழி யாது? கூறுமின் என்றான். சிவம் வாழும் சிவஞானபூமியை அறிந்தாலன்றிச் சிவத்தைத் தலைப்பெய்த லாகாமையின் அதற்கு உரிய நெறியை வினவினான். (5)*

## பதி வினாதல்

### 'அருள் அறிவியாவிடின் அறியேன் என்றது'

*வழி வினாவவும் திருவருள் வழியுணர்த்தாமையைக்கண்ட உயிர் திருவருள் முன் நின்று, சிவஞானபூமியை எய்துதற்குரிய உபாயயோகத்தை உணர்த்தீராயினும், நும் பதியின் பெயரை யேனும் உணர்த்துதல் பழியன்றே! அதனை அருளாகிய நீ உணர்த்தாவிடின் அறியும் உபாயம் வேறின்று ஆதலால் அதனையேனும் கூறுமின் என வினவாநிற்றல்.*

ஒருங்கட மூவெயி லொற்றைக் கணைகொள்சிற் றம்பலவன்
கருங்கட மூன்றுகு நால்வாய்க் கரியுரித் தோன்கயிலை
இருங்கட மூடும் பொழிலெழிற் கொம்பரன் னீர்களின்னே
வருங்கடம் மூர்பகர்ந் தாற்பழி யோவிங்கு வாழ்பவர்க்கே. 55

*பொ - ரை: திரிபுரங்களும் ஒருசேர வெந்தழிய ஒரு கணை ஏவிய சிற்றம்பலவரும், யானையை உரித்துப் போர்த்தியவரும் ஆகிய சிவபெருமானது கயிலைக்கண் விளங்கும் பொழிலிற்கு அழகுசெய்யும் பூங்கொம்பை ஒத்தவர்களே! இங்கே வாருங்கள்; இங்கு வாழ்பவர்களுக்குத் தம் ஊர்ப் பெயரைச் சொன்னாலும் பழிவருமோ என்றவாறு.*

*நீர் சிவஞானத்தான் சிவத்தை எய்தும் உபாயம் உரையீராயினும், சிவஞானம் விளங்கும் பதியையாயினும் உணர்த்தின், உபாயம் அறிந்து உய்வேன் என்று உயிர் உணர்த்தியவாறாம். (6)*

## பெயர் வினாதல்

### 'இன்பருள் நாமம் ஏதென வினாயது'

*இடம் வினாவியும் திருவருள் உணர்த்தாமையைக்கண்டு, சிவம் என்ற தம் பெயரைச் சொன்னால் அதனையே தாரகமாகக் கொண்டு உபாய நிட்டையும் உண்மை நிட்டையும் முறையே கூடிப் பேரின்பம் எய்தலாமே என்று எண்ணிய உயிர், இன்பத்தைப் பயக்கும் நும் திருப்பெயர் யாது? என வினாவியது.*

தாரென்ன வோங்குஞ் சடைமுடி மேற்றனித் திங்கள்வைத்த
காரென்ன ஆருங் கடைமிடற் றம்பல வன்கயிலை
ஊரென்ன என்னவும் வாய்திற வீரொழி வீர்பழியேல்
பேரென்ன வோவுரை யீர்விரை யீர்ங்குழற் பேதையரே. 56

*பொ - ரை: சிவமணங் கமழும் கூந்தலையுடைய திருவருட் சத்தியே! சடைமுடியின்மேல் மாலையாகத் திங்களை அணிந்த திருநீலகண்டமுடைய சிற்றம்பலநாதனுடைய கயிலைக்*

*கண்ணுள்ள நும் ஊர் என்ன என யான் வினாவவும் வாய் திறவீர்; அதனால் பழி விளையுமாயின் விடுங்கள்; நும் பேர் என்ன உரையீர் என்றவாறு.*

ஆணவக்களிறு அகன்றமையானும், கலாஞானமாகிய பாசஞானம் என்னைப் பிரிந்தமையானும், பொதுவகையான் நும் ஊர் கயிலைக்கண்ணது என்று உணர்ந்துவைத்தும் சிறப்புவகையான் நும் ஊர்ப்பெயரை உணர்ந்திலேன்; நீர் அதனை உணர்த்தாவிடினும், மலவாசனை அகற்றிச் சிவஞானம் உதவும் நும் பெயராகிய 'சிவம்' என்றதையேனும் சொல்லலாகாதோ? அதனையே திருவருளாகிய நீ தந்த உபதேசமாகக்கொண்டு சிந்தனைசெய்து பேரின்பம் எய்துவேனே என்றானாம். (7)

## மொழிபெறாது கூறல்

### 'திருவாய் மலராத் திறமெடுத் துரைத்தது'

*பெயர் முதலியன வினாவவும் பரிபாகமுற்ற தன்னைக் கண்டவுடன் கன்று கண்ட ஈற்றாப்போல வரவேற்று இன்மொழி கூறவேண்டிய திருவருள், எதிர் மொழியாமல் இருத்தலைக் கண்டு, உயிர், திருவருளுக்கு வாய் திறவாதிருத்தல் வழக்கமோ என்று கூறாநிற்றல்.*

**இரத முடைய நடமாட் டுடையவர் எம்முடையர்**
**வரத முடைய அணிதில்லை யன்னவர் இப்புனத்தார்**
**விரத முடையர் விருந்தொடு பேச்சின்மை மீட்டதன்றேல்**
**சரத முடையர் மணிவாய் திறக்கிற் சலக்கென்பவே. 57**

*பொ - ரை: கரும்பையும் தேனையும் பாலையும்போல இனிப்பதாய்ப் பேரின்பம் பயப்பதாய பரமானந்த தாண்டவம் புரிபவரும், எம்மை என்றும் மீளா அடிமைகொண்டவரும் ஆகிய கூத்தப்பெருமானின் தில்லையை ஒத்த அருள்மயமானவர் களாகிய இப்புனத்திலுள்ளார் வரவேற்கத்தக்க விருந்தினரோடு பேசாமையையே விரதமாகப் பூண்டவர்; அஃதன்றாயின் வாய்திறந்தால் முத்துதிரும் என்ற நினைப்பை மெய்ம்மையாக உடையவர் என்றவாறு.*

*திருவருள் பரிபாகமுற்ற ஆன்மாவை வரவேற்கக்கடவதாக இருந்தும் அது செய்யாமையின் வருந்திக் கூறியவாறு.*

*இரதம் - சுவை. ஆனந்தக்கூத்தப்பெருமான் ஆன்மாக்களுக்கு முத்தி நிலையில் கரும்பைத் தேனைப் பாலைக் கட்டியை ஒத்திருப்பனாதலானும், அவன் நடம் தன்னைக் கண்டார்க்கு வேறொன்றையும் விரும்பாத பேரினிமை பயத்தலானும் 'இரத முடைய நடமாட்டுடையவர்' எனப்பெற்றது. நடம் - பஞ்ச கிருத்திய பரமானந்த தாண்டவம். நடம் ஆட்டு: ஒருபொருட் பன்மொழி.*

எம் உடையர் - எம்மை அநாதியே அடிமையாகவும் உடைமை யாகவும் உடையவர். வரதம் - வரத்தை அளிப்பது. அவருடைய வரத்தை அளிப்பதாகிய தில்லை என்க. இப்புனத்தார் - இந்நிலத்து உள்ளாராகிய திருவருளும் அதனை உடைய சிவமுமாகிய பாங்கியும் தலைவியும். விருந்து - புதுமையாகப் பரிபாகமுற்று வந்த உயிர். பேச்சு - என்று வந்தாய்? நலமோ? என்பன முதலாக உசாவுதல். (8)

## கருத்தறிவித்தல்

**'சாத்தும் பச்சிலை தான்கொண்டருளி அருளுந்திறத்தை அறிய உரைத்தது'**

உயிர், திருமேனியில் அணிவிக்கும் பச்சிலைகளைக் கொண்டு வந்துள்ளேன்; அவைகளை ஏற்றருளி, எமக்கு இங்ஙனம் அருள் செய்யவேண்டும் என்று திருவருளுக்கு விண்ணப்பித்தவாறாம்.

**வின்னிற வாணுதல் வேனிறக் கண்மெல் லியலைமல்லல்**
**தன்னிற மொன்றி லிருத்திநின் றோன்றன தம்பலம்போல்**
**மின்னிற நுண்ணிடைப் பேரெழில் வெண்நகைப் பைந்தொடியீர்**
**பொன்னிற அல்குலுக் காமோ மணிநிறப் பூந்தழையே. 58**

பொ - ரை: வில்போலும் நுதலையும் வேல்போலும் கண்களையும் உடைய சிவகாமித்தேவியை அழகையுடைய தன் திருமேனி ஒன்றின் கண்ணேயே இருத்திநின்ற கூத்தப் பெருமானது தில்லையம்பலத்தையொக்கும் மின்போன்ற இடையையும் பேரழகையும் வெண்மையான பற்களையும் பசிய தொடியையுமுடைய பெண்களே! இப் பசுந்தழை உமது பொன்னிற அல்குலுக்குத் தகுமோ? தகுமாயின் அணிவீராக என்றவாறு.

பரிபாகமுற்ற ஆன்மாவினிடத்து. மின்போலத் தோன்றி மறைந்து தன் இன்றியமையாமையைத் தோற்றுவித்தலின் திருவருள் மின்போல் நுண்ணிடை உடையது என்றும், பிறிதொன்றற்குமில்லாத பேரழகுடைமையின் பேரெழில் என்றும், ஏனைய நகையும் தொடியும், இளமையும் அழகும் அறிய உணர்த்தலின் அவற்றை உடையீர் என்றும் திருவருளையும் சிவத்தையும் புகழ்ந்தவாறு.

அல்குல் என்பது ஆனந்தநிலையம். காமநூலும் அதனைச் சுகாலயம் என்றும் போகாலயம் என்றும் கூறும். ஈண்டுப் பேரின்ப நிலைக்களனாகிய அருவச்சிவத்தோடு ஒன்றுகின்ற அறிவு அனுபவம். பச்சிலை - சிவத்திற்குச் சாத்தும் வில்வமும், மருவும், கொழுந்தும், அறுகும் ஆகிய பச்சிலைகள். 'யாவர்க்குமாம் இறைவற்கு ஒரு பச்சிலை' என்றதும் காண்க. (9)

## இடைவினாதல்

**'சிவத்திடை அன்பு செல்லுதலன்றி**
**வேறிலையென்று விரும்பி உரைத்தது'**

*சிவத்திற்குவப்பான பூவும் தழையும் காட்டி நும் பேரின்ப நிலைக்களனும், அதனை நன்கு நுகர்தற்குத் துணையான பரஞான அபரஞானங்களும் எனக்கு நன்கு விளங்காநின்றன; அவை எமக்கு நன்கு விளங்கும்வண்ணம் அங்ஙனம் தோற்றமுடன் நிற்றற்குக் காரணம் யாதோ? அடியேன் அன்புசெய்வது அவற்றையேயன்றிப் பிறவற்றையன்று என்றறிவித்தது.*

**கலைக்கீ ழகலல்குற் பாரம தாரங்கண் ணார்ந்திலங்கு**
**முலைக்கீழ்ச் சிறிதின்றி நிற்றன்முற் றாதன் றிலங்கையர்கோன்**
**மலைக்கீழ் விழச்செற்ற சிற்றம் பலவர்வண் பூங்கயிலைச்**
**சிலைக்கீழ்க் கணையன்ன கண்ணீர் எதுநுங்கள் சிற்றிடையே. 59**

*பொ - ரை: பெண்களே! கலைகளைந்தினுக்கும் அப்பாற் பட்டதான இன்பநிலைக்களம் அதுவாகும்; தூயஞானமே மாலையாக விளங்கும் பர - அபரஞானங்களாகிற முலைக்கீழ் ஆதாரமின்றியிருத்தல் இயலாததொன்று ஆதலால் ஞானங் களையும் போகாலயத்தையும் இயைவித்து நிற்கும் உமது சிற்றிடை எது? தெரிகின்றதில்லையே என்றவாறு.*

*அன்று - கயிலையை இராவணன் பெயர்த்த அன்று. இலங்கையர் கோன் - இராவணன். இராவணனது ஆணவத்தை அடக்கி ஆட்கொண்ட சிற்றம்பல நாதரது வில்லில் கோக்கப்பெற்ற அம்பை ஒத்த கண்ணீர் என விளித்தமையால், அம்பு வில்லை விட்டுப் பெயராதே முப்புரம் எரித்து வெற்றி தந்ததுபோல நும் கண்களும் புருவ வில்லோடு பொருந்தியிருந்தே என் ஆற்றல் அடக்கி வெற்றிகண்டது என்றானாம்.*

*அல்கும் முதலியனபற்றி முன்பாட்டில் உரைத்தாம். ஆதாரம் இன்றி ஆதேயம் நிலைபெறாது என்பது தருக்க மரபாதலின் மேலே ஞானம் உண்மையாலும், கீழே இன்பம் உண்மையானும் இடையே இவற்றை இயைவிப்பதான அனுபவமும் உணர்வுமான இடை இருத்தல் வேண்டும் என்று கருதிக் கூறினனாம் என்க. (10)*

## 5. இருவரு முள்வழி அவன் வரவுணர்தல்

**'இருவரும் உள்வழி அவன்வர வுணர்தற்**
**றுறையோ ரிரண்டும் சிவமுயிர் விரவியது**
**அருளே உணர்ந்திட லாகும் என்ப'**

*அஃதாவது இருவருமுள்வழி அவன்வரவுணர்தற்றுறை களாகிற ஐயுறுதலும் அறிவு நாடலுமாகிய இரண்டும் சிவமும் உயிரும் கலந்தமையை அருள் உணர்ந்ததாம்.*

## ஐயுறுதல்

### 'சிவம் உயிர் கலத்தல் அருள்தேறி வினாயது'

சிவமும் உயிரும் தம்முள் இயற்கைவழிநின்று தலைப் பெய்தவாற்றை, இடைநின்று சிவத்தை உயிரோடு சேர்ப்பிப்பதாய திருவருள், யாமின்றியே சிவபுண்ணிய வசத்தால் இருவரும் கலந்தனர் எனத் தெளிந்து தலைவனை ஐயுற்று வினவலாம்.

**பல்லிலன் ஆகப் பகலைவென் றோன்றில்லை பாடலர்போல்**
**எல்லிலன் நாகத்தொ டேனம் வினாவிவன் யாவன்கொலாம்**
**வில்லிலன் நாகத் தழைகையில் வேட்டைகொண் டாட்டமெய்யோர்**
**சொல்லிலன் ஆகற்ற வாகட வானிச் சுனைப்புனமே.** 60

பொ - ரை: பல்லில்லாதவனாகப் பகனென்னும் சூரியனை வென்றவனாகிய கூத்தப்பெருமானது தில்லையைப் பாடாதவர்கள் போல ஒளியிழந்தவனாய், யானையையும் பன்றியையும் வினவுகின்ற இவன் யாவனோ? இவனால் கொண்டாடப்படுவது வேட்டை; ஆனால் கையில் வில் இலன்; கையிலோ நாக மரத்தின் தழை; இவன் உண்மையான சொல் ஒன்றும் இலனாகக் கற்றவாறு என்னோ? கணைகளோடுகூடிய இப் புனத்தைக் கடவானாகச் சுற்றி வருவான்; இவன் யாவனோ? என்றவாறு.

எல் - ஒளி. என்றும் சிவத்தியானம் செய்யும் சிவஞானியர்க்கு முகத்தில் எல்லாரையும் கவரும் தெய்வீக ஒளி திகழும். அங்ஙனம் செய்யாதார் முகம் மழையில் நனைந்த காகம்போல ஒளிகுன்றிக் கருமையாய்த் தோன்றும் ஆதலின் 'தில்லை பாடலர்போல் எல்லிலன்' என்றார்.

நாகம் - யானை. சிவமாகிய தலைவியை எய்தப்பெறும் உயிர் ஐம்பொறிகளாகிய யானைகளை உரன் என்னும் தோட்டியால் ஒறுத்து அடக்கியதாம். அங்ஙனமாகவும் தன்னையுந்தப்பி ஓடிய யானையைக் கண்டதுண்டோ என்று எம்மை வினவுகிறான். ஆதலின், இவன் பொறியடக்கமின்மையாகிற பரிபாகக் குறையுடையனாம் எனத் திருவருள் அயிர்த்தவாறு.

ஏனம்-பன்றி. இது அடங்காச் சினத்திற்கும் முரணுக்கும் உவமிக்கப்படுவது. ஆகவே, சினமும் முரணும் அடங்கிய தூய சிந்தையாளரே தலைப்பெய்யத்தக்க சிவத்தை அவற்றைத் தேடி நம்மை வினாவும் இவன் எங்ஙனம் இயைதல்கூடும் என அயிர்ப்பாள் 'ஏனம் வினாவு இவன் யாவன் கொலாம்' என்றாளாகக் கூறுகின்றார்.

வேட்டை விருப்பனாயின் கொலைக்கருவிகளாகிற வில்லையும் அம்பையும் வைத்திருக்க வேண்டிய இவன் தழை மட்டும் ஏந்தியிருக்கிறான் ஆதலால் இவன் குறிப்பு வேறு. இன்றும்

சொல்லும் செயலும் வேறுபட்டிருத்தலின் இவன் கூறுகின்றன யாவும் பொய்யே என்பாள் 'மெய் ஓர் சொல் இலனாகற்றவா' என்றாள்.

இங்ஙனம் உயிர் முற்றும் பரிபாகம் எய்தாத அந் நிலையிலும், ஏதோ புண்ணிய விசேடத்தால் ஒருநாள் சிவத்தொடு கலந்த இன்ப விழைவால் மீட்டும் தலைப்பெய்ய ஞானபூமியைச் சுற்றி வருமாயினும் பரிபாகமுற்றாலன்றி இவ்வுயிர் சிவத்தலைவியைச் சேரலாகாது என்று திருவுளம்பற்றிய திருவருள் இவன் யார் என ஐயுற்றவாறு காண்க. (1)

## அறிவுநாடல்

### 'உயிர் சிவம் கலந்தது அருளே தேறியது'

உயிர் வேறேதோ வினாவுவதுபோல வந்து, சிவபோகத்தையும் அதற்கு வாயிலான ஞானத்தையுமே வினாவி, அவற்றையே நாடலின் இவன் சொல் ஆழமுடைத்தென்று அவன் நினைவை அறிதலாம்.

**ஆழமன் னோவுடைத் திவ்வையர் வார்த்தை அனங்கனைந்து**
**வீழமுன் னோக்கிய அம்பலத் தான்வெற்பி னிப்புனத்தே**
**வேழமுன் னாய்க்கலை யாய்ப்பிற வாய்ப்பின்னு மென்றழையாய்**
**மாழைமென் னோக்கி யிடையாய்க் கழிந்தது வந்துவந்தே. 61**

பொ - ரை: காமனைகளை வளர்க்கும் காமன் சாம்பராகப் பூமியில் விழத் திருக்கண்ணால் நோக்கிய அம்பலவாணப் பெருமானுடைய கயிலை மலையின்கண்ணதாகிய இப் புனத்தில், இவன் கூற்று முன்னே யானையாய், மானாய், பிறவாய், பின்னே தழையாய் வந்து, முடிவிலே தலைவியின் இடையாகிற சிவபோக நிலையமாயிற்று; அதனால் இந்த உயிரின் கூற்று மிக்க ஆழமுடையது என்றவாறு.

காமனை - இச்சை. இப் புனம், அறியாமையான் விளையும் காமங்கட்கோ அதனை ஆன்மாக்களுக்கு ஊட்டுகின்ற காமனுக்கோ இடமல்லாதது என்று குறிப்பிப்பாள் அனங்கன் அழிந்த வரலாற்றைக் கூறி அம்பலத்தானைப் பாராட்டினாள். இவன்வினா முன்னர்ப் பருப்பொருட்டாய் நுணுகிநுணுகி வந்து, இல்லாத அருவமான இடையாய் முடிந்தது என்றாள் ஆன்மாவின் பரிபாக வளர்ச்சியைக் குறிக்க. (2)

## 6. முன்னுறவுணர்தல்

### 'முன்னுற வுணர்த லாகுமிவ் வொன்றும்
### சிவமுயிர் கூடல் அருள்வினா வியது'

முன்னுறவு - சிவனுக்கும் சீவனுக்கும் உள்ள அநாதி நித்திய சம்பந்தம், அஃதாவது 'அன்றே என்றன் ஆவியும் உடலும்

உடைமை எல்லாமும், குன்றேயனையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ' 'உருத்தெரியாக் காலத்தே உளம்புகுந்து என் கருத்திருத்தி' என்ற சுருதிகளாலுணர்த்தப்பெற்ற நித்தியமான இயைபு. அதனை உணர்தலாவது இங்ஙனமாய அநாதி நித்தியசம் பந்தத்தால் சிவம் உயிரைப் பரிபாகம் நோக்கிக் கலக்கவும் திருவருள் உயிரின் பரிபாகத்தை வினாவியதாம்.

## வாட்டம்வினாதல்

**'சிவனது கருணையும் உயிரது தெளிவும்**
**அருளே கண்டின் பதனுடன் வினாயது'**

*சிவபரம்பொருள் ஆன்மாக்கள்மாட்டுச் செய்யும் கைம் மாறில்லாத கருணையையும், அக் கருணையைப் பெற்றதால் உயிருக்கு விளைந்த தெளிவையும் திருவருள் நுனித்தறிந்து இன்பமிக அதனால் சிவத்தை வினாவியது.*

**நிருத்தம் பயின்றவன் சிற்றம் பலத்துநெற் றித்தனிக்கண்**
**ஒருத்தன் பயிலுங் கயிலை மலையின் உயர்குடுமித்**
**திருத்தம் பயிலுஞ் சுனைகுடைந் தாடிச் சிலம்பெதிர்கூய்**
**வருத்தம் பயின்றுகொல் லோவல்லி மெல்லியல் வாடியதே. 62**

*பொ - ரை: திருச்சிற்றம்பலத்து நிருத்தம் பயின்றவனும், நெற்றியின்கண் ஒப்பற்ற கண்ணையுடையவனும் ஆகிய அம்பலவாணப் பெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருக்கயிலை மலையின்கண் உச்சியிலுள்ள தீர்த்தமாகிய சுனையில் குடைந்து குடைந்து ஆடியும், மலைக்கு எதிராக அழைத்தும் வருத்தத்தைச் செய்யும் விளையாட்டைப் பயின்றோ? வேறெதனாேனா? கொடிபோலும் மெல்லிய இயல்பையுடைய தலைவி வாடியது என்றவாறு.*

*உயிரின் பரிபாகம் அறியாள்போலத் திருவருளாகிய பாங்கி வினாவ, உயிர் அதனால் அலைக்கழிக்கப்படுதலைத் திருவுளத் தடைத்துச் சிவத்தலைவி கருணையால் இரங்காநிற்ப, திருவருள் சிவத்தின் கருணையுள்ளங்கண்டு 'வாடியது எதனான்?' எனச் சிவத்தை வினாவியவாறு காண்க.*

*பயிலுதல் - இடைவிடாது பழகுதல். உலகம் காரியப்பட ஐந்தொழில் நடனத்தை இடைவிடாது புரிதலின் 'நிருத்தம் பயின்றவன்' என்றார்.*

*'கயிலைமலையின் திருத்தம் பயிலும் சுனை குடைந்தாடி' என்றது அவன் கருணையில் திளைத்தல். சிலம்பெதிர் கூவுதலாவது அவன் நாமம் அரற்றுதல். இந்த இரண்டினையும் செய்தோ வேறு காரணத்தாலோ தலைவி வாடியது என்றான்.*

வாடியது என்றது கருணைமிகுதியான் விளைந்த இரக்கத்தை. அன்றி வேண்டுதல் வேண்டாமை இல்லாதானுக்கு வாட்டமும் தேட்டமும் இயல்பிலேயே இல்லையாம் என்று அறிக. (1)

## 7. குறையுறவுணர்தல்

அஃதாவது உயிர் தன் குறைகளை விண்ணப்பிக்கத் திருவருள் அதனைத் துணிந்துணரா நிற்றல். அதற்குக் கொளு:

**'குறையுற வுணர்தல் துறையொரு நான்கும்**
**உயிர்சிவத் திடைச்சென் றொருப்படுந்தன்மை**
**பணியாற் கண்டு பரிவால் வினாயது'**

குறையுறவுணர்தலின் துறைகளாகிற குறையுற்றுநிற்றல், அவன்குறிப்பு அறிதல், அவள்குறிப்பறிதல், இருவர்நினைவும் ஒருவழியுணர்தல் என்ற நான்கு துறைகளும் உயிர் சிவத்திடைச் சென்று ஒருப்படும் இயல்பினை அறிவிப்பனவாம்.

## குறையுற்று நிற்றல்

### 'திருவுளப் பணியைச் செய்வேன் என்றல்'

சிவத்தின் கருணையைக்கண்டு ஐயுறாநின்ற திருவருள்முன் சென்று உயிர் அடியேன் மீளாவடிமை உமக்கேயாளாய்க் குற்றேவல் பலபுரிவேன் என்று விண்ணப்பித்தலாம்.

**மடுக்கோ கடலின் விடுதிமில் அன்றி மறிதிரைமீன்**
**படுக்கோ பணிலம் பலகுளிக் கோபரன் தில்லைமுன்றில்**
**கொடுக்கோ வளைமற்று நும்மையர்க் காயகுற் றேவல்செய்கோ**
**தொடுக்கோ பணியீர் அணியீர் மலர்நுஞ் சுரிகுழற்கே. 63**

பொ - ரை: கடலின்கண் விடப்படும் திமிலைச் செலுத்துவேனோ? அதுவன்றி மயங்கிவிழுகின்ற அலைகளையுடைய கடலிற்சென்று மீன்வேட்டம் புரிவேனோ? முத்துக்குளிப்பேனோ? அம்பலவாணப் பெருமானது தில்லை முன்றிலிலே சங்குகளைக் கொடுப்பேனோ? மற்றும் நும் தந்தை தன்னையர்களிட்ட குற்றேவல்களைச் செய்வேனோ? அணியப்படும் தேனால் ஈரமான மலரை நும் சுருண்ட குழற்கு ஏற்ற மாலையாகத் தொடுப்பேனோ? எது செய்யவேண்டும்? கட்டளையிடுமின் என்றவாறு.

பிறவிக்கடலைக் கடப்பதற்காக நான் திருவடிப்புணைபற்றிச் செல்வேன் என்பான் 'விடுதிமில் கடலின் மடுக்கோ' என்கின்றான்.

ஐம்பொறிகளாகிய சுறாமீன்கள் பிறவிக்கடலைக் கடக்க முயலுகின்ற என்னை விழுங்கி விடயசுகங்களில் ஆழ்த்தாவண்ணம் அவற்றைச் சிவ ஞானத்துரட்டியால் குத்திக்கொன்று வென்று சிவ கருணைக்கு இலக்காவேன் என்பான் 'மீன் படுக்கோ' என்கின்றான்.

*மலச்சேற்றுள் இருவினைக் கயிற்றால் கட்டுண்டு கிடக்கும் ஆன்மாவை இறைவன் அணியத்தக்க முத்துப்போல எடுத்துச் சூட்டுவேன் என்பான் 'பணிலம் பல குளிக்கோ' என்கின்றான்.*

*திருவனந்தல் முதலிய பல சந்திகளிலும் ஊதுவதற்காகத் திருச்சிற்றம் பலமுடைய நாதற்கு வலம்புரி முதலிய சங்குகளை எடுத்துத் தூய்மைசெய்து அளிப்பேனோ என்கின்றான். பூமாலை புனைந்தேத்துவேன் என்பான் 'மலர் தொடுக்கோ' என்கின்றான்.*

*நும்மையர் - சிவனடியார். அடியவர்களுக்கான குற்றேவல் புரிவேனோ என்கின்றான். இங்ஙனம் அரன்பணியும் அடியார் பணியும் புரிவேன்; என் ஆணவமாகிய செருக்கு அகன்றது; சிந்தை தாழ்வெனும் தன்மையோடும் சைவமாம் சமயம் சார்ந்தது; இனிச் சிவத்தை எய்துதற்கு ஓர் இடையூறும் இல்லை என்று திருவருளுக்கு விண்ணப்பித்தானாம். இங்ஙனம் குறையுற்று நின்றவாறு காண்க.* *(1)*

## அவன் குறிப்பறிதல்

### 'பளிங்குபோல் சிவத்திடைப் பதிந்தது உயிர் என்றது'

*பரிபாகமுற்ற ஆன்மாவினிடத்துச் சிவத்தின் செயலே விளங்குவதைக் கண்ட திருவருள், பளிங்கையொத்த உயிர் சிவத்தைச்சார்ந்து சிவத்தின் தன்மையே மேவிற்று என்றறிதல்.*

*"பன்னிறங் காட்டும் படிகம்போல் இந்திரியம், தன்னிறமே காட்டும் தகை நினைந்து - பன்னிறத்துப், பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய் கண்டான், மெய்ப் பொருட்குத் தைவமாம் வேறு" (சிவஞானபோதவெண்பா சூ. 8, அதி. 3, வெ. 1.) என்றாங்கு இந்திரியங்களைச்சார்ந்த உயிர் இந்திரியங்களின் இயல்பையே தன்னியல்பாகக்கண்டு, அது தம் சிறப்பியல்பன்றெனத் தெளிந்து, சிவத்தைச்சார்ந்து, சிவத்துக்கு அடிமையாய் அப் பரம்பொருளியல்பு தன்மாட்டு விளங்கச்செய்து நிற்குமாதல் தெளிக.*

**அளியமன் னும்மொன் றுடைத்தண்ண லெண்ணரன் தில்லையன்னாள்**
**கிளியைமன் னுங்கடி யச்செல்ல நிற்பிற் கிளரளகத்**
**தளியமர்ந் தேறின் வறிதே யிருப்பிற் பளிங்கடுத்த**
**ஒளியமர்ந் தாங்கொன்று போன்றொன்று தோன்றும் ஒளிமுகத்தே. 64**

*பொ - ரை: அம்பலவாணப் பெருமான் எழுந்தருளியுள்ள தில்லையை ஒத்த தலைவி கிளியை ஓட்டச் சிறிது அகலினும், அவளுடைய கூந்தலில் வண்டுகள் மொய்ப்பினும், அவள் வாளா இருப்பினும், பளிங்கு தன்னிறத்தையடுத்த நிறத்தைச் சேர்ந்தாற் போல இவன்முகம் முன்னொன்று போன்றிருந்து பின்னொன்றாகத்*

தோன்றும்; அதனால் உயிரின் உள்ளக் குறிப்பு ஏதோ ஒன்றையுடைத் தாயிராநின்றது; அது சிவத்தின்பாலது போலும் என்றவாறு.

சிவத்தின் தன்மையே ஆன்மாவினிடம் காணப்படுவதால் இந்த ஆன்மா பொறிபுலன்களை விட்டுத் தூயதாய்ச் சிவத்தைச் சாரும் குறிப்பினதாயிற்று; ஆதலால், தமது முதல் சீபாதத்தை அணையுந்தன்மைத்து என்று திருவருள் உணர்ந்தவாறு காண்க.

திண்ணனார் குடுமித்தேவர் கண்ணில் குருதியொழுகக் கண்டதும் ஊனுக்கு ஊனிடுதலே மருந்தாம் எனத்தேறிக் கண்ணிடந்தப்பக் குருதி நின்றது. உடனே 'நன்று நான்செய்த இந்த மதியென நகையுந்தோன்ற, ஒன்றிய களிப்பினாலே உன்மத்தர் போல ஆனார். இடக்கண்ணிலும் குருதி ஒழுகக்கண்டதும் வருந்திக் கெட்டேன் என்றார். இங்ஙனம் அவரெய்திய இவ்விருநிலையும் போல உயிர் சிவத்தலைவியின் கூந்தலில் வண்டேறியிருக்க வருத்தத்தையும், அவள் வாளா இருக்க இன்பையும் எய்திப் பளிங்கடுத்த ஒளியேபோல விளங்கிற்று என்பதாம்.

'பளிங்கடுத்த ஒளியமர்ந்தாங்கு ஒன்றுபோன்று ஒன்று ஒளி முகத்தே தோன்றும்' என்றது, பன்னிறம் காட்டும் பளிங்குபோல் இந்திரியம் தன்னிறமே காட்டும் தகையொழிந்து சிவத்தைச் சார்ந்து அப் பரம்பொருளின் இயல்பு தன்மாட்டு விளங்க இருந்ததாம். (2)

## அவள் குறிப்பறிதல்

### 'கருணை உயிரிடத்துக்கண்டு அருள் தேறல்'

சிவகருணை முழுதும் ஆன்மாவினிடமாக விளங்குதலை, 'பூவுநீருங்கொண்டு ஒருவன்' என்று திருவருள் தொடங்குதற்கு முன் சிவத்தின் திருமுகச்செவ்வி தழைத்திருத்தலைக் கண்டு, சிவத்தின் திருவுளக்குறிப்பு இவ்வான்மாவின்கண்ணது எனத் திருவருள் துணிந்து உணராநிற்றல்.

பிழைகொண் டொருவிக் கெடாதன்பு செய்யிற் பிறவியென்னும்
முறைகொண் டொருவன்செல் லாமைநின் றம்பலத் தாடுமுன்னோன்
உழைகொண் டொருங்கிரு நோக்கம் பயின்றவெம் மொண்ணுதன்மாந்
தழைகொண் டொருவனென் ணாமுன்ன முள்ளந் தழைத்திடுமே. 65

பொ - ரை: பிழைத்தலைப் பொருந்தித் தன்கட்சேராது விலகி வீணாகாது ஒருவன் அன்பு செய்வானாயின், அவன் பிறவியென்னும் குகையை அடையாவண்ணம் திருவம்பலத்துள் நின்று திருக்கூத்தாடும் முன்னோனதுமானை மருண்டநோக்கத்தால் ஒத்து, வெள்ளைநோக்கமும் கள்ள நோக்கமுமாய் இருவகை நோக்கத்தைப்பயின்ற எம்முடைய ஒளி பொருந்திய நெற்றியினை

உடையாளாகிய சிவத்தலைவி 'மாந்தழையைக் கையின்கண் ஏந்தி ஒருவன்' என்று கூறத்தொடங்குமுன் உள்ளந் தழைக்கின்றான்; அதனால் இவள் உளக்குறிப்பு இவன்கண்ணதுபோலும் எ-று.

தாய்மடியில் தவழுகின்ற குழவி தவறித் தரையில் வீழ்ந்தாற் போலச் சிவத்தைச் சார்ந்து சிவமாகவே விளங்கவேண்டிய ஆன்மா, மனத்தைச் சார்ந்து வினைகளை மேன்மேலும் ஈட்டிப் பிறவிக்கடற்கண்ணே வீழ்ந்து கெடாதவண்ணம், கூத்தப்பெருமான் சிற்றம்பலத்தின்கண் அநவரதமும் ஆனந்த தாண்டவம் புரிகின்றார் என்றவாறு.

பண்டைத் தொடர்புண்மையான், 'மாந்தழையேந்தி ஒருவன்' என்பதற்குமுன் இவள் குறிப்பு, வேறாயிருந்தது என்றது, பரிபாகமுற்ற ஆன்மா உய்யக்கொண்டருளுதற்கண் சிவத்திற்கு உள்ள கருணையின் விரைவை விளக்கியதாம். (3)

## இருவர் நினைவும் ஒருவழியுணர்தல்

### 'இறையுயிர் ஒன்றென்று அருள் அதிசயித்தது'

இன்பவடிவான சிவமும், அதனை நுகர்பவனாகிய ஆன்மாவும் அநுபவ நிலையில் ஒத்தனர் என அருள் தெளிந்து வியந்துரைத்தல்.

மெய்யே யிவற்கில்லை வேட்டையின் மேன்மனம் மீட்டிவளும்
பொய்யே புனத்தினை காப்ப திறைபுலி யூரனையாள்
மையேர் குவளைக்கண் வண்டினம் வாழுஞ்செந் தாமரைவாய்
எய்யே மெனினுங் குடைந்தின்பத் தேனுண் டெழிறருமே. 66

பொ - ரை: இறைவனது புலியூரை ஒத்தாளுடைய கரிய அழகிய குவளை மலர்போலும் கண்களாகிய வண்டுகள், தாம் வாழுமிடமாகிய சிவன் முகமாகிய செந்தாமரையிடத்து, யாம் அறியேமாயினும் குடைந்து இன்பத்தேனை நுகர்ந்து அழகு பெறுகின்றது; அதனால் இவனுக்கும் உண்மையின் வேட்டையின் மேல் உள்ளமில்லை; இவளும் புனத்தின்கண் தினையைக் காப்பது பொய்யே என்றவாறு.

சிவகருணை சீவனைநோக்கி இன்புறுவதால் பொறிகளுக்குப் புலன்களைத்தேடி அலைவதுபோல் இவ்வுயிர் இங்கு உழல்வதும் பொய்; சிவம் எல்லா உயிர்களையும் பரிபாகமுறுவித்துத் தன்னருள்வழி நிற்கப்பண்ணி, ஈறிலாப் போகத்தை எய்துவிக்க வேண்டும் என்ற அருளல் ஒன்றையே குறியாகக் கொண்டிருக்கவும் புவனம் காத்தலாகிய தொழிலைமட்டும் இயற்றுவேன் என அத் தொழிற்கண்மட்டும் முனைந்திருப்பதும் அங்ஙனமே என்று திருவருள் வியந்தவாறாம். (4)

## 8. நாணநாட்டம்

**'நாண நாட்டத் துறையோ ரைந்தும்
அருளே சிவத்தை அதிசயித் துயிரின்
பக்குவந் தன்னைப் பலவும் வியந்தது'**

அஃதாவது, நுகர்வானும் நுகர்பொருளுமாகிய இரண்டின் இயல்பையும் உணர்ந்த திருவருள், நுகர்வானுக்கும் நுகரப்படு பொருளுக்கும் உள்ள கலப்பை நன்கு அறியும்பொருட்டு, நுகரப்படு பொருளைநோக்கி நாணத்தகு நிகழ்ச்சிகளைக் கூறி வினவாநிற்றல். இது பிறைதொழுக என்றல் முதலாக மதியுடம் படுதலீறாக ஐந்து கிளவிகளை உடையது. அஃதாவது, திருவருள், எத்துணை உயர்ந்த சிவம் இத்துணைத் தாழ்ந்த உயிரோடு கலந்ததே எனக் கருணையின் உயர்வையும், இங்ஙனம் சிவமேவந்து சிந்தையில் கலக்கத்தகும் பரிபாகத்தை இந்த உயிர் பெற்றுள்ளதே என உயிரின் பரிபாகச் சிறப்பையும் வியத்தலாம்.

### பிறைதொழுக என்றல்

**'அருள்சிவத் திடையுயிர் ஆர்ந்த தன்மை
வெளிப்பட நின்று வினாவி உரைத்தது'**

சிவமாகிய வியாபகப்பொருட்கண் உயிர் வியாப்பியமாய்க் கலந்து நிறைந்த தன்மையை வெளிப்பட உணர்வதற்காகத் திருவருள் சிவத்தை நோக்கிப் பிறை தொழுக என வினவாநிற்றல்.

**மைவார் கருங்கண்ணி செங்கரங் கூப்பு மறந்துமற்றப்
பொய்வா னவரிற் புகாதுதன் பொற்கழற் கேயடியேன்
உய்வான் புகவொளிர் தில்லைநின் றோன்சடை மேலதொத்துச்
செவ்வா னடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கே. 67**

பொ - ரை: மறந்தும், பொய்ம்மையையுடைய அவ் வான வரிடத்தே புகாது, தன் பொன்னடிக்கே அடியேன் புக விளங்குகின்ற தில்லைக்கண் கட்புலனாய் நின்றவனுடைய சடைக்கண் விளங்கும் பிறையை ஒத்துச் செவ்வானத்தை அடைந்த செவ்விக்கதிரையுடைய வெண்மையான சிறிய பிறைக்கு, மை பூசிய நெடிய கரிய கண்களையுடைய தலைவியே! நின் சிவந்த கைகளைக் கூப்புவாயாக என்றவாறு.

சிவம் ஏனோரால் வணங்கப்படுதலேயன்றித் தான் யாரையும் வணங்கி அறியாதாகலின் 'பிறையைத் தொழுக' என அருள் வேண்டியபோது சிவம் தன் தலைமைக்கு இழுக்காம் என்றும், உயிரோடு கலந்து அனுபவப் பொருளாயிருக்கும் தான் அதனின் வேறாகிப் பிறை போன்றவற்றைத் தொழுதல் சாலாது ஆகையானும் நாண, அதனைக்கொண்டு திருவருள் உயிரோடு சிவம் ஒன்றிற்று

என்ற உண்மை உணர்ந்ததாம். 'சேர்ந்தறியாக் கையானை' (திருவாசகம் 187) என்றதும் இக் கருத்தை வலியுறுத்தல் காண்க.

அருவாய், எங்குமாய், நிறைந்த பொருளாயுள்ள சிவம் தில்லையம்பலம் என்ற ஓரிடத்தே அம்பலவாணப் பெருமான் என்றொரு நாமந்தாங்கி, கூத்தன் என ஓர் உருவேற்று என்றும் நின்று ஆடுவது, அடியேன் பொய்த்தேவுக் கூட்டத்தில் புகாதவண்ணம் தடுத்தாட்கொண்டு, தன் மெய்யான சேவடிக்கே ஆளாம்வண்ணம் செய்தற்கே ஆம் என்று வியக்கின்ற திருவருள் 'பொய்வானவரில் புகாது தன் பொற்கழற்கே அடியேன் உய்வான் புகத் தில்லை நின்றோன்' என்றது. இவ்வனுபவத்தையே மணிவாசகத்துள், "பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே, பத்தேதுமில்லாது என் பற்றற நான் பற்றிநின்ற, மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ" என அருளுதல் காண்க.

வானத்துப்பிறை சடைப்பிறையை ஒத்தது என்றார். களங்கமின்றிச் சிவபெருமான் திருமுடியை அடைந்த பிறை சிவனடியார்களால் சிவனாக வழிபடத் தகுந்தது. அதுபோல இப் பிறையும் தொழத்தக்கது என்றதாம். 'ஒத்து' என்றமையானேயே முடிப்பிறை அப் பிராகிருதமானது எனப்படுதல் காண்க. செவ்வான் சிவன் திருச்சடைக்கும், பிறை அங்குள்ள பிறைக்கும் உவமமாகக் கொள்க. (1)

## வேறுபடுத்துக் கூறல்

### 'உயிர்க்கின்பு இச்சைகண்டுவந்து அருள் வினாயது'

அங்ஙனம் பிறை தொழுக என்று திருவருள் கூறியவழி, நாணிநின்ற சிவத்தின் இயல்புகண்டு, சிவத்தின் குறிப்புவழி நின்றே உண்மை உணருவேன் என்று உள்ளத்து எண்ணிய திருவருள், சிவத்தை நோக்கி நீ இன்பச்சுனை ஆடி வருக என ஏவ, அதுவும் அங்ஙனஞ்சென்று உயிருக்கு இன்பளித்தலே இச்சையாய் இன்பவடிவாய் நிற்க, திருவருள் தன் இனத்தின் வேறாக்கிக் கூறுதலாம். பழையவுரை இன்பில் உயிர் அடைந்த தன்மைகண்டு உவந்து அருளுரைத்தல் என்கின்றது. இவ்வுரையில் கண்டு வந்து எனப் பிரித்தல் சாலாது என்க.

அக்கின்ற வாமணி சேர்கண்டன் அம்பல வண்மலயத்
திக்குன்ற வாணர் கொழுந்திச் செழுந்தண் புனமுடையாள்
அக்குன்ற ஆறமர்ந் தாடச்சென் றாளங்கம் அவ்வவையே
ஒக்கின்ற வாரணங் கேயிணங் காகும் உனக்கவளே. 68

பொ - ரை: அக்காகிய நல்ல மணிசேர்ந்த கழுத்தினை யுடையானாகிய அம்பலவாணப் பெருமானது பொதியில் மலையின்கண் வாழ்கின்ற குறவர்களின் மகளாகிய வளவிய இத்

தண்புனத்தைக் காக்கின்றவள், அந்தக் குன்றத்தின் கண்ணதாகிய ஆற்றினை ஆடச் சென்றாள்; நின் அவயவங்கள் அவள் அவயவங்களையே ஒத்துள்ளன; அணங்கே! உனக்கு அவள் ஒப்பாள்; ஆதலால், நீ அவளைக் கண்டுபோவாயாக என்றவாறு.

உயிரை மேவியதால் நீ சிவம் அன்று; சிவத்தோடு ஒப்பாய் என்று திருவருள் கூறியதாம். பயன் உயிரை மேவிய உண்மையைத் தான் உணர்ந்தமை அவள் அறிய உரைத்தது. அதனால் உயிர்க்குப் பேரின்பம் உதவலே சிவத்திற்கு இச்சையாம் என்பதனைத் திருவருள் உணர்ந்து வினாவியவாறு காண்க. (2)

## சுனையாடல் கூறி நகைத்தல்

**'கருணை உயிர்க்குக் காட்டும்பரிவு**
**தானறிந்து அறியாத் தன்மை உரைத்தது'**

சிவம் உயிர்க்குக் கருணைகாட்டும் தன்மையைத் திருவருளாகிய தான் அறிந்தும் அறியாததுபோலக் கூறியதாம். இன்பசக்தியால் உயிர் கலந்து சிவமாந்தன்மைபெற்ற உண்மைக்குறி அருளேதேறி இந்த அதிசயம் எங்குமின்றென்றது என்பது பழைய உரை.

**செந்நிற மேனிவெண் ணீறணி வோனறில்லை யம்பலம்போல்**
**அந்நிற மேனிநின் கொங்கையி லங்கழி குங்குமமும்**
**மைந்நிற வார்குழன் மாலையும் தாதும் வளாய்மதஞ்சேர்**
**இந்நிற மும்பெறின் யானுங் குடைவன் இருஞ்சுனையே.** 69

பொ - ரை: சிவந்த திருமேனியின்மேல் வெள்ளிய திருநீற்றை அணிவோனது தில்லையம்பலத்தைப்போலும் அழகிய நிறம் பொருந்திய மேனியிலே கொங்கைகளில் அழிந்த குங்குமத்தையும், கரிய நெடிய கூந்தலிலுள்ள மாலையையும், மகரந்தத்தையும் மேனிமுழுதும் பெற்று மதத்தைச் சேர்ந்த இந் நிறத்தையும் நான் பெறுவேனாயின் நீ ஆடிய சுனையில் யானும் ஆடுவேன் என்றவாறு.

சிவம் உயிரை ஆட்கொண்டு அதனுடன் கலந்தமையால் விளைந்த மாற்றங்களைச் சுனை ஆடுவதால் பெற்றனையாயின் நானும் அந்தச் சுனையில் ஆடுவேன் என்று திருவருள் சிவத்தலைவியை நகையாடியவாறு காண்க.

**"தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தருள் தொழில்கள் மூன்றும்**
**போற்றவே யுடையன் ஈசன் புகுந்தது விகாரம் என்னின்**
**சாற்றிய கதிரோன் நிற்கத் தாமரை யலரும்; காந்தம்**
**காற்றிடுங் கனலை நீருங் கரந்திடுங் காசி னிக்கே"**

என்பதுகொண்டு உயிர்க்கலப்பால் நிறம் குணம் இவற்றான் சிவம் வேறுபட்டமை உபசாரமாம் எனத்தெளிக. (3)

## புணர்ச்சியுரைத்தல்

**'சிவனது கருணை அருளே தேறி இந்த அதிசயம் எங்குமில் என்றது'**

*சிவத்தலைவி உயிர்த்தலைவனைக் கூடி ஆட்கொண்டு தாமாக்கிய தன்மையை நன்கு அறிந்து, இரும்பைப் பொன்னாக்கியதுபோல உயிரைச் சிவமாக்கிய இவ் விந்தையை உலகத்தில் யான் எங்கும் கண்டதில்லை என்று திருவருள் கூறியது.*

**பருங்கண் கவர்கொலை வேழப் படையோன் படப்படர்தீத்
தருங்கண் ணுதற்றில்லை யம்பலத் தோன்றட மால்வரைவாய்க்
கருங்கண் சிவப்பக் கனிவாய் விளர்ப்பக்கண் ணாரளிபின்
வருங்கண் மலைமலர் சூட்டவற் றோமற்றவ் வான்சுனையே.** 70

*பொ - ரை: பருத்த கணுக்களையும் கொலைத்தொழிலையும் உடைய கரும்புவில்லோனாகிய காமன் இறந்துபடச் சென்று பற்றும் தீயைத் தரும் நெற்றிக்கண்ணோனது மலையிடத்துள்ள அந்தப் பெரிய சுனை, கரிய கண் சிவப்பவும், தொண்டைக்கனி போலும் செந்நிறமான வாய் வெளுக்கவும், வண்டுகள் பின் தொடர்ந்துவரும் கண்களை ஒத்த தேனையுடைய மலர்களைச் சூட்டவும் வல்லதோ என்றவாறு.*

*நீ வாழும் இடம் இச்சைத் தெய்வமாகிய மதனனை அழித்தவன் மலை. அம் மலைக்கண் உள்ளதாகிய சுனையில் ஆடியதாகக் கூறுகின்றனை. அச் சுனை இத்தனை மாற்றங்களை விளைக்கவல்லதோ? அன்று; ஆகவே, உன்னோடு உயிரிடைக் கலப்புண்டு என்று அருள் தெளிந்தவண்ணம் உரைத்தது.*

*இப் பாட்டில், சுனை கருணையாகவும், சுனையில் ஆடியது உயிரோடு கலந்ததாகவும், கண்சிவத்தல் வாய்விளர்த்தல் முதலியன ஆட்கொண்டமையால் விளைந்த கருணைவெளிப்பாடாகவும் கொள்க.* *(4)*

## மதியுடம்படுதல்

**'உயிர் சிவம் ஒன்றல் தொழிலால் அறிந்தது'**

*இங்ஙனம் திருவருள் பல்லாற்றானும் ஆய்ந்து, உயிர் சிவத்தோடு ஒன்றிச் சிவமாந்தன்மை பெற்றதை அதன் செயலால் அறிந்தது. அதாவது, சீவச்செயல் சிவச்செயலானமையை அறிதலாம். பாலை நெய்தல் பாடியதும், பாம்பு ஒழியப் பாடியதும் ஆகிய அற்புதங்கள் பசுகரணமல்லாமையால் ஆனதுபோலச் செயல்களும் சிவச்செயலானமையைத் திருவருள் அறிதலாம்.*

**காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்து ளோருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமாம்**

ஏகத் தொருவ னிரும்பொழி லம்பல வண்மலையில்
தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய் வருமின்பத் துன்பங்களே. 71

பொ - ரை: எல்லாப் பொருள்களிடத்தும் கலந்து விளங்கும் ஒன்றான பரம்பொருளாகிய பெரிய பொழில்சூழ்ந்த திருவம்பலத்தையுடைய அம்பலவாணப் பெருமானது மலையில் வாழும் சிவமாகிய தலைவிக்கும், உயிர்க்கும் இன்ப துன்பங்கள் ஒன்றாய் நிகழ்கின்றன; ஆதலால், காகத்தின் இரு கண்ணிற்கும் ஒரு மணி கலந்து காணுதல்போல இவ்விருவர் உடலிலும் ஒரே உயிரை யாம் கண்டேம் என்றவாறு.

இன்ப துன்பங்கள் தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய்த் தோன்றலாவது வாழ்வின் வாழ்தலும் தாழ்தலுமாகிய செயல்கள் ஒன்றுபடுதல். அதாவது, சிவம் பட்ட பிரம்படி உயிர்கட்கும், உயிர்கள் பெற்ற இன்பம் சிவத்திற்கும் விளைந்தாற்போல 'ஆனந்தவெள்ளத்தழுந்தும் ஓர் ஆருயிர் ஈருருக்கொண்டு ஆனந்தவெள்ளத்திடைத் திளைத்தால் ஒக்கும்' (307) என்ற அபேதக்கலப்பால் ஒன்றாதல். (5)

## 9. நடுங்கநாட்டம்

**'நடுங்க நாட்டம் ஒன்றும் சிவமே**
**உயிரிடைக் கருணையென் றுற்றருள் நோக்கல்'**

நடுங்கநாட்டமாகிய கிளவி ஒன்றும் சிவம் உயிரிடை என்றும் நீங்காத கருணையோடு இருத்தலைச் சிவத்தின்வாயிலாகவே திருவருள் உணர்ந்தவாறாம்.

**'கருணை அளவின்மை அருள்கண்டு மகிழ்தல்'**

உயிரிடத்துச் செலுத்தப்பெறும் கைம்மாறு வேண்டாத கரையற்ற கருணை மிகுதியைக்கண்டு, திருவருள் சிவத்தை உயிரின்பாற் சென்றுய்ப்பது மிகமிக எளிது என்று உட்கொண்டு மகிழ்தல்.

ஆவா இருவர் அறியா அடிதில்லை அம்பலத்து
மூவா யிரவர் வணங்கநின் றோனையுன் னாரின்முன்னித்
தீவா யுழுவை கிழித்ததந் தோசிறி தேபிழைப்பித்
தாவா மணிவேல் பணிகொண்ட வாறின்றொ ராண்டகையே. 72

பொ - ரை: ஆ! ஆ! மாலும் பிரமனுமாகிய இருவரும் அறியாத திருவடியை மூவாயிரவர் கூடி வணங்கத் தில்லையம்பலத்து எளிவந்துநின்ற அம்பலவாணப் பெருமானை நினையாதாரைப் போல வருந்த எதிர்ப்பட்டுத் தன் கொடிய வாயைப் புலி திறந்தது; அது அங்ஙனம் திறக்க, ஓர் ஆண்டகை

அதனிடமிருந்து தப்பும்படித் தன் அழகிய வேலைப் பணி கொண்டவாறு என்னோ என்றவாறு.

சிவம் உயிரை ஆட்கொண்டருளிய பின்னர் உயிருக்குவரும் இன்ப துன்பங்களைத் தம்மவாகக்கொண்டு காக்கும் ஆதலின், புலிவந்து வாயைத் திறந்தது என நடுங்க வைத்தும், அப் புலியை அவன் கைவேல் வென்றது என மகிழவைத்தும் கலப்புண்மையைத் திருவருள் உணர்ந்தது.

புலி அங்காத்தல் மீளவும் பொறிகள் செயற்பட்டுப் புலன்களில் இழுத்துச்சென்று பிறவிக்காட்டில் அலைக்கழித்தலாகவும், பரிபாகமுற்ற உயிர் அதனில் தப்பத் தன் ஞானத்தைப் பயன் படுத்தியதாகவும் கொள்க. உயிர் என்றும் மலவாசனை தாக்கித் தாழாதவாறு உய்ந்தமையைச் சிவம் உணர்ந்தமையைத் திருவருள் உணர்ந்தது இதன் பயனாம். (1)

## 10. மடற்றிறம்

**'மடற்றுறை யொன்பதும் சிவத்திடை மோகம்**
**முற்ற உயிர்அருள் பற்றி உரைத்தது'**

மடலேறுதல் என்பது பனையின் கருக்காற்செய்த மடல்மாவின்மேல் தலைமகன் ஏறுதலாம். மடலேறுதல் அகப்புறமாம். ஆதலால், மடலேறுவேன் எனக்கூறித் தனது ஆற்றாமை புலப்படுத்தல் ஒன்றே அகத்துள் நிகழ்வது. ஆகவே, மடற்றிறம் என்பது மடலேறுவேன் என்பதுபட நின்ற அதன் வகைகளைக் கூறுதலாம். இக் கூற்றுக்கண் சிவத்தலைவியிடம் நீங்காத மோகம் உற்ற உயிராகிய தலைவன் சிவத்திற்கு உற்றதுணையாய் என்றும் உடனிருப்பதான திருவருளைப் பற்றிநின்று உரைத்ததாம். இது ஆற்றாதுரைத்தல் முதல் உடம்பட்டுவிலக்கல் ஈறாகிய ஒன்பது கிளவிகளையுடையது.

### ஆற்றாதுரைத்தல்

**'அருளை நம்பி உயிர் மிகவும் இரங்கியது'**

பல்லாற்றானும் திருவருள் சிவத்திடை உயிர்கள்மாட்டுள தாகிய கருணையை அறிய முயன்றும், முடியாமையின் உயிரின்பால் சென்று அதன் குறைகளைக் கேட்கும் விருப்பினதாக, உயிர் நான் மடலேறியாயினும் என் குறையை முடித்துக் கொள்வேன் என்று உட்கொண்டு திருவருளே தன் குறையை முடிக்கும் என நம்பித் தன் ஆற்றாமையை விண்ணப்பித்தது.

**பொருளா எனைப்புகுந் தாண்டு புரந்தரன் மாலயன்பால்**
**இருளா யிருக்கும் ஒளிநின்ற சிற்றம் பலமெனலாம்**
**சுருளார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் துடியிடையீர்**
**அருளா தொழியின் ஒழியா தழியுமென் ஆருயிரே. 73**

பொ - ரை: தானே எழுந்தருளிவந்து என்னையும் ஒரு பொருளாக ஏற்று ஆண்டு, இந்திரன் மால் பிரமன் முதலான பதவிகளில் உள்ளார்க்கு இருளாக இருக்கின்ற ஒளி தங்கிய சிற்றம்பலம் எனத்தகும் சுருண்ட கூந்தலையும், வெள்ளிய நகையினையும், சிவந்த வாயினையும், துடிபோன்ற இடையினையும் உடைய பெண்களே! நீர் அருளாதொழியின், என் உயிர் தப்பாமல் அழியும்; அதனால் அருளத்தகும் என்றவாறு.

புறச்சமயத்தவர்க்கு இருளாய் மெய்யன்பர்க்கு ஒளியாய் இருப்பது சிவம் ஆதலின், இந்திரன் முதலான பதவிகளில் மயங்கி இருப்பார்க்குச் சிற்றம்பலம் இருளாய்த் தோன்றுவதாயிற்று; மெய்யடியார்கட்கோ ஆணவத்தாலான அதிகாரமலம் இன்மையின் ஒளியாயிற்று என்பது விளக்கப் பெறுகின்றது.

சிற்றம்பலம் எனலாம் இடையீர் என்றது சிற்றம்பலம்போல உண்மை உணர்ந்த எம்போலியர்க்கு ஞானவொளியாயும், ஏனையோர்க்கு அஞ்ஞானமாயும் இருத்தல்பற்றியாம் என்க.

சிவத்தைப்பிரியின் சீவன் வினைக்கீடாகக் கிடைத்த இவ்வுடம்பினுள் நிலையாது அழிந்துபடும் என ஆற்றாமை தெரிவித்தவாறு. (1)

## உலகின்மேல் வைத்து உரைத்தல்

### 'இன்பம் பெறார்க்கு உடல் வம்பு என உரைத்தது'

சிவத்தைச்சார்ந்து பேரின்பம் பெறுதற்காகவே இந்த உடல் எமக்குக் கிடைத்தது; அங்ஙனம் முத்தியின்பத்தைப் பெறவில்லை யாயின் இந்த உடலை யாம் பெற்றது வீண் என உயிர் உலகியல் உரைப்பதுபோலத் தன் கருத்தைத் திருவருளிடம் தெரிவித்தது.

**காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து**
**வீசின போதுள்ள மீனிழந் தார்வியன் றென்புலியூர்**
**ஈசன சாந்தும் எருக்கும் அணிந்தோர் கிழிபிடித்துப்**
**பாய்சின மாவென ஏறுவர் சீறூர்ப் பனைமடலே.** 74

பொ - ரை: காய்கின்ற சினத்தையுடைய வேல்போலும் ஒளிவீசும் கண்ணாகிய வலையைப் பெண்கள் கலந்து வீசினபோது தம் மனமாகிய மீனை இழந்தவர்கள், பெரிய தென்புலியூர்க்கண் உளனாகிய அம்பலவாணப் பெருமானுடைய திருநீற்றையும் எருக்கம்பூவையும் அணிந்து, உருவெழுதிய படம் ஒன்றைக் கையிலே தாங்கிப் பாய்ந்துசெல்லும் சினத்தையுடைய குதிரை எனப் பனைமடலை ஊர்க்கண் ஊர்வர் என்றவாறு.

சிவகருணை பெறாதார்க்கு உடம்பு மிகையாதலின், அதனை ஒழிக்க வேண்டி, மடலூர்வர் என்று உலகின்மேல் வைத்துத் தம் முடிபு உணர்த்தியவாறு. (2)

## தன் துணிபுரைத்தல்

### 'சிவம் பெறாவிடின் உய்யேன் என்று அருளுடன் செப்பல்'

பரிபாகமுற்று, உள்ளத்தைச் சிவத்திற்குக் கோயிலாக்கி, இடைவிடாத அன்புபூண்ட ஆன்மா, சிவத்தை யான் இன்று எய்திலேனாயின் உய்யேன்; இஃது உறுதி என்று திருவருளுக்கு உரைத்தலாம். 'இன்புருச் சிவம் பெறாவிடில் அன்புயிர் அழியும் என்று அருளுடன் செப்பல்' என்பது திருவாசக வியாக்கியானம் தரும் கருத்து.

**விண்ணை மடங்க விரிநீர் பரந்துவெற் புக்கரப்ப**
**மண்ணை மடங்க வருமொரு காலத்து மன்னிநிற்கும்**
**அண்ணல் மடங்க லதளம் பலவன் அருளிலர்போல்**
**பெண்ணை மடன்மிசை யான்வரப் பண்ணிற்றொர் பெண்கொடியே. 75**

பொ - ரை: விண் மடங்கவும், கடல் எங்கும் பரவி மலைகள் மறையவும், பூமி அழியவும் வருகின்ற ஒரு பேரூழிக்காலத்தும் நிலைபெற்று விளங்கும் அண்ணலும், சிங்கத்தின் தோலை ஆடையாகப் போர்த்தியவரும் ஆகிய அம்பலவாணப் பெருமானின் அருளில்லாதார்போலப் பனைமட்டையால் ஆகிய ஒரு குதிரையின்மேல் யான் வரும்வண்ணம் செய்துவிட்டது ஒரு பெண்கொடி என்றவாறு.

கொடிபோன்றவளாகிய சிவத்தலைவி அருளின்துணை பெறாதாரைப் போல நாணும் உயிரும் நீங்கும்வண்ணம் யான் மடலேறும்வரை மடமையைத் தந்துவிட்டது என்று தன் துணிவை உரைத்தவாறு.

விண் மடங்க என்பன முதலியவற்றால் பேரூழிக்காலத்தும் அழியாத முதல்வன் அம்பலவன் என முழுமுதற்றன்மை உணர்த்தியவாறு.

அம்பலவன் அருளிலார் வாழ்க்கையில் பலவகையான் இடர்ப்பட்டுத் தம் உயிரைத் தாமே உடன் நீக்க முயலுவர்; அது போல யானும் மடன்மா ஏறத் துணிந்தேன் என்றானாம். (3)

## மடலேறும்வகை உரைத்தல்

### 'இவன் சிவன் அடிமையென்று எவரும் செப்ப இழிபாய் எங்கும் திரிவேன் என்றது'

அடியேன் மடன்மாவேறி இறப்பதால் எமக்கு என்ன இழிபு என்பீராயின், 'தாரகை போலுந் தலைத்தலை மாலைத் தழலரப்பூண், வீர என்றன்னை விடுதிகண்டாய் விடில் என்னைமிக்கார், ஆரடியான் என்னின் உத்தரகோச மங்கைக்கரசின், சீரடியாரடியான் என்று நின்னைச் சிரிப்பிப்பனே' என்றாங்கு,

இஃதோர் வியப்புப் பாருங்கள்; இவன் சிவனடியான் என்று எவரும் இழித்துச் சொல்ல எங்கும் திரிவேன் என்று அருளுக்கு அறிவித்ததாம்.

**கழிகின்ற என்னையும் நின்றநின் கார்மயில் தன்னையும்யான்**
**கிழியொன்ற நாடி யெழுதிக்கைக் கொண்டென் பிறவிகெட்டின்**
**றழிகின்ற தாக்கிய தாளம் பலவன் கயிலையந்தேன்**
**பொழிகின்ற சாரனுஞ் சீறூர்த் தெருவிடைப் போதுவனே.** 76

பொ - ரை: அழிந்துபட இருக்கின்ற என்னையும், யான் இங்ஙனமாகவும் தன்னிலையில் தாழாது நித்தியப்பொருளாய் நிற்கும் நின் கரிய மயில்போல் வாளையும், இப் படத்தின்கண் பொருந்த வரைந்து கையிலே ஏந்திக்கொண்டு, என் பிறவியை இன்று அழியத் திருவடிதந்து திருவருள் சுரந்த அம்பலவாணப் பெருமானது கயிலையில் அழகிய தேன்சொரிகின்ற சாரலிலேயுள்ள நும் சிற்றூர்த் தெருவிலே திரிவேன்; அதனால் விளையும் பிற்பயனை நீவிரே அறிமின் என்றவாறு.

சிவமும் உயிரும் ஒன்றாயிருந்தும், அக் கலப்பு இடையீடின்றி நிகழத் துணைபுரியாது சிவம் உயிரின் அயலானது என்று கருதுகின்ற திருவருளை நோக்கிக் குறிப்பான் இடித்துரைப் போன் என் கார்மயில் என்று கூறாது 'நின்' எனக் கூறினன்.

கிழியொன்ற நாடி எழுதி என்றது உயிராவணம் இருந்து உற்று நோக்கி உள்ளக்கிழியின் உரு எழுதியதை உணர்த்தியது.

நும் சீறூர்த் தெருவிடைப் போதுவன் என்றது, ஆள்வாரிலி மாடாக அடிமையை விட்டவன் அதனால் பிச்சன் என்று நான் சிரிக்கவைத்திடுவேன் என்று எச்சரிக்கையிட்டவாறு.

அழிகின்றதென நிகழ்காலத்தாற் கூறினான் பிறவிக்குக் காரணமான மலங்கெட்டும், எடுத்த இவ்வுடலிற்குக் காரணமான வினை நின்றமையின் என்ற பேராசிரியர் உரைநயம் உற்றுணர்தற்கு உரியது. (4)

## அருளால் அரிதென விலக்கல்

**'அருளே உயிரை அழுந்தி நிந்தை**
**வருமே பக்குவ வகையால் என்றது'**

அங்ஙனம் மடலேறுவன் என்று கூறக்கேட்ட திருவருள், தானே உயிரை எதிர்ப்பட்டு, உயிரினிடமாக அழுந்திநின்று, பரிபாகமுற்ற நீ கருணையைப் பெறாதார்போல உயிரை உடலினின்று பிரிக்கவும் நாணை விடவும் கருதின், உலகம் பழிதூற்றுமே என்று கூறல், 'பக்குவ உயிர்கள் அன்பு அருள் உடைதல் நிந்தை தகாது என முந்தி அருள் மொழிதல்' என்பது பழைய உரை.

நடனாம் வணங்குந்தொல் லோனெல்லை நான்முகன் மாலறியாக்
கடனாம் உருவத் தரன்றில்லை மல்லற்கண் ணார்ந்தபெண்ணை
உடனாம் பெடையொடொண் சேவலும் முட்டையுங் கட்டழித்து
மடனாம் புனைதரின் யார்கண்ண தோமன்ன இன்னருளே. 77

*பொ - ரை: கூத்தனும், நாம் அனைவரும் வணங்கும் பழையோனும், பிரமனும் திருமாலும் அடியும் முடியுமாகிய எல்லைகளை அறிய முடியாத திருவுருவுடையவனுமாகிய அரனது தில்லைநகர்க்கண் வளமார்ந்த இடத்தில் உண்டாகிய பனையை, அதன்கண் உள்ள சேவலையும் பெட்டையையும் முட்டையோடு காவலை அழித்து மடலூர்தலை நாம் இயற்றின், மன்ன! இனிய அருள் இவ்வுலகத்தில் எவர்கண்ணதோ? என்றவாறு.*

*உயிர்கள்மாட்டு அருள்புரிதலைக் கருதியாவது மடல் ஏறற்க என்றாளாம். சிவகருணையாகிய திருவருள், துணைநின்று சிவத்தினிடம் வழிப்படுக்க வேண்டியிருக்க, உயிர்த்தியாகத்தைத் தடுக்கவேண்டிய பரிபாகம் உற்ற ஆன்மா சிவகருணை ஒன்றே கருதிச் சீவகாருண்ணியத்தைக் கைவிடலாகாது; சீவகாருண்ணியமும் சிவகருணையைப் பெறுதற்கு வாயிலாம்; இது சைவ நெறி என வற்புறுத்திக்கூறுதல் காண்க.*

## மொழிநடை எழுதல் அரிதென விலக்கல்

### 'அருள் சிவத்தருமை அறியப்படாதெனல்'

*சீவகருணை சிவகருணை விரும்புவார்க்கும் மிக இன்றியமையாதது எனக்காட்டிய திருவருள் மேலும், மடலேறுவதாயின் காதலிக்கப்பட்ட சிவத்தை உருத்தீட்டிக் கையில் ஏந்தியன்றோ மடலூர்தல் வேண்டும்; அங்ஙனம் உருத் தீட்டுவதாயின், சிவத்தின் உபதேச உண்மையுரைகளையும், நடை முதலிய தொழில்களையும், அளவிலாற்றல் முதலிய பண்புகளையும் நீ தீட்ட இயலாதே! ஆகவே, மடலூர்தல் ஒழிக என விலக்குதல்.*

*சிவ இன்பினது குறி குணம் செயல்கள் மனம் வாக்குக் காயங்களுக்கும் எட்டாதன என்று அருள் இயம்பினது என்பது பழைய உரை.*

அடிச்சந்த மால்கண் டிலாதன காட்டிவந் தாண்டுகொண்டென்
முடிச்சந்த மாமல ராக்குமுன் னோன்புலி யூர்புரையும்
கடிச்சந்த யாழ்கற்ற மென்மொழிக் கன்னி யனநடைக்குப்
படிச்சந்த மாக்கும் படமுள வோநும் பரிசகத்தே. 78

*பொ - ரை: வேதமும் திருமாலும் கண்டறியாதனவாகிய அடிகளை எனக்குக் காட்டித் தானேவந்து ஆட்கொண்டு என் முடிக்கு அவ் வடிகளை நிறமுடைய பெரிய மலராகச் சூட்டியருளிய*

முன்னோனது புலியூரை ஒக்கும் சிறந்த நிறத்தையுடைய யாழொலியின் இனிமையைக் கற்ற மென்மொழியுடைய கன்னியின் அன்னத்தின் நடைபோன்ற நடைக்கு ஒப்பான படம் நும் சித்திரச்சாலைக்கண் உளவோ என்றவாறு.

நடையையும் காட்டும் படம் உளவோ என்று வினவினாள்; படம் உருவைக் காட்டுமேயன்றி, உருவின் புடைபெயர்ச்சியையும் பண்புகளையும் காட்டாது ஆகலின்.

சந்தம் - ஓசை வடிவான வேதம். வேதங்களும் இறைவன் அடியை அறியமாட்டாதன என்பதை 'வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே' 'வேத நான்கும் ஓலமிட்டு உணங்கும் நின்னை' என்பன முதலியவற்றான் அறிக.

'கண்டிலாதன காட்டிவந்து ஆண்டுகொண்டு' என்பது 'காட்டாதன எல்லாம் காட்டிச் சிவம்காட்டித் தாட்டாமரை காட்டித் தன்கருணைத் தேன் காட்டி' என்றதை நினைவுறுத்துதல் காண்க.

கன்னி அனநடை என்பதற்குப் பேரின்ப உரைக்கேற்பத் தியாகப் பெருமானுடைய அசபாநடன நடை எனப் பொருள் கொள்க. (6)

## அவயவம் எழுதல் அரிதென விலக்கல்

### 'சிவனது கருணையும் செயலும் ஒருவரால் அறியப்படாது இஃது அரிதே என்றது'

'ஆட்பாலவர்க்கு அருளும்வண்ணமும் ஆதிமாண்பும் கேட்பான் புகில் கிளக்கவேண்டா' என்றதுபோலச் சிவத்தின் கருணையும் செயலும் எத்தகையன? எவ்வளவின? என்று எவராலும் அறியப்படாதனவாக, எங்ஙனம் எழுதிக் கைக்கோடலாகும் எனத் திருவருள் சிவத்தின் சிறப்பியல்பை உயிருக்குணர்த்தியதாம்.

யாழு மெழுதி யெழின்முத் தெழுதி யிருளின்மென்பூச்
சூழு மெழுதியொர் தொண்டையுந் தீட்டியென் தொல்பிறவி
ஏழு மெழுதா வகைசிதைத் தோன்புலி யூரிளமாம்
போழு மெழுதிற்றொர் கொம்பருண் டேற்கொண்டு போதுகவே. 79

பொ - ரை: மொழியாக யாழ் ஓசையையும் எழுதி, பற்களின் வரிசையாக அழகிய முத்துக்களையும் எழுதி, குழலாக இருளின் கண் மெல்லிய பூமாலைகளையும் எழுதி, உதடுகளாக ஒப்பற்ற ஆதொண்டைக் கனிகளையும் தீட்டி, அநாதியே தொடர்ந்துவரும் பிறவிகள் ஏழையும் இனிப் பிரமன் என் தலையில் எழுதாவண்ணம் வினைத்தீர்வுகண்ட கருணை வள்ளலாகிய அம்பலவாணப் பெருமானது புலியூர்க்கண் உள்ள இளைய மாவடுவின் பிளவையும்

கண்களாக எழுதிய ஒருகொடி உண்டாயின் அதனைக் கையிலேந்தி மடலேறி எம்மூர்க்கண் வருக என்றவாறு.

இதனால் சிவத்தின் இயல்புகளை இத்தகையன என்று எழுதிக் காட்டொணாது என்று உண்மை உணர்த்தியவாறாம். (7)

## உடம்படாது விலக்கல்

**'சிவத்திடை யாமே சேர்த்தும் என்று**
**வன்மை யொழியும் வகைமை உரைத்தது'**

உன்னால் காதலிக்கப்பெறும் சிவத்திடை யானே கூட்டுவிப்பேன் என்னும் வன்மை எனக்கு இலது; நின் குறையைச் சென்று விண்ணப்பிப்பேன்; சிவம் திருவுளம் பற்றுமாயின், பின் நடைபெறுவனவற்றை அறிவார் யார்? திருவுளம் பற்றாதாயின் தெரிந்ததைச் செய்து திருவுளத்து இடம்பெறுக என்றதாம்.

என்வழிச் சிவமே இருத்தலால் உன்றன் குறையும் கூறிக் கூட்டுவேன் என்றதாகப் பழைய உரை அமைந்துள்ளது. இது திருவருளின் இயல்பிற்கு இவ்வாறு முனைப்புற்றுக் கூறுதல் இயையாததாகலானும், பழைய கொளுவில் அதற்கேற்ற சொல்லமைதி இன்மையானும், பாடலும் அப் பொருள் தாராமையானும் பழைய உரைவிளக்கம் எவ் வகையிலோ பதிப்பின்கண் பிழைபட்டதாதல் வேண்டும் என ஓர்க.

**ஊர்வா யொழிவா யுயர்பெண்ணைத் திண்மடல் நின்குறிப்புச்**
**சீர்வாய் சிலம்ப திருத்த இருந்திலம் ஈசர்தில்லைக்**
**கார்வாய் குழலிக்குன் னாதர வோதிக்கற் பித்துக்கண்டால்**
**ஆர்வாய் தரினறி வார்பின்னைச் செய்க அறிந்தனவே. 80**

பொ - ரை: உயர்ந்த பனையிலிருந்து பெற்ற மடன்மாவை ஊர்வாய்; ஒழிவாய்; புகழ் அமைந்த சிலம்பனே! நின் கருத்தைத் திருத்த யாம் இருந்திலேம்; ஈசரது தில்லைக்கண் உள்ள கருநிறம் பொருந்திய கூந்தலை உடையாளாகிய தலைவிக்கு நின் கருத்தை அறிவித்து, அவள் உடன்படும்வண்ணம் சில கற்பனைகளைச் சொல்லிப் பார்த்தால் அவள் வாய்ப்புத்தரின் பின்னை அறிவார் யார்? அவள் அங்ஙனம் நேராளாயின் அதன்பின்னர் நீ அறிந்ததைச் செய்க என்றவாறு.

சிவம் திருவருளாகிய எனக்கும் அப்பாற்பட்டது; அதன் இயல்பை யாரே அறிவார்? அங்ஙனமாக நின் விருப்பைச் சென்று செவ்வி அறிந்து விண்ணப்பிப்பதே என் வேலை; சிவம் இயையின், அதன்பின் நடப்பதை அறிவார் யார்? பேரின்ப நுகர்ச்சியில் தன்னை மறந்த நிலைதான்; இயையா விடினோ நீ அறிந்த மடலூர்தலை நீ செய்க என்று திருவருள், ஞானத்தால் உணர்தற்குரிய சிவத்தைக் கிரியையால் உணர முற்படற்க என அறிவுறுத்தியவாறு.

## உடம்பட்டு விலக்கல்

**'என்வழிச் சிவமே இருத்தலால் உன்றன்
குறையும் கூறிக் கூட்டுவேன் என்றது'**

*சிவத்தை அடைந்தாலன்றி வாழ்வது இல்லை என்ற உறுதி தளராத உயிரைக் கண்டு, திருவருள், விரைந்து ஒன்றும் செய்யற்க; சிவம் என்வழிப்பட்டது; யானே சென்று நின் குறைகளைக் கூறி, நீ சிவத்தைக் கலக்கத் துணை செய்வேன் என்றது.*

*'இன்பம் என்வழி இருத்தலால் உன்தன் குறையும் கூறிக் கூட்டுவேன் என்றது' என்பது பழையவுரைதரும் விளக்கம்.*

**பைந்தா ணரவன் படுகடல் வாய்ப்படு நஞ்சமுதாம்
மைந்நாண் மணிகண்டன் மன்னும் புலியூர் மணந்தபொன்னிம்
மொய்ந்நாண் முதுதிரை வாயா னழுந்தினும் என்னின்முன்னும்
இந்நா ளிதுமது வார்குழ லாட்கென்கண் இன்னருளே.** 81

*பொ - ரை: படத்தையுடைய அரவாகிய நாணை உடையவனும், ஒலிக்கும் கடலிடத்து உண்டான நஞ்சும் அமுதாகும் கருமைநிறம் நாணும் நீலமணிபோலும் கண்டம் உடையானுமாகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள புலியூரிலே பொருந்திய திருமகள்போலும் தலைவியாகிய சிவம், நாட்காலத்தே இம் முதிய கடற்கண் யான் மூழ்கின், தானும் எனக்கு முன்னே மூழ்கும்; தேன்பொருந்திய நீண்ட குழலையுடைய இவட்கு என்கண் உண்டாகிய அருள் இத் தன்மைத்து என்றவாறு.*

*யான் கடலில் வீழ்ந்தால் அவளும் வீழ்வள்; அத்தகைய கருணை தலைவிக்கு இன்று என்மாட்டு உண்டு என்றதன் கருத்து, கருணையின்வழியே சிவம் இயங்குந்தன்மையது; ஆதலால், யானே முன்னின்று சிவத்தைக் கூட்டுவிப்பேன்; பரிபாகமுற்ற நீ கலவற்க என்றவாறாம்.* *(9)*

## 11. குறைநயப்புக் கூறல்

**'குறைநயப் புத்துறை யவையிரு நான்கும்
சிவத்தோ டுயிரைச் சேர்க்க வேண்டி
உயிர்ப்பரி வெடுத்து உரைத்தறி வுறுத்தல்'**

*பரிபாகமுற்ற ஆன்மா சிவத்தையின்றித் தனித்திருக்க மாட்டாமையை உணர்ந்த திருவருள் தானே சிவத்தின்பாலணுகித் தலைமகன் நிலை இது; அவனை ஏற்றுத் தண்கருணைத் தேனூட்டல் நம்கடன் என்று கூறாநிற்றல்.*

*அஃதாவது, 'பெருநீரறச் சிறுமீன் துவண்டாங்கு நினைப் பிரிந்த வெரு நீர்மையேனை விடுதிகண்டாய்' எனவும், 'புலன்கள் திகைப்பிக்க யானும் திகைத்திங்கோர் பொய்ந்நெறிக்கே விலங்கு*

கின்றேனை விடுதிகண்டாய்' எனவும், 'குதுகுதுப்பின்றி நின்றென் குறிப்பேசெய்து நின்குறிப்பால் விதுவிதுப்பேனை விடுதி கண்டாய்' எனவும் ஆன்மா குலம் நலம், குற்றம் நற்றம் முதலியவற்றை விட்டு வாழைப்பழம்போல மனங்கனிந்த நிலையைத் திருவருள் சிவத்தின் திருமுன் விண்ணப்பித்து ஏற்றருள உரைத்தலாம். இது குறிப்பறிதல் முதல் மனத்தொடு நேர்தல் ஈறான எட்டுக் கிளவிகளையுடையது.

'உயிர்ப்பரிவு இன்புக்கு அருள்புகன்றிடுதல்' என்பது திருவாசக வியாக்யானம். உயிருக்குள்ள பரிவை, இன்பவடிவான சிவத்திற்குத் திருவருள் விண்ணப்பித்தல் என்பது கருத்து.

## குறிப்பறிதல்

**'சிவத்தோடு உயிரைச் சேர்பரிவுரைத்து அவ்**
**அருள் சிவக்குறிப்பை ஆராய்ந்தது'**

உயிர் சிவத்தோடு மேவி நிரதிசயானந்தக் கலவி எய்துதற்கு விரைதலைத் திருவருள் சிவத்திடம் விண்ணப்பித்து அதன் திருவுளக்குறிப்பை ஆராய்ந்ததாம்.

'சிவத்தோடு உயிரைச் சேர்க்கவேண்டி, உவப்பருள் இன்பச் சிவக்குறி அறிதல்' என்பது திருவாசக வியாக்யானம். முன்னதோடு இது கருத்தான் ஒக்குமாயினும் சொல்லமைதி முற்றும் மாறுபடுதல் காண்க.

**தாதேய் மலர்க்குஞ்சி யஞ்சிறை வண்டுதண் டேன்பருகித்**
**தேதே யெனுந்தில்லை யோன்சே யெனச்சின வேலொருவர்**
**மாதே புனத்திடை வாளா வருவர்வந் தியாதுஞ்சொல்லார்**
**யாதே செயத்தக் கதுமது வார்குழல் ஏந்திழையே.** 82

பொ - ரை: மகரந்தப்பொடிகள் பொருந்திய மலரோடுகூடிய முடியில் வண்டுகள் தேனைப் பருகித் தே தே எனப் பண்ணைப் பாடும் தில்லைக்கண் எழுந்தருளியுள்ள ஆனந்தக்கூத்தப் பெருமானுடைய திருக்குமாரனாகிய முருகன் என்றே சொல்லத் தகும் வேலர் ஒருவர், நம் புனத்திடை வாளா பலகாலும் வருவர்; வந்து ஒன்றும் பேசார்; தேன் ஒழுகும் கூந்தலையுடைய ஏந்திழாய்! அவரிடத்து நாம் செய்யத்தக்கது யாது என்றவாறு.

வாளாவருவர் என்றது வினையின்றி ஏதோ எண்ணி அடிக்கடி வருவரெனப் பரிபாகமுற்ற ஆன்மா தன் செயலற்றுத் தாமற்றபின் நாதன் செயலே ஆனமையை உணர்த்தியது. யாதும் சொல்லார் என்பது உரை மாண்டவாற்றை உணர்த்தியது.

வண்டு குஞ்சித் தண்டேன் பருகித் தேதே எனும் தில்லையோன் என்றமையால், மலமாயா கன்மங்களோடு கூடிக் கருமையான அறியாமைக்கண் கிடந்த ஆன்மா, அம்சிறைகளாகிய பக்தியும்

வைராக்கியமுமாகிய இரண்டையும் துணைக்கொண்டு, அவற்றினீங்கிச் சிவன் முடியாகிற உயர்ந்த இடத்தையுற்று, அங்குள்ள சிவானந்தத் தேனைப் பருகி அந்தக் களியால் தன்னை மறந்து தெய்வம் என்னும் பொருள் தருவதாகிய 'தே தே' என்னும் ஒலியைச்செய்து உலவும் பூமியாகிய தில்லை, அதனில் வாழும் அம்பலவாணப் பெருமான், அவன் குமாரனாகிய முருகவேள் போன்றான் இவ்வுயிர் என்ற நயங்கள் உணரக்கிடப்பன காண்க. (1)

## மென்மொழியாற் கூறல்

### 'அருள் பணிமொழியால் அரற்கு அறிவுறுத்தல்'

சிவத்தின் ஒப்புயர்வற்ற தன்மையை உள்ளத்து எண்ணிய திருவருள் பரிபாகியை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும் எனச் சிவத்திற்குக் கற்பிக்க யாம் யார்? என்று ஓர்ந்து, பணிந்த மொழிகளால் விண்ணப்பித்துக் கொண்டதாம்.

'உயிர் பருவரல் இன்புக்கு அருள் அறிவித்தல்' என்பது வியாக்கியானம். இதுவும் கருத்தான் ஒத்திருத்தல் காண்க.

**வரிசேர் தடங்கண்ணி மம்மர்கைம் மிக்கென்ன மாயங்கொலோ**
**எரிசேர் தளிரன்ன மேனியன் ஈர்ந்தழை யன்புலியூர்ப்**
**புரிசேர் சடையோன் புதல்வன்கொல் பூங்கணை வேள்கொலென்னத்**
**தெரியேம் உரையான் பிரியா னொருவனித் தேம்புனமே. 83**

பொ - ரை: செவ்வரி பரந்த கண்களையுடையாய்! ஒருவன் மயக்கம்மிக்கு, தீயில் விழுந்த தளிரை ஒத்த மேனியை உடையவனாய், பச்சென்ற தழையை உடையவனுமாக இந்த இனிய புனத்தைவிட்டு அகலாமலும் ஒன்றும் உரையாமலும் உலவுகின்றான்; அவன் புலியூர்ப்புனிதன் மகனோ? அன்றி, மலரம்பை ஏந்திய மதனனோ? யாம் துணிகின்றிலம்; இது என்ன மாயமோ என்றவாறு.

எரி சேர் தளிரன்ன மேனியன் முதலியவற்றால் ஊன் கெட்டு, உயிர் கெட்டு, உணர்பு கெட்டு, என் உள்ளமும் போய், நான் கெட்டவாற்றைத் திருவருள் தெரிவித்ததாம் என்க. தெரியேம் என்றது பணிமொழி. (2)

## விரவிக் கூறல்

### 'உயிர்ப்பரிவு உவமையால் உவந்து அருள் உரைத்தது'

உயிருக்குச் சிவத்தினிடமுள்ள இடையீடில்லாத காதலை, நண்டு தன் பெடைக்கு நாவற்பழத்தை நல்குதலைக்கண்டு பேயறைந்தவன்போல நின்றான் என்ற உவமையைக்கொண்டு திருவருள் உரையாநிற்றல்.

*இது சிவத்தின் கருணைக்கு இவ்வுயிர் முன்னம் இலக்கானதே என்பதைத் திருவருள் உணர்ந்து, மீட்டும் இடையீடின்றிக் கூட்டுவிப்பதே அடியேன் நோக்கு என்பதை உணர்த்துவதால், அறிந்தமையும் - அறியாமையும் விரவிக் கூறியதாயிற்று.*

நீகண்ட னையெனின் வாழலை நேரிழை யம்பலத்தான்
சேய்கண் டனையன்சென் றாங்கோ ரலவன்றன் சீர்ப்பெடையின்
வாய்வண் டனையதோர் நாவற் கனிநனி நல்கக்கண்டு
பேய்கண் டனையதொன் றாகிநின் றானப் பெருந்தகையே. 81

*பொ - ரை: நேரிழை! தில்லையம்பலத்தான் சேயைக் கண்டா லொத்த தன்மையையுடையான் ஒருவன், அவ்விடத்து ஒரு ஆண் நண்டு, தனது அழகையுடைய பெண் நண்டினது வாயிலே வண்டுபோன்ற நாவற்பழம் ஒன்றைக் கொண்டுபோய்க் கொடுப்ப அதனைக்கண்டு, அப் பெருந்தகை பேயைக் கண்டவன்போல நின்றான்; அந்த நிலையை நீ கண்டாய் ஆயின் உயிர் வாழ மாட்டாய் என்றவாறு.*

*சீர்ப்பெடையோடு அலவன் பயில்வதுகண்டு தலைமகன் செயல்மறந்து நின்றதுபோல, உயிர் சிவத்தைச் சாரத் தன்செய லற்றிருந்தமையைத் திருவருள் சிவத்திடம் விண்ணப்பித்தவாறு.*

*பேராசிரியர் பேய் கண்டனையதொன்றாகி நின்றான் என மென்மொழியும், சேய் கண்டனையன் என வன்மொழியும் விரவியதாயிற்று என்பர். (3)*

## அறியாள்போறல்

### 'சிவம் அருட்கு அறிய மற்றொன்றாற் செப்பல்'

*திருவருள் கலப்புண்மையைத் தானறிந்தும் அறியாதாள்போல உவமை வாயிலாக விரவிக் கூறக்கேட்ட சிவம், தாமும் அங்ஙனம் அவ்வுயிரை அறியாதது போலத் திருவருள் சொல்லியதைச் செவிமடுத்தும் மடுக்காததுபோல நின்று, 'ஆகா! இக் கடல் சிவத்தை ஒத்துள்ளதே' என்று வேறொன்றால், சடமாகிய கடலும், சித்தாகிய சிவத்தை ஒத்துள்ளது அங்ஙனமாகச் சதசத்தாகிய ஆன்மா அசத்தின் நீங்கிச் சத்தேயானவழிச் சிவமாதற்குத் தடையில்லையே என்பது தோன்றக் கூறியவாறாம்.*

சங்கந் தருமுத்தி யாம்பெற வான்கழி தான்கெழுமிப்
பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறுலவு
துங்க மலிதலை யேந்தலி னேந்திழை தொல்லைப்பன்மா
வங்க மலிகலி நீர்தில்லை வானவ னேர்வருமே. 85

*பொ - ரை: மெய்யடியார் கூட்டத்திற்கு உதவப்பெறும் முத்தி இன்பத்தை யாம் எய்த, எல்லாப் பொருள்களையும்*

தம்மகப்படுத்தி நிற்கும் ஆகாயத்தையும் கடந்துநின்ற தான் ஒரு திருமேனி தாங்கி வந்து, பொங்கும் நீரையுடைய கங்கையைச் சடையில் தாங்கி, மிக்க ஆரவாரத்தையுடைய கழுகுகள் வட்டமிடுகின்ற உயர்ந்த தலையோட்டை ஏந்தியிருக்கும் தில்லையில் எழுந்தருளியுள்ள அம்பலவாணப் பெருமானை ஒப்பாகும் என்றவாறு.

சங்குகள் ஈன்ற முத்துக்களை எய்த, பெரிய உப்பங்கழிகளோடு கூடி மிக்க புனலோடுகூடிய கங்கைமுதலான ஆறுகளை ஏற்று, பொலிந்த ஆரவாரமுடைய பாறாகிய மரக்கலங்கள் இயங்கும் திரைகளின் மிகுதியையுடைய கடல், தில்லைப்பெருமானை எல்லாவகையானும் ஒத்துள்ளது என அறியாள் போலக் கூறி, சிவஞானத்தால் தரிசிப்பார்க்கு எல்லாம் சிவமாகவே தோன்றுவது இயல்பாதலை உணர்வித்தவாறு. (4)

## வஞ்சித்துரைத்தல்

### 'சிவம் உயிர்க்கு ஒன்றால் பின்னுஞ் செப்பல்'

சிவம் உயிர்க்குக் கருணைபுரிதலை, வெளிப்படையாகக் கூறாது. நாண் காரணமாக வேறொரு பொருளின் நிகழ்ச்சிக்கண் வைத்துக் குறிப்பான் திருவருள் உணர்ந்துகொள்ள உரைத்தல்.

புரங்கடந் தானடி காண்பான் புவிவிண்டு புக்கறியா
திரங்கிடெந் தாயென் றிரப்பத்தன் னீரடிக் கென்னிரண்டு
கரங்கடந் தானொன்று காட்டமற் றாங்கதுங் காட்டிடென்று
வரங்கிடந் தான்றில்லை யம்பல முன்றிலம் மாயவனே. 86

பொ - ரை: முப்புரங்களையும் வென்ற பெருமானுடைய திருவடிகளைக் காண்பதற்காகப் பூமியைத் தோண்டிக்கொண்டு சென்று அங்குத் திருவடியைக் காணாது, எந்தையே! கருணைசெய் என்று இரப்ப, தன் திருவடிகள் இரண்டையும் தொழுதற்கு என்னுடைய இரு கரங்களையும் தந்தவனாகிய அவன் சிறிது இரங்கி ஒரு திருவடியைத் தூக்கிக்காட்ட 'மற்றொன்றையும் காட்டி அருளுக' என்று அத் திருமால் தில்லையம்பல முற்றத்திலே வரம் கிடந்தான் என்றவாறு.

முப்புரம் என்பது மும்மலகாரியம் ஆதலின், அவற்றை வென்ற சிவபெருமானுடைய அடிகளைக் காணவேண்டுமாயின், ஆணவச்செருக்கற்று, அறியாமை அறிவு அறிந்து, திருவருள் காட்டின் காணும் பேறுடையனாவேன் எனத் தன்முனைப்பற்றுக் கிடக்கவேண்டியிருக்க, திருமால் காண்பேன் என்று முனைந்து தோண்டிச் சென்றானாக, பாதாளம் ஏழினும்கீழ்ச் சொற்கழிவு பாதமலர் ஆதலின், அங்கு அவற்றைக்காணாது முனைப்படங்கி, 'காண்பார் ஆர்

கண்ணுதலாய்! காட்டாக்காலே' என்று ஏத்த, தன் ஈரடியில் ஒன்றை அதாவது திருவருள்மயமான இடது திருப்பாதத்தைத் தூக்கிக் காட்டலும், அவன் அருளடியைக் காட்டினாலும் அடியேற்கு அதனை முழுதும் அனுபவிக்கும் அறிவில்லை; ஆணவச்சேட்டை ஒடுங்க வேண்டும்; ஆதலால், ஆணவத்தை அடக்கிநிற்கும் வலது' திருப்பாதத்தையும் காட்ட வேண்டும்; யானே காண்பதாயின், என் அறிவு தேனடையுள் இருக்கும் தேனைச் சுவைக்காது, புறமுடியுள்ள அடையைக் கறிப்பான்போல ஆணவத்தை அழுத்திநிற்கும் அடியை அனுபவியாது மீட்டும் ஆணவத்தில் அழுந்தச் சார்கின்றேன் ஆகையால் வலது திருப்பாதத்தையும் தூக்கிக் காட்டுதல் வேண்டும் என வேண்டிக்கொள்கின்றான் என்ற நயம் காண்க.

திருமால், திருவடியில் ஒன்றைக் கண்ட அனுபவத்தால் மற்றொன்றையும் காட்டுக என்று வேண்டிய நிகழ்ச்சியின் வாயிலாகத் தற்போதத்தைத் துணைக்கொண்டு சிவஞானபூமியில் வந்து இன்பைச்சேர்ந்த உயிர், தற்போதத்தால் சிவம் என்றும் அறிய முடியாதது என்ற உண்மை உணர்ந்து, திருவருளைச் சார்ந்து பேரின்பத்தை எய்தலாம் என்று விரைகிறது என்ற உண்மையை உணர்த்துதலின் இது வஞ்சித்துரைத்தலாயிற்று. (5)

## புலந்து கூறல்

**'அருள்தனை வெறுத்து அரற்கு அறிய வுரைத்தது'**

சிவம் இங்ஙனம் தன்னைவிட்டு நீங்காத திருவருளுக்குப் புலப்பாடின்றி மறைத்து உணர்த்தியதை எண்ணித் திருவருள் தன்னைத் தானே நொந்துகொண்டு சிவத்தின்முன் விண்ணப்பித்தல். 'இன்பம் இசையாததற்கு அருள் தன்னை வெறுத்துக் கூறியது' என்பது திருவாசக வியாக்கியானம்.

உள்ளப் படுவன வுள்ளி யுரைத்தக் கவர்க்குரைத்து
மெள்ளப் படிறு துணிதுணி யேலிது வேண்டுவல்யான்
கள்ளப் படிறர்க் கருளா அரன்றில்லை காணலர்போல்
கொள்ளப் படாது மறப்ப தறிவிலென் கூற்றுக்களே. 87

பொ - ரை: ஆயத்தக்கவற்றை ஆய்ந்து, புலப்பட உரைக்கத்தக்க நின் உண்மைத் தோழியர்க்கு உரைத்து, அவர்களோடும் ஆராய்ந்து நீ பொய் என்று கருதும் இதனை மெள்ளத் துணிவாயாக; அன்றித் துணியா தொழிவாயாக; நெஞ்சில் கள்ளமுடைய பொய்யர்க்கு அருள்செய்யாத அரனது தில்லையை ஒருக்காலும் காணாதாரைப்போல அறிவிலியாகிய என் கூற்றுக்களை உள்ளத்துக் கொள்ளத்தகாது; மறப்பது; இதுவே என் வேண்டுகோள் என்றவாறு.

உரைத்தக்கவர்க்கு உரைத்து, படிறு துணி என்பன சிவத்தின் வேறாகாததாய்ச் சிவத்தோடொன்றி நிற்கும் திருவருள் தன்னிடம் சிவம் வஞ்சித்துக் கூறினமையை உட்கொண்டு தன்னை வெறுத்துக் கூறியனவாம். தில்லைப்பதியைக் காணாதார் உரை கொள்ளப் படாவாறுபோல என் உரையும் கொள்ளப்படாதது என்றாளாம்.

உயிரை வழிப்படுத்துச் சிவத்தொடு கூட்டும் உபகாரம் திருவருளதாய் இருக்கச் சிவம் தானே கருணைமிகுதியால் உயிரொடு கலந்தமைமட்டுமே அன்றி, அந் நிகழ்ச்சியைத் தான் அறியாதவாறு மறைத்தலும் செய்ததே எனப் புலந்து கூறியதாம். (6)

## வன்மொழியாற் கூறல்

### 'அருள்செயாவிடில் உலகு அலராம் அழிவாம் மலரெனல்'

இங்ஙனம் தன்னையே நொந்துகொண்ட திருவருள், சிவம் வெளிப்படையாகத் தன்னிசைவை உணர்த்தாமையால், மேல் விளைவு மிகக் கொடுமையாம் என்று எடுத்துக்கூறி, கொன்னே உயிர் அழியும்; அப் பழி நம்மைச்சாரும் என்று அறிவித்துச் சிவத்தை அருள்செய் என வேண்டுதல். 'இன்பம் அருளாவிடில் உன் கருணைக்கு இழிவுவரும் உயிர் அழியும் என்று அருள் உரைத்தல்' என்பது திருவாசக வியாக்கியானம்.

**மேவியந் தோலுடுக் குந்தில்லை யான்பொடி மெய்யிற்கையில்**
**ஓவியந் தோன்றுங் கிழிநின் எழிலென் றுரையுளதால்**
**தூவியந் தோகையன் னாயென்ன பாவஞ்சொல் லாடல்செய்யான்**
**பாவியந் தோபனை மாமட லேறக்கொல் பாவித்ததே.** 88

பொ - ரை: உடம்பிலோ அழகிய புலியின்தோலை விரும்பி உடுக்கும் தில்லைக்கூத்தப் பெருமானுடைய திருநீறு; அவன் கையிலோ சித்திரம் வரையப்பெற்ற கிழி; அக் கிழியிலோ உன் அழகு இது என்னும் உரையும் உளதாயிருந்தது; தூவியையுடைய அழகிய தோகையை ஒப்பாய்! என்ன பாவமோ! ஒன்றும் உரையாடான்; பாவி இருப்பதைப் பார்த்தால் அந்தோ பனையினது பெரிய மடலேறுதற்கு நினைத்தான்போலும் எ-று.

மேல்விளைவு ஆன்மா அகலிடத்தார் ஆசாரத்தை நீத்து உயிர்விடவும் துணிந்தது; ஆதலால் யான் அறிய வெளிப்படையாக அருள்செய்க எனத் திருவருள் வேண்டியவாறாம்.

சாதனங்களாலும், பித்தர் பசாசர்போன்ற செய்கைகளானும், உயிரைவிடத் துணிந்தமையானும் ஆன்மாவின் உண்மையன்பு அனைவர்க்கும் புலனாகும். இந் நிலையைப் பலர் அறிவதற்கு முன்பே நாம் நம்முள் கலந்து உயிர்க்கு இன்பூட்டேமாயின் அலராம் என்று அறிவித்தமையின் இது வன்மொழியானவாறு காண்க. (7)

## மனத்தொடு நேர்தல்

**'சிவம் உயிர்க்கு இன்பஞ்சேர இரங்கல்'**

*வன்மொழி கேட்ட சிவம் கருணையால் அவ்வன்செய்கைக்கு ஆற்றாது உயிரைக் கண்டருளத் தன் மனத்தொடு கூறி நேராநிற்றல்.*

**பொன்னார் சடையோன் புலியூர் புகழா ரெனப்புரிநோய்**
**என்னா லறிவில்லை யானொன் றுரைக்கிலன் வந்தயலார்**
**சொன்னா ரெனுமித் துரிசுதுன் னாமைத் துணைமனனே**
**என்னாழ் துயர்வல்லை யேற்சொல்லு நீர்மை இனியவர்க்கே. 89**

பொ - ரை: பொன்னை ஒத்த சடையையுடையவனது புலியூரைப் புகழாதாரைப்போல வருந்த எனக்குச் செய்த துன்பம் என்னால் அறியப்படுவதில்லை; யான் ஒன்றும் உரைக்க மாட்டேன்; எனக்குத் துணையான மனனே! அயலார் சொன்னார் என்று இவள் வந்து சொல்கின்ற குற்றம் என்னிடத்து வாராமல், தலைவனது ஆற்றாமையைக் கூறக் கேட்டலால் விளைந்த துன்பத்தை உள்ளவாறு சொல்லவல்லையாயின் நீர்மையையுடைய இனியவர்க்கு நீ சென்று சொல்வாயாக என்றவாறு.

தலைவி மனமே! பிறர் சொன்னதாக இவள் சொல்லும் குறை என்பால் சாராதவண்ணம் தலைவர்க்கு நீ சென்று சொல் என வேண்டுகின்றாளாம்.

சிவம் உயிரின் ஆற்றாமை தன்னால் வந்தது என்று உலகம் பழி தூற்றாவண்ணம், உள்ளமே! நீ சென்று உயிருக்கு உணர்த்து வாயாக என்றதாம். இதனைக்கொண்டு திருவருள், சிவத்தலைவி குறைநேர்ந்தமையை அறிவாளாயிற்று என்க. (8)

## 12. சேட்படை

**'சேட்படை இருப்பத் தாறு துறையும்**
**கிடையா இன்பம் கிடைத்தலால் உயிரை**
**அருமை காட்டி அறியாள் போலப்**
**பலபல அருமை பற்றி உரைத்த**
**அருளே சிவத்தோடு ஆக்க அருளல்'**

*அஃதாவது, சிவத்தின் திருவுள்ளக் கிடக்கையை மனத்தொடு நேர்தல் வாயிலாகத் தெரிந்த திருவருள் உயிரை நோக்கி 'உயிரே! நீ பல பிறவிகளில் ஈட்டிய பதிபுண்ணியச் சிறப்பால், சிவலோக நாயகன் சேவடிக்கீழ் யாரும்பெறாத இன்பம் பெற்றாய்; நீ பெற்றதை இவ்வுலகில் யார் பெறுகிற்பார்? ஆதலால், கிடைத்த இன்பத்தை நழுவவிடாது சிக்கெனப் பிடித்துக்கொள் என அருமைகாட்டிச் சிவத்தோடாக்க அருளலாம்.*

*இது தழைகொண்டுசேறல் முதல் தழைவிருப்புரைத்தல் ஈறாக இருபத்தாறு கிளவிகளை உடையது. 'கிடையா இன்பத்து அருமைகாட்டல்' என்பது வியாக்கியானம்.*

## தழைகொண்டு சேறல்

### 'மலரெடுத்து உயிர் அருள்வழியே சென்றது'

*சிவத்திற்கு அணிவிக்க உயிர் நாட்காலே நீராடி அலர்வதற்கு முன்னரே பூக்களைக் கொய்து திருவருள் வாயிலாகச் சிவத்தினிடம் சேர்ப்பிக்க எண்ணிச்சென்றது.*

**தேமென் கிளவிதன் பங்கத் திறையுறை தில்லையன்னீர்**
**பூமென் றழையுமம் போதுங்கொள் ளீர்தமி யேன்புலம்ப**
**ஆமென் றருங்கொடும் பாடுகள் செய்துநுங் கண்மலராம்**
**காமன் கணைகொண் டலைகொள்ள வோமுற்றக் கற்றதுவே. 90**

*பொ - ரை: தேன்போலும் இனிய மெல்லிய சொற்களையுடையவராகிய சிவகாமித்தாயை ஒருபாகங்கொண்ட கூத்தப் பெருமான் எழுந்தருளியுள்ள தில்லைநகரை ஒத்தவர்களே! யான் கொணர்ந்த பூவையும் மென்தழையையும் ஏற்றுக்கொள்ளீர்; உணர்விழந்த யான் தனிமையால் வருந்த, செய்யத்தகாத பொறுத்தற்கரிய கொடுமைகளைச் செய்யத்தகும் என்று துணிந்துசெய்து, நமது கண்மலர்களாகிற காமபாணங்களைக் கொண்டு வருத்தவோ நீர் முழுதும் கற்றது? என்றவாறு.*

*திருவருளைத் துணைக்கொண்டு பூவும் நீரும் பச்சிலையுங் கொண்டு வழிபடுதலாகிய கிரியையின்வழியே ஞானத்தை மருவிச் சிவபோகத்தழுந்தி இன்பம் துய்க்க எதிர்நோக்குகின்ற என்னை வருத்தவோ நீர் கற்றது என்று கூறி அவர்கள் மறாதவண்ணம் சொல்லியவாறு காண்க. (1)*

## சந்தனத்தழை தகாதென்று மறுத்தல்

### 'உன் அறிவாம் மலர் ஒவ்வாதென்றது'

*சந்தனத்தழை திருவடிக்கண் சாத்துதற்குத் தகாததாயிற்றே! அன்றியும், இது எங்கிருந்து யாரால் கொணரப்பட்டது என்று ஆராயப்பெறுமே என்றும், சிவத்திற்குரிய தழையும் பூவும் மனத்தாலே கற்பித்துச் சாத்தப்பெறும் அட்டபுட்பங்கள்தாமே என்றும் திருவருள் மறுத்துரையாநிற்றல்.*

**ஆரத் தழையராப் பூண்டம் பலத்தன லாடியன்பர்க்**
**காரத் தழையன் பருளிநின் றோன்சென்ற மாமலயத்**
**தாரத் தழையண்ணல் தந்தால் இவையவள் அல்குற்கண்டால்**
**ஆரத் தழைகொடு வந்தா ரெனவரும் ஐயுறவே. 91**

பொ - ரை: ஆரமாகிய தழைந்த பாம்பைப் பூண்டு, சிற்றம் பலத்து அனலைக் கையில் ஏந்தித் திருநடஞ்செய்து, அன்பர்கட்கு மிக அன்பைப் பெருக்கி நின்றோனாகிய அம்பலவாணப் பெருமான் சேர்ந்துள்ள பொதியமலைக்கண்ணதாகிய சந்தனத் தழையை அண்ணலாகிய தாம் தந்தால், இவை எம்மிடையிலே பிறர் கண்டால், இப் பக்கத்தில் இல்லாத இந்தத் தழையைக் கொண்டுவந்தவர்கள் யார் என்று ஐயம் எழும்; ஆதலால் ஏற்கேம் என்றவாறு.

சிவத்தலைவியிடம் பேரின்பம் பெறுவதாயின் ஞானபுட்பங் களைச் சாத்த வேண்டுமேயன்றிப் பிரகிருதி சம்பந்தமான இத் தழை கூடாது; இத் தழை தோன்றிய இடம் கூத்தப்பிரானது பொதியில் ஆதலின் நீர் கொண்டுவரத் தக்கதாம், அத்துணை இயைபுடைத்தாயிற்று; ஆயினும் இதனை யாம் ஏலேம்; ஞானமலரே வேண்டுதும் என மறுத்தவாறாம். (2)

## நிலத்தின்மை கூறி மறுத்தல்

### 'உன்னறிவு அடியார் உருவாகாது என்றது'

இத் தழை எம் குன்றில் இல்லாதது; இதனை நீர் தரின் எமக்குக் குடிப்பழியாம்; அன்றியும், உன் எண்ணம் அடியார்கட்கு ஏற்ற உருவாகாதாம் என்று உயிருக்குத் திருவருள் உணர்த்தியது.

'உன்னறிவு இன்பிடைச் சென்றால், உண்மையடியார் இகழ்வர் என்றது' என்பது வியாக்கியானம்.

**முன்றகர்த் தெல்லா இமையோ ரையும்பின்னைத் தக்கன்முத்தீச்**
**சென்றகத் தில்லா வகைசிதைத் தோன்றிருந் தம்பலவன்**
**குன்றகத் தில்லாத் தழையண்ணல் தந்தாற் கொடிச்சியருக்**
**கின்றகத் தில்லாப் பழிவந்து மூடுமென் றெள்குதுமே.** 92

பொ - ரை: முன்பு வேள்விக்குச் சென்ற எல்லாத் தேவர்களையும் புடைத்துப் பின்பு தக்கனுடைய முத்தீயினையும் குண்டத்தில் இல்லாதவண்ணம் சிதைத்தவனாகிய திருந்திய அம்பலத்தின்கண் உள்ள கூத்தப்பிரானது மலைக்கண் இல்லாத தழையை அண்ணல் தந்தால், கொடிச்சியர்க்கு என்றும் இல்லாத குடிப்பழி உண்டாம் என்று கூசுகின்றேம்; ஆகையால், இத் தழை கொணரற்பாலரல்லீர் என்றவாறு.

இத் தழை இந்தப் புனத்திலுள்ள உண்மையடியார்க்கு ஒவ்வாதது ஆகலின் இதனால் நும் காதன்மையுணர்த்த இயலாது; வேறு தழை கொணர்க என மறுத்தவாறு. (3)

## நினைவறிவு கூறி மறுத்தல்

**'சிவத்துளங்கண்டு உனைத் தேற்றுவேன் என்றது'**

உன் காதற்றெய்வமாகிய சிவத்தின் திருவுள்ளக்குறிப்பு அறிந்துவந்து உன் தழையை ஏற்பேன்; கலங்கிய உன் உள்ளத்தைத் தெளிவிப்பேன் என்று திருவருள் உயிரைநோக்கி உரைத்தது.

'இன்புருச் சிவத்தின் இசைவுகண்டு, பின்பு உனைப் பேணுவன் பொறு நீ என்றது' என்பது திருவாசக வியாக்கியானம்.

**யாழார் மொழிமங்கை பங்கத் திறைவன் எறிதிரைநீர்**
**ஏழா யெழுபொழி லாயிருந் தோனின்ற தில்லையன்ன**
**சூழார் குழலெழிற் றொண்டைச்செவ் வாய்நவ்வி சொல்லறிந்தால்**
**தாழா தெதிர்வந்து கோடுஞ் சிலம்ப தருந்தழையே. 93**

பொ - ரை: யாழோசையை ஒத்த இனிய மொழிகளையுடைய உமா தேவியாரை இடப்பாகத்துக் கொண்டருளியவரும், மோதுகின்ற அலைகளையுடைய கடல் ஏழாயும் உலகு ஏழாயும் இருந்தவரும் ஆகிய கூத்தப்பிரான் நின்ற தில்லையை ஒக்கும் சுருண்ட கூந்தலையும் தொண்டைக் கனிபோலும் வாயினையும் உடைய இளமான்போல்வாளது வாய்மொழியை அறிந்துவந்து, சிலம்பனே! நீ தரும் தழையைக் காலந்தாழ்க்காமல் ஏற்பேம் என்றவாறு.

சிவத்தின் திருவுளக்குறிப்பை அதன் வாய்மொழியான் அறிந்தபின் கையுறையை ஏற்பேன் என்றாள் திருவருளாகிய தோழி. (4)

## படைத்து மொழியான் மறுத்தல்

**'சிவங்கொளும் முன்னுணர்வு ஆகாது என்றது'**

உயிர், சிவத்தின் திருவுளக் கருத்தை அறிந்து ஏற்பேம் என்று திருவருள் கூறியதாக உளங்கொண்டு, மீட்டும் அவ்விடத்தே நிற்க, திருவருள் சிறிது தூரம் சென்று திரும்பிவந்து, இத் தழையை யானேயன்றிச் சிவமும் விரும்பும்; ஆனால், இத் தழை இவர்க்கு வந்தவாறு யாதோ என்று ஆராயப்படும் ஆதலான் எமக்கு ஆகாது என்று வேறு காரணம் படைத்து மறுத்து உரையாநிற்றல். இதனால் திருவருள் உயிருக்குச் சிவத்தினிடம் உள்ள எல்லையில்லாத அன்பை அறிந்தவாறு.

'இன்புருச் சிவம் உனை விரும்புமுன் போதம் பொருந்தாது என்றல்' என்பது திருவாசக வியாக்கியானம்.

**எழில்வா யிளவஞ்சி யும்விரும் பும்மற் றிறைகுறையுண்**
**டழல்வா யவிரொளி யம்பலத் தாடுமஞ் சோதியந்தீங்**

குழல்வாய் மொழிமங்கை பங்கன்குற் றாலத்துக் கோலப்பிண்டிப்
பொழில்வாய் தடவரை வாயல்ல தில்லையிப் பூந்தழையே. 94

பொ - ரை: அழகு வாய்க்கப்பெற்ற இளமை பொருந்திய கொடி போல்வாளாகிய சிவத்தலைவியும் நின்பால் தழைகோடற்கு விரும்புவள்; ஆனால், சிறிது குறை உண்டு; அழலினிடத்துப் பொருந்திய விளங்குகின்ற ஒளி போல்வானது தில்லையம்பலத்து நடம்புரிகின்ற அழகிய சோதியும், அழகிய இனிய குழலோசை போலும் இனிய சொற்களையுடைய உமாதேவியாரை இடப்பாகத்துக் கொண்டவருமாகிய சிவபெருமானது குற்றாலத்தில் உள்ள அழகிய அசோகம் பொழிலிடத்தும் மலையிடத்தும் அல்லது இந்தப் பூந்தழை இல்லை; இதுவே குறை என்றாளாம்.

குற்றாலமும் சித்திரசபாபதியாக இறைவன் இருக்கும் இடமாதலின், தில்லையம்பலத்தாடும் சோதியின் குற்றாலம் என்றதாம். குழல்வாய்மொழி அம்மை என்பது குற்றாலத் திருக்கும் அம்மையின் திருநாமம்.

'யாவர்க்குமாம் இறைவற்கு ஒரு பச்சிலை' ஆயினும் குற்றாலத்துத் தழை கூடாது எனப் படைத்து மொழிந்தவாறு. (5)

## நாணுரைத்து மறுத்தல்

### 'அடியார் அறிவுக்கு உன்னறிவு பிறிதென்றது'

அடியார்கள் நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகம் என்று தன்முனைப்படங்கிய அறிவுடையவர்கள்; நீவிர் சிவம் துய்க்கப்படு பொருளாக நீவிர் துய்ப்போனாகவும் விரும்பும் குறிக்கோளும் பேத ஞானமும் உடையீர்; அதனால் சிவம் அவனே தானேயாகிய அந் நெறியில் நில்லாத பொக்கமிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்குநிற்பன் அவர்தமை நாணியே ஆதலான் நீ கொணர்ந்த கண்ணியும் கூடாதாம் என மறுத்ததாம்.

'உயிர்ப்போதம் நீங்கின ஓர் திருஞானம் ஞேயநிலையினும் இன்பம் பொருந்தாது என்று அருள் உரைத்தது' என்பது திருவாசக வியாக்கியானம்.

உறுங்கண்ணி வந்த கணையுர வோன்பொடி யாயொடுங்கத்
தெறுங்கண்ணி வந்தசிற் றம்பல வன்மலைச் சிற்றிலின்வாய்
நறுங்கண்ணி சூட்டினும் நாணுமென் வாணுதல் நாகத்தொண்பூங்
குறுங்கண்ணி வேய்ந்திள மந்திகள் நாணுமிக் குன்றிடத்தே. 95

பொ - ரை: எல்லாவகையினும் உயர்ந்த மிக்க தேனையுடைய வலியோனாகிய மதனன் சாம்பராய்க்கெட வருத்தும் கண் நெற்றி மீது உயர்ந்து விளங்கும் சிற்றம்பல நாதனது மலைக்கண் உள்ள சிற்றிலிடத்து, நல்ல மாலைகளை யான்

சூட்டினும் தலைவி நாணுவள்; பெண்களைப்பற்றிச் சொல்வானேன்? இந்த மலையினிடத்து நாக மரத்தினது ஒள்ளிய மலர்களால் தொடுக்கப்பெற்ற சிறுமாலையைச் சூடினும் இளமந்திகளும் நாணாநிற்கும் என்றவாறு.

இம் மலைக்கண் உள்ள மகளிர்க்கே அன்றி, மந்திகட்கும் நாண் மிகுதி என்றாளாம்.

திருவருள், மெய்யடியார் சாத்திய மாலையன்றிக் காமியப் பயனை விரும்புவார் சூட்டும் மாலைகளைக் கண்டு சிவம் நாணும் என்று உரைத்து உண்மையன்பு ஊட்டியவாறு காண்க. (6)

## இசையாமை கூறி மறுத்தல்

### 'அடியார் அறிவுபோல் உன்னறிவு ஆகாதென்றது'

மணந்தரும் செண்பகம் முல்லை மல்லிகை முதலிய பூக்களைத் தெய்வத்திற்குச் சூட்டி மகிழ்தலே மெய்யடியார் அறிவு; நீயோ தெய்வ மலராகிய கழுநீர் மலர் மாலையைத் தலைவிக்குச் சூட்ட விரும்புகின்றனை; ஆதலால் உன்னறிவு அடியார்கள் அறிவு போன்றதாகாது; யாங்களோ சிவபூசைக்குரிய மலர்களைச் சூடேம் என இசையாமை இயம்பியது.

'இன்ப அடியார்க்கு உன்னன்பு ஒவ்வாதெனல்' என்பது வியாக்கியானம். நாணுரைத்து மறுத்தலின் கருத்தாகிய அடியாரறிவுக்கு உன்னறிவு பிறிதென்றது என்பதற்கும், இக் கிளவியின் கொளுவாகிய அடியார் அறிவுபோல் உன்னறிவு ஆகாதென்றது என்பதற்கும் பெரிதும் வேறுபாடின்மையான் வியாக்கியானக்காரர் கொண்ட கருத்துச் சிறந்ததாதல் தெளிக.

நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகநண்ணி
மறமனை வேங்கை யெனநனி யஞ்சுமஞ் சார்சிலம்பா
குறமனை வேங்கைச் சுணங்கொ டணங்கலர் கூட்டுபவோ
நிறமனை வேங்கை யதளம் பலவன் நெடுவரையே. 96

பொ - ரை: தேனுக்கு உறைவிடமாகிய வேங்கைப்பூக்கள் பயின்ற பாறையை யானை சென்று அணைந்து, அதனை அஞ்சாமைக்கு இடமாகிய புலியென்று அஞ்சும் மேகங்கள் படிந்த மலையை யுடையாய்! நிறந்தங்கிய புலித்தோலை அணிந்த அம்பலவாணப் பெருமானது நெடிய இம் மலைக்கண் வாழும் குறவர் மனைமரமாகிய வேங்கையின் சுணங்குபோலும் மலரோடு தெய்வத்திற்குரிய செங்கழுநீர்ப் பூவையும் சூடுவார்களோ? சூடார் எ-று.

யானை வேங்கைமலர் பரந்த மலையைப் புலி என மருளும் நாடனே என்றதால், உனக்கும் மயக்கஞானம் இன்னும் ஒழிந்திலது; பவமதனையறமாற்றும் பாங்கினில் ஓங்கிய

*ஞானம் பெற்றாலல்லது சிவத்தைச் சார்ந்து இன்பவடிவாதல் இயையாது என்றதாம்.* *(7)*

## செவ்வியிலன் என்று மறுத்தல்

### 'சிவக்கனி பழுத்ததிலை உனக்கு என்றது'

*சிவம் இன்னும் உன்பால் உளங்குழைந்திலது; அங்ஙனமாக நீ எங்ஙனம் சிவத்தைச்சார்ந்து பேரின்பம் எய்துதல்கூடும்? என்றது.*

**கற்றில கண்டன்னம் மென்னடை கண்மலர் நோக்கருளப்**
**பெற்றில மென்பிணை பேச்சுப் பெறாகிள்ளை பிள்ளையின்றொன்**
**றுற்றிலள் உற்ற தறிந்திலள் ஆகத் தொளிமிளிரும்**
**புற்றில வாளர வண்புலி யூரன்ன பூங்கொடியே.** 97

*பொ - ரை: புடைபெயர்ந்து விளையாடாமையின் நடையைக் கண்டு அன்னங்கள் மென்னடையைக் கற்றுக்கொண்டன இல்லை; பார்வையைப் பெண்மான்கள் பெற்றன இல்லை; மொழிகளைக் கிளிகள் பெற்றன இல்லை; எம் பிள்ளை இன்று ஒரு விளையாட்டினும் ஈடுபட்டாளிலள்; திருமார்பில் கிடந்து விளங்குகின்ற புற்றின்கண் வாழும் பாம்பை அணிந்தவனது புலியூரை ஒத்த பூங்கொடியே! நீ என்னுழை வந்தவாறும் யான் உமக்குக் குறை நேர்ந்தவாறும் இன்னும் அறிந்திலள்; அதனால் செவ்வி அறிந்து சொல்லல் வேண்டும் என்றவாறு.*

*சிவம் எழுந்தருளிப் பாடும், அருள்நோக்கும், உபதேசமும் இன்னும் பெற்றிலதாகவே நம்மிடை உண்டான நிகழ்ச்சிகளைச் சிவத்திடம் தெரிவிக்கச் செவ்வி கிட்டவில்லை எனத் திருவருள் உணர்த்தியவாறாம். இடையிடையே சித்தம் தெளிந்தபோது சிவத்தைக் கூடுவேன் என்றிராமல் என்றும் இன்பம் பெருக இருக்கவேண்டியதன் இன்றியமையாமையை வற்புறுத்தலே இதன் பயனாம் என்க.* *(8)*

## காப்புடைத்தென்று மறுத்தல்

### 'மேலாம் இன்பத்துக்குக் காலம் இலை என்றது'

*சிவக்கனி பழுத்தது இல்லை என்பதனைப் பழுத்தால் துய்த்தற்கு இடையீடின்று எனக்கூறியதாக உட்கொண்டு உயிர் பேரின்பத்தைப்பெறத் திருவருளைத் துணைவேண்டி நிற்ப, இன்று ஏற்றகாலம் இல்லையென மறுத்தது.*

**முனிதரும் அன்னையும் என்னையர் சாலவும் மூர்க்கரின்னே**
**தனிதரும் இந்நிலத் தன்றைய குன்றமுந் தாழ்சடைமேல்**
**பனிதரு திங்க ளணியம் பலவர் பகைசெகுக்கும்**
**குனிதரு திண்சிலைக் கோடுசென் றான்சுடர்க் கொற்றவனே.** 98

பொ - ரை: சுடர்களுக்குத் தலைவனாகிய சூரியன், தாழ்ந்த சடையின்மேல் குளிர்ந்த பிறையை அணிந்த பெருமானுடைய பகையைக் கொல்லும் வளைந்த திண்ணிய சிலையாகிய மேருவினது சிகரத்தை அடைந்தான்; அன்னையும் எம்மைச் சினப்பள்; என்னையன்மார் மிகமூர்க்கர்; இவ்விடமும் இனி வழங்குவாரின்மையின் தனிமையைத் தரும்; நின் மலையும் இந் நிலத்தது அன்று; ஆதலால் நீ நிற்றலாகாது என்றவாறு.

சூரியன் அத்தமித்தான் என்றது உயிர் சிவபோகம் எய்துதற்குரிய சிவஞான விளக்கத்தை இழந்தது என்றதாகவும், அன்னை முனிதரும் என்றது சிவத்தை உருமேனி தாங்கி உதவச் செய்யும் அறக்கருணையாகவும், ஐயரை மலவாதனை போக்கும் மறக்கருணையாகவும், நிலம் தனிதரும் என்றது சிவஞானபூமி அருளனுபவ உதவியில்லாமல் வெறுவிதாம் என்றதாகவும் கொள்க. (9)

## நீயே கூறென்று மறுத்தல்

### 'உன் அறிவால் இன்புறுவை என்றது'

சிவகருணையின் இயல்புகளைத் திருவருள் உணர்த்துவதால் திருவருள் என்மாட்டு மிகவும் இரக்கமுடையது என எண்ணி, பிற்றைஞான்றும் உயிர் செல்ல, திருவருள், யான் சிவத்தின் குறிப்பின்வழி நிற்பேனாதலின் துணிந்து சிவத்தினிடம் சொல்லும் ஆற்றலில்லாதேன்; நீயே நின் அறிவைத் துணைக்கொண்டு இன்படைவாயாக என்றது.

அந்தியின் வாயெழி லம்பலத் தெம்பரன் அம்பொன்வெற்பில்
பந்தியின் வாய்ப்பல வின்சுளை பைந்தே னொடுங்கடுவன்
மந்தியின் வாய்க்கொடுத் தோம்புஞ் சிலம்ப மணங்கனிய
முந்தியின் வாய்மொழி நீயே மொழிசென்றம் மொய்குழற்கே. 99

பொ - ரை: அந்திக்காலத்து வானம்போலும் அழகிய செம்மேனியையுடைய அப்பாலைக்கு அப்பாலனாகிய அம்பல வாணப் பெருமானது அழகிய பொன்னையுடைய மலையிடத்து, பந்தியாகிய நிரையின்கண் செவ்விமுதிர்ந்த தேனோடும் பலாவின் சுளைகளை ஆண்குரங்கு பெண்குரங்கின் வாயிலே கொடுத்துப் பாதுகாக்கும் மலையையுடைய தலைவ! மனம் நெகிழ இனிய மொழிகளை, நெருங்கிய குழலையுடையாளாகிய சிவத்தலைவிக்கு நீயேசென்று சொல் என்றவாறு.

அந்தியின் வாய் எழில் அம்பலவன் எம் கண் காண அம்பலத்தில் செம்மேனி எம்மானாக வீற்றிருப்பவன் எனச் சிவத்தின் உருமேனி தாங்கிய கருணையையும், பரன் என அப்பாலைக்கப்பாலாய் அருவாய் நிற்கும் அறிவுநிலையையும் உணர்த்தியவாறு ஓர்க.

*கடுவன் மந்தியை ஒப்பும் சிலம்ப என்றதால் கடுவன் இனியன செய்து இனியன சொல்லி, மந்திக்குத் தொண்டுசெய்வதுபோல நீயும் சிவத்திற்கு இனிய தோத்திரமொழிகளாலும் தொண்டுகளாலும் மனம் நெகிழச்செய்க என உபாயம் உணர்த்தியவாறு. (10)*

## குலமுறை கூறி மறுத்தல்

### 'உன்றனக்கு இன்பம் ஒக்குமோ என்றது'

*பேரின்பம் எத்துணைப் பரிபாகமுடையாரால் எய்துதற்கு உரியது; அது தன்னானோ என்னானோ எய்தலாம் என்ற முனைப்புடைய உன்னால் எய்தத்தகாதது என்று மறுத்துரைத்தது.*

**தெங்கம் பழங்கமு கின்குலை சாடிக் கதலிசெற்றுக்**
**கொங்கம் பழனத் தொளிர்குளிர் நாட்டினை நீயுமைகூர்**
**பங்கம் பலவன் பரங்குன்றிற் குன்றன்ன மாபதைப்பச்**
**சிங்கந் திரிதரு சீறூர்ச் சிறுமியெந் தேமொழியே.** 100

*பொ - ரை: நீ மூக்கூழ்த்து விழுகின்ற தென்னம்பழம் கமுகின் குலை உதிர மோதி வாழைகளை முறித்து, மகரந்தங்களையுடைய வயலிலே கிடந்து விளங்கும் குளிர்ந்த நாட்டினையுடையாய்; எம் தேன்மொழியோ, உமையொரு கூறனாகிய சிவபெருமானது திருப்பரங்குன்றிலே மலையை ஒத்த யானையானது பதைபதைக்கச் சிங்கம் சுற்றும் சிற்றூரிலே வாழும் சிறுமி; ஆதலால், எம்மோடு நீ மணச்சொல்லாடுதல் தகாது என்றவாறு.*

*இந்திரியங்கட்கு இன்பூட்டுவனவாகிய மரங்களும் தேனும் நிறைந்த மாயேயமான நிலத்தில் வாழ்வது உயிர்; இந்திரியங்களாகிய யானைகள் அஞ்சிப் பதைக்க, தவராச சிங்கம் உலவும் மாயாதீதமான சித்துவடிவான இடத்திலுள்ளது சிவம். இவை எங்ஙனம் இயைந்து இன்பம் நுகர இயலும் எனக் குலங்கூறி மறுத்ததாம். (11)*

## நகையாடி மறுத்தல்

### 'உன் அறிவு இன்பமுறல் அரிதென்றது'

*திருவருள், குலந்தானே இடையீடாம் என்று அறிவித்தமையால் பரிபாகக் குறை இல்லையே என உயிர் உளங்கொண்டு மனம் மகிழ்ந்துநிற்பத் திருவருள் பச்சிலையேலாமல், யாமும் உயிர்கொள்ளும் குலத்தேம் எம்மையர் கையின்கண்ணதாகிய அம்பு கண்டறிவேம்; இவர் கையின்கண்ணதாகிய இந்த அம்மைப்போலக் கொலையால் திண்ணியதைக் காணோம் என்று நகையாடி மறுத்தது.*

**சிலையொன்று வாணுதல் பங்கன்சிற் றம்பல வன்கயிலை**
**மலையொன்று மாமுகத் தெம்மையர் எய்கணை மண்குளிக்கும்**

கலையொன்று வெங்கணை யோடு கடுகிட்ட தென்னிற்கெட்டேன்
கொலையொன்று திண்ணிய வாறையர் கையிற் கொடுஞ்சிலையே. 101

*பொ-ரை: வில்லை ஒத்த ஒளி பொருந்திய நெற்றியையுடைய உமா தேவியாரை ஒருபாகத்துடைய சிற்றம்பல நாதனது கயிலைக்கண் மலையை ஒத்த யானையின்முகத்து எம் தந்தையர் எய்த கணை இலக்கை ஊடுருவிச் சென்று, மண்ணில்சென்று தைத்து மறையக் காண்பேம்; அவ்வாறின்றி, ஒரு கலைமான் இவர் எய்த அம்போடு விரைந்து ஓடிற்றாயின் கெட்டேன்! இவ்வையர் கையிலுள்ள வளைந்த வில் கொலைத்தொழிலில் சிறந்தவாறு என்னே! என்றவாறு.*

*எம் ஐயர் வல்விலாளராதலின் அவர் வில் எய்த அம்பு இலக்கை ஊடுருவிச்சென்று வேறு இலக்கின்மையால் மண் குளித்தது. இவர் எய்த அம்பை ஏவிய வில் வளைந்திருப்பினும் செலுத்தும் ஆற்றலின்மையான் இலக்கில் சிறிது தைக்க, இலக்கு உயிரோடு ஓடிற்று. அதனால் இவர் பெரிய வில்லாளிதான் என்று நகையாடியவாறு காண்க. இதனாற் போந்தது சிவத்தலைவி பரிபாகமுற்றாரான் எய்தத்தக்காளாக மெய்யடியார் கூட்டத்து விளங்குபவள்; உயிர் இலக்கைத் தவறவிடும் குறிக்கோள் இலாதது; குறிக்கோளிலாது கெட்ட ஒன்றால் சிவம் எய்துதற்கு அரியது என்பது உணர்த்தியவாறு. (12)*

## இரக்கத்தொடு மறுத்தல்

### 'என்னறிவிலை என்று எய்த்தற்கு இரங்கியது'

*நகையாடவே, திருவருள் யான் சாத்தும் பச்சிலையை ஏற்கும் குறிப்பினது என உட்கொண்டு உயிர் நிற்ப, யாம் மறுக்கவும் உணராது நிற்பதால் பித்து ஏறியதோ? பாவம் என்று உயிர்க்கு இரங்கித் திருவருள் உரையாநிற்றல்.*

மைத்தழை யாநின்ற மாமிடற் றம்பல வன்கழற்கே
மெய்த்தழை யாநின்ற அன்பினர் போல விதிர்விதிர்த்துக்
கைத்தழை யேந்திக் கடமா வினாய்க்கையில் வில்லின்றியே
பித்தழை யாநிற்ப ராலென்ன பாவம் பெரியவரே. 102

*பொ - ரை: கருமை மிகுந்த நீலகண்டத்தையுடைய அம்பலவாணப் பெருமானது கழற்கண்ணே பெருகுகின்ற அன்புடையார்போல நடுங்கி, கைக்கண் தழையை ஏந்தி, கடமாவை வினாவி, கையில் வில்லின்றி இப் பெரியவர் பித்தால் அழையா நின்றார்; இஃதென்ன தீவினையோ எ-று.*

*ஒன்றற்கொன்று ஒவ்வாத சொல்லும் செயலும் உடைமையான் 'பித்தழையா நிற்பர்' என்றார். சிவத்தினிடம் இடையறாப் பேரன்பு*

பூண்டார். பித்தரொடு பாலர் பேயர் தன்மையராகலின் இங்ஙனம் கூறப்பட்டது. தற்போதம் கெட்டவர் என்பதாம். (13)

## சிறப்பின்மை கூறி மறுத்தல்

### 'சிவத்திடைச் சேருந்திறம் உயிர்க்கு இலை எனல்'

திருவருளின்பால் இரக்கம்கண்ட உயிர், சிவத்தைக் கூடுதல் முடியாததொரு காரியம் அன்று என்று உட்கொண்டு நிற்பத் திருவருள் சிவத்தின் ஆணைக்கு அஞ்சி இங்கு எந் நிகழ்ச்சியும் நடப்பதில்லை ஆதலால், ஈண்டு இல்லாதவற்றை யாம் சூடுவது கூடாது என மறுத்துக் கூறாநிற்றல். 'இன்பத்திடை உன் அன்பும் அறிவும் விரிவிலை என்றது' என்பது வியாக்கியானம்.

**அக்கும் அரவும் அணிமணிக் கூத்தன்சிற் றம்பலமே**
**ஒக்கும் மிவள தொளிருரு அஞ்சிமஞ் சார்சிலம்பா**
**கொக்கும் சுனையும் குளிர்தளி ருங்கொழும் போதுகளும்**
**இக்குன்றில் என்றும் மலர்ந்தறி யாத இயல்பினவே. 103**

பொ - ரை: வெண்மேகங்கள் படிந்துள்ள மலையை உடையவனே! அக்குமணிகளையும் பாம்பையும் அணிகின்ற மாணிக்கக்கூத்தனது சிற்றம்பலத்தை ஒக்கும் இவளது விளங்காநின்ற வடிவை அஞ்சி மாமரங்களும் சுனைகளும் குளிர்ந்த தளிர்களையும் கொழுமையான பூக்களையும் இம் மலையில் என்றும் மலர்ந்தறியாத இயல்பினை உடையன; அதனால் இங்கே இல்லாத இவற்றை யாம் அணிதல் தகாது என்றவாறு.

கொக்கு குளிர்தளிரும், சுனை கொழும்போதுகளும் மலர்ந்தறியா என நிரலே கூட்டுக. சிவத்தின் வடிவிற்கு அஞ்சி மேனிபோன்ற செந்தளிர் தோன்றா என்றும், கண்ணும் முகமும் கையும் ஆகிய இவற்றிற்கு அஞ்சிப் போதுகள் தோன்றா என்றும் கூறியதன் பயன், இவற்றை அணிவதால் ஈண்டுச் சிறப்பு இல்லை என்றது. சிவத்தின் ஆணைவழி நிகழும் இவற்றைச் சிவத்திற்கே சாத்துதலால் சிறப்பில்லை என்றவாறாம். (14)

## இளமை கூறி மறுத்தல்

### 'இன்பம் முதிர்ந்தது இலை உனக்கு என்றது'

உயிர் சிறப்பின்மை கூறியதால் சிறப்புடைய தழையைக் கொண்டுசெல்ல, என்றும் மாறாத இளமையையுடைய சிவத்தினிடத்து, நீ சிந்திக்கும் இன்பம் சிறிதும் இயையாது என்று மறுத்துரையா நிற்றல்.

**உருகு தலைச்சென்ற வுள்ளத்தும் அம்பலத் தும்மொளியே**
**பெருகு தலைச்சென்று நின்றோன் பெருந்துறைப் பிள்ளைகள்ளார்**

முருகு தலைச்சென்ற கூழை முடியா முலைபொடியா
ஒருகு தலைச்சின் மழலைக்கென் னோவைய ஓதுவதே. 104

பொ - ரை: அன்பருடைய கசிந்த உள்ளத்தின்கண்ணும் சிற்றம்பலத்தும் ஒப்ப ஒளி பெருகுதலை அடைந்து நின்றவனது திருப்பெருந்துறைக்கண் உள்ளாளாகிய எம் சிவத்தலைவியின் தேன் நிறைந்த நறுமணம் பொருந்திய கூந்தல்கள் முடிக்கப்படா; முலைகள் தோன்றா; குதலையும் மதலையும் பேசும் இவளுக்கு ஐயனே! நீ சொல்லுவது யாதாம் எ-று.

கூந்தல் முடிக்கும் அளவு வளர்தலும், முலை தோன்றலும் தலைவியின் இன்பமுதிர்ச்சிக்கு ஏதுவாதலால் நீ நினைக்கும் இன்பம் இவள்மாட்டு இயையாது என மறுத்தவாறு. குதலை - சொல்லும் பொருளும் விளங்காத சொல். மழலை - பொருள் நிரம்பிச் சொல் நிரம்பாத இளஞ்சொல். இதனாற் கருணை மிகாமை உணர்த்தியவாறு. (15)

## மறைத்தமை கூறி நகைத்துரைத்தல்

### 'அருளன்றிச் சிவம் அமையாது என்றது'

இதுகாறும் இயைபுடைய காரணங்களைக் கூறி மறுத்து வந்த திருவருள் இப்போது இளையள் என்று இயையாமை கூறி மறுக்கவேண்டிய காரணம் என்னை? உயிர் திருவருளை இன்றிச் சிவத்தைக்கூடுவேன் என, அக் குறிப்பு உணர்ந்த திருவருள் என்னை இன்றிச் சிவத்தை அடைய இயலாது என்று நகையாடா நிற்றல். 'என்னை அன்றி உனக்கு இன்பம் அமையாது என்று அருளுரைத்தல்' என்பது வியாக்கியானம்.

பண்டா லியலும் இலைவளர் பாலகன் பார்கிழித்துத்
தொண்டா லியலுஞ் சுடர்க்கழ லோன்றொல்லைத் தில்லையின்வாய்
வண்டா லியலும் வளர்பூந் துறைவ மறைக்கினென்னைக்
கண்டா லியலுங் கடனில்லை கொல்லோ கருதியதே. 105

பொ - ரை: முன்னொரு காலத்து ஆலிலையிலே பள்ளி கொள்ளும் பாலனாகிய திருமால் நிலத்தைத் தோண்டிச்சென்று காணாமையால் பின் தொண்டுபட்டுக் கண்டு மகிழ்ந்த ஒளி விடுகின்ற வீரக்கழலை அணிந்த அம்பலவாணப் பெருமானது பழையதாகிய தில்லையின் எல்லைக்கண் வாழ்கின்ற வண்டுகள் ஒலித்துத் திரிகின்ற மிக்க பூக்களையுடைய துறையை உடையவனே! ஆராய்ந்தால் என்னை மறைப்பின் நீ கருதியது முறை இல்லை போலும் என்றவாறு.

தாயை மறைத்த சூல் இல்லையாதல்போலத் திருவருளை மறைத்துச் சிவத்தைச் சாருமாறு இல்லை என்று விளக்கியவாறாம். அவன் அருளே கண்ணாகக் காணினல்லால் இப்படியன் இந்

நிறத்தன் இவ் வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக்காட்டொணாமை காண்க. (16)

## நகை கண்டு மகிழ்தல்

### 'அருள் நோக்கமின்றி இன்பு ஆமோ என்றது'

திருவருள் தன்னை மறைப்பின் முடியாது என்றதால் மறையாது ஒழிந்தால் முடியும் என்றும் கூறியதாக உட்கொண்டு உயிர் திருவருளை நோக்கி, உனது நோக்கன்றோ எனக்குச் சிறந்த துணை; அஃதன்றி வேறு துணை எது? என அதன் நகைகண்டு மகிழா நிற்றல்.

மத்தகஞ் சேர்தனி நோக்கினன் வாக்கிறந் தூறமுதே
ஒத்தகஞ் சேர்ந்தென்னை யுய்யநின் றோண்றில்லை யொத்திலங்கு
முத்தகஞ் சேர்மென் னகைப்பெருந் தோளி முகமதியின்
வித்தகஞ் சேர்மெல்லெ னோக்கமன் றோவென் விழுத்துணையே. 106

பொ - ரை: நெற்றியைச் சேர்ந்த ஒப்பற்ற கண்ணை உடையானும், சொல்லின் எல்லையைக் கடந்து ஊறுகின்ற அமுதத்தை ஒத்து மனத்தைச் சேர்ந்து உய்ய நின்றவனும் ஆகிய அம்பலவாணப் பெருமான் எழுந்தருளியிருக்கின்ற தில்லையை ஒத்து விளங்குகின்ற புன்முறுவலையுடைய பெரிய தோள்களை யுடையாளது முகமாகிற மதியின்கண் உண்டாகிற சதுரப் பாட்டோடு கூடிய மெல்லிய நோக்கமன்றோ எனக்குச் சிறந்த துணை; அதனால் என் நினைவு முடியத்தகும் என்றவாறு.

சொல்லினளவைக்கு அகப்படாது மனமலரில் ஊறுகின்ற அமுதம் போல் இனித்து, பாசங்கள் அணுகாதவாறு தடுத்து, அனைவரையும் ஆட்கொள்ள அம்பலத்து ஆடுகின்றமையின் 'உய்ய நின்றோன்' என்றார்.

நோக்கமன்றோ என் விழுத்துணை என்றது திருவருள் நோக்கத்தை அன்றிச் சிவத்தைச் சார்தலாகாது என்ற உண்மையை உணர்வேன் என்று உயிர் அறிவித்ததாம். (17)

## அறியாள்போன்று நினைவு கேட்டல்

### 'இன்பம் பல அதில் எங்ஙனம் சிவம் எனல்'

இன்பங்கள் எம்மிடை பல உள; அவற்றுள் நீ விரும்பும் இன்ப வடிவாகிய சிவம் எத் தன்மையது? என்று வினவாநிற்றல். பொறிகளானும் அவற்றைப் பற்றிநிற்கும் அறிவானும் நுகரத்தக்க இன்பங்கள் பல ஆதலானும் அவற்றுள் பொறி புலன்களைக் கடந்துநின்ற புண்ணியப் பேரின்பவடிவினது சிவமாகலானும் இவற்றுள் எதனை நீ எய்த விரும்பியது என உயிரின் பரிபாகத்தைத் திருவருள் உசாவி அறியலுற்றவாறு.

விண்ணிறந் தார்நிலம் விண்டவர் என்றுமிக் காரிருவர்
கண்ணிறந் தார்தில்லை யம்பலத் தார்கழுக் குன்றினின்று
தண்ணறுந் தாதிவர் சந்தனச் சோலைப்பந் தாடுகின்றார்
எண்ணிறந் தாரவர் யார்கண்ண தோமன்ன நின்னருளே. 107

*பொ - ரை: விண்ணைக் கடந்தவர் மண்ணைத் தோண்டியவர் என்று சொல்லப்படும் இரண்டு பெரியோர்களின் கண்களைக் கடந்துள்ள தில்லை அம்பலத்தாரது திருக்கழுக்குன்றிலே நின்று குளிர்ந்த நல்ல மகரந்தங்கள் பரவியிருக்கின்ற சந்தனச் சோலையிலே பந்தாடுகின்ற மகளிர் மிகப் பலர்; மன்னனே! நின் அருள் அவருள் யார் மேலதோ கூறுவாயாக என்றவாறு.*

*மகளிரைப் பொறிகளுக்கு இன்பமூட்டும் புலன்களாகவும், சிவத்தைப் பொறி புலன்களைக் கடந்து அறிவாற்றல்களைக் கடந்து நிற்கும் உண்மை இன்ப அன்பின் வடிவினதாகவும் கொள்க. (18)*

## அவயவம் கூறல்

### 'இன்பக்கனம் அரன்திருமேனி என்றது'

*என்னால் விரும்பப்படும் சிவம் ஆனந்தமயமானது என்று உயிர் திருவருளின்முன் தெரிவித்தல்.*

குவவின கொங்கை குரும்பை குழல்கொன்றை கொவ்வைசெவ்வாய்
கவவின வாணகை வெண்முத்தம் கண்மலர் செங்கழுநீர்
தவவினை தீர்ப்பவன் தாழ்பொழிற் சிற்றம் பலமனையாட்
குவவின நாண்மதி போன்றொளிர் கின்ற தொளிர்முகமே. 108

*பொ - ரை: நோன்புகளை மேற்கொண்டு வருந்தாதபடி தவத் தொழிலை நீக்கி அன்பரை ஆண்டருளிய இறைவனது தழைந்த பொழில் சூழ்ந்த சிற்றம்பலத்தை ஒத்த தலைவிக்குக் குவிந்த கொங்கைகள் குரும்பையை ஒத்தன; குழல் கொன்றைப்பழத்தை ஒத்தன; சிவந்த வாய் கொவ்வைக்கனியை ஒப்பது; அதன் அகத்தடங்கிய ஒளி பொருந்திய பற்கள் வெண்முத்தை ஒத்தன; கண்கள் மலர்ந்த செங்கழுநீரை ஒத்தன; ஒளி பொருந்திய முகம் உவாநாளினதாகிய நிறைமதியை ஒப்பது எ-று.*

*இங்ஙனம் சிவத்திருமேனி நிறத்தாலும் தன்மையாலும் இன்பமயமாயிருத்தலாகிய தன் அனுபவத்தை உயிர் திருவருளுக்குத் தெரிவித்தது. (19)*

## கண்ணயந்துரைத்தல்

### 'திருநோக்கு இன்பச் சேதனம் என்றது'

*இத்துணையும் கூறி அமையாத உயிர், என்னால் காணப்பட்ட சிவத்தின் கண்கள் நோய்க்கு மருந்தாயும் திருவருளாகிய துணையை*

உணர்த்தும் கருவியாயும் உதவிசெய்ததை உட்கொண்டு, பின்னும் அதனை நயந்து கூறாநிற்றல்.

ஈசற்கி யான்வைத்த அன்பின் அகன்றவன் வாங்கியவென்
பாசத்திற் காரென் றவன்றில்லை யின்னொளி போன்றவன்றோள்
பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த் தையிற்பெரு நீளம் பெருங்கண்களே. 109

பொ - ரை: இறைவனிடத்து யான் வைத்த அன்புபோல் அகன்று, அவனால் என்னிடமிருந்து வாங்கப்பெற்ற பாசம்போல் கறுத்து, அவனது தில்லையின் ஒளியை ஒத்து, அவனுடைய திருத்தோள்களில் சாத்தப்பெற்ற திருநீறுபோல் வெளுத்து, அவனுடைய திருவடித் தாமரைகளைப் பற்றி யாம் பேசும் அத் திருவார்த்தைகளைப்போல மிக நீளமாயிருக்கும் தலைவியின் கண்கள் என்றவாறு.

திருநோக்கு எல்லாம் சிவமயமாய் இன்பத்தை உணர்த்தும் அறிவு வடிவாய் விளங்குகின்றது என நயந்துரைத்தவாறு காண்க. சேதனம் - அறிவிப்பது. இன்பச்சேதனம் - இன்பத்தை அறிவிப்பது. *(20)*

## தழையெதிர்தல்

### 'அடிமைத்திறத்தால் சிவத்து ஆக்குவன் என்றது'

திருவருள் உயிரைநோக்கி 'உன் உளப் பண்பாட்டை உள்ளவாறுணர்த்த உணர்ந்தேம்; சரியையாதி தொண்டுகளில் உறைத்து நிற்பதையும் உணர்ந்தேம்; நீ சாத்த ஏந்திநிற்கும் தழையை ஏற்றல் எங்குடிக்கு ஏலாதாயினும் நீ செய்யும் தொண்டின் சிறப்பான் ஏற்பேம்; சிவத்தைச் சாரச் செய்வேம் என்று தழை எதிராநிற்றல். இந்திரியத்தை வென்று இன்புக்கு அருமை செய்து வருந்தல்; உன் அறிவை அடிமைத்திறப் பணியால் சிவத்து ஆக்குவேன் என்றது என்பது வியாக்கியானம்.

தோலாக் கரிவென்ற தற்கும் துவள்விற்கும் இல்லின்றொன்மைக்
கேலாப் பரிசுள வேயன்றி யேலேம் இருஞ்சிலம்ப
மாலார்க் கரிய மலர்க்கழ லம்பல வன்மணையில்
கோலாப் பிரசமன் னாட்கைய நீதந்த கொய்தழையே. 110

பொ - ரை: பெரிய மலைகளையுடையவனே! எமக்குத் தீங்கு செய்ய வந்த தோற்காத யானையை வென்றதற்கும், யான் பல ஏதுக்காட்டி பலமுறை மறுக்கவும் விடாது துவண்டு நிற்பதற்கும், எமது குடியின் பழைமைக்கு ஏலாத இயல்பின என்று எம்மாற் செய்யப்படாதன உளவே; ஐயனே! திருமாலுக்கும் அரிய மலர்போலும் கழல்களையுடைய அம்பலவனது மலையின்கண்

வைக்கப்படாத தேனையொத்த தலைவிக்கு நீ தந்த கொய்யப்பட்ட தழையையன்றிப் பிறவற்றை ஏலேம் என்றவாறு.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, அழுகை தொழுகை துவள்கை இவற்றுடன் அன்புமயமாய் இருக்கு நிலைகண்டு நீ தரும் தழையை ஏற்பேன் என்றாளாம்.

இதனால், உயிர்செய்யும் இடையீடற்ற அன்பேவாயிலாகச் சிவத்தைச் சாரச்செய்வேன் என்று திருவருள் உணர்த்தினமை காண்க. (21)

## குறிப்பறிதல்

### 'பரிவு உயிர்க்கு அருள் எனப் பகரருள் கூறல்'

உயிரின் உள்ளத்தைச் சிவத்திற்குத் தெளிவாகக் கூறின் தம் தலைமைக்கு இழுக்காம் எனவும், உயிர்களை ஆட்கொள்ளும் திறம் திருவருளுக்குப் புலனாயிற்றே என நாணியும் சிவத்திடைச் சென்று இந்நாள்காறும் பூவும் தழையும் ஏலாது பொய் சொல்லி மறுத்து வந்தேன்; உயிரின் நோக்கம் சிவத்தோடு கலத்தலே என்பதை இன்று அறிந்தேன்; உயிர்க்கு உரைப்பது என்னோ என்று தழையைக் கையில் வைத்துக்கொண்டு சிவத்தின் திருவுளக்குறிப்பை அறிந்தது.

பகர் அருள் உயிர்க்குப் பரிவு அருள் எனக்கூறல் எனக்கூட்டிப் பொருள் காண்க.

**கழைகாண் டலுஞ்சுளி யுங்களி யானையன் னான்கரத்தில்**
**தழைகாண் டலும்பொய் தழைப்பமுன் காண்பனின் றம்பலத்தான்**
**உழைகாண் டலுநினைப் பாகுமென் னோக்கிமன் னோக்கங்கண்டால்**
**இழைகாண் பணைமுலை யாயறி யேன்சொல்லும் ஈடவற்கே. 111**

பொ - ரை: குத்துக்கோலைக் கண்டதும் கோபிக்கின்ற மதயானையை ஒத்த தலைவனுடைய கையில் தழையைக் கண்டதும் அப்பொழுது தகச் சொல்லும் பொய்யை மிக அறிவேன்; அம்பலவாணப் பெருமானுடைய திருக்கரத்திலுள்ள மானைக் கண்டவுடன் நினைவுகூரத்தகும் மெல்லிய நோக்கத்தையுடையாய்! அவ்வுயிரின் துன்பநோக்கைக் கண்டால் அணிகள் விரும்பிக் காணும் பெரிய முலையை உடையாய்! இன்று அவனுக்குப் பொய் சொல்லும் நெறி அறியேன்; இனி யாது செய்வாம்? என்றவாறு.

சிவத்தையின்றித் தான் அமையாத உயிர்த்தன்மையைக் கண்டபிறகு சிவத்தொடு சேர்ப்பிப்பதன்றித் திருவருளாகிய நான் வேறு என்ன செய்ய இயலும் என்று வினவுவாள்போல் சிவத்தின் திருவுள்ளக்குறிப்பு அறிந்தாளாம். குத்துக்கோல் அளவில் அடங்காது மதம்பட்ட யானையை ஒத்தவன் எனத் தலைவனைச் சிறப்பித்தமையால் உயிர் சிவக்காதல் விஞ்சி

அகலிடத்தார் ஆசாரத்தைக்கடந்து தன்னை மறந்த நிலையில் இருக்கிறது என்பதாம். (22)

## குறிப்பறிந்து கூறல்

### 'வேறு அறியா உயிர்க்கு அருளவேண்டும் என்றது'

சிவத்தை அன்றி வேறான மாயாகாரணங்களை உணராது தெளிந்த உயிர் மீளவும் பாசத்திடைப்பட்டுத் துவளாவண்ணம் ஏற்று அருளவேண்டுவது சிவத்திற்கு இன்றியமையாத கடமையன்றோ என்று திருவருள் கூறாநிற்றல். உன்னையன்றி அடிமை வேறு அறியா உயிர்க்கு அருள வேண்டும் என்று அருள் அறிவித்தல் என்பது வியாக்கியானம்.

**தவளத்த நீறணி யுந்தடந் தோளண்ணல் தன்னொருபால்**
**அவளத்த னாமக னாந்தில்லை யானன் றுரித்ததன்ன**
**கவளத்த யானை கடிந்தார் கரத்தகண் ணார்தழையும்**
**துவளத் தகுவன வோசுரும் பார்குழல் தூமொழியே. 112**

பொ - ரை: வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய தூமொழியாய்! வெண்மையான திருநீற்றை அணியும் தோள்களை யுடைய அண்ணலும் தனது ஒரு பக்கத்திலே எழுந்தருளியிருக்கும் உமாதேவிக்குத் தகப்பனும் மகனுமாகிய தில்லைப்பெருமான் அன்று உரித்துப் போர்த்ததை ஒத்த கவள உணவை உடைய யானையை நம்மீது வராதபடி தடுத்த தலைவருடைய கையின் கண்ணதாகிய கண்நிறைந்த தழையும் வாடத்தகுமோ? தகாது என்றவாறு.

நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகம் என்று தன்னையே நம்மடியில் அர்ப்பணம் செய்த உயிர்க்குத் துன்பம் காட்டலாமோ? ஏற்று இன்புதவ வேண்டாவோ? என்று திருவருள் வேண்டியவாறு.

தன்னொருபால் அவள் - சிவபெருமானாகிய தனது ஒரு பக்கத்திலுள்ள உமாதேவி; அனைத்தும் கூடி ஒரு பெயராய் உமாதேவி என்னும் பொருள் உணர்த்திற்று. உமாதேவிக்கு அத்தனாம் மகனாம் தில்லையான் என்றது சிவ தத்துவத்திலிருந்து சத்தி தத்துவம் தோன்றுதலால் தந்தையாம் என்றும், அதனின்று சதாசிவ தத்துவம் தோன்றுதலின் மகனாம் என்றும் கூறியவாறு. 'எம்பெருமான் இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன் தமையன்' என்னும் மணிவாசகம்கொண்டு தெளிக. சிவஞான சித்தியாரிலும் 'சிவஞ்சத்தி தன்னை ஈன்றும் சத்திதான் சிவத்தை ஈன்றும், உவந்திருவரும் புணர்ந்திங்கு உலகுயிர் எல்லாம் ஈன்றும், பவன் பிரமசாரியாகும் பால் மொழி கன்னியாகும்' என்பதும் இக் கருத்தை நன்கு விளக்கும்.

'கவளத்த யானை கடிந்தார்' என்பது உரன் என்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காத்த உயர்ந்தோன் என்பதை உணர்த்திற்று. (23)

## வகுத்துரைத்தல்

### 'சிவம் உயிர்ப்பரிவு அருள் தனக்குச் செப்பியது'

இங்ஙனம் நன்றி மறத்தலாகாது என்று திருவருள் உணர்த்தவும், சிவம் தழையேற்காது நிற்ப, அக் குறிப்பு அறிந்து, நாம் தழை ஏற்பினும் ஏற்காவிடினும் நமக்குப் பழியேவரும்; அதுகிடக்க, உதவினார்க்கு உதவாமை யாங்ஙனம்? எனத்தழை ஏற்குமாறு வகுத்துக் கூறாநிற்றல்.

சிவம் தனக்கு உயிர் பரிவு அருள் செப்பியது எனக் கொண்டு கூட்டி உயிருக்கு அன்பு காரணமாகப் பிறந்த துன்பத்தை நீக்கி அருளுக எனத் திருவருள் சிவத்திற்குச் செப்பியதாகப் பொருள் கொள்க. வியாக்கியானம் உயிர் பரிவெடுத்து அருள் இன்புக்கு இயம்பியது என்று விளக்கம் தரும்.

**ஏறும் பழிதழை யேற்பின்மற் றேலா விடின்மடன்மா**
**ஏறும் அவனிட பங்கொடி யேற்றிவந் தம்பலத்துள்**
**ஏறும் அரன்மன்னும் ஈங்கோய் மலைநம் இரும்புனங்காய்த்**
**தேறும் மலைதொலைத் தாற்கென்னை யாஞ்செய்வ தேந்திழையே. 113**

பொ - ரை: ஏந்திழாய்! நாம் தலைவன் தந்த தழையை ஏற்பின் 'தாமே நட்புச்செய்தார்' என்று நமக்குப் பழி ஏறும்; ஏலாவிடின், அவன் மடலேறுவன்; அதனாலும் பழியேறும்; இடபக்கொடியைத் தாங்கிவந்து நமது பிறவித்துன்பத்தைப் போக்க அம்பலத்தின் கண் எழுந்தருளியிருக்கின்ற பெருமான் தங்கும் திருஈங்கோய் மலையின்கண் உள்ள நமது பெரிய தினைப்புனத்தை அழித்து நம்மை நோக்கிவந்த மலைபோலும் யானையைத் தொலைத்த தலைவர்க்கு நாம் செய்யும் உதவிதான் என்ன? அறிகின்றிலேன் என்றவாறு.

நீர்ப்பெருக்கைப்போல இடையறாது தொடர்ந்துவரும் பிறவியைத் தொலைப்பதற்கென்றே கொடி ஏந்தி அம்பலத்தில் ஏறியிருக்கின்ற அரன் என்பது, இறைவன் ஆன்மாக்களிடத்துச் செய்யும் கைம்மாறில்லாத கருணையைக் காட்டுவது. (24)

## தழையேற்பித்தல்

### 'அருளே உயிர்ப்பணி சிவத்திற்கு ஆக்கல்'

இரண்டு வகையானும் பழிவரும் என்பதனை எண்ணி அன்பர் சாத்தும் தழையை ஏற்பதே நல்லதென்று சிவத்தின் குறிப்பறிந்து திருவருள் இத் தழை நமக்கு எளியதொன்றன்று; இதனை ஏற்றருள்க என்று ஏற்பியாநிற்றல்.

தெவ்வரை மெய்யெரி காய்சிலை யாண்டென்னை யாண்டுகொண்ட
செவ்வரை மேனியன் சிற்றம் பலவன் செழுங்கயிலை
அவ்வரை மேலன்றி யில்லைகண் டாயுள்ள வாறருளான்
இவ்வரை மேற்சிலம் பன்னெளி திற்றந்த ஈர்ந்தழையே. 114

*பொ - ரை: நம்மிடம் உள்ள கருணையால் இம் மலையின் கண் வாழுகின்ற உயிர்த்தலைவன் எளிதாகக் கொண்டுவந்து கொடுத்த இந்த ஈரிய தழை, பகைவரின் உடலை எரித்த சினத்தோடுகூடிய மேருமலை ஆகிற வில்லைப் பணிகொண்டு அடியேனையும் ஆண்டுகொண்ட செம்மலைபோலும் மேனியை உடையவனாகிய சிற்றம்பல நாதனது வளவிய கயிலாயமாகிய அம் மலையிடத்தல்லது பிறிதோரிடத்து இல்லை; இதனை ஏற்றருள்க; யான் கூறிய இது மெய்ம்மை என்றவாறு.*

*ஞானபூமிக்கண் வளர்ந்த இத் தழை எளிதன்று, அரியது, சிவமாகிய நீ ஏற்கத்தக்கது என்று ஏற்பித்தவாறு. வரையாண்டு காய்சிலையாண்டு என்னை ஆண்டுகொண்ட என்பது 'கல்லை மென்கனியாக்கும் விச்சைகொண்டென்னை நின்கழற்கு அன்பனாக்கினாய்' என்னும் திருவாசகத்தால் நன்கு விளங்கும். கயிலைத்தழையை எளிதில் தந்தான் என்றதனால் அரிய சிவத்தை எளிதிற்கூடும் பரிபாகமுடையது உயிர் என்று திருவருள் உணர்த்தியதாம் என்க. (25)*

## தழை விருப்புரைத்தல்

### 'உன் பணி சிவத்திற்கு உவப்பென உரைத்தது'

*நீ அன்புடன் தந்த தழையைச் சிவத்தின் திருமுன்பு ஏற்பித்தேன்; சிவத்திற்குத் தழை மகிழ்ச்சி தருவதொன்றாய் இருந்தது என்று திருவருள் உயிர்க்கு உணர்த்தியது.*

பாசத் தளையறுத் தாண்டுகொண் டோன்றில்லை யம்பலஞ்சூழ்
தேசத் தனசெம்மல் நீதந் தனசென்றி யான்கொடுத்தேன்
பேசிற் பெருகும் சுருங்கு மருங்குல் பெயர்ந்தரைத்துப்
பூசிற் றிளலன்றிச் செய்யா தனவில்லை பூந்தழையே. 115

*பொ - ரை: உயிர்கள் பாசமாகிய விலங்கில் அகப்பட்டு வருந்த அவ் விலங்கை வெட்டி ஆண்டுகொண்ட அம்பலவாணப் பெருமானது தில்லையம்பலத்தைச் சேர்ந்த தேசத்தின்கண் உள்ளது; செம்மலே! நீ தந்த தழை; யான் போய் அவற்றைக் கொடுத்தேன்; கொடுத்ததும் அங்கு நிகழ்ந்தவற்றைச் சொல் வேனாயின் மிகப்பெருகும்; சிறிய இடையுடையாள் பூந்தழையை அரைத்துத் தன் உடம்பெங்கும் பூசிக்கொள்ளவில்லையே அல்லாமல் பெயர்த்துச் செய்யாதன ஒன்றும் இல்லை என்றவாறு.*

காதலி தீண்டிய பொருள்கள் காமுகனுக்கு நன்றாமாறுபோல மெய்யடியார் தந்த பச்சிலையும் சிவத்திற்குப் பெருவிருப்பு அளிப்பதாயிற்று.

பாசம் ஆன்ம அறிவை விளங்கவொட்டாது தடுத்து மறைத்து மலக்கல்லில் இருவினைக் கயிற்றால் ஆர்த்தலின் அதனைத் தளை என்றார். தில்லையம்பலம்சூழ் தேசத்தன என்பதற்குத் தில்லையம் பலத்தைப்போல நாற்புறமும் சூழ்ந்துள்ள ஒளிமயமாயின எனலும் ஆம். அன்பர் சாத்தியது புல்லிலை எருக்கமாயினும் வேண்டேம் என்னார்; ஆகவே, நறும் பூந்தழையை மேனி எங்கும் சாத்திச்சாத்தி இன்புறுகிறது சிவம் என்றவாறு. (26)

## 13. பகற்குறி

**'பகற்குறித் துறைகள் முப்பத்திரண்டென்பதும்
இயற்கைபோல் அன்பின் இயல்பெறக் கூட்டிச்
சிவத்தின் ஆனந்தம் செய்தபின் உயிரைப்
பிரித்த அருளின் பெருமை யாகும்'**

அஃதாவது உயிர் அன்புடனுதவிய பச்சிலையைச் சிவத்தை ஏற்பிக்கச் செய்த திருவருள், பகற்குறிக்கண் உயிரைச் சிவத்தோடு கூடச்செய்தல். குறி - குறித்த இடம்: முதனிலைத் தொழிலாகு பெயர். பகற்குறி - பகற்காலத்துச் சிவத்தலைவி தனித்துறையும் துரியச்சூழல். இது குறியிடம் கூறல் முதலாகப் பதிநோக்கி வருந்தல் ஈறாக முப்பத்திரண்டு கிளவிகளை உடையது.

### குறியிடங் கூறல்

**'அருள் உயிர்க்கு இன்பம் ஆமிடம் உரைத்தது'**

உயிர் சிவத்தோடு நீயும் நானுமாய் ஏகபோகமாய் இருக்கும் தனியிடம் கதிரவன் நுழையாத கரிய பொழிலாம் எனத் திருவருள் குறியிடம் கூறா நிற்றல். அருள் உயிர்க்கின்பம் ஆர்விடம் உரைத்தது என்பது வியாக்கியான பாடம். இப் பாடம் பொருட்சிறப்பு உடைத்தாதல் காண்க.

**வானுழை வாளம் பலத்தரன் குன்றென்று வட்கிவெய்யோன்
தானுழை யாவிரு ளாய்ப்புறம் நாப்பண்வண் டாரகைபோல்
தேனுழை நாக மலர்ந்து திகழ்பளிங் கான்மதியோன்
கானுழை வாழ்வுபெற் றாங்கெழில் காட்டுமொர் காப்பொழிலே. 116**

பொ - ரை: இருட்கு அப்பாற்பட்ட விண்ணிடத்து உண்டாகிய ஒளியாகிய சிற்றம்பல நாதனது மலை என்று வெட்கி, நாற்புறம் சென்றும் வெய்யோனாகிய சூரியன் நுழைய இயலாமையால் இருளாய், நடுநடுவே உடுக்களைப்போல வண்டுகள் நுழையும் நாகப்பூக்கள் மலர்ந்து விளங்குகின்ற பளிங்குப் பாறையால்,

மதியோன் வானில் வாழும் வாழ்வைவிட்டுக் கானில் நுழைந்து வாழ்வைப் பெற்றாற்போலப் பேரழகைத் தோற்றுவித்து நிற்கும் இக் கரிய பொழில் என்றவாறு.

பகலும் இரவாய் உடுவும் உடுபதியும் உடையதாய் அழகு செய்வது ஒரு பொழில்; எனவே தண்ணளிசேர் சிவத்தை உயிர் கலக்குமிடம் அதுவே எனத் திருவருள் பகற்குறி தெரிவித்தவாறு.

வான் உழை வாள் அரன், அம்பலத்து அரன் எனக்கூட்டி, இருளுக்கு அப்பாற்பட்ட ஞானகாயத்து விளங்கும் ஒளியாகிய அரன்; அம்பலத்து அரன் எனப் பொருள்கொள்க. இதனை "அண்டமார் இருளூடு கடந்தும்பர், உண்டு போலுமோர் ஒண்சுடர்" என்னும் அப்பர் சுவாமிகள் திருவாக்கு நன்கு விளக்கும். (1)

## ஆடிடம்படர்தல்

### 'இன்பம் தலைக்கொண்டு ஏகாந்தத்து ஏகல்'

உயிர்த்தலைவற்கு, யோகங்கலையாத தனியிடம் தண்மதி தவழும் சோலையாம் எனக்கூறிய திருவருள், இன்பமாகிய சிவத்தலைவியிடம் சென்று, யாம் புனம் சென்று ஊசலாடியும் அருவியேற்றும் பூக்கொய்தும் பொழுது கழிப்போம் வா என்று மகளிர் கூட்டத்தோடும் சென்று விளையாடும் இடமாகிய பொழிற்கண் சாருதல்.

**புயல்வளர் ஊசன்முன் னாடிப்பொன் னேபின்னைப் போய்ப்பொலியும்**
**அயல்வளர் குன்றினின் றேற்றும் அருவி திருவுருவின்**
**கயல்வளர் வாட்கண்ணி போதரு காதரந் தீர்த்தருளும்**
**தயல்வளர் மேனியன் அம்பலத் தான்வரைத் தண்புனத்தே.** 117

பொ - ரை: பொன்னே! அச்சத்தைப் போக்கி ஆட்கொள்ளும் உமையொரு பாகனாகிய அம்பலவாணப் பெருமானது மலைக்கண் உள்ளதாகிய குளிர்ந்த புனத்தின்கண் மேகங்கள் தங்கப்பெற்ற ஊசலை முன்னே ஆடி, பின் சென்று அதற்கு அயலாக விளங்கும் உயர்ந்த மலையினின்று இழியும் அருவியை ஏற்போம்; திருமகள் போலும் வடிவழகையும், கயல் போலும் கண்களையும் உடைய தலைவியே! வா என்றவாறு.

சிவத்தலைவியைப் 'பொன்னே' என விளித்தாள், பொன் புனைவார்க்கு அணி செய்தல்போலச் சிவம் நுகர்வாற்கு இன்புருவாய்ப் பெரும் போகம் விளைத்தலின்.

புயல்தங்கும் ஊசல் என்றது எத்துணைநேரம் ஆடினும் வியர் தோன்றாது. விளையாட்டு விருப்பை மிகுவிக்கும் என்பது தோன்ற. அருவி ஏற்றல் - அருவியைத் தலையில் ஏற்று நீராடல்.

தையல் - அழகு; உரிச்சொல்: எதுகைநோக்கித் தயல் என நின்றது. தையல் - அழகினையுடைய பெண்; உமாதேவி. இங்ஙனம் கூறித் தனி இடத்தே உயிரொடு தலைப்பெய்யத் திருவருள் அழைத்துச் சென்றதாம். (2)

## குறியிடத்துக் கொண்டுசேறல்

### 'அருமையாற் சிவத்தை உயிரிடத்து ஆக்கல்'

சிவத்தை உடனழைத்துக்கொண்டு தனியிடத்துப் படர்ந்த திருவருள், சிவத்தலைவியின் வருகைக்குக் காத்துநிற்கும் உயிரினிடத்துச் சாரச்செய்தல்.

**திணைவளங் காத்துச் சிலம்பெதிர் கூஉய்ச்சிற்றின் முற்றிழைத்துச்**
**சுணைவளம் பாய்ந்து துணைமலர் கொய்து தொழுதெழுவார்**
**வினைவளம் நீறெழ நீறணி யம்பல வன்றன்வெற்பில்**
**புனைவளர் கொம்பரன் னாயன்ன காண்டும் புனமயிலே. 118**

பொ - ரை: தொழுதுகொண்டே எழுவாருடைய வினைப் பெருக்கம் அனைத்தும் சாம்பராகத் தான் திருநீற்றையணியும் அம்பலவாணப் பெருமானுடைய மலையில் ஒப்பனை செய்யப் பெற்ற பூங்கொம்பை ஒத்த தலைவியே! தினையாகிய வளத்தைக் காத்து, மலைக்கு எதிராகக் கூவி, சிறுவீடு கட்டி, சுனை நீராடி, ஒத்த மலர்களைக் கொய்து, அத்தகைய புன மயில்களையும் காண்பேம் என்றவாறு.

இயற்கைப் புணர்ச்சிக்கண் உயிரைக்கலந்த சிவம் 'மயிலாலுவது கண்டேன்' என மறைத்துக் கூறியதைத் திருவருள் மனத்துட் கொண்டு ஈண்டும் 'புனமயில் காண்டும்' என உயிர்த்தலைவன் வருகையைக் குறிப்பித்தவாறு.

உயிர்களின் வினைத்தொகுதி கெட இறைவன் நீறு அணிகின்றான் என்றதன் நயத்தையும் பொருந்துமாற்றையும் 'நீறு அணிந்த கோலம் நெஞ்சம் பிணிக்கும் எழிலுடைமையான் அக்கோலம் தொழுதெழுவார் உள்ளத்து நீங்காது நிற்றலான் ஆண்டுள்ள வினை நீறாம்' என்ற பேராசிரியர் உரையான் உணர்க. 'பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டு என்னை ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான்' என்ற சாழற்பகுதியும் இறைவன் வெண்ணீறுபூசி, உயிர்களின் மலமாசு போக்கிச் சொருபநிலையில் உயிர்களோடு மணியிடத்துச் சோதிபோல் கலந்து விளங்கி நிற்கின்றான் எனல் காண்க. (3)

## இடத்துய்த்து நீங்கல்

### 'அருள் சிவத்திடைச் சேர்த்து அகன்று நின்றது'

உயிர் நின்ற ஞானபூமியில், திருவருள் சிவத்தை அழைத்துச்சென்று உயிரைச் சிவத்திடைச் சேர்த்து, யான்

பூக்கொய்து வருவேன் என்பது முதலான ஏதுக்காட்டித் தான் நீங்கா நிற்றல். அருள் சிவத்தை அறிவித்து அகன்றது என்பது வியாக்கியானம்.

**நரல்வே யினநின தோட்குடைந் துக்கநன் முத்தஞ்சிந்திப்**
**பரல்வே யறையுறைக் கும்பஞ் சடிப்பரன் றில்லையன்னாய்**
**வரல்வேய் தருவனிங் கேநிலுங் கேசென்றுன் வார்குழற்கீங்**
**குரல்வே யளிமுரல் கொங்கார் தடமலர் கொண்டுவந்தே. 119**

*பொ - ரை: பரனது தில்லையை ஒப்பாய்! யான் உவ்விடத்தே சென்று தேனால் ஈரிய பூங்கொத்தை மூடி மொய்க்கின்ற வண்டுகள் ஒலிக்கும் மகரந்தம் நிறைந்த பெரிய மலர்களைக் கொண்டுவந்து உன்னுடைய நீண்ட கூந்தலுக்குச் சூட்டுவேன்; காற்றான் ஒன்றோ டொன்று உராய்ந்து ஒலிக்கும் மூங்கிற் கூட்டங்கள் உன் தோளுக்குத் தோற்று உடைதலால் உக்க முத்துக்கள் சிதறிக் கிடப்பதால், பருக்கைக் கற்கள் மூடிய பாறை நினது பஞ்சுபோலும் மெல்லிய அடிக்கண் உறுத்தும் ஆகையால் நீ வாரற்க; இங்கே நில் என்றவாறு.*

*சிவம் பரிபாகமுற்ற உயிரின் வருகைநோக்கிக் கருணையோடு இருக்க வேண்டுமேயன்றித் துணையாக நிற்கும் என்னொடு எங்கும் வருதல் தகாது எனத் திருவருள் விண்ணப்பித்தவாறு. (4)*

## உவந்துரைத்தல்

### 'உயிர் சிவம் தரிசித்து உண்மகிழ்ந்துரைத்தது'

*சிவதரிசனம் நமக்கு இடையீடின்றிக் கிட்டுமோ? அதற்குத் திருவருள் துணைபுரியுமோ? என்று எண்ணியிருந்த உயிர், சிவத்தைக்கண்டு மனமகிழ்ந்து விண்ணப்பித்தது. உயிர் நின்மலதுரியத்தில் சிவத்தைத் தரிசித்து உண்மகிழ்ந்து உரைத்தல் என்பது வியாக்கியானம்.*

**படமா சுணப்பள்ளி யிக்குவ டாக்கியப் பங்கயக்கண்**
**நெடுமா லெனவென்னை நீநினைந் தோநெஞ்சத் தாமரையே**
**இடமா இருக்கலுற் றோதில்லை நின்றவன் ஈர்ங்கயிலை**
**வடமார் முலைமட வாய்வந்து வைகிற்றிவ் வார்பொழிற்கே. 120**

*பொ - ரை: முத்துவடம் பொருந்திய முலைகளையுடைய சிவத்தலைவி தில்லைக்கண் நின்றவனது குளிர்ந்த கயிலைமலைக் கண் நீண்ட இப் பொழிலிடத்து வந்து தங்கியது இக் குன்றைப் பாம்பணையாக்கி என்னைத் திருமாலாக எண்ணியோ? யான் பிரியினும் என் மன மலரில் தங்கநினைந்தோ? கூறுவாயாக என்றவாறு.*

*பொழில் நின்மலத்துரியத்தானம். நின்மலத்துரியத்தானத்து வந்து எழுந்தருளியது மலையை உயிரொடுகலக்கும்*

மெல்லணையாக நினைந்தோ, அல்லது ஆனந்ததாண்டவ தரிசனத்தைத் தாருகா வனத்துக்கண்ட திருமால் திரும்பத்திரும்ப அச் சிவானந்தத்தை எண்ணி எண்ணி இன்புற்றதுபோல யானும் இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப்பாட்டின்கண் எய்திய சிவானந்தத்தை நினைந்துநினைந்து இன்புறுதலால் என்னைத் திருமால் என்று எண்ணியோ என்கின்றான் உயிர்த்தலைவன். இதன் பயன் சிவபோகத்தில் அழுந்தியவர்கள் மதுவுண்ட வண்டுபோல அதிலேயே தோய்ந்து அதுவாயே இருப்பர் என்ற தம்மனுபவம் உரைத்தவாறாம். (5)

## மருங்கணைதல்

### 'இன்பங்கண்டு அதன் இயல்பு எடுத்துரைத்தது'

உயிர், சிவத்தோடு கலந்து இன்பங்கொண்டு, அவ்வின்பத்தின் எல்லைகண்டு உரைக்கமாட்டாமையான் இன்ப நிலைக்களன் களாகிற மருங்குலையும் முலையையும் முன்னிலைப்படுத்தி ஒருவகையான் உரைத்தது.

**தொத்தீன் மலர்ப்பொழிற் றில்லைத்தொல் லோனரு ளென்னமுன்னி**
**முத்தீன் குவளைமென் காந்தளின் மூடித்தன் ஏரளப்பாள்**
**ஒத்தீங் கொடியி னொதுங்குகின் றாள்மருங் குல்நெருங்கப்**
**பித்தீர் பணைமுலை காளென்னுக் கின்னும் பெருக்கின்றதே. 121**

பொ - ரை: கொத்துக்களைப்பெறும் மலர்ப்பொழிலை யுடைய தில்லையில் எழுந்தருளியுள்ள தொல்லோனது அருள் போல வந்து எதிர்ப்பட்டு கண்ணீர்முத்துக்களைச் சொரியும் கண்களாகிற குவளைகளைக் காந்தள் மலர்போன்ற கைகளினாலே மூடி, தன்னழகை அளந்து பார்ப்பதுபோல, தேனான் ஈரிய கொடியின்கண் நாணத்தால் ஒதுங்கி மறைகின்றவளது இடை வருந்த, பித்துக்கொண்டு பணைக்கின்ற முலைகளே! மேன் மேலும் பெருக்கின்றது எற்றிற்கு? இது நன்றன்று என்றவாறு.

இன்ப நுகர்வுக்கு உறுதுணையான ஞானங்களைப் பழிப்பான் போல இடையை அணைத்துப் போகத்திலழுந் தினமை கூறிற்று. அம்பலவாணப் பெருமான் அருள் மெய்யடியார்களுக்கு வலியவந்து முன்னிற்பதுபோலத் தனக்கு எதிர்ப்பட்டது சிவம் என்று உயிர் வியந்தவாறு. (6)

## பாங்கி யறிவுரைத்தல்

### 'இன்பம் கண்டபின் அருள் தரிசித்தது'

உயிர், சிவாநுபவ இன்பத்தை அழுந்தி அநுபவித்தபின், சிவத்தோடு கலப்புண்மையைத் திருவருளும் அறியும் என்று உயிர் தெளிவுரைத்ததாம்.

அருள் இன்பத்தைக் கண்டு அதிசயித்தலாம் என்பது வியாக்கியானம். இன்பங்கண்டபின் அருள் தரிசித்தது என்றது என்றும் பாடம்.

**அளிநீ டளகத்தின் அட்டிய தாதும் அணியணியும்**
**ஒளிநீள் சுரிகுழற் சூழ்ந்தவொண் மாலையும் தண்ணறவுண்**
**களிநீ யெனச்செய்த வன்கடற் றில்லையன் னாய்கலங்கல்**
**தெளிநீ யனையபொன் னேபன்னு கோலம் திருநுதலே. 122**

பொ - ரை: நீ குளிர்ந்த கள்ளை உண்ட களிமகன் என்று பிறர் கூறும்வண்ணம் ஓரின்பத்தை எனக்குச்செய்தவனது கடற்கரைக் கண்ணதாகிய தில்லையை ஒத்தவளே! வண்டுகள் விடாது மொய்க்கும் கூந்தலில் இட்ட தாதும், அணிந்த அணிகளும், ஒளியையுடைய நீண்ட சுருண்ட குழலிடத்துச் சுற்றிய மாலையும் ஆகிய இவை அனைத்தும் நின்னோடு ஒரு தன்மையளாகிய தோழி ஆராய்ந்துசெய்த கோலமே; திருநுதலே! யான் பிறழச் செய்தேன் என்று கலங்காதே; தெளி என்றவாறு.

உன்னை ஒப்பனைசெய்யும் வகையில் யானும் உன் உயிர்த் தோழியும் ஒப்பேம்; அறிவும் ஒப்பேம் என்று உயிர் உரையாநின்றது.

ஒப்பனையால் ஒப்பேமாயினும் கண் காட்டுமேயன்றிக் காணாதவாறு போலத் திருவருள் துணைசெய்யுமேயன்றிச் சிவத்தை நுகராது; எமக்கே நுகருந்தன்மை உண்டு என்பதும் தோன்ற உரைத்தமை காண்க. (7)

## உண்மகிழ்ந்துரைத்தல்

### 'கண்ட இன்பம் அருட்கு இயம்பியது'

உயிர் சிவத்தைக்கலந்து பெற்ற பேரின்பம் இத்தகையதா யிருந்தது எனத் திருவருளுக்கு உரைத்தது. இன்பத் தேறலுண்ட உயிர் அருளுக்கு உவந்து உரைத்தல் என்பது வியாக்கியானம் தரும் விளக்கம்.

செழுநீர் மதிக்கண்ணிச் சிற்றம் பலவன் திருக்கழலே
கெழுநீர் மையிற்சென்று கிண்கிணி வாய்க்கொள்ளும் கள்ளகத்த
கழுநீர் மலரிவள் யானதன் கண்மரு விப்பிரியாக்
கொழுநீர் நறப்பரு கும்பெரு நீர்மை யளிகுலமே. 123

பொ - ரை: வளவிய தன்மைவாய்ந்த மதியாகிய தலை மாலையையுடைய சிற்றம்பலவன் திருக்கழல்களையே பொருந்துந் தன்மையால் உள்மகிழ்ந்து முகம் மலர்வதுபோலப் போதாந் தன்மையைவிட்டு அலராந்தன்மை எய்தி மலரத்தொடங்கும் தேனை உள்ளேயுடைய செங்கழுநீர்மலர் இவள்; யான் அக் கழுநீர்ப்பூக்கண் பொருந்தி ஒருக்காலும் பிரியாது தேனை உண்ணும் வண்டின் கூட்டம் என்றவாறு.

இவள் போதாந்தன்மைவிட்டு அலராந்தன்மை எய்தநிற்கும் செங்கழு நீர்மலர் என்றது, பேதைப்பருவம்கடந்து இன்பப் பருவத்தள் ஆயினாள் என்பதுபட நின்றது. இதனால் சிவம் உயிர்க்கு நுகரப்படுபொருளாய் கசிந்த கருணையுடைத்தாயிற்று என்பது பெறப்படும்.

யான் அளிகுலம் என்றது சிவகருணையை நுகரும் பரிபாகமுற்ற உயிர் என்பது விளங்கநின்றது.

உயர்ந்த கழுநீர்மலரின்கண் அன்றிச் சென்று ஊதாத அளிபோல யான் 'உள்ளேன் பிற தெய்வம் உன்னையல்லாது எங்கள் உத்தமனே' என்ற உறுதி தோன்றுதல் காண்க. (8)

## ஆயத்துய்த்தல்

### 'அடியார் கூட்டத்து அன்பால் உய்த்தது'

தன்னை வண்டுபோலென்றுகூறி இன்பம் நுகர்ந்த அருமை தோன்ற வியவாநின்ற உயிர், இனி நமக்குள் பிரிவு என்பது ஒருபோதும் இல்லையாயினும் அடியார்கூட்டம் விளக்கம் பெறுதல்கருதி, அடியார்கூட்டத்துச் சென்று எய்துக என அன்போடு அனுப்பிவைத்தது.

**கொழுந்தா ரகைமுகை கொண்டலம் பாசடை விண்மடுவில்**
**எழுந்தார் மதிக்கம லம்மெழில் தந்தென இப்பிறப்பில்**
**அழுந்தா வகையெனை யாண்டவன் சிற்றம் பலமனையாய்**
**செழுந்தா தவிழ்பொழில் ஆயத்துச் சேர்க திருத்தகவே. 124**

பொ - ரை: இந்தப் பிறவிக்கண் அழுந்தாவகை என்னை அடிமை கொண்டவனது சிற்றம்பலத்தை ஒப்பாய்! கொழுவிய உடுக்களாகிய மொட்டுக்களையும், மேகமாகிய பச்சிலையையும் உடைய விண்ணாகிய மடுவில் எழுந்து நிறைந்த மதியாகிய வெண்டாமரைப்பூ தன் அழகைப் புலப்படுத்தினாற்போலச் செழுமையான மகரந்தம் சிந்தாநின்ற பொழிற்கண் விளையாடு கின்ற ஆயத்தின்கண் பொலிவுபெறச்சென்று சேர்க என்றவாறு.

சிவபோகமாகிய பேரின்பத்தைத் துய்க்கப்பெற்றார், மீளச் சிவத்தைப் பிரியார் ஆதலால் உயிருக்கும் சிவத்திற்கும் பிரிவில்லை. ஆயினும் எம்போல மகளிர்கூட்டமும் தனிவிளக்கம் பெறச்சென்று சேர்க என்பது கருத்து. (9)

## தோழிவந்துகூடல்

### 'அருள் சிவம் கலந்த பேதம் கண்டது'

உயிரால், அடியார்கூட்டத்து உய்க்கப்பெற்ற சிவத்தலைவி யைத், திருவருள் வந்து கூடி, சிவம் உயிரோடு கலந்தமையால்

*உண்டான வேறுபாட்டைக் கண்டு உரைத்தது. அபேதம் கண்டது எனப் பிரிப்பின் பின்வரும் பாடற்கருத்தோடு இயையாமை அறிக.*

**பொன்னனை யான்றில்லைப் பொங்கர வம்புன் சடைமிடைந்த**
**மின்னனை யானருள் மேவலர் போன்மெல் விரல்வருந்த**
**மென்னனை யாய்மறி யேபறி யேல்வெறி யார்மலர்கள்**
**இன்னன யான்கொணர்ந் தேன்மணந் தாழ்குழற் கேய்வனவே. 125**

*பொ - ரை: அசைந்த மான்குட்டிபோல்வாய்! பொன்னை ஒப்பவனும் தில்லைநகரின்கண் வெகுளாநின்ற பாம்புகளைப் புல்லிய சடைக்கண் மிடைந்த மின்னை ஒப்பவனும் ஆகிய கூத்தப்பெருமானது திருவருளைப் பொருந்தாதார்போல மெல்லிய விரல்கள் நோவ, மெல்லிய அரும்புகளைப் பறியாதொழி; நின் மணம்பொருந்திய தாழ்ந்த கூந்தற்குப் பொருத்தமான நன்மணம் பொருந்திய இத்தகைய பூக்களை யான் கொணர்ந்தேன் எ-று.*

*உயிரொடு கலந்தமை உலகு அறியாதவாறு நாணி மொட்டுக் களைப் பறித்துநிற்கும் சிவத்தோடு திருவருள் சென்றடைந்தமை கூறியதாம். (10)*

## ஆடிடம்புகுதல்

### 'அன்பர்க்கு இன்பம் அருளே யாக்கல்'

*திருவருள், மெய்யடியார் கூட்டத்திற்கும் சிவத்தைக் கூட்டுவித்து இன்பம் ஆக்குதல்.*

**அறுகால் நிறைமலர் ஐம்பால் நிறையணிந் தேனணியார்**
**துறுகான் மலர்த்தொத்துத் தோகைதொல் லாயமெல் லப்புகுக**
**சிறுகால் மருங்குல் வருந்தா வகைமிக என்சிரத்தின்**
**உறுகால் பிறர்க்கரி யோன்புலி யூரன்ன ஒண்ணுதலே. 126**

*பொ - ரை: என் சிரத்தின்மீது வைத்த திருவடி பிறர்க்கு அருமையாகச் செய்பவனுடைய புலியூரை ஒத்த ஒளிபொருந்தி யுள்ள நெற்றியை உடையாய்! அழகுபொருந்திய நெருங்கிய நறுநாற்றத்தையுடைய மலர்க் கொத்துக்களை, வண்டுகள் நிறைந்த நின் ஐம்பாலாகிய கூந்தலில் அணிந்தேன்; மயிலே! சிறிய இடத்தையுடைய இடை வருந்ாதவண்ணம் பழையதாகிய ஆயத்தின்கண் மெல்லப் புகுக என்றவாறு.*

*"நனைந்தனைய திருவடி என் தலைமேல் வைத்தார்" என்றாங்கு, பல பிறவிகளில் ஈட்டிய புண்ணியப்பயனால் என் தலையில் சூட்டப்பெற்ற திருவடியைப் பிறர்சூட்டிக்கொள்ளப் புண்ணியம் செய்யாமையின் 'என் சிரத்தின் உறுகால் பிறர்க்கு அரியோன்' என்றாள். திருவருளுக்குக் கிடைத்த பேறு வேறு*

*எவர்க்குக் கிட்டும்? தொல் ஆயம் என்றது வழிவந்த அடியார் கூட்டத்தை.* *(11)*

## தனிகண்டுரைத்தல்

### 'அருள் உயிர்தனைக் கண்டு அகமகிழ்ந்து உரைத்தது'

*திருவருள் பேரின்பம் துய்த்த உயிரை அணுகி, மனம் மகிழ்ந்து, எம் ஊர்க்கண் யாம் உண்ணும் உணவை உண்டு இன்று எம்மோடு தங்கிப்போக என உலகியல் உபசாரம் கூறுவதுபோல என்றும் பிரியாவகை இன்ப அன்புடன் இயைந்திருக்க என்றது.*

**தழங்கும் அருவியெஞ் சீறூர் பெரும இதுமதுவும்**
**கிழங்கும் அருந்தி யிருந்தெம்மொ டின்று கிளர்ந்துகுன்றர்**
**முழங்குங் குரவை யிரவிற்கண் டேகுக முத்தன்முத்தி**
**வழங்கும் பிரானெரி யாடிதென் றில்லை மணிநகர்க்கே. 127**

**பொ - ரை:** *பெரும! ஒலிக்கின்ற அருவியையுடைய இது எம் சிற்றூர்; இதன்கண் யாம் அருந்தும் தேனையும் கிழங்கையும் நீயும் அருந்தி இன்று எம்மோடு தங்கியிருந்து, குறவர்கள் அனைவரும் எழுந்து முழங்கும் குரவைக்கூத்தைக் கண்டு, அநாதியே மலங்களி லிருந்து விடுபட்டவனும், முத்தியை வழங்கும் முதல்வனும், ஊழித்தீயில் நடனமாடுபவனும் ஆகிய இறைவனது தில்லை நகர்க்கு நாளை செல்வாயாக என்றவாறு.*

*இன்னார் இனியார் என்று தகுதிபாராதும், ஏற்பார்மாட்டு ஒன்றும் கருதாதும் கொடுத்தலின் 'வழங்கும் பிரான்' என்றார். தகுதியில்லாதாரையும் நோக்கால், பரிசத்தால், வாக்கால் தகுதி வருவித்தல் இறைவன் கருணை, சிவம் தடையற்ற கருணையால், ஒரு கணமேனும் ஆட்கொள்ளப்பெற்ற உயிரைவிட்டு அகன்று தரியாது என்பதுபட உலகியலைக் கூறுவாளாயினள் திருவருட்டோழி.* *(12)*

## பருவங்கூறி வரவுவிலக்கல்

### 'அருள் சிவத்தின்படுத்து அறிவுறுத்தியது'

*சிவம் பரிபூரணமாகக் கனிந்தநிலை எய்தியது ஆதலால், நீ களவான் வந்து கலத்தல் தகாது; என்றும் இடையீடில்லா இன்பவாழ்வை எய்துக; வரைக என வற்புறுத்தல். சிவத்தின்பெடுத்து அருள் உயிர்க்கு அறிவுறுத்தல் என்பது வியாக்கியான பாடம். இப் பாடமே அதனினும் சிறத்தல் காண்க.*

**தள்ளி மணிசந்த முந்தித் தறுகட் கரிமருப்புத்**
**தெள்ளி நறவம் திசைதிசை பாயும் மலைச்சிலம்பா**
**வெள்ளி மலையன்ன மால்விடை யோன்புலி யூர்விளங்கும்**
**வள்ளி மருங்குல் வருத்துவ போன்ற வனமுலையே. 128**

*பொ - ரை: மணிகளை ஆற்றின் இருமருங்குந்தள்ளி, சந்தன மரங்களைப் புரட்டி, அஞ்சாமையோடுகூடிய யானைகளின் கொம்புகளைக் கொழித்து, தேன் திசைகடோறும் பாயும் சிலம்பனே! வெள்ளிமலையை விரும்பி விடையையுடையவனது புலியூர்போல விளங்கும் கொடிச்சியது இடையை நல்ல முலைகள் வளர்வதால் வருத்துவன போன்றன; ஆதலால் வரைந்து எய்துக என்றவாறு.*

*வரைதல்-தலைவனும் தலைவியும் இடையிடையே நிகழும் பிரிவைத் தாங்க இயலாது விதிமுறையால் மணந்து எக்கணமும் பிரியாதிருத்தல். அதுபோலச் சிவமும் உயிரும் பிரிந்துகூடாது என்றும் மனத்தினில் மன்னிய மன்னாக விளங்கப்பெறுதல்; அதாவது, அனவரத ஆனந்தயோகம் புரிதலாம்.*

*மருங்குல் வருந்த முலைவளர்ந்தன எனப் பருவமெய்தியமை விளக்கியவாறு. கருணையின் முதிர்வால் வரைக என வற்புறுத்தியவாறாம். (13)*

## வரைவுடம்படாது மிகுத்துக்கூறல்

### 'இன்பம் எளியேற்கு எய்துமோ என்று அன்பாம் உயிர் அருளுடன் உரைத்தது'

*களவான் எய்தும் இன்பத்தைக் கருத்தில்கொண்ட உயிர், திருவருள் வற்புறுத்திக் கூறும் வரைவிற்கு உடன்படாது, விண்ணுலகிலும் ஒப்பாவார் இல்லாத இவள் யான் வரையும் துணை எளியளோ என சிவத்தலைவியை மேம்படுத்துக் கூறாநிற்றல்.*

**மாடஞ்செய் பொன்னக ருந்நிக ரில்லையிம் மாதர்க்கென்னப்
பீடஞ்செய் தாமரை யோன்பெற்ற பிள்ளையை உள்ளலரைக்
கீடஞ்செய் தென்பிறப் புக்கெடத் தில்லைநின் றோன்கயிலைக்
கூடஞ்செய் சாரற் கொடிச்சியென் றோநின்று கூறுவதே. 129**

*பொ - ரை: மாடமாகச் செய்யப்பட்ட தேவலோகமும் இவளுக்கு ஒப்பில்லை என்று சொல்லும்வண்ணம் தாமரையைப் பீடமாக உடைய பிரமன்பெற்ற பிள்ளையை, தன்னை நினையாதவர்களைப் புழுக்களாகச்செய்து யான் தன்னையே நினைத்துப் பிறவியைக் கெடுக்கும்வண்ணம் தில்லைக்கண் எழுந்தருளியிருப்பவனது கயிலை மலைக்கண் கூடம் செய்யப்பட்ட சாரற்கண் வாழும் கொடிச்சியென்றோ நீ சொல்வது என்றவாறு.*

*கூடம் - மன்றாகச் செய்யப்பட்ட தேவகோட்டம். பொன்னகர் போக பூமியாதலின் போகப்பொருளாகிய இவளுக்கு அதுவும் ஒப்பில்லையாயிற்று. பொன்னகர் போகம் - சிற்றின்பம். இவள் போகம் பேரின்பம் என்க.*

*கொடிச்சியாயின் வரைந்து கொள்ளலாம்; இவள் பிரமன் பெற்ற பிள்ளையாவாள் என மிகுத்துக் கூறியவாறு. (14)*

## உண்மை கூறி வரைவுகடாதல்

### 'அன்புக்கு அருளும் இன்பு எளிதென்றது'

*உயிர்க்கு அருளும் இன்பம் எளிதன்று என்பது வியாக்கியானம். தம் குல நலனும் தொழிலும் கூறி, நீர் வரைவு வேண்டாமையின் எம்மைப் புனைந்துகூற வேண்டா எனத் திருவருள் தன் உண்மைகூறி வரைவு கடாவாநிற்றல்.*

**வேய்தந்த வெண்முத்தம் சிந்துபைங் கார்வரை மீன்பரப்பிச்**
**சேய்தந்த வானகம் மானுஞ் சிலம்பதன் சேவடிக்கே**
**ஆய்தந்த அன்புதந் தாட்கொண்ட அம்பல வன்மலையில்**
**தாய்தந்தை கானவ ரேனலெங் காவலித் தாழ்வரையே. 130**

*பொ - ரை: மூங்கிலில் பிறந்த வெண்மையான முத்துக்கள் சிதறிக்கிடக்கும் சோலைகளால் பசுமைநிறம் வாய்ந்த கரிய தாழ்வரையிலே, மீன்களைப் பரப்புவதால் சேய்மை மிக்கதாகிய வானிடத்தை ஒக்கும் சிலம்ப! எமக்குத் தாயும் தந்தையுமாய்த் தன் சேவடிக்கே ஆய்ந்தெடுத்துச் சிறந்த அன்பைத் தந்து எம்மை அடிமையாகக்கொண்ட அம்பலவாணப் பெருமானுடைய மலையில் வாழும் கானவரே! இத் தாழ்வரைக்கண்ணதாகிய தினை எமது காவலாகும்; அதனால் நீர் வரைவு வேண்டாமையால் புனைந்துகூற வேண்டுவதில்லை என்றவாறு.*

*எமது தாயும் தந்தையரும் கானவர்கள், எம் தொழில் ஏனல்காவல் என்று தன் உண்மை கூறி, மூங்கில் முத்துச் சிதறிக் கிடக்கின்ற கரிய மலை மீன்களைப் பரப்பிக் கிடக்கும் விண்ணினை ஒக்கும் சிலம்ப எனத் தலைவனை விளித்துக் கூறினமையால் இத்துணை ஏற்றத்தாழ்வு நம்முள் இருப்பினும் இவள் வரைந்து கோடற்கு உரியவள் என வற்புறுத்தியவாறாம். (15)*

## வருத்தங்கூறி வரைவுகடாதல்

### 'இன்புறாது இருத்தல் என்பிழை என்றது'

*இத்துணை நாள் கலந்தும் இவ்வுயிர் நம் வரைவின்கண் நின்றதில்லையே எனச் சிவம் வருந்தும். வரைவின்கண் நில் என யான் உரைக்கும் அளவில் இவ்வுயிர் வருந்தாநின்றது. வழி நாட்கலப்பிலேயே இவ்விருவர்மாட்டும் இந்த வேற்றுமையைக் காண்கின்றேமே அதனால் யான் நோவேன் என்று திருவருள் உயிருக்கு அனைவர் வருத்தமும் உணர்த்தி என்றும் பிரியா இன்பத்திருக்க எனக் கூறாநிற்றல்.*

*சிவம் கருணை கூற, உயிர் இன்புறாதிருத்தல் என் பிழை என்று அருள் உரைத்தல் என்பது வியாக்கியானம். இதன் கருத்து, சிவம் உயிரொடு கலந்து விளங்க விரும்பவும், உயிர் ஓரொருக்கால் கலத்தலாகிய களவிற்புணர்வை விரும்பி எஞ்ஞான்றும் கலத்தலால் விளையும் இடையறாப்பேரன்பை விரும்புகிற்றிலதே; அது என் பிழையேயாம் எனத் திருவருள் வருந்தாநிற்றல் என்பது.*

**மன்னுந் திருவருந் தும்வரை யாவிடின் நீர்வரைவென்**
**றுன்னு மதற்குத் தளர்ந்தொளி வாடுதிர் உம்பரெலாம்**
**பன்னும் புகழ்ப்பர மன்பரஞ் சோதிசிற் றம்பலத்தான்**
**பொன்னங் கழல்வழுத் தார்புல னென்னப் புலம்புவனே. 131**

*பொ - ரை: வரையாவிடின் பெரும்பான்மையும் திருவை ஒக்கும் சிவத்தலைவி வருந்துவள்; வரைவு என்று எண்ணுமதற்கே நீர் தளர்ந்து தேசு குன்றுகின்றீர்; தேவர்களனைவரும் பரவும் புகழினையுடைய பரமனும் பரஞ்சோதியுமாகிய சிற்றம்பல நாதனுடைய பொன்போன்ற திருவடியை வழுத்தாதவரது அறிவைப்போல யான் தனிமையுற்று வருந்தா நின்றேன் என்றவாறு.*

*சிவத்தின் கருணையளவு உயிருக்கு விரைவு தோன்றிற் றிலதே எனச் சிவத்தலைவியின் கருணை மிகுதியுணர்த்தி வரைவுகடாயவாறு. (16)*

## தாயச்சங்கூறி வரைவுகடாதல்

### 'பரையும் உயிரின் பக்குவங்கண்டது'

*சிவத்தின் தாயாகிய பரை சிவத்தின் பருவம்கண்டு, சிவத்தை மெய்யன்பு பூண்டார்மாட்டுச் சாரச்செய்தல் இன்றியமையாதது என்று எண்ணிப் பிறர்க்கு வரைவு நேரவும்கூடும் எனத் தாயால் விளையும் அச்சம்கூறி வரைவுகடாதல்.*

*பரையின் கருணைமிகுதி கண்டதருள் உயிர்க்குரைத்துப் பக்குவங்காண்டல் என்பது வியாக்கியானம். இதுவும் முன்கூறிய கருத்தினதாதல் காண்க.*

**பனித்துண்டஞ் சூடும் படர்சடை யம்பல வன்னுலகம்**
**தனித்துண் டவன் றெழுந் தாளோன் கயிலைப் பயில்சிலம்பா**
**கனித்தொண்டை வாய்ச்சி கதிர்முலைப் பாரிப்புக் கண்டழிவுற்**
**றினிக்கண் டிலம்பற்றுச் சிற்றிடைக் கென்றஞ்சும் எம்மனையே. 132**

*பொ - ரை: குளிர்ந்த பிறைத்துண்டத்தை அணியும் பரப்பிய திருச்சடையையுடைய அம்பலவனும், உலகம் முழுதையும் தனியே உண்ட பெருவாயனாகிய திருமால் வணங்கும் திருவடியை உடையவனும் ஆகிய கூத்தப்பெருமானது கயிலை மலைக்கண் பயிலும் சிலம்பனே! தொண்டைக் கனிபோலும் சிவந்த வாயை*

உடையாளாகிய சிவத்தலைவியின் முலையின் பாரிப்பைக்கண்டு மனம் வருந்தி, எம் அன்னை இவள் சிற்றிடைக்கு இனி ஒரு பற்றுக்கண்டிலமே என்று அஞ்சா நின்றான்; இனி என்ன நடக்குமோ? அறியேன் என்றவாறு.

உன்னால் நுகரப்பட்ட பேரின்பம் பிறர்மாட்டுப் புகுத்தவும் நேரும்; அதனை ஆற்றாத சிவம் வருந்தும்; ஆதலால், உறுதியுடன் என்றும் கூடி வாழ வழிசெய்தலே நின் கடமை என உயிர்க்கு உணர்த்தியவாறு. (17)

## இற்செறிவு அறிவித்து வரைவுகடாதல்

### 'அருள் இனி இன்பம் அரிது என விரைதல்'

பரை, சிவத்தை நோக்கி, நீ பருவம் முதிர்ந்தனை; கருணை கண்களின் வழியாக வெளிப்படலாயிற்று; இந்த நிலையில் நீ புறம் போதலாகாது என்றாள். அதனால் இல்லின்கண்ணே செறிக்கவும் படும்; நீ விரும்பும் இடையிட்ட கலப்பால் விளையும் இன்பப் பெருக்கு எய்த முடியாமலே போகும் என்று உயிருக்கு உணர்த்தி அனவரத தியானமாகிற வரைவு புரிக என வேண்டா நிற்றல்.

அருளில் இன்பம் அரிது என்று உயிரின் பரிவு காண்டல் என்பது வியாக்கியானம்.

**ஈவிளை யாட நறவிளை வோர்ந்தெமர் மால்பியற்றும்**
**வேய்விளை யாடும்வேற் பாவுற்று நோக்கியெம் மெல்லியலைப்**
**போய்விளை யாடலென் றாளன்னை அம்பலத் தான்புரத்தில்**
**தீவிளை யாடநின் றேவிளை யாடி திருமலைக்கே. 133**

பொ - ரை: தேனீக்கள் பறந்து விளையாட, அதனைக்கொண்டு தேன் முதிர்ந்தமை அறிந்து எம்மவர்கள் கண்ணேணியைச் செப்பனிடும் மூங்கில் விளையாடும் வெற்பினையுடையாய்! உற்றுப் பார்த்துவிட்டு அன்னை எம் தலைவியை நோக்கி நீ முப்புரங்களில் தீ விளையாடும்வண்ணம் அம்பால் விளையாடிய அம்பலவாணனது மலைப்பக்கத்தே சென்று விளையாடற்க என்றாள் என்றவாறு.

தேன் முதிர்ந்தமையை நுகரும் வண்டுகள் சுற்றுவதால் அறிந்து வேடர்கள் அதனை வீண்போகாது எடுக்கக் கண்ணேணி செப்பனிட்டாற் போல, நீயும் சிவத்தின் கருணை முதிர்வுகண்டு அனவரத தியானம் புரிய வேண்டும் என்பது தோன்றக் கூறியவாறு.

இற்செறிக்கப்படுவதால் நீ நினையும் களவிற்கு இடையீடாம்; ஆகவே வரைந்துகொள் என்றவாறாம். (18)

## தமர்நினைவு உரைத்து வரைவுகடாதல்

### 'இன்பம் பெறாவிடின் இகழும் உலகு என்றது'

*சிவத்தலைவி பரையால் இற்செறிக்கப்படுவாளாயின், எம் உறவினர் பருவ முதிர்வுகண்டு மகட்பேச வருவர்; பரை விரையும் பக்குவர்க்கு அளிக்கவும்கூடும்; அதனால் தலைவிக்குத் துன்பம் மிகும் என வரைவுகடாவா நிற்றல்.*

*இன்பின் பிரிவு மிகுதிகண்டு நீ பெறாவிடில், உலகு இகழும் என்பது திருவாசக வியாக்கியானம்.*

சுற்றுஞ் சடைக்கற்றைச் சிற்றம் பலவற் றொழாதுதொல்சீர்
கற்றும் அறியல ரிற்சிலம் பாவிடை நைவதுகண்
டெற்றுந் திரையின் னமிர்தை யினித்தமர் இற்செறிப்பார்
மற்றுஞ் சிலபல சீறூர் பகர்பெரு வார்த்தைகளே. 134

*பொ - ரை: சிலம்பா! சுற்றப்பட்ட சடைக்கற்றையையுடைய சிற்றம்பலநாதனை முற்பிறவியில் தொழாமையான், நூல் பல கற்றும் இறைவன் புகழை அறியாதார்போல, முலைச்சுமை தாங்காது இடைவருந்த அதனைக் கண்டு, எற்றும் அலைகளை யுடைய பாற்கடலிற்றோன்றிய அமுதத்தை ஒப்பாளை இப்போது தமர் இற்செறிப்பார்; அன்றியும் இச் சிற்றூரார் பேசும் வார்த்தை களும் சிலபல உளவாம் என்றவாறு.*

*கற்றதனாலாய பயன் என்கொல் வாலறிவன் நற்றாள் தொழாரெனின் என்றாங்குப் பல நூல்களைக் கற்றுவைத்தும் இறைவன் பொருள்சேர் புகழை அறியார் உலக அல்லலிடை அகப்பட்டு வருந்துவதுபோல இடை சுமை தாங்காது வருந்துவ தாயிற்று என்பதாம். இற்செறித்தலாவது, அமிர்தைத் தரமறிந்து வரைந்து நுகர்வாரிடை ஒப்படைப்பதற்காகப் பாதுகாத்தல்.*

*ஊரர் இற்செறிக்கப்பட்டமை அறிந்து, இருக்கின்ற காளை யரைச் சுட்டி இவர்க்கு மகட்பேசலாம், அவர்க்கு மகட்பேசலா மெனப் பத்தெட்டு வார்த்தைகளைப் பேசுவர்; அவை தலைவியின் செவிப்படுமாயின் அவள் நோவாள்; உன் இன்பம் இடையிடும்; ஆகவே, வரைக என விரைவித்தவாறாம். (19)*

## எதிர்கோள் கூறி வரைவுகடாதல்

### 'திரோதையும் பரையும் சேர்ந்திடும் என்றது'

*நீ வரைவொடுவரின், அன்னையாகிய பரையும், ஐயன்மார் களாகிற திரோதையும் நின் வரவு எதிர்கொள்ளா நிற்பர்; இனிப் பல எண்ணாது நாடு அறிய வரைவொடு வருக என எதிர்கொள்ளு தலைக் கூறி வரைவுகடாயதாம். சேர்த்திடும் என்ற பாடமும் உண்டு.*

வழியும் அதுவன்னை யென்னின் மகிழும்வந் தெந்தையுநின்
மொழியின் வழிநிற்கும் சுற்றமுன் னேவயம் அம்பலத்துக்
குழியும்ப ரேத்துமெங் கூத்தன்குற் றாலமுற் றும்மறியக்
கெழியும்ம வேபணைத் தோள்பல என்னோ கிளக்கின்றதே. 135

*பொ - ரை:* சிவத்தை நீ எய்துதற்கு உரிய உபாயமும் இதுவே; தலைவிக்கேற்ற தலைவனை வேண்டும் அன்னையும் என்னைப் போல மகிழும்; உலகியலான் மறுத்து அகன்று நின்றானாயினும் தகுதி நோக்கி முன்னே வந்து என் தந்தையும் நின் மொழியைக் கடவாது நிற்கும்; நீ வரைவு வேண்டுவதன்முன்னே சுற்றத்தாரும் நின்வயமாவர்; பல பேசுவானேன்; திரண்டுநின்று தேவர்கள் துதிக்கும் அம்பலவாணப் பெருமானது குற்றால முழுதும் அறியப் பொருந்திய உம்முடையனவே பணைபோலும் தோள்கள்; ஐயுற வேண்டா என்றவாறு.

உயிர் சிவத்தை எய்துதற்கு இடையூறாக நின்ற திரோதை, உயிர் சிவத்தை எய்துதற்கு உறுதுணையான திருவருளாகும்; சிவத்தின் தாயாகிய பரை உயிரொடு சிவத்தைப் பார்த்து மகிழும்; இதனைக்கண்ட எல்லாம் இன்புறும் என்றவாறாம்.

திரோதையாவது சிவத்தைச் சிறப்பியல்பான் உணரும் மெய்யுணர்வு தோன்றுங்காறும் அவனது பெருங்கருணை உயிர்கண்மாட்டு ஒருங்கே நிகழாதவண்ணம் தடுத்துநிற்கும் உயிர்க் குற்றமாகிய அவ்வம்மலசத்தியின் வழி நின்று அவற்றை நடத்துவதாகிய சிவசங்கற்பம். இதுவே மணிவாசகத்துள் 'பந்தமுமாய் வீடுமாயினார்க்கு' என்பதனுள் பந்தமுமாய் என்பதனால் குறிக்கப்பெற்றது. இது பரிபாகம் வருவித்தற் பொருட்டு மலத்தின்வழி நின்று மோகம் மதம் அராகம் கவலை தாபம் வாட்டம் விசித்திரம் முதலிய அறுவகைக் காரியங்களையும் செய்விப்பதாகிய சிவசங்கற்பத்திற்கு ஏதுவாதலின் திரோதான மலம் என்றும் உபசரித்துக் கூறப்படும். மலசத்தி குறையக் குறைய திரோதையாகிய இதுவும் தன் மறைப்புத்தன்மை சிறிது சிறிதாக நீங்கிச் சிற்சத்தி ரூபமாய்ப் பதிந்து பதிந்து முடிவின்கண் அதிதீவிர சத்தியாய்ப் பதியும். இதனால் முறையே விடயங்களில் வெறுப்பும், வீடுபேற்றில் விருப்பும் நிகழும். அதற்கு ஏற்ப அங்கங்கே பலவகை உபதேசங்கள் சோபானக்கிரமமாக விளைய ஆன்மாவிற்கு அனுபவ ஞானங்களும் ஏற்படும்; இங்ஙனம் உபகாரப்படுவது சிவசங்கற்ப ரூபமான திரோதை என்க.

பரை பரிபூரணானந்த பரசிவத்தின் ஆயிரத்தில் ஒரு கூறான ஆற்றல். அதிலிருந்து சிவ தத்துவம் தோன்றுதலால் பரை சிவத்திற்குத் தாய் எனல் மரபு.

உயிர் சிவத்தொடு என்றும் இயையப்பெறும் உபாயத்தை உணரின் தடையாயிருந்த திரோதை கலப்பிற்கு உபகாரப்படும் அருட்சத்தியாய் உபகரிக்கும் என்பதாம். (20)

## ஏறுகோள் கூறி வரைவுகடாதல்

### 'அன்பு புரிபவர்க்கு இன்பு எளிது என்றது'

*பொறிகளாகிற ஏறுகளை வென்று அடக்கித் தம்வழி நடக்கச் செய்து, சிவத்தினிடமே அன்பு செய்வார்க்குச் சிவத்தைச் சார்ந்து பேரின்பம் எய்துதல் எளிது எனக் கூறி வரைவுகடாதலாம்.*

**படையார் கருங்கண்ணி வண்ணப் பயோதரப் பாரமுநுண்**
**இடையார் மெலிவுங்கண் டண்டர்கள் ஈர்முல்லை வேலியெம்மூர்**
**விடையார் மருப்புத் திருத்திவிட் டார்வியன் றென்புலியூர்**
**உடையார் கடவி வருவது போலும் உருவினதே.** 136

*பொ - ரை: படைக்கலம்போலும் கரிய கண்ணையுடைய தலைவியின் முலைப்பாரத்தையும், நுண்ணிய இடையின் மெலிவையுங்கண்டு, என்னையர்களாகிய இடையர்கள் ஈரிய முல்லைக்கொடிகளை வேலியாகவுடைய எம் ஊரின்கண் காளைகளின் கொம்புகளைச் சீவித் திருத்திவிட்டார்கள்; அக் காளையோ அகன்ற தென்பூலியூரையுடையவர் செலுத்தி வரும் இடபத்தை ஒத்த உருவுடையது; இனி என்ன நடக்குமோ என்றவாறு.*

*திரோதை பரிபாகமும் அன்பும் மிகுதற்பொருட்டும், உயிர் இந்திரியங்களை வென்று சிவனருள்வழி நிற்றற் பொருட்டும் ஏறடக்கல் என்றதொரு முறைமையை நிறுவும்போலும் என்று திருவருள் உயிர்க்கு உணர்த்தியதாம்.*

*தென்புலியூர் உடையார் கடவி வருவதுபோலும் உருவினது என்றது அடக்க முடியாதது என அதன் ஆற்றல் மிகுக்கக் கூறியதன்று; நும் புணர்ச்சி அவனருளால் நிகழ்ந்தவாறு, இதனை அடக்கும் வெற்றியும் அவனருளாலே உன்னை அன்றி வேறு யாருக்கும் கிட்டாது என்றவாறாம்.* (21)

## அயலுரை உரைத்து வரைவுகடாதல்

### 'அடியார் இன்பே ஆர்வார் என்றது'

*சிவபரம்பொருளிடம் மெய்யடிமைத்திறம் பூண்டார் அதன் இன்பத்தை நுகர்வர்போலும்; நீ வரைந்துகொள்ளத் தாழ்க்கின்றமையின், நான் சொல்வதென்னோ எனப் புறமொழி யாக அயலுரை உரைத்து வரைவுகடாவா நிற்றல்.*

**உருப்பனை யன்னகைக் குன்றொன் றுரித்துர வூரெரித்த**
**நெருப்பனை அம்பலத் தாதியை உம்பர்சென் றேத்திநிற்குந்**

**திருப்பனை யூரனை யாளைப்பொன் நாளைப் புனைதல்செப்பிப்**
**பொருப்பனை முன்னின்றென் னோவினை யேன்யான் புகல்வதுவே.137**

*பொ - ரை: வடிவாற் பனையையொக்கும் கையையுடைய மலை ஒன்றை உரித்து, வலிமிக்க முப்புரங்களை எரித்த தீயுடையானாகிய சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ள முதல் வனைத் தேவர்கள் சென்று வழிபட்டுநிற்கும் திருப்பனையூரை யொத்த தலைவியை, அயலார் நாளை பொன்சூட்டுதலைச் சொல்லிக்கொண்டு இவ் வகையில் தீவினையேனாகிய யான் முன்னின்று பொருப்பனைச் சொல்லுவதென்னோ? என்றவாறு.*

*அயலார் நாளை பொன்சூட்டச் சொல்லி அனுப்பினார்; வரையாது தாழ்க்கும் சிலம்பற்கு யான் சொல்வது என்னோ என்பது கருத்து.*

*அடியார் இன்பு ஆர்வர் என்றது உயிர்க்கு அன்பு இல்லை என்றது அன்று; அவர்கள்போல விரைந்து அவ்வன்பைப் பலர் அறிய வெளிப்படுத்த வேண்டும் என்பது குறிப்பு. (22)*

## தினைமுதிர்வுரைத்து வரைவுகடாதல்

### ‘பணியொழிந்தாற் சிவம் பலியாது என்றது’

*சிவத்திற்குப் புனம் காத்தலாகிய பணி இன்று உள்ளது. புனமோ தம் வினைப்போகத்து முற்றிவிட்டது. அதனைக் காக்க வேண்டும் இன்றியமையாமை இனி இல்லை. ஆகவே, சிவம் பரை அருகில் தங்கும். அதனால் நும் கலப்பிற்கு இடையூறு நிகழும்; வரைந்துகொள் என வரைவுகடாயது.*

**மாதிடம் கொண்டம் பலத்துநின் றோன்வட வான்கயிலைப்**
**போதிடம் கொண்டபொன் வேங்கை தினைப்புனங் கொய்கவென்று**
**தாதிடம் கொண்டுபொன் வீசித்தன் கள்வாய் சொரியநின்று**
**சோதிடம் கொண்டிதெம் மைக்கெடு வித்தது தூமொழியே. 138**

*பொ - ரை: தூமொழி! உமாதேவியாரை இடப்பாகத்துக் கொண்டு எல்லாரும் காண அம்பலத்தின்கண் நின்றோனது வடக்கின்கண்ணதாகிய பெரிய கயிலை மலைக்கண் உள்ள பூத்த பொன்னிறமான வேங்கையானது தினைப்புனத்தைக் கொய்க என்று தாதை இடத்தேகொண்டு, பொன்மலர்களைத் தூவி, தன் தேனைச் சொரிந்து, சோதிடம் சொல்லி எம்மைக் கெடுத்து விட்டது; இனி என்ன செய்வோம்? என்றவாறு.*

*சோதிடம் சொல்லுவார், சந்தனம் முதலிய தாதுகளைப் பூசி, பொற்பூக்களைத் தூவி, கள்ளை உள்ளே சொரிந்து தெய்வமேறிக் கூறுவர். அதுபோல வேங்கையும் மகரந்தப்பொடியைப் பரப்பி, பொன்னிறமான பூக்களைத் தூவி, தேனைப் பூத்த இடங்களில்*

சொரிந்து, சோதிடம் கூறியது என இருபாலும் பொருள் கொள்ளவைத்தமை காண்க. பேராசிரியர் உரை இதனின் வேறானது.

இதனால் வினைப்போகம் முதிர்ந்தது. உயிர்கட்கு வினைப் போகத்தை ஊட்ட உருமேனி தாங்கிவந்த சிவம் தனித்து இல்லில் தங்க முற்படும். அதுபோது உயிரோடு கலப்பு நிகழாதாம். ஆதலால், விரைய வரைக என்று திருவருள் ஊக்கியவாறு உணர்த்தப்பெற்றது. (23)

## பகல்வரல் விலக்கி வரைவுகடாதல்

### 'பசுகரணத்தாற் பலியாது என்றது'

உயிரைத் திருவருள் எதிர்முகமாக நோக்கிநின்று, பசுகரணங்கொண்டு சிவத்தைக் கூடுதல் இயலாது; ஆகையால், பதிகரணமாக்கிக் காணவும் கலக்கவும் முற்படுக; அதற்கு வரைதலே இன்றியமையாதது என வரைவுகடாதல்.

**வடிவார் வயற்றில்லை யோன்மல யத்துநின் றும்வருதேன்**
**கடிவார் களிவண்டு நின்றலர் தூற்றப் பெருங்கணியார்**
**நொடிவார் நமக்கினி நோதக யானுமக் கென்னுரைக்கேன்**
**தடிவார் தினையெமர் காவேம் பெருமவித் தண்புனமே.** 139

பொ - ரை: அழகு அமர்ந்த வயல்சூழ்ந்த தில்லைக்கண் உளனாகிய இறைவனது பொதிய மலையின்கண் நின்றும் வருகின்ற தேன்களும், மணத்தையே ஆராய்கின்ற நெடிய வண்டுகளும் நின்று பூக்களைக் குடைந்து தூற்ற, பெரிய வேங்கைகள் இனி நமக்குத் துன்பம்மிகத் தினைகொய்யும் பருவம் கூறாநின்றது; யான் உமக்கு என்ன சொல்வேன்; எம் ஐயன்மார் தினையை அறுப்பார்கள்; அதனால் இத் தண்புனத்தே யாம் இனிக்காவேம்; நீ பகற்காலத்து வரவேண்டா என்றவாறு.

கணி என்பது வேங்கை மரத்திற்கும் சோதிடருக்கும் பொது வான பெயர். காலம் குறித்தமையின் இரு பொருளும் தோன்றக் கணியார் என 'ஆர்' புணர்த்துக் கூறினார். வேங்கை தினை அறுக்கும்காலம் குறித்தது; இன்று எம் வினை முடிந்தது; பகற்கண் வாரேம்; எம்மைக் குறித்து நீவிரும் வாரற்க என்றாளாம்.

பகல் பசுகரணமாயவாறு யாங்ஙனம் எனில், பகற்பொழுதில் ஆன்மா எல்லாக் கருவிகரணங்களும் தொழிற்பட ஆன்மா புருவமத்தியில் நனவில் விளங்கும்நிலை பகற்காலத்தின்கண் ஆதலின், கருவிகரணங்கள் யாவும் சீவபோதவழி நின்று கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று இயங்குதலாம். இங்ஙனம் இயங்கும் நனவுநிலை நிகழ்வதாய பகற்கண் சிவத்தை எய்த முடியாது. பசுகரணங்கள் சிவகரணமாயபோதுதான் எய்துதல்

தகும். அங்ஙனமாதற்குப் புறவிடயங்களில் சென்று பற்றாது வரைதல் வேண்டும் என்று உபதேசித்தவாறு. இதுவே வரைவுகடாதல். (24)

## தினையொடு வெறுத்து வரைவுகடாதல்

### 'தவங்கள் செய்தும் சலிப்பிலை என்றது'

*யாம் வளர்த்த தினை நம்மைப் பிரித்தற்குரிய வினையாக விளைந்ததுபோல, யாம் பொறிபுலன்களை அடக்கித் தவங்கள் பல செய்தும் யாம் செய்த வினைகள் சலிக்காவாய் எம் கலப்பிற்கு இடையூறாயின என்று வரைவுகடாதல்.*

**நினைவித்துத் தன்னையென் னெஞ்சத் திருந்தம் பலத்துநின்று**
**புனைவித்த ஈசன் பொதியின் மலைப்பொருப் பன்விருப்பின்**
**தினைவித்திக் காத்துச் சிறந்துநின் றேமுக்குச் சென்றுசென்று**
**வினைவித்திக் காத்து விளைவுண்ட தாகி விளைந்ததுவே.** 140

*பொ - ரை: தன்னை நினைக்கச்செய்து, என் மனத்து எழுந்தருளி, அதுபோன்று தில்லைச் சிற்றம்பலத்தும் இருந்து, என்னால் தன்னைப் புகழ்வித்துக்கொண்ட ஈசனது பொதியில் மலைப்பொருப்பனிடத்து வைத்த விருப்பினால் தினைகளை விதைத்து அதற்கு ஊறு புகாவண்ணம் காத்துச் சிறந்து விளங்கிய எமக்குப் போய்ப்போய் வினைகளை விதைத்துக் காத்துத் துன்பவிளைவு விளைந்து, அவ் விளைவையும் உண்டாதாயிற்று என்றவாறு.*

*தினை விதைக்கப்போய் அது வினை விளைந்தது என்ற பழமொழியை அடியொற்றியது இப் பாடற்கருத்து. தினை என்றது வினையை. வினை நுகரப்பெற்று முதிர்ந்தன; பயன் ஊட்டும் பருவம் பெற்றன என்பதாம்.* (25)

## வேங்கையொடு வெறுத்து வரைவுகடாதல்

### 'பசுகரணங்களே பகையாம் என்றது'

*பசுகரணங்கள் முனைந்து நின்று புலன்களைப்பற்றி வினைகளை ஈட்டத்தொடங்கிய ஞான்றே அவற்றைக் கெடுத்துப் பதிகரணமாக மாற்றி இருப்பேமாயின், இன்று சிவம் உயிரொடு கலத்தற்கு இடையீடுபட்டிராதே என்று வேங்கையோடு வெறுத்து வரைவுகடாதல். வேங்கை - பசுகரணங்கள்.*

**கனைகடற் செய்தநஞ் சுண்டுகண் டார்க்கம் பலத்தமிழ்தாய்**
**வினைகெடச் செய்தவன் விண்டோய் கயிலை மயிலனையாய்**
**நனைகெடச் செய்தன மாயின் நமைக்கெடச் செய்திடுவான்**
**தினைகெடச் செய்திடு மாறுமுண் டோவித் திருக்கணியே.** 141

பொ - ரை: ஒலிக்கின்ற கடலினின்று எழுந்த நஞ்சை உண்டும் சிற்றம்பலத்துக் கண்டார்க்கு அமிழ்தமாய், யாம் ஈட்டிய வினைகளைக் கெடச் செய்தவனது ஆகாயத்தை அளாவிய கயிலை மலையை ஒத்தவளே! அரும்பியபோதே அரும்பைக் கெடுத்திருந்தேமாயின், இவ் வேங்கைமரம் நம்மை வருத்த தினை அறுக்கச்செய்யுமோ என்றவாறு.

கூர்முள் வேலை முளையிலே களையின், அது காழ்வர வயிர்க்காதன்றே; அதுபோல வினையாகிய வேங்கை அரும்பிய போதே கெடுத்திருந்தேமாயின் இன்று எமக்கு இந்தத் தீமை விளைந்திராதே என்று திருவருள் உயிர்மீது கொண்ட இரக்கத்தால் கூறி, உயிரைத் தவம் செய்க; பதிகரணமாக்குக; பதியின் நீழலிலே நிற்க என வரைவுகடாயது. (26)

## இரக்கமுற்று வரைவுகடாதல்

### 'அருள் உயிர்க்கு இரங்கி அன்பு எடுத்துரைத்தது'

உயிர்த்தலைவனை அடிக்கடி காணுதலுக்கு வாய்ப்பாக வளர்த்த தினையும் கொய்யப்பட்டதே; இனி, அவன் சிவத்தைக் காணலாவதோர் உபாயம் யாது? என்று திருவருள் உயிருக்கு இரங்கி, வரைவுகடாயது. இன்பு எடுத்துரைத்தது என்பது வியாக்கியான பாடம்.

வழுவா இயலெம் மலையர் விதைப்பமற் றியாம்வளர்த்த
கொழுவார் தினையின் குழாங்களெல் லாமெங் குழாம்வணங்குஞ்
செழுவார் கழற்றில்லைச் சிற்றம் பலவரைச் சென்றுநின்று
தொழுவார் வினைநிற்கி லேநிற்ப தாவதித் தொல்புனத்தே. 142

பொ - ரை: குறித்த பருவம் தவறாமல் மலைவாணர்களாகிய எம்மவர் விதைப்ப, யாம் தீங்குபுகாதே வளர்த்த கொழுவிய நெடிய தினைத் திரள்களனைத்தும், எமது குழாம் சென்று வணங்கும் வளவிய நெடிய கழலையுடைய தில்லையம்பலவனைச் சென்று தொழுகின்றவர் வினைகள் கெடாது நிற்கின், இப் பழைய புனத்து நிற்பதாவது; இனி நில்லா என்றவாறு.

சிற்றம்பலநாதன் திருவடி தொழுதார் வினையும் நில்லா. அதுபோல இப் புனத்துத் தினையும் நில்லா; அறுக்கப்படும் என்பது கருத்து. (27)

## கொய்தமை கூறி வரைவுகடாதல்

### 'சரியையாதி மூன்றும் கடந்தது'

உயிர், சரியையாதி மூன்று நிலையினைக் கடந்து ஞானம் எய்திற்று; அதனால் என்றும் சிவச்சார்பு பெறுதற்குரியது; அதற்குரிய சதா சிவத்தியானம் புரிதலாகிய வரைவுபுரிதல் உயிரின் கடமை எனக் கூறி வரைவுகடாயது.

பொருப்பர்க்கி யாமொன்று மாட்டேம் புகலப் புகலெமக்காம்
விருப்பர்க் கியாவர்க்கும் மேலர்க்கு மேல்வரும் ஊரெரித்த
நெருப்பர்க்கு நீடம் பலவருக் கன்பர் குலநிலத்துக்
கருப்பற்று விட்டெனக் கொய்தற்ற தின்றிக் கடிப்புனமே. 143

*பொ - ரை: எமக்கு அடைக்கலத்தானமாகிற விருப்பினை உடையார்க்கு; எல்லாருக்கும் மேலானவர்க்கு; விண்ணில் பறந்து திரியும் முப்புரங்களை எரித்த கண் நெருப்பை உடையார்க்கு; ஊழிதோறூழி கண்ட அழியாத அம்பலத்தை உடையவர்க்கு அன்டராயினாருடைய கூட்டங்கள் உலகத்திலே பிறவிக்குக் காரண மான பற்றினைவிட்டு அகன்றாற்போல, இக் காவலை உடைய புனமும் இன்று தினை கொய்யப்பெற்றது ஆதலால், பொருப்பர்க்கு யாம் ஒன்றும் புகல வன்மையிலேம் என்றவாறு.*

*அவர் செய்ய வேண்டியதொன்றல்லது யாம் புகலுவது ஒன்றும் இன்று என்றதாம்.*

*சரியையாதி மூன்று: சரியை, கிரியை, யோகம் என்பன. இவை இறைவனுக்குச் செய்யும் பணியும் பூசையும் யோகமாகிய தியானமுமாகச் சிவஞானத்தைப் பயப்பன. இவற்றைக் கடந்தது எனின், சிவஞானம் கைவந்தது என்பதாம். ஞானம் கைவரவே உலகியலும், தலைமையும், தன் இன்பமும் கருதாதே சிவத்தோடு அனவரதமும் ஒன்றி நிற்றலாகிய வரைவே புரியத்தக்கது என்று விளக்கியதாம். (28)*

## பிரிவு அருமைகூறி வரைவு கடாதல்

### 'பழக்கந் தவிரப் பயிறல் பெரிதென்றது'

*திருவருள் உயிரை நோக்கி, பழக்கம் கொடிது; உண்டதையே உண்டு உடுத்ததையே உடுத்துக் கண்டதையே கண்டு, நுகர்ந்ததையே நுகர்வதுதான் உயிர்ப்பழக்கம். களவான் சிவத்தோடு சில காலமும், வெளிப்படையாக உலகியலோடு பலகாலமும் பழகி, சிவத்தோடு பழகும் சிலகாலத்துப் பேரின்பங்கண்டு மகிழும் இப் பழக்கத்தைவிட்டு, என்றும் சிவத்தோடு மருவிப் பேரின் பந்துய்க்கும் வாயிலாகிய வரைவே மேற்கொள்ளத்தக்கது என்பது தோன்றக் கிளிமேலிட்டுக் கதிரில் மேய்ந்த கிளி கதிரில்லாத தாளிலிருக்கின்றதுபோலத் தலைவரும் வருவாரோ என்று வினவுவதன் வாயிலாக வரைவு கடாயவாறு.*

பரிவுசெய் தாண்டம் பலத்துப் பயில்வோன் பரங்குன்றின்வாய்
அருவிசெய் தாழ்புனத் தைவணங் கொய்யவும் இவ்வனத்தே
பிரிவுசெய் தாலரி தேகொள்க பேயொடும் என்னும்பெற்றி
இருவிசெய் தாளின் இருந்தின்று காட்டும் இளங்கிளியே. 144

பொ - ரை: எமக்கு இரங்கி எம்மை அன்புகூர்ந்து ஆட்கொண்டு அம்பலத்து எழுந்தருளியிருப்பவனது திருப்பரங்குன்றினிடத்து, அருவி நீராற் செய்யப்பட்ட தாழ்ந்த புனத்தில் உண்டான மலை நெல்லைக் கொய்யவும், இக் காட்டிலே அரிதாளிலே இருந்து, நட்புச்செய்யின் பேயோடாயினும் பிரிவு அரிது; இதனை உளங்கொள்வாயாக என்று இளம் கிள்ளைகள் இப்போது காட்டாநின்றன என்றவாறு.

நெல் விளைந்து இருந்த காலத்துக் கதிரில் வீழ்ந்த கிளிகள் பேயோடாயினும் பிரிவரிது என்பதை உட்கொண்டு, நெல் அறுத்தபிறகும் தாளில் வந்து தங்கி அத் தத்துவத்தை எமக்குப் புலப்படுத்துகின்றன என்றாள் திருவருட்டோழி. இதன் கருத்து, எம்மிடை இதுவரை பழகிய காதலர் இனி என்னசெய்யப் போகிறார்? கிளிபோல விடாக்காதலராக விளங்கவேண்டும் என்று குறிப்பித்தவாறாம் என உரைத்தலுமாம்.

இதனால் உயிர் உலகப்பற்றுக்கொண்டு உழலுதலாகிய பழக்கம் தீர, வரைதலாகிய பழக்கத்தைப் பழகவேண்டுமேயன்றி, உழப்புவதேன் என்ற பேரின்பக்கருத்து பேசப்படுகின்றது. (29)

## மயிலொடு கூறி வரைவு கடாதல்

### 'அருள் கரணத்தில் ஆர்ந்தினி துரைத்தது'

திருவருள், சிவத்தொடுசார்ந்து சிவகரணம் பெற்று, புனத்தில் வாழும் பசுகரணத்தை விடாத மயிலைப் பார்த்து, சிவத்தைச் சாரும் உயிர் ஒன்று வரும்; அது வந்தால் யாம் துணியாத பிரிவைத் துணிந்துவிட்டோம் எனக் கூறுக என வேண்டிக்கோடல் வாயிலாக உயிரை வரைவுகடாயது.

சுத்தாவத்தையில் அருள் சிவகரணத்தைச் சேர்ந்து பசுகரணத்தைப் பரத்துயிர்க்குரை என்றல் என்பது வியாக்கியான விளக்கம். இதில் பசுகரணம் மயில். பரத்துயிர் - பரத்தைச்சார்ந்து பரமேயான உயிர்த்தலைவன் எனக்கொள்க. இதனானும் மேற்கூறிய கொளுக்கருத்து நன்கு விளங்கும்.

கணியார் கருத்தின்று முற்றிற் றியாஞ்சென்றும் கார்ப்புனமே
மணியார் பொழில்காள் மறத்திர்கண் டீர்மன்னும் அம்பலத்தோன்
அணியார் கயிலை மயில்காள் அயில்வேல் ஒருவர்வந்தால்
துணியா தனதுணிந் தாரென்னும் நீர்மைகள் சொல்லுமினே. 145

பொ - ரை: வேங்கையின் எண்ணம் இன்று ஈடேறிற்று; யாங்கள் செல்கின்றோம்; கரிய புனமே! மணிகள் நிறைந்த பொழில்களே! வேங்கை மரத்தோடு நீங்கள் பழகுவதால் எம்மை மறந்துவிடுவீர்கள்; நிலைபேறான சிற்றம்பலத்துறைவோனது அழகமைந்த கயிலையில் வாழும் மயில்களே! கூரிய வேலை

ஏந்திய ஒருவர் வந்தால் துணியக்கூடாததொரு செயலைத் துணிந்தனர் என்று சொல்லுமின்கள் என்றவாறு.

துணியாத செயல் - பிரிவு. இதனால் உயிர்கள் சார்ந்ததன் வண்ணமாதற்றன்மையால் வேங்கையோடு பழகிப் புனமும் பொழிலும் மறக்கலாம். பேரருளாளனது கயிலையைச்சார்ந்த நீங்கள் அவனைப்போல அருள்வடிவாய் இருப்பவர்கள்; உறுதியாகச் சொல்வீர்கள் என்று துணிவுரைத்தது. (30)

## வறும்புனங் கண்டு வருந்தல்

### 'அருளன்றி இன்பம் ஆராதென்றது'

சிவமும் திருவருளும் புனத்திடைநின்று அகன்றபின் உயிர் புனத்திடைச் சென்று பொலிவழிந்து நிற்றலைக்கண்டு வருந்தா நிற்றல். புனம் என்றது ஈண்டுத் துரியத்தானத்தை.

**பொதுவினிற் றீர்த்தென்னை யாண்டோன் புலியூ ரரன்பொருப்பே**
**இதுவெனில் என்னின் றிருக்கின்ற வாறெம் இரும்பொழிலே**
**எதுநுமக் கெய்திய தென்னுற் றனிரறை யீண்டருவி**
**மதுவினிற் கைப்புவைத் தாலொத்த வாமற்றிவ் வான்புனமே.** 146

பொ - ரை: அடியேனைப் பொதுமையினின்றும் தவிர்த்து ஆட்கொண்டு புலியூர்க்கண் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய மலை இதுவாயின், இன்று இது இருக்கின்றவாறு என்? எம்முடைய பெரிய பொழிலே! இன்று நுமக்குவந்த துன்பம் யாது? என்னுற்றீர்? அன்றியும், இப்புனம் ஒலிக்கின்ற பெரிய அருவியாய் விழும் தேனில் அதன் இன் சுவையைமாற்றிக் கைப்புச்சுவையை வைத்தாற்போலுள்ளது இது என்ன? என்றவாறு.

சிவம் இன்மையால் துரியத்தானம் வெறுவிதாய் இருத்தலைக் கண்டு உயிர் யாம் துரியமடைந்தும், இன்பம் எய்திற்றிலமே; இத் தானம் தேனில் கைப்பு வைத்தாற்போலுள்ளதே என்று உயிர் வருந்தியவாறாம்.

என்னைப் பொதுவினில் தீர்த்து ஆண்டோன் - பலவேறு சமயச்சூழலில் அகப்பட்டு உய்யும்நெறி இதுவோ அதுவோ என்று மயங்கி ஒன்றும் அறியாது பொதுமையில் நின்ற என்னை இதுதான் உண்மைநெறி என்று காட்டித் தன் தாட்டாமரையில் வைத்து ஆட்கொண்டோன். பொதுவினில் நில்லாது உயிர் ஒன்றைப்பற்றி நிற்குமாயின், அது உண்மைநெறியை உணர்த்தினும் பரிபாகமுறாது மயங்குமாதலின் 'பொதுவினில் தீர்த்து' என்றார். இன்னும் இதற்குப் பொதுவாகிய முறைமையினின்றும் நீக்கி எனை உளம் நெகிழ்விப்பதோர் உபாயத்தால் ஆண்டவன் எனலும் ஆம் என்பர் பேராசிரியர். (31)

## பதிநோக்கி வருந்தல்

**'இன்பப் பெருமைகண்டு எளிமையன்று என்றது'**

*சிவம் எழுந்தருளியுள்ள இடம் இந்தப் புனத்திற்கு மிக அணித்தாயினும் நம்மால் சென்று அடையத்தக்கது அன்று; சிவமும் இன்ப கனமாதலினால் எம்மால் எளிதில் எய்தத்தக்கதன்று என்று பதியை நோக்கி வருந்தாநிற்றல்.*

ஆனந்த மாக்கடல் ஆடுசிற் றம்பலம் அன்னபொன்னின்
தேனுந்து மாமலைச் சீறூ ரிதுசெய்ய லாவதில்லை
வானுந்து மாமதி வேண்டி யழுமழப் போலுமன்னோ
நானுந் தளர்ந்தனன் நீயுந் தளர்ந்தனை நன்னெஞ்சமே. 147

*பொ - ரை: நல்ல நெஞ்சமே! ஆனந்த சாகரம் நின்று ஆடுகின்ற சிற்றம்பலத்தை ஒத்த பொன்னினது தேனருவி தத்திப்பாயும் பெரிய மலைக்கண் உள்ள சீறூர் இது; இத்துணை அண்மையிலிருப்பினும் நம்மால் செய்யலாவது ஒன்றில்லை; அதனால், விண்மதியை எடுத்துத் தா என்று அழும் குழவிபோல நீயும் தளர்ந்தாய் நானும் தளர்ந்தேன் என்றவாறு.*

*சிவம் உறையும் பதியாகிய துரியாதீதத்தைக்கண்டு அங்கே செல்லும் பரிபாகமின்மையான் உயிர் வருந்துவது காண்க. சிவானந்தம் ஆதி நடு அந்தம் இல்லதாகலான் அதனை 'மாக்கடல்' என்றார்.* *(32)*

## 14. இரவுக்குறி

**'இரவுக் குறித்துறை முப்பத்து மூன்றும்
அருளே சிவத்தோ டாக்கியவ் வருமை
தெரிய வற்புறுத்திச் சிவனது கருணையின்
இச்சை பலவும் எடுத்தெடுத் தருளல்'**

*பகற்குறியாகிய பசுபோதமுனைப்பால் சிவம் எய்த முடியாதது என்பதனைத் திருவருள் பலவாற்றானும் எடுத்துக்கூறி, இரவுக்குறியாகிய பதிகரணம் வாய்க்கச் செய்து, சிவத்தோடு கூட்டிச் சிவகருணையின் இச்சைகள் பலவற்றையும் உயிர்க்கு எடுத்து உபதேசித்தலாம். இது முப்பத்துமூன்று கிளவிகளை உடையது.*

### இரவுக்குறி வேண்டல்

**'அருளை இரந்து உயிர் அன்பாய்க் கலந்தது'**

*சிவம் உறையும் இடத்தைநோக்கி வருந்தாநின்ற உயிர், இன்றிரவு நும் ஊர்க்கு யான் விருந்தாய் வருவேன் ஏற்றருள வேண்டும் என்று வேண்டாநிற்றல்.*

**மருந்துநம் அல்லற் பிறவிப் பிணிக்கம் பலத்தமிர்தாய்**
**இருந்தனர் குன்றினின் றேங்கும் அருவிசென் றேர்திகழப்**
**பொருந்தின மேகம் புதைந்திருள் தூங்கும் புனையிறும்பின்**
**விருந்தினன் யானுங்கள் சீறூ ரதனுக்கு வெள்வளையே. 148**

*பொ - ரை: வெள்வளையே! துன்பத்தைச் செய்யும் நம் பிறவியாகிய பிணிக்கு அருந்தும் மருந்தாயும், சிற்றம்பலத்து அமுதமாயும் இருந்த அம்பலவாணப்பெருமானது மலையின்கண் நின்று ஒலிக்கும் அருவிகள் பாய்ந்து அழகு மிகும்படி மேகங்கள் வந்துபொருந்தின; அதனால் மேகத்துள் புதைந்து இருள் செறிந்து இருக்கின்ற செய்காட்டினையுடைய நுமது சிற்றூர்க்கு யான் ஒரு விருந்தினன்; என்னை ஏற்றுக்கொள் என்றவாறு.*

*மருந்து உண்டற்கு வெறுப்பாய் உடலுக்கு நன்மை பயப்பது. அமுது உண்டற்கும் இனிதாய் உடலை அழியாது பாதுகாப்பது. மருந்து பிணி தீர்ப்பது. அமுதம் உடலையும் உயிரையும் வளர்ப்பது. அம்பலவன் இரண்டும் ஆனான் என்பது. இறும்பு - செய்காடு.*

*இதனால் உயிர் திருவருளைநோக்கிச் சிவகரணம்பெற்றுச் சிவத்தொடு கலத்தலை வேண்டியவாறு காண்க. (1)*

## வழியருமைகூறி மறுத்தல்

### 'அருள் உயிர் போதம் அகறல்கண்டு இன்புறல்'

*சிவபோதத்தால் பதியை அடையவேண்டியிருக்க, உயிர் தன்னையிழந்து நிற்கின்றமையைத் திருவருள்கண்டு, இவ்வுயிர்க்குத் தற்போதம் கழன்றது சிவத்தொடு கலக்கும் சிறப்பு உண்டாயிற்று என்று இன்புறுதலாம்.*

**விசும்பினுக் கேணி நெறியன்ன சின்னெறி மேன்மழைதூங்**
**கசும்பினிற் றுன்னி அளிநுழைக் தாலொக்கும் ஐயமெய்யே**
**இசும்பினிற் சிந்தைக்கும் ஏறற் கரிதெழில் அம்பலத்துப்**
**பசும்பனிக் கோடு மிலைந்தான் மலயத்தெம் வாழ்பதியே. 149**

*பொ - ரை: ஐய! விசும்பில் ஏறுதற்கு இடப்பட்டதோர் ஏணிவழி போன்ற சிறுவழியின்மேல் மழை இடையறாது பெய்தலான் இடையிடை உண்டான அசும்பின்கட்சென்று பொருந்தி ஏறுமிடத்து வழிநெருக்கத்தால் குகைக்குள் நுழைவதுபோன்றிருக்கும் அழகையுடைய அம்பலத்தின்கண் உளனாகிய குளிர்ந்த பிறையைச்சூடிய பெருமானது மலையின் கண்ணதாகிய எம் வாழ்பதி வழுக்கினால் உண்மையாகவே மனத்தாலும் ஏறற்கு அரிதாகும்; அதனால் ஆண்டு நீர் வரத்தகாது என்றவாறு.*

இசும்பு - வழுக்கு. அசும்பு - சிறுதிவலை. எம்பதி சிந்தைக்கும் ஏறற்கு அரிது என்பதனால் வரையாது எய்தும் இன்பத்தை நீர் கருதின், எமது ஊரவர் அறியின் இதன் விளைவு தீதாகும். அதனால் மனத்தாலும் இந்த ஒழுக்கத்தை நினைத்தலாகாது என்று கூறி வரைவுடம்படுத்தவாறு. இதனால் தற்போதம் கழன்று, திருவருளைத் துணைவேண்டிநின்ற உயிர்க்குத் திருவருள், நீ அடையக்கருதும் பேரின்பம் இந்நிலையில் சிந்தைக்கும் எட்டாதது உறைத்த அன்பாகிய வரைவுநேர்ந்தால் அல்லது என்பது வலியுறுத்தப் பெற்றவாறு. (2)

## நின்று நெஞ்சுடைதல்

### 'இன்பம் கிடைக்குமோ என்று நெஞ்சு உடைந்தது'

பெறுதற்கரிய சிவத்தைப் பெற எண்ணி மெலிவிக்கும் இதற்கு யான் ஆற்றேன் இறந்துபடுவேன் எனக் கூறி, மனம் உடைந்து வருந்தாநிற்றல்.

**மாற்றேன் எனவந்த காலனை ஓல மிடவடர்த்த**
**கோற்றேன் குளிர்தில்லைக் கூத்தன் கொடுங்குன்றின் நீள்குடுமி**
**மேற்றேன் விரும்பும் முடவனைப் போல மெலியுநெஞ்சே**
**ஆற்றேன் அரிய அரிவைக்கு நீவைத்த அன்பினுக்கே.** 150

பொ - ரை: ஒருவரானும் மாற்றப்படேன் என வீறுகொண்டு வழிபடும் மார்க்கண்டேயன்மேல்வந்த காலனை, ஓலமிடுவண்ணம் நெருக்கி வருத்திய கொம்புத்தேனாகிய குளிர்ந்த தில்லைக்கண் உளனாகிய கூத்தப்பெருமானது கொடுங்குன்றின் உச்சிமேலுள்ள தேனை விரும்பும் முடவனைப்போல மெலியும் நெஞ்சே! மீட்டும் கிடைத்தற்கரிய சிவமாகிய தலைவியிடத்து நீ வைத்த அன்பால் யான் ஆற்றேன் என்றவாறு.

எளிதின் அடைதற்கு அரியது சிவம் என எண்ணி நெஞ்சுடைந்தவாறு. நியதியின்வழி ஒழுகுதல் காலன் இயல்பாதலின் 'மாற்றேன் என வந்த காலன்' என்றார். 'முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டதுபோல' என்னும் பழமொழிக் கருத்து அமைக்கப்பெற்றுள்ளமை காண்க.

கூத்தப்பெருமானைக் கொம்புத்தேன் என்றும், சிவத் தலைவியைத் தேன் என்றும், பரிபாகக் குறைவுள்ள தன்னை முடவன் என்றும் உருவகித்த உயிரின் கருத்து, சிவமே கூத்தப் பெருமான்; அவனே அடியேனுக்கு அளவிலாப் பேரின்பம் வழங்கும்வண்ணம் எளிவந்து தலைவியானன் என்ற பேரின்பக் கருத்து விளங்கவைத்ததாம். (3)

## இரவுக் குறி நேர்தல்

### 'உயிர்ப்பரிவு அருள்கண்டு உவந்து இயம்பியது'

*சிவம் மீண்டும் எய்துதற்கரியது என்று உயிர் மனமுடைந்து வருந்துதலைத் திருவருள் கண்டு, சிவத்தையின்றி இவ்வுயிர் தனித்து வாழாது; சிவம் ஊட்ட உண்டு, காட்டக் கண்டு களித்துவாழ்தலே உயிர் இயல்பாயிற்று என்று மகிழ்ந்து, உயிரை நோக்கி யாளிகள் நிரைத்து நின்று யானைகளைத் தேடும் இராவழியில் வந்து மீள்வேன் என்றாய்; இதற்குத் தீவினையேன் சொல்லுவது எவன் என்று மறுக்கும்வாய்பாட்டான் இரவுக்குறி நேர்தலாம்.*

**கூளி நிரைக்கநின் றம்பலத் தாடி குரைகழற்கீழ்த்**
**தூளி நிரைத்த சுடர்முடி யோயிவள் தோணசையால்**
**ஆளி நிரைத்துடல் ஆனைகள் தேரும் இரவில்வந்து**
**மீளி யுரைத்தி வினையேன் உரைப்பதென் மெல்லியற்கே.** 151

*பொ - ரை:* பேய்கள் வரிசையாய்நிற்ப நின்று சிற்றம்பலத்து ஆடுவானது ஒலிக்கும் கழலையுடைய திருவடிக்கண் உண்டாகிய தூளி நெருங்கிய முடியையுடையவனே! சிவத்தலைவியின் தோள்மீது வைத்த விருப்பான் அத் தியாளிகள் யாரும் குறுக்கே புகுந்து போகாதவாறு நிரைத்து நின்று, வலிய யானைகளைத் தேடும் இரவின்கண் வந்து மீளுதலைச் சொல்கின்றாய்; மென்மையான உள்ளம் படைத்த தலைவிக்குத் தீவினையேன் தெரிவிப்பது என்ன என்றவாறு.

*சிவானுபவத்தை எண்ணித் துரியங்கடந்த ஞானநிலையில் யோகவாயிலாகத் தியானநெறி பற்றி ஏறுவார்க்குக் கோபமாகிய யாளியும், காமமாகிய களிறும் பிறவும் இடைநின்று மறித்து உயிரைத் தம்வயப்படுத்தித் தாழ்த்துமாதலின் அவற்றுட்படாது மேலுச்சிநிலைசாரின் சிவப்பேறுண்டாம் எனக் குறி நேர்ந்ததாம்.*

(4)

## உட்கொளவினாதல்

### 'அருள் உயிர்கண்ட அனுபவம் கேட்டது'

*சிவத்தை எய்துதற்குத் துரியானுபவ நெறியில் அதற்குரிய ஆசாரசீலங்களுடன் வரவேண்டும் என்பதை உணர்த்த எண்ணிய திருவருள் நின் ஊரினுள்ளார் எம்மலர் சூடி, எச்சாந்து அணிந்து, எவ்விடம் விளையாடுவர் என்று வினவாநிற்றல்.*

**வரையன் றொருகால் இருகால் வளைய நிமிர்த்துவட்கார்**
**நிரையன் றழலெழ எய்துநின் றோன்றில்லை யன்ன நின்னூர்**

**விரையென்ன மென்னிழ லென்ன வெறியுறு தாதிவர்போ**
**துரையென்ன வோசிலம் பாநலம் பாவி யொளிர்வனவே. 152**

*பொ - ரை: சிலம்பா! அன்று ஒருமுறை மேருமலை இருதலையும் வளையும்வண்ணம் மார்பையும் தோளையும் நிமிர்த்துப் பகைவர் நிரையை அழலெழும்வகை எய்துநின்ற வனது தில்லையை ஒக்கும் நின்னூரினுள்ளார் நன்மைபரந்து விளங்குவனவாகப் பூசும் மணம் எத் தன்மையன? அவர் விளையாடும் மெல்லிய நிழல் எத்தன்மைய? அவர் சூடும் நன்மணம் பொருந்திய மகரந்தங்கள் சிந்தும்பூக்கள் எத் தன்மையான? உரைப்பாயாக என்றவாறு.*

*தில்லையன்ன நின் ஊர் என்றமையான் சிவத்துவ விளக்கம் பெற்ற பதி தலைவனது ஆதலின் எம் பதிக்கண்ணும் நும் பதியின் ஒழுகலாறு ஒத்ததாகலாம்; இல்லையாயினும் மேற்கொண்டு வருக என்றுணர்த்தியவாறு. (5)*

## உட்கொண்டு வினாதல்

### 'அறிவித்தால் அறிவன் என்று அனுபவம் கேட்டது'

*சிவத்தைச் சார்தற்குரிய திருநீறும் கண்டிகையும் அணிந்து செல்ல விரும்பி திருவருட்டோழியை நோக்கி, நின் ஊர்க்கண் வாழ்வார் பூசுவனவும் புனைவனவும் யாவை? என வினாவியது. உணர்த்தினாலன்றி உணராவுளங்கள் ஆகையால் உணர்த்த வேண்டும் என அனுபவம் கேட்டதாம்.*

**செம்மல ராயிரந் தூய்க்கரு மால்திருக் கண்ணணியும்**
**மெய்ம்மலர் ஈர்ங்கழ லம்பலத் தோன்மன்னு தென்மலயத்**
**தெம்மலர் சூடிநின் றெச்சாந் தணிந்தென்ன நன்னிழல்வாய்**
**அம்மலர் வாட்கணல் லாயெல்லி வாய்நுமர் ஆடுவதே. 153**

*பொ - ரை: அழகிய மலர்போலும் ஒளியோடு கூடிய கண்ணையுடையவளே! செந்தாமரை மலர்கள் ஆயிரத்தைக் கொண்டு முன்வழிபட்டு ஒன்று குறையக் கரிய திருமால் தாமரையை ஒக்கும் தமது கண்ணைத்தோண்டி அணியும் பெரிய மலர்போலும் ஈரிய திருவடியையுடைய அம்பலத்தான் தங்கும் பொதியிலிடத்து இராப்போது நுமர் விளையாடுவது எம் மலரைச் சூடிநின்று? எவ் வகையான சாந்தினை அணிந்து நின்று? என்ன நிழலிலே? கூறுவாயாக என்றவாறு.*

*சிவத்தைச் சார்ந்த நுமர்போல யானும் பூசிப் புனைந்து வருவேன் என்றானாம். பூசுவது வெண்ணீறு; புனைவது கண்டிகையாம் என்க. (6)*

## குறியிடங்கூறல்

### 'உயிர்க்கு இன்பமாமிடம் அருளெடுத்துரைத்தது'

*அங்ஙனம் வினாய உயிர்க்குத் திருவருள் உமக்கு இன்பமாமிடம் தோகைகள் துயிலும் வேங்கைமர நீழல்; பூசுவன சாந்தம்; புனைவன சுனைக்காவிமலர் எனக்கூறியது.*

**பணைவளர் கைம்மாப் படாத்தம் பலத்தரன் பாதம்விண்ணோர்**
**புணைவளர் சாரற் பொதியின் மலைப்பொலி சந்தணிந்து**
**சுனைவளர் காவிகள் சூடிப்பைந் தோகை துயில்பயிலுஞ்**
**சினைவளர் வேங்கைகள் யாங்கள்நின் றாடுஞ் செழும்பொழிலே.** 154

*பொ - ரை: பனைபோலும் நீண்ட கையையுடைய யானையின் தோலைப் போர்த்த அம்பலத்தானது திருவடிகளை விண்ணோர் தொழுமிடமாகிய சாரல் மிகுந்த பொதியின் மலையிலே பொலியும் சாந்தத்தை அணிந்து, சுனைக்கண் வளரும் நீல மலர்களைச் சூடி, யாங்கள் விளையாடும் பொழில் பசிய மயில்கள் துயில்கொள்ளும் கிளைகள் வளராநின்ற வேங்கைப்பொழில் என்றவாறு.*

*இரவில் சிவமாகிய தலைவியைச் சாரவேண்டின், நீ சாந்து அணிந்து (நீறு), மலர் சூடி வேங்கையின் நீழலில் நின் வரவு எமக்கு உணர்த்த மயில் அண்டசலம்போலப் பிரிப்பின்றி நிற்கும் சூக்குமையாகிற நாதத்தை எழுப்பி இருக்க எனப் பணித்தவாறாம். மயில் ஆகுபெயராக அதன் அண்டத்துள்ள பன்னிறக் கலப்பான நீரை உணர்த்திற்று. அது, அது போன்ற சூக்குமை வாக்கை உணர்த்திற்று.* (7)

## இரவுக்குறி ஏற்பித்தல்

### 'சிவத்துக்கு அருள் உயிர்ச்செய்கை உரைத்தது'

*இங்ஙனம் தற்போதம் அழிந்து, சூக்குமநாத தரிசனத்துடன் வேங்கையின் நீழலிலே தனித்து இருந்தால் சிவத்தைச் சாரலாம் என்று உயிருக்கு உணர்த்தி அதன் உடம்பாட்டைப் பெற்ற திருவருள், சிவத்தின்பால் வந்து, 'நேற்று மாலை ஒரு பெரியோன் நண்டு ஒன்று தன் பெடையோடு பயிலுவதைக் கண்டு வருந்தா நின்றான்; பின், எங்குத் துயின்றான் என்பதனை யான் அறிந்திலேன் எனக்கூறி இரவுக்குறி ஏற்பியா நிற்றல்.*

**மலவன் குரம்பையை மாற்றியம் மான்முதல் வாணர்க்கப்பாற்**
**செலவன்பர்க் கோக்குஞ் சிவன்றில்லைக் கானலிற் சீர்ப்பெடையோ**
**டலவன் பயில்வது கண்டஞர் கூர்ந்தயில் வேலுரவோன்**
**செலவந்தி வாய்க்கண் டனனென்ன தாங்கொன்மன் சேர்துயிலே.** 155

**பொ - ரை:** மலத்தான் இயன்ற வலிய குடிலாகிய யாக்கையினை மாற்றி, மால் முதலான தேவர்கட்கும் கிடையாத பேரின்ப நிலையை மெய்யன்பர்கட்கு என்று ஒக்கிவைக்கும் சிவனது தில்லையைச் சூழ்ந்த கானலினிடத்து நல்ல பெடையோடு நண்டு பயில்வதனைக்கண்டு வருத்தமிக்கு, கூரிய வேலையுடைய ஞானவலி பெற்றான் ஒருவன் மாலைக்காலத்தே வரக்கண்டேன்; அம் மன்னனது சேர்துயில் எத் தன்மைத்தாம்? யான் அறியேன் என்றவாறு.

ஆர்த்த பிறவித் துயர் கெட ஆர்த்தாடும் தில்லைச்சிற்றம் பலவன் என்பார். அரி அயற்கும் கிட்டாத பேரின்பத்தை மெய்யடியார்க்கு என்றே ஒதுக்கி வைக்கும் அம்பலத்தான் என்றார். அலவன் பெடையோடு பயில்வது கிள்ளை பெடையொடு ஆடிவருவதும், களிறு பிடியொடு வருவதும், விடை நாகொடு பயின்று வருவதும்போன்ற சிவசத்திகளின் பயிற்சி என்று கண்டதாம். மலவன் குரம்பை என்றது மாயையும் கன்மமுமாகிய மலங்களானியன்று, மூலமலத்தை வாட்டும் கருவியாகிய வலிய குடில் என்றவாறு. (8)

## இரவரவுரைத்தல்

### 'மலத்தடை கடந்து உயிர் மருவிற்று என்றது'

இங்ஙனம் இரவுக்குறி ஏற்பித்த திருவருள், சிவத்தலைவியை நோக்கி, உயிர் பரிபாக விசேடத்தால் அதாவது வேட்கை மிகுதியால் மலத்தடையாகிற மோகம் முதலான அறுவகைக் காரியங்களினின்றும் நீங்கிச் சிவஞானத்தை எய்திற்று என்று உணர்த்தா நிற்றல்.

**மோட்டங் கதிர்முலைப் பங்குடைத் தில்லைமுன் னோன்கழற்கே**
**கோட்டந் தருநங் குருமுடி வெற்பன் மழைகுழுமி**
**நாட்டம் புதைத்தன்ன நள்ளிருள் நாக நடுங்கச்சிங்கம்**
**வேட்டந் திரிசரி வாய்வரு வான்சொல்லு மெல்லியலே.** 156

பொ - ரை: மெல்லியலே! பருத்த அழகிய கதிர்த்த முலையை யுடைய உமாதேவியை ஒரு பாகத்துக்கொண்ட தில்லைத் தொல்லோனது திருவடி ஒன்றற்கே வணங்கும் நிறம்பொருந்திய முடியையுடைய நம் சிலம்பன் முகில் திரளுதலான் கண்ணைப் புதைத்தாற் போன்றிருக்கும் இருட்கண் யானைகள் நடுங்கச் சிங்கம் வேட்டைக்காகத் திரியும் மலைச்சரிவிடத்து வருதற்காகச் சொல்லுவன்; இனி, யான் செய்யத்தக்கது என்ன? என்றவாறு.

'மற்றுப்பற்றெனக்கின்றி நின் திருப்பாதமே மனம் பாவித்தேன்' என்ற அனுபவமிகுந்த உயிர் என்பாள் தில்லை

*முன்னோன் கழற்கே கோட்டந்தரும் நம் குருமுடி வெற்பன் என்றாள்.*

*இருளாகிய மூலமலத்தையும், யானைகளாகிய மாயா காரியமான புலச்சேட்டைகளையும், சிங்கமாகிற கோபதாபங் களையும் வென்று ஞானமயனாகி நிற்கின்றது உயிர் என்று உணர்த்தியவாறாம்.* *(9)*

## ஏதங்கூறி மறுத்தல்

### 'பரிவு உயிரருளிற் படற்கு இரங்கியது'

*சிவம் உயிர் தமக்குச் செய்த பணிகள் பலவற்றையும் உளங்கொண்டு, இத்தகைய மீளா அடிமைபூண்ட அன்புநிறைந்த உயிரை, இன்னல்களே மிகுந்த புலக்காட்டிலே, அறியமுடியாத வல்லிருளாகிய ஆணவமல மறைப்பின்கண் வா என்றல் எங்ஙனம் தகும்? ஏதம் - தம் தலைவனான உயிர்க்கு வரும் துன்பம்; அதுகூறி மறுத்துரையா நிற்றல்.*

**செழுங்கார் முழவதிர் சிற்றம் பலத்துப் பெருந்திருமால்**
**கொழுங்கான் மலரிடக் கூத்தயர் வோன்கழ லேத்தலர்போல்**
**முழங்கா ரிமுரண் வாரண வேட்டைசெய் மொய்யிருள்வாய்**
**வழங்கா வதரின் வழங்கென்று மோவின்றெம் வள்ளலையே. 157**

*பொ - ரை: வளவிய மேகம்போலக் குடமுழா முழங்கும் சிற்றம்பலத்தின்கண்ணே பெரிய திருமால் மணமலரையிட்டுப் பரவக் கூத்தினை இயற்றுபவனாகிய ஞானமா நடராசப் பெருமானுடைய திருவடிகளைத் தொழாதாரைப்போல வருந்த, முழங்குகின்ற அணுகுதற்கரிய சிங்கம் பகைமையுடைய யானைகளை வேட்டையாடும் வலிய இருட்கண் மக்கள் நட மாட்டமேயில்லாத வழியில் வருக என்று எம்முடைய வள்ளலை இன்று சொல்வேமோ? சொல்லுதல் தகுமோ? என்றவாறு.*

*சிவத்தலைவி தம்மொடு கலந்து பிரிந்து மீட்டும் கலப்புக்கருதி வரும் உயிரிடம் கொண்டுள்ள கருணையால் ஆணவவல்லிருளில் காமக்குரோதாதிகளாகிய வனவிலங்குகள் நிறைந்த பிறவிக் காட்டில் வருக எனல் திருவருளாகிய உனக்குத் தகுமோ? யான் வருக எனலாமோ? இரண்டும் கூடாது என்று மறுத்தவாறு.* *(10)*

## குறை நேர்தல்

### 'திருமேனியருமை தெரிதலாம் எனல்'

*தலைமகனது ஆற்றாமை கேட்டு, அவன் மாய்த்துக் கொள்ளின், அவனது திருமேனி எத்துணை அருமை வாய்ந்தது; அதனை அவன் இழக்கவிடலாகாது என உட்கொண்டு அவன் குறையாகத் திருவருள் உரைத்தவற்றிற்கு உடம்படா நிற்றல்.*

ஓங்கு மொருவிட முண்டம் பலத்தும்பர் உய்யவன்று
தாங்கு மொருவன் தடவரை வாய்த்தழங் கும்மருவி
வீங்குஞ் சுனைப்புனல் வீழ்ந்தன் றழுங்கப் பிடித்தெடுத்து
வாங்கு மவர்க்கறி யேன்சிறி யேன்சொல்லும் வாசகமே. 158

பொ - ரை: உலக முழுதையும் விழுங்குமளவு ஓங்கிய ஒரு விடத்தை உண்டு, தேவர்கள் உய்ய, அன்று இடர்புகுதாதேகாத்த சிற்றம்பலத்து எழுந்தருளியிருக்கும் ஒப்பற்றவனது பெரிய மலையிடத்து, ஒலிக்கின்ற அருவியாற் பெருகுகின்ற சுனைப்புனலில் அன்று வீழ்ந்து மூழ்க இருந்த என்னை அமுங்கப்பிடித்து எடுத்துக் கரைக்கண் உய்த்த பெரியோர்க்குச் சிறியேனாகிய யான் சொல்லும் வாசகம் அறியேன் என்றவாறு.

சிவம் மூழ்கியழிதலாவது உயிர்க்குப் புலனாகாமை மறைதலாம்; அன்றி அழிவதில்லையாம் என்க. சிவமாகிய யான் உயிர்க்குப் புலனாகாமை மறைய, உயிர், தாம் புனலாகிய பிறவியுட்பாய்ந்து வினைகளைத் துய்த்துத் தூயதாய் மீளவும் சிவத்தை உள்ளவாறுணர்ந்து பற்றிக் கரைசேர்த்ததை அதாவது முத்திக்கரை சேர்த்துப் பேரின்பம் பெற்றதை இத் திருப்பாடல் குறிப்பித்தது. இது சிவத்திடை - திருவருளிடை நிகழ்ச்சி என்க.

*(11)*

## குறைநேர்ந்தமை கூறல்

### 'உயிர்க்குக் கருணையுண்மை உரைத்தது'

குறையைத் தீர்ப்பதாகத் திருவுளம்பற்றிய சிவகருணையின் நிறைவை உள்ளவாறு உணர்ந்த திருவருள், உயிருழைச் சென்று, இற்றை யாமமெல்லாம் நின் அருள்மேனி நிற்கவேண்டித் துன்புற்றேன்; நின் கருத்து நிறைவாயிற்று எனச் சிவம் குறை நேர்ந்தமையைக் கூறல்.

ஏனற் பசுங்கதி ரென்றூழ்க் கழிய எழிலியுன்னிக்
கானக் குறவர்கள் கம்பலை செய்யும்வம் பார்சிலம்பா
யானிற்றை யாமத்து நின்னருண் மேனிற்க லுற்றுச்சென்றேன்
தேனக்க கொன்றையன் தில்லையு றார்செல்லுஞ் செல்லல்களே.159

பொ - ரை: தினையின் பசியகதிர் கோடையாலழிய, அஃதழியாமல் மழையை எண்ணிக் கானக்குறவர்கள் தெய்வத் திற்குப் பலிகொடுத்து ஆரவாரிக்கும் புதுமை நிறைந்த சிலம்பை யுடையாய்! யான் இன்று யாமத்தின்கண் நின்னேவல்வழி நிற்கக்கருதித் தேன்சிந்தும் கொன்றை மாலையை அணிந்த கூத்தப்பெருமானது தில்லையையுறாதார் அடையும் துன்பங்களை அடைந்தேன்; நீ கருதியது முடிந்தது என்றவாறு.

*திருவருள் உயிர் சிவத்தை அடைய உபகாரமாக இருந்ததையும், அதற்காக அது மேற்கொண்ட முயற்சிகளின் அருமையையும் உயிர்க்கு உணர்த்தியவாறு.* (12)

## வரவுணர்ந்து உரைத்தல்

### 'சிவத்துக்கு அருள் உயிர்த்திறம் எடுத்துரைத்தல்'

*திருவருள் (இராக்காலத்து) எல்லாம் உறங்கும் கேவல நிலையில் சிவத்திற்கு உயிரின் பரிபாகத்திறத்தை எடுத்து உணர்த்துதல்.*

**முன்னு மொருவ ரிரும்பொழின் மூன்றற்கு முற்றுமிற்றாற்**
**பின்னு மொருவர்சிற் றம்பலத் தார்தரும் பேரருள்போல்**
**துன்னுமொ ரின்பமென் றோகைதந் தோகைக்குச் சொல்லுவபோல்**
**மன்னு மரவத்த வாய்த்துயில் பேரு மயிலினமே.** 160

*பொ - ரை: உலகங்கள் மூன்றும் உளவாவதற்கு முன்னும் தாம் ஒருவரேயாகியும், உலகங்களனைத்தும் தத்தம் காரணத்து ஒடுங்கநின்ற பேரூழிக்காலத்திற்குப் பின்னும் தாமொருவரே எச்சமானவரும் ஆன சிற்றம்பல நாதரருளிய பேரருள்போல ஒப்பற்ற இன்பம் இவ்வில்லின்கண் வர இருக்கின்றதென்று தம்முடைய தோகைகட்கு உவகையுரைப்பன போல, இடைவிடாத ஆரவாரத்தைச் செய்வனவாக மயிலினம் துயில் பெயரா நின்றன; இஃது என்னோ என்றவாறு.*

*உயிர் சிவத்தை விழைந்து விரைந்துவந்து வீட்டின் அக எல்லையாகிய ஆஞ்ஞைத்தானத்தில் நிற்பதால், மயில் ஓசைபோன்றதொரு நாதம் அனுபவமாகிறது; அதனால் பேரின்பம் நிகழ இருக்கிறது என்று சிவம் உயிரொடு கலந்து இன்பமூட்ட வேண்டுவதன் இன்றியமையாமை உணர்த்தியவாறு.*

## தாய் துயிலறிதல்

### 'பரைக்கும் பாங்காம் பண்பு அருள்கண்டது'

*சிவத்தை உயிரொடு கூட்டற்கு இடையீடாக இருந்த பராசக்தியும், உபகாரப்படும் நிலையில் மடங்கிக் கிடக்கின்றமையைத் திருவருள் அறிந்ததாம்.*

**கூடா ரரணெரி கூடக் கொடுஞ்சிலை கொண்டவண்டன்**
**சேடார் மதின்மல்லற் றில்லையன் னாய்சிறு கட்பெருவெண்**
**கோடார் கரிகுரு மாமணி யூசலைக் கோப்பழித்துத்**
**தோடார் மதுமலர் நாகத்தை நூக்குநஞ் சூழ்பொழிற்கே.** 161

*பொ - ரை: பகைவர்களின் அரண்களைத் தீ சென்றுபற்ற, வளைந்த வில்லைக் கையிற்றாங்கிய அண்டனது பெரிய மதில்சூழ்ந்த வளத்தை உடைய தில்லையை ஒத்தவளே! சிறிய*

கண்ணையும், பெரிய வெண்மையான கொம்புகளையும் உடைய யானை நமது சூழ்பொழிற்கண், நிறத்தையுடைய உயர்ந்த மணிகளாற் செய்யப்பெற்ற ஊசலைச் சீரழித்து, இதழ்கள் பொருந்திய மதுமலர்களையுடைய (அவ்வூசல் தொடுக்கப் பெற்ற) நாக மரத்தை நூக்கா நின்றது; இதற்கு என்செய்வேம் என்றவாறு.

இதனால் பரை சிவம் உயிரொடு கூடுதற்கு உபகாரமாக உள்ளதா? விழித்திருந்து இடையீடு புரிவதா? என்று அருள் அறிதல் பயனாயிற்று. (14)

## துயிலெடுத்துச் சேறல்

### 'உயிர்ப்பக்குவங் கண்டு உவந்து அறிவித்தது'

பரையின் பாங்காம் பண்பை அறிந்த திருவருள், உயிர் பேரின்புறுதற்குரிய பரிபாகம் பெற்றிருத்தலைக்கண்டு உவந்து, சிவத்தைத் துயிலெழுப்பிக்கொண்டு உயிரிருக்கும் சூழற்கண் செல்லுதல்.

**விண்ணுக்கு மேல்வியன் பாதலக் கீழ்விரி நீருடுத்த**
**மண்ணுக்கு நாப்ப ணயந்துதென் றில்லைநின் றோன்மிடற்றின்**
**வண்ணக் குவளை மலர்கின் றனசின வாண்மிளிர்நின்**
**கண்ணொக்கு மேற்கண்டு காண்வண்டு வாழுங் கருங்குழலே.** 162

பொ - ரை: வண்டுகள் வாழும் கரிய கூந்தலையுடையாய்! விண்ணுக்கு மேலாயும் அகன்ற பாதாளத்திற்குக் கீழாயும் கடல்சூழ்ந்த மண்ணுலகிற்கு நடுவாயும் நின்றவனும், விரும்பித் தில்லைக்கண் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய கூத்தப்பிரானது நீலகண்டத்தைப்போல வண்ணமுடைய குவளைகள் மலர்கின் றவற்றை, சினத்தையுடைய வாள் ஒளிர்வதுபோல ஒளிரும் நின் கண்களை ஒக்குமாயின் காண்பாயாக என்றவாறு.

மலர்ந்த குவளை நின் கண்களை ஒக்குமாயின் சென்று காண்க என அழைத்ததாம். இறைவன் விண்ணிறைந்து மண்ணிறைந்தும் மிக்கோனாக விளங்குதலை முதலிரண்டடிகள் தெரிவிக்கின்றன.

விண்ணுக்குமேல் வியன்பாதலக்கீழ் என்பன இறைவனுடைய கடந்த நிலையினையும், மண்ணுக்கு நாப்பண் என்பது கலந்த நிலையினையும், தில்லை நின்றோன் என்பது உடனாய நிலையினையும் உணர்த்துவன.

ஆசாரியன் வரவுகண்ட பரிபாகியான சீடன் மனம்போலவும், காதலன் வரவுகண்ட காதலிமுகம் போலவும், மதியின் உதயங்கண்டு குவளை மலர்கின்றன. நின் கண் ஒக்குமேல் கண்டு

காண் என்றது உயிராகிய நிறைமதியின் வரவால் முகத்திலுள்ள நீலம் மலர வேண்டும்; அங்ஙனம் மலர மதியை எதிர்தல் வேண்டும் என வேண்டிக்கொண்டவாறாம். (15)

## இடத்துய்த்து நீங்கல்

### 'சிவத்திற்சேர்த்து அருள் சென்று நின்றது'

குறியிடமாகிய துரியத்தானத்துச் சிவத்தை நிறுத்தி உயிரொடு கலக்கப் பண்ணித் திருவருள் 'குழற்குத் தழை கொய்வேன்' என்று சென்று ஒருபுடை நின்றதாம்.

**நந்தீ வரமென்னு நாரண னாண்மலர்க் கண்ணிற்கெஃகந்**
**தந்தீ வரன்புலி யூரனை யாய்தடங் கண்கடந்த**
**இந்தீ வரமிவை காணின் னிருள்சேர் குழற்கெழில்சேர்**
**சந்தீ வரமுறி யும்வெறி வீயுந் தருகுவனே.** 163

பொ - ரை: 'நந்தீ வரந்தரவேண்டும்' என்னும் நாராயணனது அந் நாண்மலர்போலும் கண்ணிற்கு ஒரு சக்கரத்தைப் படைத்துக்கொடுத்த தலைவனது புலியூரையொப்பாய்! இவை நின்னுடைய பெரிய கண்கள் வென்றனவாய நீலப்பூக்கள்; இவற்றைக் காண்பாயாக; நினது இருண்ட கூந்தலுக்குச் சந்தன மரந்தரும் அழகிய நல்ல தளிர்களையும், நல்ல மணமுள்ள மலர்களையும் யான் கொணர்ந்து தருவேன்; அதுவரை இந்த நீலப் பூக்களைக்கண்டு ஈண்டு நிற்பாயாக என்றவாறு.

நந்தி, இறைவன் பெயர்களில் ஒன்று. 'நந்தி நாமம் நமச்சி வாயவே' 'நந்தி யருள்பெறு நந்திகள் நால்வரில்' என்பனவாகிய திருமுறைகளை உன்னுக. நாராயணன் ஆயிரம் தாமரைமலர் கொண்டு அர்ச்சிக்க ஒன்று குறையத் தனது கண்ணையிடந்து அர்ப்பணம் செய்தமைக்காகச் சக்கரம் அருளிய வரலாற்றை விளக்குவது 'நந்தீ வரம்...எஃகம் தந்து ஈ அரன்' என்ற பகுதி.

மலர்ந்த நீலத்தைக் கண்டிடு என்றது விழித்திரு என்றவாறாம். விழித்தலாவது, அகப்பார்வையால் புறப்பொருள் சற்றும் தோன்றாதவாறு தியானத்து ஒன்றி நிற்றலாம். அங்ஙனமிருப்பின் கருணை சுரக்கும். கருணையால் உயிரை ஆண்டுகொள்ளலாம் என்பதாம். (16)

## தளர்வகன்றுரைத்தல்

### 'உயிர் சிவங்கண்டு அன்புற உவந்துரைத்தது'

உயிர், தனக்காகக் கருணையுடன் காத்திருக்கும் சிவத்தைக் கண்டு, தமது உயர்ந்த நிலையினின்று எம்பொருட்டு இழிந்து வந்ததே என்று அன்புமிக அதனால் அகமுவந்து சிவத்தை நோக்கி விண்ணப்பித்தது.

காமரை வென்றகண் ணோன்றில்லைப் பல்கதி ரோனடைத்த
தாமரை யில்லின் இதழ்க்கத வந்திறந் தோதமியே
பாமரை மேகலை பற்றிச் சிலம்பொதுக் கிப்பையவே
நாமரை யாமத்தென் னோவந்து வைகி நயந்ததுவே. 164

பொ - ரை: மன்மதனை வென்ற நெற்றிக்கண்ணை உடையவனது தில்லைக்கண், பலவாகிய கிரணங்களையுடைய சூரியன் அடைத்த தாமரையாகிய நுமது இல்லின்கண், இதழாகிய கதவத்தை நீங்களே திறந்து கொண்டோ போந்தது? பரந்த அரையிற்கிடக்கும் மேகலையை ஒலியாமற் பிடித்து, சிலம்புகளையும் அசையாவாறு காலின்மேற்புறத்தே செறித்துத் தனியே பைய அரையிருள் யாமத்தின்கண் நாம் இவ்விடத்துவந்து தங்கி விரும்பியது என்னோ? விளம்புக என்றவாறு.

சிவம் எளிவந்த கருணையால் நான் இருக்கும் குறியிடம் வந்தது என்னோ வியப்பு என்றான்; மலர்மாது தேடி அடையப் படுவதன்றித் தேடி அடைவதின்றாகலின் என்க. பல்கதிரோன் - சூரியன். ஆயிரம்கிரணன் என்ற ஒரு பெயரும் அவற்குண்டு. ஆயிரம் பன்மை குறித்தது. (17)

## மருங்கணைதல்

### 'இன்பகனம் கண்டு இன்பனுபவித்தது'

உயிர் இன்பமே வடிவான சிவத்தைக் கண்டு அநநியமாய் ஒன்றி இன்பம் நுகர்ந்தது.

அகிலின் புகைவிம்மி யாய்மலர் வேய்ந்தஞ் சனமெழுதத்
தகிலுந் தனிவடம் பூட்டத் தகாள்சங் கரன்புலியூர்
இகலு மவரிற் றளருமித் தேம்பல் இடைஞெமியப்
புகிலு மிகவிங்ங ணேயிறு மாக்கும் புணர்முலையே. 165

பொ - ரை: கூந்தலின்கண்ணே அகிற்புகை விம்ம, காம்புகிள்ளி ஆயப்பெற்ற மலர்களைச் சூடி, மை எழுதத்தகிலும், ஒப்பற்ற முத்துச்சரத்தை அணியத்தகாதவள் சங்கரனது புலியூரின் பெருமை உணராது அதனொடு மாறுபடுவாரைப் போலத் தளருகின்ற தேய்தலையுடைய இந்த இடை நெரிந்து ஒடியப்புகினும், அதனை அறியாது, ஒன்றோடொன்று நெருங்கிப் பணைக்கின்ற முலைகள் மிகவும் விம்மா நின்றன; இதன் முடிவு என்னவாம் என்றவாறு.

உயிர் சிவத்தின் இன்பகனமான இடையைப் பொருந்த முலைகளைக் கடிந்துரைத்து அணைந்தவாறு. (18)

## முகங்கண்டு மகிழ்தல்

### 'திருமேனி கண்டு இன்பதுவாய்த் தேறியது'

*உயிர் சிவத்தின் திருமேனியைக் கண்டு, இது இன்பசாதனம் அன்று, இன்பமே எனத் தெளிந்து உரைத்தது.*

**அழுந்தேன் நரகத் தியானென் றிருப்பவந் தாண்டுகொண்ட**
**செழுந்தேன் திகழ்பொழிற் றில்லைப் புறவிற் செறுவகத்த**
**கொழுந்தேன் மலர்வாய்க் குமுத மிவள்யான் குழூஉச்சுடர்கொண்**
**டெழுந்தாங் கதுமலர்த் தும்முயர் வானத் திளமதியே.** 166

*பொ - ரை: யான் ஒருக்காலும் நரகத்தழுந்தேன் என்று இறுமாந்திருப்ப, தாமே எளிவந்த கருணையால் வலியவந்து ஆண்டுகொண்ட முதிர்ந்த தேனையொத்த சிவபெருமான் விளங்குகின்ற பொழிலையுடைய தில்லைப்பதியைச் சூழ்ந்த இளங்காட்டில், வயலின்கண்ணவாய கொழுவிய தேனையும் மலர்ந்தவாயையும் உடைய குமுதமலர் இவள்; யான் நிறத்தையுடைய நிலாவைக்கொண்டு எழுந்து அக் குமுதத்தை மலர்த்தும் உயர்ந்த வானத்து விளங்கும் இளமதி என்றவாறு.*

*சிவம் குமுதம், உயிராகிய யான் இளமதி என்றான்; இளமதி வானத்ததாயினும் அதன் கரமாகிய கிரணந்தீண்டிய அளவில் குமுதம் மலர்தல் போலத் தன் சிந்தனை தீண்டலும் சிவம் கசிந்து கருணை பொழியும் அதனால் சிவபோகம் மிகும் என்னும் குறிப்பினனாக.*

*தில்லையம்பலத்திலுள்ள செழுந்தேனை உண்டவர்கள் ஒருஞான்றும் நரகத்தழுந்தார்கள் ஆதலின், 'அழுந்தேன் நரகத்து யான் என்று இருப்ப வந்து ஆண்ட செழுந்தேன்' என்றார். (19)*

## பள்ளியிடத்து உய்த்தல்

### 'அடியாரிடத்து அன்பாய் அமர்தல் உயிர்கண்டது'

*சிவத்தை இன்பமே என எண்ணித் துய்த்த உயிர் இணைபிரியாதிருக்கும் கற்பு இன்றின்மையான், சிவத்தை அடியார்கூட்டத்து உய்க்க அது அடியார் கூட்டத்தில் அன்பாக இருத்தலைக் கண்டது.*

**கரும்புறு நீலங்கொய் யற்றமி நின்று துயில்பயின்மோ**
**அரும்பெறற் றோழியொ டியத்து நாப்பண் அமரரொன்னார்**
**இரும்புறு மாமதில் பொன்னிஞ்சி வெள்ளிப் புரிசையன்றோர்**
**துரும்புறச் செற்றகொற் றத்தெம்பி ரான்றில்லைச் சூழ்பொழிற்கே.** 167

*பொ - ரை: தேவர்கட்குப் பகைவர்களாகிய கமலன் கமலாட்சன் வித்யுன்மாலி என்ற மூவருடைய இரும்பானியன்ற பெரியகோட்டையும், பொன் வெள்ளி இவற்றானியன்ற*

மதில்களையுடைய ஊர்களும் அன்று ஒரு துரும்பாகச் சுட்டெரித்த வெற்றியையுடைய எம்பிரானது தில்லையைச் சூழ்ந்த பொழிலிடத்துத் தனியே நின்று வண்டு மொய்க்கும் நீலப்பூக்களைக் கொய்யற்க; பெறுதற்கரிய தோழியோடு மகளிர் கூட்டத்தினிடைத் துயிலுக என்றவாறு.

காலம் இரவு ஆதலின், இனிமேல் வண்டு பொருந்துதற்குரிய நீல மலர் எனப் பொருள் காண்க. சிவமே! மெய்யடியார் கூட்டத்து அமர்க; நீலம் முதலியன கொய்து தனியே நிற்கற்க என இன்பந் துய்த்த உயிர் வேண்டிக்கொண்டவாறு. (20)

## வரவு விலக்கல்

### 'அருள் உயிர்க்குச் சிவத்து அருமை கூறியது'

அடியார்கூட்டத்து உய்த்துத் திரும்பி வந்து திருவருள் உயிரை நோக்கி நீ இவ்வாறு ஒழுகற்பாலையல்லை என வரைவு பயப்பக்கூறி வரவு விலக்காநிற்றல்.

**நற்பகற் சோம னெரிதரு நாட்டத்தன் தில்லையன்ன**
**விற்பகைத் தோங்கும் புருவத் திவளின்மெய் யேயெளிதே**
**வெற்பகச் சோலையின் வேய்வளர் தீச்சென்று விண்ணினின்ற**
**கற்பகச் சோலை கதுவுங்கன் னாடவிக் கல்லதரே. 168**

பொ - ரை: மலையினிடத்துச் சோலையிலுண்டாகிய மூங்கிற் கண் பிறந்த தீ விண்ணினின்ற கற்பகச் சோலையைச் சென்று பற்றும் மலை நாடனே! இக் கல்லையுடைய சிறுநெறி சோம சூரிய அக்கினிகளை மூன்று விழிகளாகக்கொண்ட பெருமானது தில்லையை ஒக்கும், வில்லைப் பகைத்து அதனை வென்று விளங்கும் புருவத்தையுடைய இவள் காரணமாக மெய்யே எளிதாயிற்று. ஆயினும் இனி இவ் வழியில் வரற்பாலையல்லை என்றவாறு.

யோகநெறிக்கண் அனுபவம் முதிர்ந்தார்க்கு அன்றிச் சாதக நிலையில் உள்ள பரிபாகர்க்கு எண்ணியபோதெல்லாம் எய்தும் எளிமையான இடத்தில் இல்லை சிவம். ஆகையால், பெரிதும் பயின்று முயன்று என்றும் துரியா தீதத்துச் சிவத்தோ டொன்றியேயிருக்க வரைந்துகொள் என்றவாறாம்.

இங்ஙனம் அரிதின் முயன்று அடிக்கடி பிரிந்து புணர்ந்து வரும் களவினை விரும்பின், மண்ணுலகில் மலையில் மூங்கிலில் தோன்றிய தீ விண்ணில் கற்பகக்காவிற் சென்று தாவியதுபோல எம் சிற்றூர்க்கண் பிறந்த அலர் நின் ஊர்க்கண்ணும் பரவி, இம்மை மறுமைப் பயன்களைச் சிதைக்கும்; ஆதலால், நிலைத்த சிவபோகத்தைப் பெற முயலுக என்பது. (21)

## ஆற்றாதுரைத்தல்

### 'இன்பமேயன்றி உயிர் இலை என்றது'

*இன்ப வடிவாய் இங்ஙனம் எனக்கு எய்தலாம்வண்ணம் இருந்தனளே என்று என் உயிர் அழியாதிருக்கின்றது; அங்ஙனமாக, இவள் வரையுமளவிற்கு எளியளாக நீ கூறுவது என்னை? என உயிர் தனதாற்றாமை தோன்றத் திருவருளுக்குக் கூறாநிற்றல்.*

**பைவா யரவரை யம்பலத் தெம்பரன் பைங்கயிலைச்**
**செவ்வாய்க் கருங்கட் பெரும்பணைத் தோட்சிற் றிடைக்கொடியை**
**மொய்வார் கமலத்து முற்றிழை யின்றென்முன் னைத்தவத்தால்**
**இவ்வா றிருக்குமென் றேநிற்ப தென்றுமென் னின்னுயிரே. 169**

*பொ - ரை: படத்தையுடைய பாம்பைத் திருவரைக்கண் நாணாக அணிந்த சிற்றம்பல நாதனது பசிய கயிலைக் கண்வாழும் சிவந்த வாயையும் கரிய கண்ணையும் பெரிய மூங்கில்போலும் தோள்களையும் சிறிய இடையினையும் உடைய கொடிபோலும் தலைவியை, இதழ்கள் நெருங்கிய தாள் நீண்ட தாமரைக்கண் வாழும் திருமகளாகிய முற்றிழை இன்று எனது பண்டை நற்றவத்தால் இவ்வாறு கொடிச்சியாய்க் கனவிடைக் கூட எளிதாயிருக்கும் என்றன்றே எனது இனிய உயிர் எனதுடலின் நிற்பது; இவளை யான் வரையுந்துணை எளியளாக நீ கூறுவது என்? என்றவாறு.*

*இங்ஙனம் இடையிடைக் கலக்கவும் வேண்டும்; வரையவும் வேண்டும். அங்ஙனமன்றி வரையும்துணை ஆற்ற ஒண்ணாது; உயிர் கழியும் என உயிர் சிவத்தைப் பிரிந்திருக்க ஆற்றாத தன்மையை அறிவித்தவாறு. (22)*

## இரக்கங்கூறி வரைவுகடாதல்

### 'கருணையே இன்பகனம் எனவுரைத்தது'

*திருவருள் உயிரை நோக்கிச் 'சிவம் உன் நிலையைக் குறித்து மிக இரங்கா நின்றது; ஆதலால், இரவுக்குறியில் புணர்ந்து நின்னகர்ச் சென்றபின், யாம் அறிய ஏதாயினும் அடையாளம் காட்டுவாயாக எனக்கூறி வரைவுகடாவா நிற்றல்.*

**பைவா யரவு மறியும் மழுவும் பயின்மலர்க்கை**
**மொய்வார் சடைமுடி முன்னவன் தில்லையின் முன்னினக்கால்**
**செவ்வாய் கருவயிர்ச் சேர்த்திச் சிறியாள் பெருமலர்க்கண்**
**மைவார் குவளை விடுமன்ன நீண்முத்த மாலைகளே. 170**

*பொ - ரை: மன்ன! இவ் விளையாளுடைய மலர்போலும் பெரிய கண்களாகிய கரிய குவளைகள், நீண்ட முத்த மாலைகளை*

விடாநிற்கும்; ஆதலால், படத்தையும் பெரிய வாயையுமுடைய பாம்பும் மான்குட்டியும் மழுவாளும் விடாது விளங்கும் மலர் போலுங் கையையும், நெருங்கிய நீண்ட சடைகளானியன்ற முடியையும் உடைய முன்னோனது தில்லை நகரத்தை நீ அடைந்தவுடன், நின் சிவந்த வாயிலே கரிய ஊதுகொம்பினைச் சேர்த்துவாயாக என்றவாறு.

ஊர்போய்ச் சேர்ந்தேன் என்பதை யாம் உணர நீ ஊதுதல் வேண்டும் என வேண்டிக்கோடல் வாயிலாகச் சிவத்திற்கு உயிரினிடம் உள்ள கருணை மிகுதி காட்டப்பெற்றது. இன்பகனம் - இன்பமிகுதி. (23)

## நிலவுவெளிப்பட வருந்துதல்

### 'உயிர்க்கு மாயையும் ஒளியென்றிரங்கியது'

உயிர் சிவத்தை எய்துதற்கு ஒளிப்பொருளாகிய மதியும், மாயைபோல இடையூறு செய்வதாம் எனத் திருவருள் உயிர்க்கு உணர்த்தி வரைவுகடாயது.

நாகந் தொழவெழி லம்பல நண்ணி நடநவில்வோன்
நாக மிதுமதி யேமதி யேநவில் வேற்கையெங்கள்
நாகம் வரவெதிர் நாங்கொள்ளு நள்ளிருள் வாய்நறவார்
நாக மலிபொழில் வாயெழில் வாய்த்தநின் னாயகமே. 171

பொ - ரை: மதியே! பயிலப்பட்ட வேலையேந்திய கையையுடைய எங்கள் யானை போல்வான்வர, நாங்கள் எதிர்கொள்ளும் செறிந்த இருளினிடத்து, தேன்மிக்க மலர்ந்த நாக மரங்கள் நிறைந்த பொழிலினிடத்தே நின்று நீ செய்கிற அழகிய தலைமை நினக்கு அறிவுடைமையாகுமா? பதஞ்சலி யாகிய பாம்பு வணங்க அழகிய சிற்றம்பலத்தைச் சேர்ந்து நடம்புரியும் பெருமானது மலைகாண் இஃது; இதனைக் கடைப்பிடிப்பாயாக என்றவாறு.

பாம்பு வணங்கும் பதிக்கண் வந்து பாம்பால் விழுங்கப்படும் நீ முதன்மைபெற்று ஆரவாரித்தல் உனக்குத் தீங்கு பயப்பது ஒன்றாம் என்பது.

இப் பாடலால் யாம் கலத்தற்கண் ஒளிப்பொருளாகிய மதியும், பாச ஞானங்களும் பசு ஞானமும் பதியைத் தரிசித்தற்குத் துணையாகாமைபோல, மாயைபோல் மயக்கம் செய்வதானால், இந்நிலை எமக்கு இடையூறாதலேயன்றி உனக்கும் தீங்காம் என்பது அறிவித்தல் வாயிலாக வரைந்துகொள்ளும்வண்ணம் திருவருள் உணர்த்தியதாம். (24)

## அல்லகுறி அறிவித்தல்

**'உன் பரிவு இன்புக்கு உறாது என்றுரைத்தது'**

*நீ இங்ஙனம் வருந்தி இரவுக்குறிக்கண் வந்துநிற்கும் அன்பு, இன்பகனமாகிய சிவத்திற்கு இயைந்ததாகாது; நென்னல் இரவின்கண் யாம் நீ செய்யாத குறியை நின்னது என்று எண்ணி வேறிடத்துச்சென்று மீண்டேம் என உயிர்க்கு உணர்த்துதல் வாயிலாக வரைவுகடாயது.*

மின்னங் கலருஞ் சடைமுடி யோன்வியன் தில்லையன்னாய்
என்னங் கலமர லெய்திய தோவெழின் முத்தந்தொத்திப்
பொன்னங் கலர்புன்னைச் சேக்கையின் வாய்ப்புலம் புற்றுமுற்றும்
அன்னம் புலரு மளவுந் துயிலா தழுங்கினவே. 172

*பொ - ரை: ஒளிவிரியும் சடைமுடியையுடைய பெருமானது தில்லையை ஒப்பாய்! அழகிய முத்தங்கள் கொத்தாகிப் பொன்னை மலரும் புன்னைமரப் பொழிலிடத்து, அன்னம் அனைத்தும் துன்புற்று விடியுமளவும் துயிலாது ஆரவாரித்தன; அங்குண்டான சுழற்சி யாதாம்? யான் அறிகின்றிலேன் என்றவாறு.*

*அன்னம் துயிலாமை உணர்த்தியது தாம் குறிக்கண்வந்து மீண்டமையும், அங்கு அவனைக் காணாமையும் உணரச் செய்தற்காம் என்க. இதனான் உயிர் சிவத்தின்பாற் பரிவுடைய தாயினும் அப் பரிவைச் சிவம் எளிதின் எய்த முடியாததாகின்றது என வரைவுகடாயது.* (25)

## கடலிடை வைத்துத் துயரறிவித்தல்

**'அருள் உயிர்மோகம் கடலொடு இயம்பியது'**

*உயிரினிடத்துச் சிவத்திற்குள்ள காதன்மையான கருணையை உயிர் உணர, திருவருள் கடலை நோக்கி நீ இங்ஙனம் இரைதல் தகுமோ எனப் புலந்து கூறுதல் வாயிலாக வரைவுகடாயது.*

ஏத்துன் னடியமென் றோரைக் குழுமித்தொல் வானவர்சூழ்ந்
தேத்தும் படிநிற்ப வன்றில்லை யன்னா ளிவடுவள
ஆர்த்துன் னமிழ்துந் திருவு மதியு மிழந்தவநீ
பேர்த்து மிரைப்பொழி யாய்பழி நோக்காய் பெருங்கடலே. 173

*பொ - ரை: பெருங்கடலே! முன்பும் ஆரவாரித்து, உன்னிடம் இருந்த அமுதத்தையும், திருமகளையும், திங்களையும் இழந்து வைத்தும், நீ மீட்டும், தோத்திரம் என்றொருக்காற் சொன்னாரைப் பழைய வானவர்கள் பரிவாரமாய்க் குழுமிநின்று ஏத்தும்வண்ணம் சிற்றம்பலத்துத் திருநடம்புரிபவனாகிய நடராசப் பெருமானது*

தில்லையன்னாள் வீணேவாட இரையா நின்றாய்; அதனால் வரும் பழியையும் நோக்குகின்றிலை என்றவாறு.

பட்டும் கெட்டும் அறிய வேண்டியிருக்க, முன் உன்னிடமுள்ள எல்லாவற்றையும் இழந்து பட்டும் அதனை மறந்து இன்றும் இவள்வாட இரைதல் கூடாது என்பாளாக, உயிரினிடம் சிவத்திற்குள்ள கருணையைத் திருவருள் தெரிவித்தவாறு. (26)

## காமமிக்க கழிபடர்கிளவி

**'உயிர் மோகங்கண்டு அருள் உவகையோடு இயம்பியது'**

சிவம் இங்ஙனம் பல ஏதுக்களான் உயிரை எதிர்ப்பட இயலாதுபோக, அதனால் சிவம் கருணைமிக்கு எதிர்ப்படும் புல் முதலியவற்றை நோக்கி 'உனக்கு என்னுற்றது' என்று வினவுகின்றிலீர் என்று புலந்து கூறுதலைக் கண்டு திருவருள் மிக்க மகிழ்ச்சிகொண்டு உரைத்தது.

**மாதுற்ற மேனி வரையுற்ற வில்லிதில் லைநகர்சூழ்**
**போதுற்ற பூம்பொழில் காள்கழி காளெழிற் புள்ளினங்காள்**
**ஏதுற் றழிதியென் னீமன்னு மீர்ந்துறை வர்க்கிவளோ**
**தீதுற்ற தென்னுக்கென் னீரிது வோநன்மை செப்புமினே. 174**

பொ - ரை: உமாதேவியார் பொருந்திய மேனியையும் மேருவாகிய வில்லையும் உடைய கூத்தப்பெருமானது தில்லை நகரைச் சூழ்ந்து பூக்களைப் பொருந்தி விளங்கும் பொழில்களே! கழிகளே! அழகிய புட்குலங்களே! உனக்கு என்னவந்தது? வருந்துகின்றனையே என்று சொல்லீர்கள்; தண்ணிய துறைவற்கு இவள் துன்புற்றது எதற்கு என்னீர்? இதுவோ நுமக்கு எம்மாட்டுள்ள காதன்மை; சொல்லுங்கள் என்றவாறு.

அகப்பொருட்கொளு 'தாமமிக்க தாழ்குழல் ஏழை, காமமிக்க கழிபடர் கிளவி' எனத் தலைவி கூற்றாக அமைந்துளது. பேரின்பக்கொளு 'அருள் உவகையோடு இயம்பியது' எனத் திருவருட்டோழியின் கூற்றாக அமைந்துள்ளது. இதில் தலைவி கடலன்ன காமத்தளாயினும் களவுப்புணர்ச்சிக் காலத்துத் தன் வாயைவிட்டுப் புலம்பாள் நாணம் மிகுதியுடையளாதலின். ஆதலால், தலைவியின் நெஞ்சடை காமநிலைகுறித்துத் தோழி கூறியதாக இருத்தலே சாலச்சிறந்ததாகல் வேண்டும் என்க.

சிவத்தின் திருவுளத்தில் எல்லையற்று விளங்கும் உயிர்க் கருணையைக் கண்டு திருவருள் சிவத்திடம் உயிரை ஏற்பிக்க எத்துணை முயன்றோம்; இன்று சிவமே எல்லையற்ற கருணை படைத்துள்ளதே என்று உவகையுற்று உரைப்பதைக் கருதுக. (27)

## காப்புச்சிறைமிக்க கையறுகிளவி

### 'உயிர்பெறு மோகம் உறவு அற்று இயம்பியது'

*உயிரினிடமாகச் சிவம்கொண்ட பெருங்கருணை இடையூறு களால் அதாவது உயிர்க்குள்ள பரிபாகக் குறைவால் தொடர் பற்றுப்போகச் சிவம் இந்த உயிரை ஆட்கொண்டருளுமாறு பெற்றிலமே என்று செயலற்று வருந்தாநிற்றல்.*

**இன்னற வார்பொழிற் றில்லை நகரிறை சீர்விழவிற்**
**பன்னிற மாலைத் தொகைபக லாம்பல் விளக்கிருளின்**
**துன்னற வுய்க்குமில் லோருந் துயிலிற் றுறைவர்மிக்க**
**கொன்னிற வேலொடு வந்திடின் ஞாளி குரைதருமே. 175**

*பொ - ரை: இனிய தேன்பொருந்திய சோலைசூழ்ந்த தில்லை நகர்த் தலைவனாகிய அம்பலவாணப் பெருமானது சிறப்புடைய விழாவின்கண், மாணிக்கம் வயிரம்முதலிய பலமணிகளினாலே இயன்ற மாலையின்கூட்டம் செய்யும் ஒளியால் இரவும் பகலாயிற்று; இருளின் செறிவை விழாவில் ஏற்றப்பட்ட பல விளக்குகள் ஓட்டும்; இல்லின்கண் உள்ளார் தூங்குவாராயின், தலைவன் அச்சத்தைச் செய்யும் வேலை ஏந்தி ஒருகால்வரின், சமயம் பார்த்து நாய் குரைக்கும்; ஆகவே தலைவனை எதிர்ப்படுதல் எங்ஙனம்? அரிதுபோலும் என்றவாறு.*

*'உன்னை அல்லாது உள்ளேன்' என்ற அனுபவம் கைவரப் பெற்ற உயிர் சிவத்தையே எண்ணிப் பலமுறை சென்று பார்த்து மகிழ்ந்துவர, ஒரொருகால் இடையிட்டு ஆற்றாமைமிக்கு அன்புமிகுதியால் அல்லலுறக் கண்ட சிவம் உயிரினிலைக்கு இரங்கித் தாமும் நிலவு வெளிப்படல், தாய் துஞ்சாமை, நாய் துஞ்சாமை முதலியன கண்டு வருந்தா நின்றவாறு காண்க. (28)*

## ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி

### 'இன்பத்தின்வழி ஏக அரிது என்றது'

*சிவமும் உயிரின்மீது வைத்த கருணைமிகுதியால் இரங்குவதை ஒருவகையான் உணர்ந்த உயிர், வருந்தி முயன்று துரியாதீதமான குறிடைச் சென்று நிற்பத் திருவருள் எதிர்ப்பட்டு, கோபக்கனல் யாறு, தாபக்காடு, குரோதப்புதர், லோபவிலங்கு என இவற்றைக் கடந்து சுழுமுனை வழியாக ஞானவேலே துணைக்கொண்டு வந்தாலும் இங்குள்ள தெய்வத்தால் உனக்கு இடையூறு நிகழுமோ என்று அஞ்சுவேம்; அதனால் வாரற்க என விலக்கா நிற்றல்.*

**தாருறு கொன்றையன் தில்லைச் சடைமுடி யோன்கயிலை**
**நீருறு கான்யா றளவில நீந்திவந் தானினது**

போருறு வேல்வயப் பொங்குரு மஞ்சுக மஞ்சிவருஞ்
சூருறு சோலையின் வாய்வரற் பாற்றன்று தூங்கிருளே. 176

பொ - ரை: மாலையாகப் பொருந்திய கொன்றையையணிந் தவனும் தில்லைக்கண் உள்ள சடைமுடியோனுமாகிய கூத்தப் பெருமானது கயிலை மலைக்கண் நீர்மிக்க காட்டாற்றினைக் கடந்து வந்தால் வலிமிக்க பொங்குகின்ற இடியேறு நின் போர் மிக்க வேலுக்கஞ்சி வாராதொழிக, ஆயினும் வெண்மேகங்கள் பரந்துள்ள அச்சத்தை விளைக்கின்ற சோலையினிடத்து செறிந்த இருட்கண் வாரற்க என்றவாறு.

சூர் - தெய்வமுமாம். அப் பொருளில் தெய்வத்திற்கு அஞ்சுதும் வாரற்க என்றதாம். தன்னால் ஆட்கொள்ளப்பட்ட ஆன்மாவிடம் கரைகடந்த கருணை மிகுதலால் அவ்வுயிர் தன்னை நாடும்போது இடையூறு விளையுமோ என்று எண்ணி, கருணைக்கடலாகிய சிவம் இரங்கியவாறு இது. (29)

## தன்னுட்கையாறெய்திடு கிளவி

### 'சிவத்தின் கருணைத்திறம் பரிவானது'

தன்னான் ஆட்கொள்ளப்பெற்ற உயிரை மீட்டும் காணத் துடிக்கும் சிவத்தின் கருணைமிகுதி முதிர்ந்து உயிரின்பால் செலுத்தும் அன்பாக மாறியதைச் சிவம் தன் அறிவொடு வினவாநிற்றல்.

விண்டலை யாவர்க்கும் வேந்தர்வண் டில்லைமெல் லங்கழிசூழ்
கண்டலை யேகரி யாக்கன்னிப் புன்னைக் கலந்தகள்வர்
கண்டிலை யேவரக் கங்குலெல் லாமங்குல் வாய்விளக்கு
மண்டல மேபணி யாய்தமி யேற்கொரு வாசகமே. 177

பொ - ரை: இரவு முழுதும் ஆகாயத்தை விளக்கம் செய்யும் மதி மண்டலமே! விண்ணவர் அனைவர்க்கும் வேந்தனாகிய ஞானமா நடராசப் பெருமானது வளவிய தில்லையின் எல்லையில் உள்ள மெல்லிய கழிகள் சூழ்ந்த நீர்முள்ளிகளே சான்றாக, இளைய புன்னைக்கண் என்னைக் கலந்த கள்வர் ஒருகால் வரக்கண்டிலையோ? துணையில்லாத எனக்கு ஒரு சொல் அருளாய் என்றவாறு.

மதிமண்டலம் மேனிலத்திருந்து பூமியின் எல்லைவரை காணுமாதலின் எம் தலைவர் எங்குவரினும் நீ அறிவாய்; அறிந்தால் சொல் என்றாளாம். இரவாதலின் மண்டலம் என்பதற்கு மதிமண்டலம் எனப் பொருள் கொள்ளப்பட்டது. வேண்டுதல் வேண்டாமையின்றி எல்லாவற்றையும் ஒப்பநோக்கும் சிவத்திற்கும் பரிபாகமுற்று ஒருகாற்கலந்து பிரிந்த உயிரினிடத்துக்

*கருணை உண்டாக, அது பரிவாகித் தன் நெஞ்சொடு மதி மண்டலத்தை உசாவும் அளவு வளர்ந்தமை காண்க. (30)*

## நிலைகண்டுரைத்தல்

### 'அருளே உயிர்க்குப் பரிவாய் உரைத்தது'

*சிவம் மதியொடு உசாவியதைச் சிறைப்புறமாக இருந்து செவிமடுத்த உயிர், ஆற்றாமையான் இல்வரைப்பின்கண் புகுந்துநிற்ப, திருவருள் எதிர்ப்பட்டு 'நீ இவ்வாறு இல்வரைப்பின் கண்வந்து நிற்பின் காண்பார் வேறு கருதுவராயின், சிவத்தலைவி ஆற்றாள்; ஆதலால், நீ இங்ஙனம் ஒழுங்கற்பாலையல்லை என வரைவு தோன்ற உரைத்தல்.*

**பற்றொன்றி லார்பற்றுந் தில்லைப் பரன்பரங் குன்றினின்ற**
**புற்றொன் றரவன் புதல்வ னெனநீ புகுந்துநின்றால்**
**மற்றுன்று மாமல ரிட்டுன்னை வாழ்த்திவந் தித்தலன்றி**
**மற்றொன்று சிந்திப்ப ரேல்வல்ல ளோமங்கை வாழ்வகையே. 178**

*பொ - ரை: பற்றற்ற மெய்ஞ்ஞானியர் பற்றும் தில்லைப் பரம்பொருளினது பரங்குன்றில் விளங்குகின்ற புற்றின்கண் வாழும் பாம்பையணிந்த பரமன் புதல்வனைப்போல நீ இல்வரைப் பின்கண் புகுந்துநின்றால் வளம் நிறைந்த பெரிய பூக்களையிட்டு வணங்குதல் அன்றி, வேறொன்று எண்ணுவராகில், மங்கையாகிய எமது தலைவி உயிர் வாழும்வகை வல்லளோ? அல்லள் என்றவாறு.*

*பரங்குன்றின் நின்ற புதல்வன் - முருகன். பற்று - தனு கரண புவன போகங்களில் செல்லும் விடாத ஆசை. பற்றொன்றிலார் - துறக்கப்படுவனவற்றைத் துறந்த மெய்ஞ்ஞானியர்; அவர்கள் பற்றும் தில்லைப்பரன் என்க. இறைவன் அணிந்த பாம்புகள் வேள்வித்தீயினின்றும் வெளிப்போந்தன ஆயினும் புற்றொன்றரவன் என்றது சாதியடை. மல் - வளம். குறக்குடியில் இல்வரைப்பில் முருகன் வெளிப்படின், மலரிட்டு வணங்குதல் குன்றவர் இயல்பு. முருகன் போன்ற நீ நிற்பின் மலரிட்டு வணங்குதற்குப் பதிலாக வேறொன்று விளையின் எம் தலைவி வாழ்வாளோ என்றது. மற்றொன்று என்றது உண்மையுணர்தலை என்பது பேராசிரியர் உரை.*

*திருவருளே உயிரினிடம் பரிந்து விளைவுகூறி வரைக என உணர்த்தியவாறு. (31)*

## இரவுறுதுயரம் கடலொடு சேர்த்தல்

### 'கருணையால் சிவமே உயிர்போல் கனிந்தது'

*உயிர் தன்னிடம காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கிக் கனிந்து நிற்பதைக் கண்ட சிவமும், அநாதியே கொண்ட கைம்மாறு வேண்டாத கருணையால் உயிரைப் போன்றே கனிவதைக் கடலொடு புணர்த்திக் கூறாநிற்றல்.*

பூங்கணை வேளைப் பொடியாய் விழவிழித் தோன்புலியூர்
ஓங்கணை மேவிப் புரண்டு விழுந்தெழுந் தோலமிட்டுத்
தீங்கணைந் தோரல்லுந் தேறாய் கலங்கிச் செறிகடலே
ஆங்கணைந் தார்நின்னை யும்முள ரோசென் றகன்றவரே. 179

பொ - ரை: பூவம்புகளையுடைய மதனன் சாம்பராய் அழிய விழித்தெரித்த கூத்தப்பிரானது புலியூர்வரைப்பிற் பொருந்திச் செறிந்த கடலே! நீ உயர்ந்த கரையைப்பொருந்திப் புரண்டு விழுந்து எழுந்து கூப்பிட்டுத் துன்புற்றுக் கலங்கி ஓரிரவும் தெளிந்தாயில்லை; அதனால், நின்னைக் கூடினவர் நின்னையும் அகன்று சென்றார் அவ்விடத்துளரோ? உரைப்பாயாக என்றவாறு.

தன் அறியாமையையும் அதற்குக் காரணமான மலமறைப் பையும், தானடைந்து இன்புறற்குரிய சிவத்தையும் அதன் உபகாரத்தையும் அறிந்தபோது கணமேனும் இடையீடின்றிக் கனிவது உயிர்க்கு இயற்கையாகும். அங்ஙனமே முற்றறிவும் முற்றுத்தொழிலும் அநாதியே மலங்களொடுகூடாத தூய்மையும் உடைய சிவமும் கனிவதாயிற்று உயிர்கள்மீது வைத்த பரம கருணையால் என்க. அடையப்படும் சிவம் அடையும் உயிர் போலத் தன் கனிவைத் தானே வெளிப்படுத்தல் தலைமைக் கேலாதது ஆகலின் கடல்மேல் வைத்து வெளிப்படுத்ததாம் என்க. (32)

## அலரறிவுறுத்தல்

### 'அருள் உயிர்க்கு இன்பம்பெற உறுத்தியது'

சிவம் உயிர்கண்மாட்டுக் கொண்ட கருணையைக் கடலொடு சேர்த்தி வெளிப்படுத்தியதை உணர்ந்த உயிர்த்தலைமகன் குறியிடைச் சென்று நிற்ப, திருவருட்டோழி எதிர்ப்பட்டு, நினக்கு இது அருளாக இருப்பினும் எம் அளவில் இது பழியாகா நின்றது; ஆதலால், இங்ஙனம் வாரற்க என விலக்கியது.

அலரா யிரந்தந்து வந்தித்து மாலா யிரங்கரத்தால்
அலரார் கழல்வழி பாடுசெய் தாற்கள வில்லொளிகள்
அலரா விருக்கும் படைகொடுத் தோன்றில்லை யானருள்போன்
றலராய் விளைகின்ற தம்பல்கைம் மிக்கைய மெய்யருளே. 180

பொ - ரை: திருமால் ஆயிரம் தாமரை மலர்களைக்கொண்டு வணங்கித் தனது ஆயிரங்கைகளினாலும் செந்தாமரை மலர்போலும் திருவடிகளை வழிபடுதலைச் செய்தவற்கு எல்லையில்லாத ஒளிசெய்யும் ஆழியாகிய படையை அளித்த தில்லையம்பலவாணப் பெருமானுடைய திருவருளைப் போன்று, ஐய! நினது உண்மையான அருள் அம்பல்மிகுந்து அலராயிற்று; இனித் தக்கது செய்க என்றவாறு.

ஞானமா நடராசப்பெருமான் திருவருள் முன் சிலரால் அறியப்பட்டுப் பின்னர் பலரானும் அறியப்பட்டுப் போற்றப் படுதல்போல உன் வருகை அம்பலாய்ப் பின் அலராயிற்று என்றாள். மணிவாசகப் பெருந்தகையை ஆட்கொண்ட தலைக் காலத்து அடியார் கூட்டத்தால் அறியப்பட்டு, சுடுவெயிலில் நிறுத்திக் கொடுந்தண்டம் விதித்த நாள்முதல் வாசகமும் கோவையும்பாடிச் சிதாகாசப் பெருவெளியில் கலக்கும்வரையில் அலராய் இன்றும் வாடாது மணப்பதுபோல உயிர் சிவத்தை நாடிக் குறியிடத்து வந்து எதிர்ப்படுதலும் நிலைபேறுறும் என்பதாம்.

பேராசிரியர் பெருமானும், தில்லையான் அருள்பெற்றார் உலகியல்பினராய் நில்லாமையின், அவ்வருள் உலகத்தார்க்கு அலராம் என்பது கருத்து. 'நாடவர் நந்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப' என்பதூஉம் காண்க. (33)

## 15. ஒருவழித்தணத்தல்

### 'ஒருவழித்தணத்தல் ஒரு பதின்மூன்றும் சிவனது கருணையை அருள் தெரிவித்தது'

இரவுக்குறிக்கண் இவ்வாறு ஒழுகிவந்த உயிர்த்தலைவன் அலராயிற்று என்று விலக்கப்பட்டபின் தெளிந்து விரைவில் வரைதல் தலையாயது. தெருளானாயின் அலர் அடங்கச் சில நாள் ஒருவாறு பிரிதல், உடன் அழைத்துப் போதல், முலைவிலை கொடுத்துப் பெரியோர்களை அனுப்பிப் பெண்பேசி மணந்துகோடல் இம் மூன்றனுள் ஒன்றுசெய்தல் முறைமை. அவற்றுள், ஒருவழித்தணத்தல் இது.

உண்டான அலர் மறைகின்றவரை உயிர்த்தலைவன் சிவம் உறையும் பகுதிக்கண் தலைகாட்டாதிருத்தலாம். இது அகன்றணைவு கூறல் முதல் வருத்த மிகுதிகூறல் ஈறாகப் பதின்மூன்று கிளவிகளை உடையது.

## அகன்றணைவு கூறல்

### 'பிரிந்து கூடிப் பெறும் இன்பு என்றது'

உயிர்த்தலைவ! நீ இங்ஙனம் பகலினும் இரவினும்வந்து பலர் காண நின்றதால் விளைந்த அலர் சில நாளேனும் இந்தப் பக்கமே வாராதொழிந்தனையாயின் மறையும்; அதனால் பழி இல்லையாம்; இன்புபெறும் என்று உரைத்தல்.

**புகழும் பழியும் பெருக்கிற் பெருகும் பெருகிநின்று**
**நிகழும் நிகழா நிகழ்த்தினால் லாலிது நீநினைப்பின்**
**அகழும் மதிலும் அணிதில்லை யோனடிப் போதுசென்னித்**
**திகழு மவர்செல்லல் போலில்லை யாம்பழி சின்மொழிக்கே.** 181

பொ - ரை: ஏதோ காரணத்தால் பிறந்த புகழும் பழியும், அக் காரணங்களை மிகச்செய்து ஒருவன் வளர்க்குமாயின் வளரும்; அக் காரணங்களை இடையறாது செய்து வருவானாயின் அவையும் மாயாது நிலைபெறும்; அங்ஙனம் அல்லாது அவை தாமாக நிகழ்வன இல்லையாம். இதனை நீ எண்ணுவையாயின், அகழையும் மதிலையும் அணிந்துள்ள தில்லையின் தலைவனாகிய கூத்தப்பெருமானது திருவடிமலர் தம் சிரத்தின்மீது விளங்கப் பெறுபவர்களின் பிறவித்துன்பங்களைப் போல இச் சிலவாகிய மொழியினையுடையாளுக்குப் பழி இல்லையாம் என்றவாறு.

திருவடிகளைச் சென்னியில் பூண்டவர்க்குப் பிறவிக்கு ஏதுவாய துன்பங்கள், சூரியன்முன் பனிபோலச் சுவடும் தெரியாது மறையும்; அதுபோலப் பழியும் நீ ஒழியின் அகலும் என்றவாறு.

இதனால், பிரிந்து கூடின் இன்புவடிவான சிவத்தலைவியை என்றும் பெறலாம் என்றது காண்க. (1)

## கடலொடு வரவு கேட்டல்

### 'உயிராய்ச் சிவமே உற்றுற்று உரைத்தது'

திருவருள் உயிரைநோக்கி நீ அகன்றணைவதே மேல் என்றுரைத்ததைக் கேட்ட சிவத்தலைவி, அதற்கு ஆற்றாது உயிர் எய்தும் பிரிவுத்துன்பத்தைத் தாமும் எய்தி, அதனை நேரே வெளிப்படுத்த ஆற்றாது கடலைநோக்கி, நம்மை விட்டுப் பிரிந்துபோனவர் மீளும் பரிசு உனக்கு உரைத்தாரோ என்று கேளாநின்றது.

ஆரம் பரந்து திரைபொரு நீர்முகில் மீன்பரப்பிச்
சீரம் பரத்திற் றிகழ்ந்தொளி தோன்றுந் துறைவர்சென்றார்
போரும் பரிசு புகன்றன ரோபுலி யூர்ப்புனிதன்
சீரம்பர் சுற்றியெற் றிச்சிறந் தார்க்குஞ் செறிகடலே. 182

பொ - ரை: புகழையுடைய அம்பர் என்னுந் தலத்தின்கண் உளனாகிய புனிதனது புலியூரைச் சூழ்ந்து கரையை மோதி மிக்கொலிக்கும் எல்லை கடவாத கடலே! முத்துப்பரந்து அலைகள் தம்முள் மோதிக்கொள்ளும் கடனீர் மேகங்களையும் மீனையும் தன்கட்பரப்பிச் சிறந்த ஆகாயம்போல விளங்கி ஒளிதோன்றும் துறைவராகிய தலைவர் நம்மைவிட்டுப் பிரிந்தவர் திரும்பிவரும் பரிசினை உனக்குத் தெரிவித்தனரோ? உரை என்றவாறு.

அம்பர் - ஒரு தலம். இது மருத நிலத்து ஊர். இதன்பக்கல் கடல் இல்லாமை கருதற்கு உரியது. ஆதலின், சீரம்பர் புனிதன்

புலியூர் சுற்றி எனக் கூட்டிப் பொருள் காண்க. புலியூர் நெய்தலொடு தழீஇய மருதவேலியாதலை இன்றும் காணலாம்.

இதனால் சிவத்தலைவி ஆற்றாமைமிக்குத் திருவருட் டோழியை வினவாது கடலொடு வினாயவாறு காண்க. (2)

## கடலொடு புலத்தல்

### 'பின்னும் உயிராய் மன்னி உரைத்தது'

சிவத்தலைவி கடலைநோக்கி யான் வினவவும் நீ ஒன்றும் கூறாயாகின்றனை என் எனப் புலந்து கூறாநிற்றல்.

**பாணிகர் வண்டினம் பாடப்பைம் பொன்றரு வெண்கிழிதம்**
**சேணிகர் காவின் வழங்கும்புன் னைத்துறைச் சேப்பர்திங்கள்**
**வாணிகர் வெள்வளை கொண்டகன் றார்திறம் வாய்திறவாய்**
**பூணிகர் வாளர வன்புலி யூர்சுற்றும் போர்க்கடலே. 183**

பொ - ரை: பூணையொக்கும் ஒளிபொருந்திய அரவை அணிந்தவனது புலியூரைச் சூழ்ந்த கரையொடு பொருகின்ற கடலே! பாணரையொத்த வண்டுக்கூட்டங்கள் பாட மகரந்த மாகிய பசும்பொன்னைப் புலப்படுத்தாநின்ற போதாகிய வெள்ளிய கிழியைத் தமது சேய்மைக்கண் விளங்கும் காவினின்று வழங்கும் புன்னை மரங்களையுடைய துறையையணைந்த சேர்ப் பராகிய, திங்களின் ஒளிபோலும் வெள்ளிய ஒளியையுடைய என் வெள்வளையைத் தம்மொடு கொண்டு சென்றாரது திறத்தை எனக்குக் கூறுகின்றிலை; அதற்குக் காரணம் என்ன? என்றவாறு.

இதனால் சிவம் மீளவும் உயிரைப்போன்று பிரிவாற்றா மையால் இரங்கிக் கூறியது காண்க. உயிராய் மன்னி - உயிராகவே நிலைபெற்று; அஃதாவது கலப்பின் மகிழ்வும், பிரிவின் துன்பமும் பொருந்துதல் உயிர்க்கே இயல்பு; என்றும் ஒரு தன்மைத்தாதல் சிவத்தியல்பு; அங்ஙனமாகவும் உயிரின்மீது வைத்த பரமகருணை யால் சிவம் பிரிவிற்கவலும் அளவு இறங்கிவந்தது என்பதாம். (3)

## அன்னமோடாய்தல்

### 'பின்னும் உயிர்போல் மன்னி உரைத்தது'

முன்னர் மரத்தையும் கடலையும் வினவிய சிவத்தலைவி, அவை உரையாமையைக்கண்டு, அவை புணர்வும் பிரிவுமாகிய உயிர்த்தன்மையுணராதன; குறிப்பானாயினும் உரைக்கும் ஆற்றலில்லாதன; ஆதலால் அன்னத்தை வினவுவேம் என அதனோடாய்தல். இக் கொளுவும் முன்னைய கொளுவும், 'உயிராய்' 'உயிர்போல்' என்றளவிலன்றி ஏனைய பகுதியால் ஒத்துள்ளன. ஆதலால் இதில் பாடவேறுபாடு இருத்தல் வேண்டும். உண்மைப்பாடம் காணும்வரை இதுவே அமைக.

வியாக்கியானம் இன்பே உயிரன்பு ஆராய்தல் என்கின்றது. இதன் பொருள் சிவம் உயிராகிய தலைவனது அன்பு நிலையை அன்னத்தை வினவி ஆராய்தலாம் என்பது. இது பொருந்துமாயிற் கொள்க.

பகன்றா மரைக்கண் கெடக்கடந் தோன்புலி யூர்ப்பழனத்
தகன்றா மரையன்ன மேவண்டு நீல மணியணிந்து
முகன்றாழ் குழைச்செம்பொன் முத்தணி புன்னையின் னும்முரையா
தகன்றார் அகன்றே யொழிவர்கொல் லோநம் அகன்றுறையே. 184

*பொ - ரை:* பகனென்னும் சூரியனது தாமரைமலர் போலும் கண்கெட அவனை வென்றவனது புலியூர்க்கண்ணவாகிய வயல்களில் உள்ள அகன்ற தாமரையில் வாழும் அன்னமே! வண்டுகளாகிய நீலமணிகளை அணிந்து, தாதாகிய செம் பொன்னையும், அரும்பாகிய முத்துக்களையும் அணிந்துள்ள, முகத்துத்தாழ்ந்த குழையினையுடைய புன்னை இன்னும் ஒன்றும் உரையாதிருக்கின்றது; நம்மைப் பிரிந்தவர் நமது அகன்ற கடற்றுறையை விட்டு அகன்றேபோவரோ! இனி வாராரோ? சொல் எ-று.

அன்னத்தை நோக்கி வினவியதன் கருத்து மரமும் கடலும் நிலைபெயரா; நீ பிரிவுத்துன்பத்தை அறிவாய்; அதனால் வரவு அறிந்துவரவும் செய்வாய்; தூது செல்வாய்; ஆதலின், நீயேனும் உரை என்றாளாம். சிவம் இருந்தாங்கிருந்து எல்லாம் அறியும் ஆற்றலது இங்ஙனம் வினாவுவது உயிர்போல் மன்னியுரைத்த தாம் என்க. (4)

## தேர்வழிநோக்கிக் கடலொடு கூறல்

### 'சிவம் உயிர்மோகம் சென்று இயம்பியது'

சிவம் உயிரின்மீது கொண்டுள்ள அளவிலாக்கருணை யாகிற மோகத்தைக் கடலிடம் சென்று கூறியதாம்.

இன்புருச்சிவமே யன்பாம் உயிராவர், முன்பு நல்வழியை மூடா தென்றது என்பது வியாக்கியானம். இதன் கருத்து இன்பவடிவான சிவம், என்பால் அன்பு கொண்ட உயிர்த்தலைவர் மீளவும் இங்கு ஆவர்; ஆதலால் அவர் சென்ற முன்பு உள்ள இந்த வழியை மூடாதே எனக் கடலை வேண்டிக்கொண்டது என்பதாம்.

உள்ளும் உருகி யுரோமஞ் சிலிர்ப்ப வுடையவனாட்
கொள்ளு மவரிலொர் கூட்டந்தந் தான்குனிக் கும்புலியூர்
விள்ளும் பரிசுசென் றார்வியன் றேர்வழி தூரற்கண்டாய்
புள்ளும் திரையும் பொரச்சங்கம் ஆர்க்கும் பொருகடலே. 185

பொ - ரை: பறவைகளும் அலைகளும் தம்முட்பொரச் சங்கம் ஆரவாரிக்கும் கரையைப் பொருங்கடலே! மனமுருகி உரோமஞ் சிலிர்ப்ப, உடையவனாகிய தான் ஆட்கொள்ளும் மெய்யடியார் கூட்டத்துள் எனக்கும் ஒருசேர்க்கை தந்த அம்பலவாணப் பெருமான் நின்று திருநடம்புரியும் புலியூரை நீங்கும் தன்மையிற் சென்றவரது பெரிய தேர் போனவழியைத் தூர்த்துவிடாதே; எம்முயிர்க்குப் பற்றுக்கோடு இதுவே என்றவாறு.

தேர்சென்ற வழியையாவது கண்டு ஆற்றுவேன்; அதனையும் தூர்த்துவிடாதே என்று வேண்டிக்கொள்வதால் உயிரினிடம் தாம் கொண்டுள்ள மோகத்தை வெளிப்படுத்தியவாறு காண்க. (5)

## கூடலிழைத்தல்

### 'உயிர்த்தொழில் சிவமாய் உறுங்குறி பார்த்தது'

கூடல் என்பது ஒருவகைச் சுழி. கண்ணை மூடிக்கொண்டு நிலத்தில் வட்டமாகக் கோடு இழைக்கும்போது இருமுனையும் துளியும் பிசகாது ஒன்றுகூடின் பிரிந்த தலைவன் உடனே வருவான் என்றும், வேறுபடின் பிரிவான் என்றும் அறிதல் பண்டைய மகளிர் வழக்கு. இதனைச் சைவ வைணவ அருட் பாடல்கள் பலவற்றிலும் காணலாம்.

உயிர்செய்யும் வினைகள் யாவும் சிவகன்ம மாயின் உயிர் என்றும் சிவத்தைக் கூடுதற்கு இழுக்கில்லை; அத்தகைய பரிபாகம் உயிர்க்கு வருமோ எனக் கூடலிழைத்துச் சிவம் பார்த்ததைக் கூறுவதாம்.

**ஆழி திருத்தும் புலியூ ருடையான் அருளினளித்**
**தாழி திருத்தும் மணற்குன்றின் நீத்தகன் றார்வருகென்**
**றாழி திருத்திச் சுழிக்கணக் கோதிநை யாமலைய**
**வாழி திருத்தித் தரக்கிற்றி யோவுள்ளம் வள்ளலையே. 186**

பொ - ரை: ஆஞ்ஞாசக்கரத்தால் இம் மண்ணுலகு முழுதையும் தன்னெறியில் நிற்கத் திருத்தும் புலியூரையுடையவனது அருள்போல இன்பமெய்த அளித்த, கடல் வந்து திருத்தும் மணற்குன்றின்மீது என்னைவிட்டுப் பிரிந்து அகன்றார் வரவேண்டும் என்று, கூடற்சுழியையிழைத்து அதன் கணக்கைச் சொல்லி யான் வருந்தாமல், ஐய! வாழ்க, அவன் மனத்தை நெகிழச்செய்து வள்ளலை ஈண்டுக் கொணரவல்லையோ? வல்லையாயின் யான் இரக்கின்றேன் என்றவாறு.

சீவகன்மம் சிவகன்மமாங்காலம்வரின் இச் சுழி தவறாமல் கூடும் எனக் கூடலிழைத்தாளாம். கூடல் கூடுமாயின் உயிர் சிவத்திடை என்றும் பிரியாமலே உடன் உறையும் என்பது எதிர்நோக்கு. (6)



## சுடரொடு புலம்பல்

### 'இன்பே உயிராய் இடருற்று இயம்பியது'

சூரியன் அத்தமித்தலைக்கண்டு சிவம் துன்புற்று, உயிரும் சூளுறவு பொய்த்தது; துணையாய்ப் பகலைச் செய்திருந்த நீயும் மறைகின்றாய்; யான் இனி உய்யுமாறு எங்ஙனே எனச் சுடரொடு புலம்பா நிற்றல்.

**கார்த்தரங் கந்திரை தோணி சுறாக்கடல் மீனெறிவோர்**
**போர்த்தரங் கந்துறை மானுந் துறைவர்தம் போக்குமிக்க**
**தீர்த்தரங் கன்றில்லைப் பல்பூம் பொழிற்செப்பும் வஞ்சினமும்**
**ஆர்த்தரங் கஞ்செய்யு மாலுய்யு மாறென்கொல் ஆழ்சுடரே. 187**

பொ - ரை: கரிய திரையும், திரையில் அலைகின்ற தோணியும், சுறாவும், மீன்படுக்கும் படவரும், கடலும், போரைத்தரும் அங்கங்களையும், போர்க்களத்தையும் ஒக்கும் துறையையுடையவரது பிரிவும், சிறந்த தூயோராகிய மால்பிரமனாதியரின் எலும்பை அணிந்தவனது தில்லையின்கண் உள்ள பொழிலில் நின்னிற்பிரியேன் என்று சொல்லிய வஞ்சினமும் என்னுடலை நோயுற்றார் மேனிபோலச் செய்யும்; மேல்கடலில் ஆழ்கின்ற சுடரே! யான் உய்யும் நெறி என்னோ? என்றவாறு.

திரை - குதிரை. தோணி - தேர். சுறா - யானை. படவர் - காலாள். கடல் - போர்க்களம். ஆகக் கடலும் அதன் அங்கங்களும் போர்க்களத்தை ஒத்தமை காண்க. வஞ்சினம் - வருவர் என்ற உறுதியைத் தந்தும் பிரிவு தளர்ச்சியைத் தந்தும் இறந்துபடாமலும் உயிர்வாழ எண்ணாமலும், மெலிவு தந்து நோயுற்றார் மேனிபோல் செய்கின்றன என்பதாம். இதனால் சிவம் உயிரின்நிலை எய்தித் தளர்வும் மெலிவும் பொருந்தியது காண்க. (7)

## பொழுதுகண்டு மயங்கல்

### 'பருவம் நோக்கிப் பரிவு இன்புற்றது'

கலப்பிற்கு அணிசெய்வதான மாலைக்காலம் வரக்கண்டு, இன்பவடிவான சிவம் கலத்தற்குரிய உயிர் பக்கலின்மையால் பரிவுற்றது. கருவிகழிந்த பருவம் நோக்கி, இன்பமே உயிருக்கு அன்பாய் இரங்கல் என்பது வியாக்கியானம்.

**பகலோன் கரந்தனன காப்பவர் சேயர்பற் றற்றவர்க்குப்**
**புகலோன் புகுநர்க்குப் போக்கரி யோனெவ ரும்புகலத்**
**தகலோன் பயிற்றில்லைப் பைம்பொழிற் சேக்கைகள் நோக்கினவால்**
**அகலோங் கிருங்கழி வாய்க்கொழு மீனுண்ட அன்னங்களே. 188**

பொ - ரை: சூரியன் மறைந்தான்; இம் மாலைக்காலத் துன்பத்தைப் போக்குபவர் மிகச் சேய்மையிலுள்ளார்; அகன்ற

ஓங்கிய பெரிய உப்பங்கழியில் கொழுத்த மீனையுண்ட அன்னங் களும், புலன்களிற் பற்றற்றவர்க்குப் புகலிடமானவனும் தன்கண் அடைந்தார்க்குப் பின்பு பிரிதற்கு அரியவனும், அனைவரும் போற்றத்தக்கவனும் ஆகிய அம்பலவாணப் பெருமான் எழுந் தருளியிருக்கின்ற தில்லைக்கண் விளங்கும் பசிய பொழிலிடத் துள்ள தம் சேக்கைகளை நோக்கின; இனி என்செய்வேன் என்றவாறு.

என் செய்வேன் என மாலைப்பொழுதைக் கண்டு சிவத்தலைவி துன்புற்றவாறு உணர்த்தப்பெற்றது. (8)

## பறவையொடு வருந்தல்

### 'இன்பு அருணோக்கம் எங்குமானது'

சிவம், உயிர்மீது கொண்ட அருணோக்கத்தால் விளைந்த பிரிவுத்துன்பம் சுடரும் பொழுதுமாய இவற்றைமட்டும் பற்றி நில்லாது பறவை முதலானவற்றையும் விளித்து வினவுமளவிற்கு விரிந்தமையால் பறவையை நோக்கி வருந்தியதை அறிவிப்பது.

**பொன்னும் மணியும் பவளமும் போன்று பொலிந்திலங்கி**
**மின்னுஞ் சடையோன் புலியூர் விரவா தவரினுண்ணோய்**
**இன்னும் அறிகில வாலென்னை பாவம் இருங்கழிவாய்**
**மன்னும் பகலே மகிழ்ந்திரை தேரும்வண் டானங்களே.** 189

பொ - ரை: பொன்போலப் பொலிந்து, மாணிக்கம்போல இடையிட்டுவிளங்கிப் பவளம்போல மின்னும் சடையையுடைய கூத்தப்பிரானது புலியூரைக் கலவாதாரைப் போல யான் உறும் மனத்துன்பத்தை, என் ஆற்றாமைக்குப் பரிகாரந் தேடாது, பெரிய கழியிடத்துப் பகலே புகுந்து தமக்கு இரைதேடும் வண்டானங்கள் இந் நிலைமைக்கண்ணும் அறிகில; இஃது என்ன பாவமோ என்றவாறு.

வண்டானங்கள் புலியூர் கலவாதாரைப்போல யான் அடையும் மன நோயை அறிகிலவாய்த் தமக்கு இரை தேடுகின்றன; இஃது என்ன பாவமோ என்றாள். பிறர்படும் துன்பத்திற்குப் பரிகாரந்தேடி உதவுவதே உயிரின் இயல்பாகவும், அவை அது செய்யாது தனக்கே இரைதேடிக் கழிகின்றனவே; இதுவும் யான்செய்த பாவம் எனப் பறவையைப் பார்த்தும் வருந்தியதால் அருணோக்கம் எங்குமானமை காண்க. (9)

## பங்கயத்தொடு பரிவுற்றுரைத்தல்

### 'இன்புற்றிட நோக்கி அன்புற்றிரங்கியது'

அருணோக்கம் எங்குமாகி, இரங்கிய சிவம், மாலைப் பொழுதில் கூம்புங் கமலங்களைக் கண்டு, இவை என் வருத்தங்

கண்டு தம் கணவனாகிய கதிரவனை விரைய வருக எனக் கைகூப்புகின்றன; ஆதலால் என்மாட்டு அன்புடையன என்று அவற்றொடு இரங்கா நிற்றல்.

**கருங்கழி காதற்பைங் கானலின் தில்லையெங் கண்டர்விண்டார்**
**ஒருங்கழி காதர மூவெயில் செற்றவொற் றைச்சிலைசூழ்ந்**
**தருங்கழி காதம் அகலுமென் றூழென் றலந்துகண்ணீர்**
**வருங்கழி காதல் வனசங்கள் கூப்பும் மலர்க்கைகளே. 190**

பொ - ரை: தில்லையிலுள்ளாராகிய எமது நீலகண்டப் பெருமான் பகைவர் மூவரும் ஒருங்கழியும் அச்சத்தையுடைய முப்புரங்களையுஞ்செற்ற ஒப்பற்ற வில்லாகிய மேருமலையைச் சூழ்ந்து கடத்தற்கு அரியவாகிய காதங்களைக்கடந்து சூரியன் நீங்குவன்; இனியிவள் எங்ஙனம் ஆற்றுவாள் என்று வருந்தி, கருங்கழியின்கண்ணும், காதலையுடைய பைங்கானலின்கண்ணும் உளவாகித் துன்புற்றுக் கண்ணீர் (கள்நீர்) சிந்தின மிக்க காதலையுடைய தாமரைகள்; கதிரவனை நோக்கி விரைந்து வரவேண்டும் என்று மலராகிய தம் கைகளைக் கூப்பியிரவா நின்றன; ஆதலால் இவை என்மாட்டன்புடையன போலும் என்றவாறு.

வனசங்கள் கண்ணீர் வடித்துக் கரங்கூப்புதலைத் தன்மாட்டு இரங்கிச் செய்தன என்று உட்கொண்டு இரங்கியதால் இது சிவம் அன்புற்றிரங்கிய வாறாயிற்று. (10)

## அன்னமோடழிதல்

### 'இன்பம் உயிர்க்கா எடுத்து இரங்கியது'

இன்பவடிவாய சிவம், எல்லாரும் துயில, யான்மட்டும் துயிலாத இந் நிலைமைக்கண்ணும் என் வருத்தத்தை உயிர்க்குச் சென்று உரையாது, தன் சேவலோடு கவலையின்றி உறங்குகின்றதே என அழிந்து கூறாநிற்றல்.

**மூவல் தழீஇய அருண்முத லோன்றில்லைச் செல்வன்முந்நீர்**
**நாவல் தழீஇயவிந் நானிலந் துஞ்சும் நயந்தவின்பச்**
**சேவல் தழீஇச்சென்று தான்றுஞ்சும் யான்றுயி லாச்செயிரெம்**
**காவல் தழீஇயவர்க் கோதா தளிய களியன்னமே. 191**

பொ - ரை: மூவலூரைப் பொருந்திய திருவருட்செல்வம் படைத்த முதல்வனாகிய தில்லைச்செல்வனது கடல்புடைசூழ்ந்த நாவலந் தீவாகிய நானிலமுழுதும் துயிலாநின்றது; இப்பொழுதினும் யாம் துயிலாமைக்கு ஏதுவாகிய வருத்தத்தை எமது காவலைப் பொருந்தியவர்க்கு உரையாது, அளித்தாகிய களியன்னம் சென்று தான் விரும்பிய இன்பச் சேவலைத் தழுவி ஒருவித கவலையு

*மின்றித் தான் துயிலாநின்றது; இனி இதனைக் கூறுவார் யார்? என்றவாறு.*

*முன்பு அன்னமோடாய்தலின்கண் அன்னமாவது சென்று சொல்லும் என எதிர்நோக்கிய தலைவி, இன்று அதுவும் கைவிட்டமை கருதி அழிந்தாளாம். இங்ஙனம் சிவம் உயிருக்காகப் பரிந்து, அதனைவிட்டுப் பிரிதலாற்றாது அன்னமோடு அழிந்தவாறு.* *(11)*

## வரவுணர்ந் துரைத்தல்

### 'அருளே சென்றவற் கியம்பியது'

*சிவத்தலைவி உயிரின்பால் இரக்கமிக்கு வருந்தாநிற்ப, தலைமகன் ஒருவழித் தணந்து வந்தான் என்பதைச் சிறைப்புற மாக அறிந்த திருவருட்டோழி, இவள் வளைகள் நிறுத்தவும் நில்லா; நெஞ்சம் நெகிழ்கின்றது; கண்கள் துயிலின்றிக் கலுழ்கின்றன; இவைகளை யான் சொல்லவேண்டா; நீயே கண்டாய்; இவைகளை அவர்க்கு நீயே சென்று சொல் என மதியொடு கூறாநிற்றல்.*

**நில்லா வளைநெஞ்சம் நெக்குரு குந்நெடுங் கண்டுயிலக்**
**கல்லா கதிர்முத்தங் காற்றுமெ னக்கட் டுரைக்கதில்லைத்**
**தொல்லோன் அருள்களில் லாரிற்சென் றார்சென்ற செல்லல்கண்டாய்**
**எல்லார் மதியே யிதுநின்னை யானின் றிரக்கின்றதே.** 192

*பொ - ரை: ஒளிநிறைந்த மதியே! தில்லையம்பலவாணன் அருள் இல்லாதார்போலக் கண்ணோட்டமின்றிச் சென்றவர் சென்றதால் விளைந்த துன்பங்களை நீயே கண்டாய்; வளைகள் நில்லா, நெஞ்சம் நெக்கு உருகும்; நெடிய கண்கள் துயிலக் கல்லாவாய்க் கண்ணீர்சிந்தின என்று அவர்க்குச் சொல்வாயாக; நின்னை யான் இரப்பது இது என்றவாறு.*

*உயிரிடம் சென்று திருவருளே உன்மாட்டுச் சிவம் இத்துணைப்பெரும் கருணை உடைத்தாயிருந்தது; நீ இல்லாத பொழுது அது பட்ட மனநிலை எம்மால் சொல்லும் தரத்ததன்று என்று சிறைப்புறமாகத் தலைவன் இருக்க மதியை நோக்கிக் கூறியவாறு.* *(12)*

## வருத்தமிகுதி கூறல்

### 'சிவனது கருணையின் அளவெடுத் துரைத்தது'

*திருவருள் உயிர்முன் சென்று நீ இல்லாதபோது அவள்பட்ட துன்பம் என்னால் அளவிடற்பாலதன்று என வரைவு தோன்றச் சிவத்தினது கருணை மிகுதியைக் கூறாநிற்றல்.*

வளருங் கறியறி யாமந்தி தின்றுமம் மர்க்கிடமாய்த்
தளருந் தடவரைத் தண்சிலம் பாதன தங்கமெங்கும்
விளரும் விழுமெழும் விம்மும் மெலியும்வெண் மாமதிநின்
றொளிருஞ் சடைமுடி யோன்புலி யூரன்ன ஒண்ணுதலே. 193

பொ - ரை: வளருகின்ற மிளகுக் கொடியைத் தமக்குரிய உணவு அன்றென்று அறியாத இளமந்தி தின்று நோய்க்கிடமாகி நிலைதளரும் பெரிய மலைகளையுடைய தண்சிலம்ப! வெண்மையான பெருமையையுடைய மதி நின்று விளங்கும் சடைமுடியையுடையானது புலியூரை ஒத்த ஒளி பொருந்திய நெற்றியை உடையவளாகிய இவள் தன் மேனிமுழுதும் பசக்கும், அமளிக்கண் விழும், எழும், விம்மும், பொருமும், மெலியும், அதனால் இன்ன தன்மையள் என்று என்னால் சொல்லப்படாது எ-று.

தின்னக்கூடாத மிளகைத் தின்றுமயங்கும் மந்திவாழ் மலை என்றதனால் உன் தன்மை உணராது எதிர்ப்பட்டு வருந்தா நின்றாள் சிவத்தலைவி என உள்ளுறை தோன்றநின்றவாறு காண்க.

இங்ஙனம் ஒருவழித்தணந்து இருவருக்குமுள்ள இன்னலையுணர்ந்த உயிர், சிவத்தை என்றும் பொருந்தவும் கூடும்; அன்றி, உடன்போக்கு நிகழ்த்தவும் கூடும்; அங்ஙனம் ஒருவழித்தணத்தல் நிகழாதாயின் உடன் போக்கு நிகழ்த்தும். (13)

## 16. உடன்போக்கு

**'உடன்போக்கு ஐம்பதோடு ஆறு துறையும்
அருள்உயிர்க்கு அருமை அறிய உணர்த்தலும்
ஆனந்தத்திடை அழுத்தித் திரோதை
பரை வழியாகப் பண்புணர்த்தியது'**

அஃதாவது, திருவருள் வரையாது ஒழுகும் உயிர்த் தலைவனுக்குச் சிவத் தலைவியின் அருமையை அறிய உணர்த்துதலும், உயிரைச் சிவானந்தத்தில் அழுத்தத் திருவருட்சக்தி திரோதான சக்தியாக மாறி, பரையாகிய நற்றாயின் வழியாகச் சிவத்தலைவியின் பண்புகளை உணர்த்தியதாம். இது பருவம் கூறல் முதல் அழுங்கு தாய்க்குரைத்தல் ஈறாக ஐம்பத்தாறு கிளவிகளை உடையது.

### பருவங் கூறல்

**'அருள் சிவம் பெறுபதம் இதுவென உரைத்தது'**

சிவத்தலைவி பருவம் எய்தினள்; அதனால் யாரேனும் மகட்பேசவரின் எமர் மறாது கொடுக்கவும்கூடும்; அது நிகழாதிருக்க நீ முற்பட்டு வரைக எனக் கூறாநிற்றல்.

ஒராகம் இரண்டெழி லாயொளிர் வோன்றில்லை யொண்ணுதலங்
கராகம் பயின்றமிழ் தம்பொதிந் தீர்ஞ்சுணங் காடகத்தின்

பராகம் சிதர்ந்த பயோதரம் இப்பரி சேபணைத்த
இராகங்கண் டால்வள்ள லேயில்லை யேயெமர் எண்ணுவதே. 194

*பொ - ரை: ஒருடலின்கண்ணே ஆணழகும் பெண்ணழகுமாகிய இரண்டு அழகாயும் விளங்குகின்றவனுடைய தில்லைக்கண் உள்ளாளாகிய தலைவியின் பூசுவபூசி பொதியத்தகுவனவாகிய அமுதத்தைப் பொதிந்து நெய்த்த தேமலாகிய செம்பொன்னின் பொடியைச் சிதறின முலைகள் இப்படிப் பெருத்திருக்கிற கதிர்ப்பைக் கண்டால் வள்ளலே! எம்மவர்கள் எண்ணுவ தொன்றும் இல்லையே என்றவாறு.*

*எமர் வருவார்க்கு வரைவு நேர்வர்; அதற்குள் நீ முந்துக என அறிவித்தவாறாம். இங்ஙனம் முலைகளின் கதிர்ப்பைக் கூறிச் சிவத்தைப்பெறும் காலம் இதுவே எனத் திருவருள் உயிர்க்கு உணர்த்தியதாம். (1)*

## மகட் பேச்சுரைத்தல்

### 'வரைவில் இன்பம் பெறுவாய் என்றது'

*திருவருள், பிறர் பொன்னணியைக் கருதுகின்றார்; நீ விரைய வரைவொடு வருக; அன்றி உடன்கொண்டு போக; இரண்டனுள் ஒன்றை இன்றே செய்க என்று படைத்துமொழியான் கூறாநிற்றல்.*

மணியக் கணியும் அரனஞ்சம் அஞ்சி மறுகிவிண்ணோர்
பணியக் கருணை தரும்பரன் றில்லையன் னாடிறத்துத்
துணியக் கருதுவ தின்றே துணிதுறை வாநிறைபொன்
அணியக் கருதுகின் றார்பலர் மேன்மேல் அயலவரே. 195

*பொ - ரை: துறைவா! அக்குமணியை அணியும் அரனும், நஞ்சினை அஞ்சிக் கலங்கிச் சுழன்று தேவர்கள் வணங்க அவர் களுக்குக்கருணைவழங்கியபரனும்ஆகிய அம்பலவாணப்பெருமானது தில்லைநகரை ஒத்த இவள் திறத்துத் துணிந்து செய்ய எண்ணுவதை இன்றே செய்; அயலவர் பலர் நிறைந்த பொன்னை இவள்மேல் மேன்மேலும் அணியக் கருதுகின்றார் என்றவாறு.*

*திருவருள் தானாகவே படைத்துமொழிந்து வரைவு உடன் போக்கு இரண்டினுள் ஒன்றில் ஆற்றுப்படுத்தி இடையறாக் கலப்பால் என்றும் இன்பம் எய்த உயிர்த் தலைவனைத் தூண்டியவாறு. (2)*

## பொன்னணி வுரைத்தல்

### 'அன்புடையோர்க்கே இன்பு ஆம் என்றது'

*திருவருள், மேலும், யார் இடையறாப் பேரன்புடையரோ அவர்க்கே சிவம் உரியது; பலர் இடையறாப்பேரன்பு எய்திப் பொன்னணியப் புகுதாநின்றார் என்று உரையாநிற்றல்.*

பாப்பணி யோன்றில்லைப் பல்பூ மருவுசில் லோதியைநற்
காப்பணிந் தார்பொன் னணிவார் இனிக்கமழ் பூந்துறைவ
கோப்பணி வான்றோய் கொடிமுன்றில் நின்றிவை யேர்குழுமி
மாப்பணி லங்கள் முழங்கத் தழங்கும் மணமுரசே. 196

பொ - ரை: மணம் கமழும் பூக்கள் நிறைந்த துறைவனே! பாம்பை அணிந்த பெருமானது தில்லைக்கண் வாழ்வாளாகிய பல பூக்கள் பொருந்திய நுண்ணிய கூந்தலை உடையாளை நல்ல காப்பணிந்தார்கள்; இனிப் பொன்னை அணிவார்கள்; திருமணத்திற்கு ஏற்ற கோப்புக்களையுடைய, வானை அளாவும் கொடிகள் நிறைந்த முன்றிலின்கண் நின்று மணமுரசங்களின் எழுச்சியோடு கூடிப் பெரிய சங்கங்கள் முழங்கின; இனி ஏற்றதைச் செய்வாயாக என்றவாறு.

தாயாகிய பரை காவலிட்டமையால் அன்பர்களாகிய அயலார் பொன் அணிவான் புகுந்தார்; ஆதலால், விரைவில் வரைவு உடன்போக்கு என்ற இரண்டனுள் ஒன்றைத் துணிக என்று உணர்த்தியதாம். (3)

## அருவிலை யுரைத்தல்

### 'இன்பு அதனுக்கு அளவிலை என்றது'

சிவத்தின்பால் நீ எய்தக்கருதிய இன்பத்திற்கு ஈடானதும் எடுப்பானதும் ஒன்றும் இல்லையாதலால் மதிப்பிடமுடியாதது இன்பு எனத் திருவருள் உயிர்க்கு உணர்த்தியது.

எலும்பால் அணியிறை யம்பலத் தோனெல்லை செல்குறுவோர்
நலம்பா வியமுற்றும் நல்கினும் கல்வரை நாடரம்ம
சிலம்பா வடிக்கண்ணி சிற்றிடைக் கேவிலை செப்பலொட்டார்
கலம்பா வியமுலை யின்விலை யென்னீ கருதுவதே. 197

பொ - ரை: சிலம்பா! எலும்பால் அணிசெய்துகொள்ளும் இறைவனாகிய அம்பலவாணனது எல்லைக்கட்செல்ல விரும்புவோரது நன்மை பரந்த உலகமுழுதும் நீ கொடுக்கவிரும்பினும் மலைநாடர்களாகிய எம்மவர்கள், மாவடுவின் வகிர்போலும் கண்களையுடைய தலைவியினது சிறிய இடைக்கு விலையாகச் சொல்லச் சம்மதியார்; அணிகலன்கள் பரந்த முலையின் விலையாக எதனை நீ கருதுவது? ஒன்றற்கும் அவர்கள் உடன்படார்கள் என்றவாறு.

அம்பலத்தான் எல்லை செல்ல விரும்புதலாவது 'ஞானத் தாலடைவர் சில ஞானிகள்' என்றாங்கு ஞானத்தால் அறியமுற்படுதல். நலம் பாவிய முற்றும் என்றது அவர் நலம் பரவாத இடம் இன்மையான் என்க; என்றது அவர் சீவன்முத்தராய் இருத்தல்; அஃதாவது, சீவனுடனிருக்கும்போதே முத்தி

அடைதல்; முத்தியாவது எங்கும் ஒக்க வியாத்தியடைந்திருத்தல்; இஃது அகண்ட பரிபூரணர் என்றபடி என்பது பேராசிரியர் உரை.

சீவன்முத்தராவார் எடுத்த உடலோடு கூடியிருக்கும் போதே முதல்வன் திருவடிகளில் நான் என ஒன்றில்லை என்று, தானே என ஏகமாகி நின்றுகொண்டே பிராரத்த வினைக்கீடாக வரும் விடயத்தை உணர்பவர். அவர்களுடைய செயல் யாவும் சிவச் செயலேயாம். இதனை ஊன்றியுணரும் அருள் வாய்ப்பில்லார், உயிருடன் இருக்கும்போதே முத்தி அடைவர் சீவன்முத்தர் என்பர். உயிர் என்றும் நித்தியமாதலானும், 'அதனுடனிருக்கும் போதே' எனின், உயிரின்வேறாகத், தான் ஒருபொருள்பெறப் படலானும், அஃதின்மையானும் பேராசிரியர் உரைக்கு அங்ஙனங் கொள்ளாது, உயிர் உடனிருக்கும் போதே - உயிரானது எடுத்த இவ்வுடலுடன் இருக்கும்போதே எனப்பொருள்கொள்க.

இக் கலித்துறை சிவத்தின் அளவிடற்கரிய பெருமையினையும் அருமையினையும் உணர்த்தியவாறு காண்க. (4)

## அருமைகேட்டு அழிதல்

### 'உயிர் இன்பு எமக்கு ஊறுமோ என்றது'

அருவிலை உரைக்கக்கேட்ட உயிர், இத்தகைய இன்பவடிவான சிவம் எமக்குக் கிடைக்குமோ? கிட்டாத பொருளை விரும்பிய பயன் என்ன? என்று தன் நெஞ்சொடு அழிந்து கூறாநிற்றல்.

**வீசும்புற்ற திங்கட் கழுமழப் போன்றினி விம்மிவிம்மி**
**அசும்புற்ற கண்ணோ டலறாய் கிடந்தரன் றில்லையன்னாள்**
**குயம்புற் றரவிடை கூரெயிற் றூறல் குழன்மொழியின்**
**நயம்பற்றி நின்று நடுங்கித் தளர்கின்ற நன்னெஞ்சமே. 198**

பொ - ரை: கூத்தப்பெருமானது தில்லையை ஒப்பாளுடைய முலை, புற்றின்கண் வாழும் பாம்பின்படம்போலும் இடை, கூரிய எயிற்றின்கண் ஊறிய நீர், குழலோசைபோலும் மொழி என இவற்றின்கட்கிடந்த இன்பத்தையே கருதி, விடாது நின்று தளர்கின்ற நல்ல மனமே! விண்ணினிடத்துப் பொருந்திய நிறைமதியை வேண்டியழும் குழவிபோல, நீர்வற்றாத கண்ணோடு விம்மி விம்மி இனிக் கிடந்து அலறுவாயாக என்றவாறு.

மெய்ஞ்ஞானியர் வியாப்திக்குள் அடங்கிய உலகு அனைத்தும் தரினும் கிடையாத பேரின்பம் எமக்கு இனி உறுமாறில்லை என்று உயிர் நெஞ்சழிந்தவாறு. (5)

## தளர்வறிந்துரைத்தல்

### 'உன்னுடன் சிவம் உறும் என அருள் உரைத்தது'

தமராகிய மலைநாடர் மனம்ஒப்பாராயினும் அத்தகைய பெருமையையுடைய சிவம் உன்பாற் கருணை நிறைந்தது;

ஆகலான், நீ இடையறாப் பேரன்பால் அழைப்பின் உடன்வரும் எனத் திருவருள் உபாயம் கூறியதாம்.

**மைதயங் குந்திரை வாரியை நோக்கி மடலவிழ்பூங்**
**கைதையங் கானலை நோக்கிக்கண் ணீர்கொண்டெங் கண்டர்தில்லைப்**
**பொய்தயங் குந்நுண் மருங்குனல் லாரையெல் லாம்புல்லினாள்**
**பைதயங் கும்மர வம்புரை யும்மல்குற் பைந்தொடியே. 199**

பொ - ரை: படம் விளங்கும் பாம்பையொக்கும் அல்குலை யுடைய பசிய வளையலையணிந்த தலைவி, கருமை விளங்கும் அலைகளையுடைய கடலை நோக்கி, இதழ்விரியாநின்ற பூவை யுடைய தாழைகள் பொருந்திய கானலையும் கண்டு, கண்ணீரைக் கொண்டு, எம்முடைய நீலகண்டப்பெருமானது தில்லைக்கண் உள்ளாராகிய, பொய்யாதல் விளங்கும் இடையையுடைய ஆயத்தாராகிய மகளிரனைவரையும் தழுவிக்கொண்டாள்; அவள் கருதியதொன்று உண்டு போலும் என்றவாறு.

உன்னுடன் வருதல்குறிப்புப்போலும் என்று உடனழைத்துப் போனால் நீ இன்பச்சிவத்தை எய்தலாம் என்று திருவருள் உணர்த்தியவாறாம். *(6)*

## குறிப்புரைத்தல்

### 'கண்ட குறியாற் கலவேம் என்றது'

மேலும் இன்று, அவள் விளையாடிய பந்து கழங்கு பாவைகளை என் கைத்தந்தாள்; அது நின்னொடுவரும் குறிப்புப் போலும்; இத்தகைய குறிப்புக்களால் இன்று யாம் நின்னோடு கலவேம்; உடன்கொண்டு நும்மனை சென்று வரைந்த பின்னர்க் கலப்பேம் என்று திருவருள் உயிர்க்கு உணர்த்தியது.

**மாவைவந் தாண்டமென் னோக்கிதன் பங்கர்வண் டில்லைமல்லல்**
**கோவைவந் தாண்டசெவ் வாய்க்கருங் கண்ணி குறிப்பறியேன்**
**பூவைதந் தாள்பொன்னம் பந்துதந் தாளென்னைப் புல்லிக்கொண்டு**
**பாவைதந் தாள்பைங் கிளியளித் தாளின்றென் பைந்தொடியே. 200**

பொ - ரை: என் பைந்தொடி, இன்று என்னைத் தழுவிக் கொண்டு தன் நாகணவாய்ப்புள்ளை என்னிடம் தந்தாள்; பொன்னாற் செய்யப்பட்ட பந்தினைத் தந்தாள்; பின் தான் விளையாடிய பாவையைத் தந்தாள்; தான் வளர்த்த பசிய கிளியைத் தந்தாள்; மானை வந்தடிமைகொண்ட மெல்லிய நோக்கினையுடைய உமாதேவியாரை ஒருபக்கத்துடையவராகிய சிவபெருமானது தில்லைவரைப்பில் உண்டாகிய வளத்தையுடைய கொவ்வைக் கனியைச் சென்றாண்ட செவ்வாயையுடைய இக்கருங்கண்ணியது உளக்குறிப்பை அறியேன்; நின்னுடன் போதல்போலும் என்றவாறு.

*இதனால் சிவம் வலிய வந்து மனத்திடை மன்னிய மன்னாக விழைகின்றது; நீ அதற்குரிய பணிபுரிக; அன்புசெய்க; இன்புறுக என்று உயிர்க்கு உணர்த்தியதாம்.* (7)

## அருமை உரைத்தல்

### 'சிவன்றன் பெருமை உயிர் அருட்கு உரைத்தது'

*உடன்போக என அருள் அறிவித்ததை உணர்ந்த உயிர், சிவம் எத்துணைப் பெருமை படைத்தது; அது என்னுடன் அருஞ்சுரத்து வரும் எளிமை படைத்த தன்றே; எங்ஙனம் உடனழைத்துப்போவது எனத் திருவருளுக்குத் தெரிவித்தது.*

**மெல்லியல் கொங்கை பெரியமின் னேரிடை மெல்லடிபூக்**
**கல்லியல் வெம்மைக் கடங்கடுந் தீக்கற்று வானமெல்லாம்**
**சொல்லிய சீர்ச்சுடர்த் திங்களங் கண்ணித்தொல் லோன்புலியூர்**
**அல்லியங் கோதைநல் லாயெல்லை சேய்த்தெம் அகனகரே.** 201

*பொ - ரை: வானத்தவர்கள் அனைவரும் கற்றுச் சொல்லப் பட்ட புகழையும் ஒளிதருகின்ற பிறைத்திங்களாகிய தலைமாலை யையும் அணிந்த தொல்லோனது புலியூரில், அகவிதழானியன்ற மாலையை அணிந்த பெண்ணே! இம்மெல்லியலாளது கொங்கைகளோ பெரியன; இடை மின்னலுக்கு ஒப்பானது; மெல்லடிகள் பூவேயாயிருந்தன; கற்கள் பரந்த வெம்மையான காடு கடிய தீயாயிருந்தது; எமது அகன்ற பெரிய ஊர் மிகத் தூரத்தின்கண்ணது; அதனால் நீ கருதியது பெரிதும் அரிது என்றவாறு.*

*சிவம் அரிய பொருளாதலின், இத்துணை எளிமையானதாக எண்ணி, அதன் மேனி அமைப்பிற்குச் சிறிதும் ஒவ்வாத பாலை வனத்திடையே உடனழைத்துப்போதல் தகாது என உயிர் திருவருளுக்கு உணர்த்தியவாறு.*

*இறைவன் புகழ் அவன் வேதங்களான் உணர்த்திய அளவாகத் தேவர்கள் கற்றுச் சொல்லும் தரத்தினதன்றித் தாமே அறிந்து சொல்லும் எளிமையதன்று என்பார் 'கற்றுச் சொல்லிய சீர்' என்றார்.* (8)

## ஆதரங்கூறல்

### 'அன்புக் கிரங்கும் இன்பு என உரைத்தது'

*சிவம் எத்துணை உயர்ந்ததாயினும், செல்லும்வழி எத்துணைத் துன்புடையதாயினும், சிவம் பத்திவலையிற் படுவதாகலின், அதற்கு இரங்கி அன்பெனும் பிடியுள் அகப்பட்டு உடன்வரும் எனத் திருவருள் உயிருக்கு உணர்த்தியதாம்.*

பிணையும் கலையும்வன் பேய்த்தே ரிணைப்பெரு நீர்நசையால்
அணையும் முரம்பு நிரம்பிய அத்தமும் ஐயமெய்யே
இணையும் அளவுமில் லாவிறை யோனுறை தில்லைத்தண்பூம்
பணையும் தடமுமன் றேநின்னொ டேகினெம் பைந்தொடிக்கே. 202

பொ - ரை: பெண்மானும் ஆண்மானும், மிக்க நீர்வேட்கையால் பெரிய பேய்த்தேரினை யணுகும் முரம்பால் நிரம்பிய பாலைவனமும், ஐயனே! எம் பைந்தொடிக்கு, ஒப்பளவில்லாதவனாகிய இறைவன் எழுந்தருளிய தில்லை வரைப்பின்கண் பூத்த வயலும் குளமும் அல்லவோ? நீ இவ்வாறு கூறுவது என்னை? என்றவாறு.

சிவம் பரிபாகமுற்ற உயிரோடுகூடின் எல்லாம் இன்பமயமாம் ஆதலால், இன்பகனமாகிய சிவம் உயிர்க்கு இரங்கி உடன்வரும் என்பதாம். (9)

## இறந்துபா டுரைத்தல்

### 'இன்புக்கு உயிரே இடம் என்றுரைத்தது'

பூவின் மணம் அப் பூவான் நுகரப்பட்டுணரப்படாவாறும் நீரின்தன்மை அந் நீரான் அறியப்படாவாறும் போல, சிவத்தின் இன்பம் நுகர்வோனாகிய பரிபாகியானன்றி அறியப்படாமையின் இன்புருவான சிவத்திற்கு உயிரே இடமாம்; அஃதெய்தல் அரிதாயின் கரைசேர்ந்த கயல்போல இறந்துபடும் எனத் திருவருள் உரைத்தது.

இங்கய லென்னீ பணிக்கின்ற தேந்தல் இணைப்பதில்லாக்
கங்கையுஞ் செஞ்சடைக் கண்ணுத லண்ணல் கடிகொடில்லைப்
பங்கயப் பாசடைப் பாய்தடம் நீயப் படர்தடத்துச்
செங்கய லன்றே கருங்கயற் கண்ணித் திருநுதலே. 203

பொ - ரை: இணைத்தெண்ணும் பொருள் ஒன்றுமில்லாத, கங்கையை யணிந்த சிவந்த, சடையையும் நெற்றியிற் கண்ணையுமுடைய பெருமானது காவல்பொருந்திய தில்லை வரைப்பிலேயுள்ள தாமரைமலர்களோடு கூடிய பசிய இலைகள் படர்ந்த தடாகம் நீ; அத் தடாகத்து வாழும் சிவந்த கயல் மீனன்றே, கரிய கயல்மீன் போன்ற கண்களையுடையவளாகிய அழகிய நெற்றியினையுடையாள்; அதனால் நீ வேறு கூறுவதென்னை என்றவாறு.

தடாகத்தன்றிக் கயல் வாழாதவாறு நின்னிற் பிரியின் வாழாளாதலின் நின்னொடுஏகின் எங்கும் அவட்குத் தளிர்ப்பாம் என்றவாறு. இதனால், அடிமையின்றி ஆண்டானில்லானாற் போல, நுகர்வோனாகிய நின்னையன்றி நுகரப்படுபொருட்டு நிலையில்லை என்பது உணர்த்தப்பெற்றது. (10)

## கற்புநலன் உரைத்தல்

### 'அருள் சிவத்திடைச்சென்று ஆதரம் கூறியது'

*உயிரின் ஒருமைப்பாடுணர்ந்த திருவருள் சிவத்தலைவியினிடம் சென்று, உயிரிற் சிறந்தன்று நாணே; நாணினும், செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று என உலகியல் கூறுவதுபோலச் சிவம் உயிரோடு சென்று உடனுறைதல் இன்றியமையாதது எனத் துணியக் கற்புநலங் கூறாநிற்றல்.*

**தாயிற் சிறந்தன்று நாண்டைய லாருக்கந் நாண்டகைசால்**
**வேயிற் சிறந்தமென் றோளிதிண் கற்பின் விழுமிதன்றீங்**
**கோயிற் சிறந்துசிற் றம்பலத் தாடுமெங் கூத்தப்பிரான்**
**வாயிற் சிறந்த மதியிற் சிறந்த மதிநுதலே.** 204

*பொ - ரை: திருவீங்கோய் மலையினிடத்துச் சிறந்து மேவிச் சிற்றம்பலத்தும் நடம்புரியும் எம் கூத்தப்பிரானது வாயின்கண் சிறந்து அறிவிற் சிறந்து விளங்கும் பிறைமதியைப்போலும் நெற்றியையுடைய தலைவியே! தையலாருக்குத் தாயைப்போல நாண் சிறந்தது; தகுதி நிறைந்த மூங்கிலைக் காட்டினும் சிறந்த மெல்லிய தோள்களையுடையவளே! அந்த நாணும், உறுதியான கற்பைக்காட்டிலும் சிறந்ததன்று என்றவாறு.*

*கற்பினும் சிறந்ததொன்று இன்றாகலின் அதனைக் காத்தல் இன்றியமையாதது என உடன்போக்கிற்கு ஒருப்படுத்தியவாறு.*

*ஈங்கோய் - ஈ பூசித்த தலம். இன்று சிவிங்கிநாதன்மலையென வழங்குவது. தாய் களவுக்குத் தடையாய் மகளை நெறிப்படுத்துவள். அதுபோல நாணும் தடைசெய்து கற்பினைக் காப்பது ஆதலின் 'தாயிற் சிறந்தன்று நாண்' என்றார். தாய் துஞ்சாதிருந்து காத்தாலும் நாணைத் துறந்து ஏகுகின்றவள் உண்டாதலின் தாயைக் காட்டிலும் நாணே சிறந்தது என்று கூறுவாரும் உளர்.*

*கூத்தப்பெருமான் திருவாயால் சிறப்பித்துக் கூறப்படும் மதிநுட்பம் உடையாள் என்பார் 'கூத்தப்பிரான் வாயிற்சிறந்த மதியிற்சிறந்த மதிநுதல்' என்றார். கூத்தப்பிரானுடைய மதிநுதல் எனக் கூட்டி வாய்மையானும் மதிநுட்பத்தானும் சிறந்த எனலுமாம்.* (11)

## துணிந்தமை கூறல்

### 'சிவத்துக்கு அருள் உயிர்ச்செய்கை உரைத்தது'

*உயிர், உன்னை உடன்கொண்டு செல்ல அதாவது தன்னின் அபேதமாகத் தியானிக்க நினைந்தது எனச் சிவத்திற்குத் திருவருள் உயிரின் செய்கையை உரைத்தது.*

குறப்பாவை நின்குழல் வேங்கையம் போதொடு கோங்கம்விராய்
நறப்பா டலம்புனை வார்நினை வார்தம்பி ரான்புலியூர்
மறப்பான் அடுப்பதொர் தீவினை வந்திடிற் சென்றுசென்று
பிறப்பான் அடுப்பினும் பின்னுந்துன் னத்தகும் பெற்றியரே. 205

பொ - ரை: குறவர்பாவாய்! தம்பிரானது புலியூரை மறக்கக்கூடியதொரு தீவினை விளைவுவரின், பல யோனிகளிலும் சென்றுசென்று பிறக்கக் கூடினும் பின்னும் பொருந்தத்தகும் தன்மையையுடையவராகிய தலைவர், நின் கூந்தற்கண் வேங்கைப்பூவோடு கோங்கம்பூவையும் கலந்து தேனையுடைய பாதிரிப்பூவையும் புனைய எண்ணினர் என்றவாறு.

முன்னர் 'உணர்ந்தார்க்கு உணர்வரியோன் தில்லைச் சிற்றம்பலத்து ஒருத்தன்' என்றாங்குப் புலியூரை ஒருமுறை சென்று கூடினும், அதனை மறக்கவில்லாமையும் அதனாற் பிறவியறுதலும் கூடுமாதலின், மறக்கினும் பல பிறவியடுப்பினும் என்றாள். மறக்கமுடியாது என்பதும் பிறவி இல்லை என்பதும் உறுதி. அங்ஙனம் நேர்ந்தாலும் நின்கருத்து யாதோ என அவனினைவு அவளுக்குக் கூறியது. (12)

## துணிவொடு வினாவல்

### 'உயிர்வழிவரும் காரணம் ஏதென்றது'

இதுகாறும், ஆற்றில் ஒருகாலும் சேற்றில் ஒருகாலுமாக, உலகியற்கு அஞ்சி ஒதுங்கியும், இன்பங்கருதி எம்மிடைப் பகலினும் இரவினும் வந்து கலந்தும் கரந்தொழுகி இரண்டுபட்ட நிலையிலிருந்த உயிர் இங்ஙனம் துணிந்து வழிக்குவந்த காரணம் யாதோ என்று திருவருளை நோக்கிச் சிவம் வினாவியது.

நிழற்றலை தீநெறி நீரில்லை கானகம் ஓரிகத்தும்
அழற்றலை வெம்பரற் றென்பரென் னோதில்லை யம்பலத்தான்
கழற்றலை வைத்துக்கைப் போதுகள் கூப்பக்கல் லாதவர்போல்
குழற்றலைச் சொல்லிசெல் லக்குறிப் பாகுநங் கொற்றவர்க்கே. 206

பொ - ரை: நிழலிடம் தீர்ந்த வழி; நீருடைத்தன்று; நரிகள் கத்தும் கானம் அழலின் நுனிபோலும் நுனியுடைய பருக்கைக் கற்களையுடையது என்பர்; தில்லை யம்பலவாணப் பெருமானது திருவடியைத் தலைமேற்சூடிக் கைகுவித்து வணங்கக் கல்லாதவர்களைப்போல இத்தகைய நெறிக்கண், குழலிடத்துண்டான இனிய கீதம்போலும் சொல்லையுடையவளே! நம் தலைவர்க்குப் போதல் குறிப்பாகும்; இஃது என்னோ? என்றவாறு.

போகும்நெறி கொடியதாயினும் துணிந்தது என்னோ என்றாளாம். பேரின்பம் எய்துதற்குரியநெறி ஞானமாதலால், அதனை எய்துமுபாயங்கள் தவமும், விரதமும், ஆசாரமுமாகக்

*கொடியன ஆயினும் அவற்றைத் தாங்கிநின்று வென்று சிவஞானம் வாயிலாகச் சிவத்தைப்பெற எண்ணிய உயிரின் துணிவை உசாவியதாம்.* *(13)*

## போக்கறிவித்தல்

### 'உயிர் உடன்படல் அரற்கு அருளே உரைத்தது'

*உயிரும் சிவமுமாகிய நீவிர் இருவீரும் வியாபக வியாப்பியமாயும், குண குணியாயும், உடலும் உயிராயும் ஒன்றாயினீர். இத்தகைய வேறாகாத் தன்மையையும் நும் கருணையையும் அவன் காதலையும் அறிந்துவைத்தும் அவன் இரவின் கண் தனியே வருதற்கஞ்சி அவனை வரவு விலக்கினேன். அவன் வரைவொடு வரின் நமர் முலைவிலையாக உலகே தரினும் கொடார்; இதுதான் அவன் சுரங்கொண்டு போதற்குத் துணிந்தகாரணம் என்று சிவத்திற்குத் திருவருள் உரைத்தது.*

**காயமும் ஆவியும் நீங்கள்சிற் றம்பல வன்கயிலைச்**
**சீயமும் மாவும் வெரீஇவரல் என்பல் செறிதிரைநீர்த்**
**தேயமும் யாவும் பெறினுங் கொடார்நமர் இன்னசெப்பின்**
**தேரியமும் நாடுமில் லாச்சுரம் போக்குத் துணிவித்தவே.** 207

*பொ - ரை: நீவிர் இருவீரும் உடலும் உயிரும்போல ஒருவரையின்றி ஒருவர் அமையாத அன்பையுடையீர்; சிற்றம் பலவனது கயிலைக்கண் சிங்கத்தையும், அல்லாத கொடிய விலங்குகளையும் அஞ்சி, யான் அவனை வரற்பாலையல்லை என்பேன்; நெருங்கிய அலைகளையுடைய கடல் சூழ்ந்த இவ்வுலகத்தையும் பொன் முதலியவற்றையும் பெறினும் நமர் நின்னைக் கொடார்கள்; அதனால், நீரும் மக்களும் இல்லாத சுரத்திற் போதலைத் துணிவித்தன என்றவாறு.*

*'நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே' என்று உயிர் நின்னிடம் சரணாயினமையின், கானில் வருதலை ஏதமஞ்சித் தடை செய்தேன் என்பாள் 'காயமும் ஆவியும் நீங்கள்; சீயமும் மாவும் வெரீஇ வரல் என்பல்' என்றாள். உடன்போக்காவது உயிர் சிவத்தையன்றி வேறு பற்றுக்கோடின்றி அதனையே பற்றிநிற்றல் என்க. போக்குத் துணிவித்தவே என்பதால் உயிர் உடன்போக்கிற்கு உடன்படுதலைத் திருவருள் சிவத்திற்குச் செப்பியவாறு காண்க.* *(14)*

## நாணிழந்து வருந்தல்

### 'இன்பே உயிருக்கு ஏகாந்தம் முன்னியது'

*உடன்போக்குத் துணிந்தமைக்குக் காரணம் கூறக்கேட்ட சிவம், உயிருக்கு ஏகாந்தம் உதவ எண்ணியது; அதாவது*

மெய்யடியார் கூட்டத்தையும், பரையின் உறவையும் பிரிந்து உயிருடன் தனிமையிற் போதலை எண்ணியதாம்.

மற்பாய் விடையோன் மகிழ்புலி யூரென்னொ டும்வளர்ந்த
பொற்பார் திருநாண் பொருப்பர் விருப்புப் புகுந்துநுந்தக்
கற்பார் கடுங்கால் கலக்கிப் பறித்தெறி யக்கழிக
இற்பால் பிறவற்க ஏழையர் வாழி எழுமையுமே. 208

பொ-ரை: வளமான பாயும் விடையையுடைய சிவபெருமான் விரும்பும் புலியூரில் என்னொடுதோன்றி என்னொடு வளர்ந்த பொலிவான நாணம், சிலம்பன்மேல் யான்வைத்த காதலாகிய கருணை இடையே புகுந்து செலுத்த, கற்பாகிய நிறைந்த புயல் அலைத்துப்பிடுங்கி என்பாற்கிடவாது சேய்மைக்கண் எறிய என்னைவிட்டுக் கழிக; இனி மகளிர் ஏழுபிறவியிலும் நற்குடியின் கண் பிறவாதொழிக என்றவாறு.

சிவம் தாம் வாழும் மலையிடமும், உயர்வும், குடிக்கேற்ற நாண் முதலியனவும் கற்பிற்காகத் துறக்கநேர்தலை எண்ணி, இனி மகளிர் நற்குடியிற் பிறவாதொழிக என்றது; பிறக்கின் இங்ஙனம் நாணைத் துறக்க நேருகிறதே என்ற வருத்தத்தாலாம். (15)

## துணிவெடுத் துரைத்தல்

### 'இன்பத்துணிவு உயிர்க்கு அருள் இயம்பியது'

சிவத்தைக் கற்புவழி நிறுத்த உடன்போக்கிற்கு ஒருப்படுத்தி, உயிர்பாற் சென்று சிவம் நின்னோடு செல்லுமிடத்துத் தகாத நெறிகளும் மென்தளிர் நெறி போலாம் எனத் திருவருள் சிவத்தின் துணிவைக் கூறாநிற்றல்.

கம்பஞ் சிவந்த சலந்தரன் ஆகங் கறுத்ததில்லை
நம்பன் சிவநகர் நற்றளிர் கற்சுர மாகுநம்பா
அம்பஞ்சி யாவும் புகமிக நீண்டரி சிந்துகண்ணாள்
செம்பஞ்சி யின்மிதிக் கிற்பதைக் கும்மலர்ச் சீறடிக்கே. 209

பொ-ரை: நம்பா! அம்புகள் இவள் கண்ணழகுக்கு ஒவ்வேம் என்று அஞ்சி அம்பறாத் தூணியிற்புக மிகநீண்டு செவ்வரிபரந்த கண்களை யுடையாளுடைய, செம்பஞ்சியில் மிதிக்கினும் பதைக்கும் மலர்போலும் மெல்லிய சிறிய அடிக்கு, பருக்கை பரந்த பாலை, அச்சத்தால் வரும் நடுக்கத்தை வெகுண்ட சலந்தராசுரனது உடலைச் சினந்த தில்லையின் நம்பனது சிவநகரின் நற்றளிர்போல மென்மையும் தண்மையும் உடையவாம் எ-று.

பருக்கை தன்தன்மை மாறாவாயினும், உடன்போம் உள்ளக் கிளர்ச்சியால் அவை தோன்றாமை மட்டுமன்று தளிராயும்

இனிமையூட்டுமென்பதாம். அது பேரின்பங் காண்பார்கட்கு வினைச்சேடத்தான் நுகரும் துன்பங்கள் தோன்றாததுபோல என்க. (16)

## குறியிடம் கூறல்

### 'யான் கொடுவரும்வழி நீவருக என்றது'

சிவத்தலைவியை அழைத்துக்கொண்டு விரைவில் வருவேன்; அவ் வழியில் நீ குறிபிழையாது வந்து காத்திரு என்று திருவருள் உயிர்த்தலைவற்கு உணர்த்தா நிற்றல்.

**முன்னோன் மணிகண்டம் ஒத்தவன் அம்பலந் தம்முடிதாழ்த்**
**துன்னா தவர்வினை போற்பரந் தோங்கும் எனதுயிரே**
**அன்னாள் அரும்பெற லாவியன் னாயரு ளாசையினாற்**
**பொன்னார் மணிமகிழ்ப் பூவிழ யாம்விழை பொங்கிருளே. 210**

பொ - ரை: எனது உயிரையொத்த தலைவியின் உயிரை ஒப்பாய்! நின்னருள்மேலுள்ள ஆசையால் பொன்போலும் நிறைந்த மகிழின்பூ விழ அவை விழும் ஓசையை நீ செய்யும் குறியாக ஓர்ந்து, யாம் விரும்பும் மிக்க இருள், எல்லாருக்கும் முன்னோனாகிய சிவபெருமானது நீலகண்டத்தை ஒத்து அவர் எழுந்தருளியுள்ள சிற்றம்பலத்தை முடிசாய்த்துத் தியானித்து வணங்காதவரது வினைபோலப் பரந்து மிகும் என்றவாறு.

திருவருளுக்குச் சிவம் ஆவி. சிவத்திற்கு ஆட்கொள்ளப்பட்ட உயிர் ஆவி என்க. இருள் மிகும் என்றது அது அகல்வதற்குள் யாம் அகலவேண்டும் என்ற குறிப்பு. உயிர் சிவத்தையெய்துதற்கு இடையீடான வினைகளை ஊட்டிக் கழிப்பிக்க அறியாமையை உதவுதலின் இருளும் உபகாரப்படுவதானமை காண்க. (17)

## அழியொடு வழிநினைந்து அவன் உளம்வாடல்

### 'இன்பத்துக்கு என்வழி வருந்துமே என்றது'

உயிர், யான் செல்லும்வழி இன்பமாகிய சிவத்திற்கு வருத்தஞ்செய்யுமே என்று வருந்தாநிற்றல்.

**பனிச்சந் திரனொடு பாய்புனல் சூடும் பரன்புலியூர்**
**அனிச்சந் திகழுமஞ் சீறடி யாவ அழல்பழுத்த**
**கனிச்செந் திரளன்ன கற்கடம் போந்து கடக்குமென்றால்**
**இனிச்சந்த மேகலை யாட்கென்கொ லாம்புகுந் தெய்துவதே. 211**

பொ - ரை: குளிர்ந்த பிறைமதியோடு பாய்ந்து செல்லும் கங்கைப் புனலையும் அணியும் பரனது புலியூர்க்கண், அனிச்சப்பூப் போலும் அழகிய சிறிய அடிகள் ஆவ! தீப்பழத்தின் பழுத்ததிரள் போலும் கற்றிரளையுடைய காட்டைக் கடந்துசெல்லுமென்றால்,

அழகிய மேகலையையுடைய தலைவிக்கு இனி என் காரணமாக வந்தெய்தும் துன்பம் வேறென்ன? என்றவாறு.

ஆவ: இரக்கக்குறிப்பிடைச்சொல். வெயில் வெப்பத்தால் பழுத்த கல் பழுத்த தீப்பழத்தின் திரட்சிக்கு ஒப்பு. கூடைகொண்டு மண்சுமந்து அக் கோவான் மொத்துண்டது போல, சிவம் என்பொருட்டாக இத்துணைத் துன்பம் அடைய நேரிட்டதே என்று சிவத்தின் பெருங்கருணைக்கு உயிர் இரங்கியவாறு. (18)

## கொண்டுசென் றுய்த்தல்

### 'அருளே சிவங்கொண்டு உயிர்க்கு அறிவித்தது'

உடன்போக்கிற்கு இருபாலாரையும் உடன்படுவித்து உறுதுணையான திருவருளே நள்ளிருளில் சிவத்தை உடன் கொண்டுசென்று சிவத்தின்வரலை எதிர் நோக்கிநிற்கும் உயிரிடம் ஒப்புவித்து, நீ இவளைக் கைக்கொள் என அறிவித்தது.

வைவந்த வேலவர் சூழ்வரத் தேர்வரும் வள்ளலுள்ளம்
தெய்வந் தருமிருள் தூங்கும் முழுதும் செழுமிடற்றின்
மைவந்த கோன்றில்லை வாழ்த்தார் மனத்தின் வழுத்துநர்போல்
மொய்வந்த வாவி தெளியும் துயிலுமிம் மூதெயிலே. 212

பொ - ரை: வளமான மிடற்றின்கண் கருமைபொருந்திய தலைவனது தில்லையை வாழ்த்தாதார் மனம்போல உலகமுழுதும் இருள் செறிந்தது; அத் தில்லையை வழுத்துவார் மனம்போல வாவிகள் தெளிந்தன; இம் முதிய ஊர் துயிலும்; கூர்மை மிகுந்த வேலையேந்திய இளையர் சூழ்வரத் தேரில் வரும் வள்ளலே! நின் உள்ளம் கருதியதைத் தெய்வம் இன்றே கூட்டுவிக்கும்; என் தோழியையும் கொணர்ந்தேன்; காண்பாயாக என்றவாறு.

காலமும் முயற்சியும் கைகூடினமையால் சிவத்தைக் கொணர்ந்தேன் காண் என உயிர்க்கு அறிவித்தவாறு. (19)

## ஓம்படுத் துரைத்தல்

### 'சிவத்திடை நெஞ்சம் திறம்பாய் என்றது'

என்றும் எதனாலும் சிவத்திடைப் பதித்த நெஞ்சம் மாறாது நடந்துகொள் எனத் திருவருள் உயிரிடம் ஓம்படைகூறல்.

பறந்திருந் தும்பர் பதைப்பப் படரும் புரங்கரப்பச்
சிறந்தெரி யாடிதென் றில்லையன் னாடிறத் துச்சிலம்பா
அறந்திருந் துன்னரு ளும்பிறி தாயின் அருமறையின்
திறந்திரிந் தார்கலி யும்முற்றும் வற்றுமிச் சேணிலத்தே. 213

பொ - ரை: சிலம்பா! தேவர்கள் இருந்து இடைவிடாது நடுங்கப் பறந்துசெல்லும் முப்புரங்கள்கெடச் சிறந்து எரியான்

விளையாடுமவனது தெற்கின்கண்ணதாகிய தில்லையையொப் பாளிடத்து, அறமே திருந்துதற்குக் காரணமான உன்னருளும் வேறுபடுமாயின், இந்த அகன்றநிலத்து அரிய வேதங்களின் ஒழுங்கும் குலைந்து, கடலும் முற்றும் வற்றும் எ-று.

வேதவொழுங்கு குலையினும் கடல் வற்றினும் நீ அருள் வேறுபடாய் எனத் துணிவுபற்றிக்கூறியது. பால் புளிப்பினும் பகல் இருளினும், நால் வேதநெறி திரியினும் திரியா இயற்கை என்றது போலக்கொள்க.

சிவத்தொடு கலந்த மனம் வாசனாமலந்தாக்கினும் பிறழாது, வழிபாடும் திருவைந்தெழுத்துச் சிந்தனையும் துணைக்கொண்டு கலந்தே வாழ்க; பிரியற்க எனத் திருவருள் உணர்த்தியதாம். (20)

## வழிப்படுத்துரைத்தல்

### 'இன்பம்விடாது இனிதேகு என்றது'

ஓம்படைசாற்றிய திருவருள், நீவிர் போயினபின்றை, பரையும் ஆதியும் அவர்கள் தலைவரும் நும்மைத் தேடிப் பின்வராமல் இவ்விடத்தே நிறுத்தி, இவ்வூரிலுள்ள அவரையும் ஒருவாற்றான்நீக்கி, யானும்வந்து நும்மைக் காண்பேன்; நீயிரும் திருவொடுசென்று நும்பதியிடைச்சேர இனிது ஏகுமின் என்று இருவரையும் வழிப்படுத்துக் கூறாநிற்றல்.

**ஈண்டொல்லை யாயமும் ஔவையும் நீங்கவிவ் வூர்க்கவ்வைதீர்த்**
**தாண்டொல்லை கண்டிடக் கூடுக நும்மையெம் மைப்பிடித்தின்**
**றாண்டெல்லை தீரின்பந் தந்தவன் சிற்றம் பலநிலவு**
**சேண்டில்லை மாநகர் வாய்ச்சென்று சேர்க திருத்தகவே. 214**

பொ - ரை: எம்மை வலியவந்தாட்கொண்டு, இன்று வரம்பற்ற பேரின்பத்தை வழங்கியவனது சிற்றம்பலம்நிலைபெற்ற சேய்த் தாகிய தில்லை மாநகரின்கண், நீவிர் பொலிவுமிகச் சென்று சேர்வீராமின்; மகளிர்சுற்றமும் தாயும் தொடர்ந்து பின்வாராது இங்கேயே தங்க, இவ்வூரில் உண்டாகிய ஆரவாரத்தையும் விரைய நீக்கி அவ்விடத்து வந்து உம்மைக்காண விரைவிற் கூடுவதாக என்றவாறு.

உபகார சத்தியாகிய திருவருள் உயிர் சிவத்தொடு உடனுறையும்வரை இடையீடுபுகுதாதே காத்துய்க்கும்திறம் உணர்த்தப்பெறுதல் காண்க. (21)

## மெல்லக்கொண் டேகல்

### 'இன்பைப் பிரிவின்றி இனிதியம்பியது'

உடன்கொண்டு செல்லாநின்ற உயிர்த்தலைவன் நின்னொடு போதலான் இக்கடம் தண்ணெனன்றிருந்தது; நின் சிற்றடி

வருந்தாமல் பையச் செல்வாயாக எனக்கூறி மெல்லக்கொண்டு பிரிவின்றிச் செல்லாநின்றது.

பேணத் திருத்திய சீறடி மெல்லச்செல் பேரரவம்
பூணத் திருத்திய பொங்கொளி யோன்புலி யூர்புரையும்
மாணத் திருத்திய வான்பதி சேரும் இருமருக்கும்
காணத் திருத்திய போலுமுன் னாமன்னு கானங்களே. 215

பொ - ரை: பெரும்பாம்புகளை அணிவதற்காக அவற்றின் தீக்குணங்களைப் போக்கிய, பெருகும் ஒளியையுடையோனது புலியூரையொக்கும் மாட்சிமைப்படத் திருத்தப்பெற்ற பெரிய ஊர்கள் நாம் செல்லும்வழிக்கண் இருமருங்கும் சேர்ந்திருக்கும்; முன்னுள்ள காடுகள் நாம் சென்று காணும் வண்ணம் திருத்தப்பட்டனபோலும்; அதனால், யான் விரும்பும்வண்ணம் அழகுசெய்யப்பட்ட சிறிய அடியையுடையவளே! மெல்லச் செல்வாயாக என்றவாறு.

இங்ஙனம் உயிர் இனியகூறிச் சிறிதும் விலகாமல் இன்பச்சிவத்தை அழைத்துச்சென்றது என்க. (22)

## அடலெடுத் துரைத்தல்

### 'இன்பைப் பார்த்துத் தன்வலி உயிர் எடுத்தியம்பியது'

இன்பைப் பிரிவின்றி இனிதுரைத்துச் செல்லாநின்ற உயிர், சேய்த்தாகச் சிலர் வரக்கண்டு சிவத்தலைவி தமரோ பிறரோ என அஞ்சாநிற்ப, உயிர் நின்னையராயின் அஞ்சுவேன்; பிறராயின் நால்வகைப் படைகள் புடைசூழவரினும் என்கை வேலுக்கு இரைபோதாது என்று தன்னாற்றலை எடுத்தியம்பியது.

முன்னுறு கருவிகள் முன்னிடிற் கெடுப்பனென்(று), உன்னரு மின்புக்கு உயிர்வலி உரைத்தல் என்பது வியாக்கியானம். இதன் விளக்கம் சிவத்தை எதிர்ப்பட்ட நாள்முதல் தன்செயலற்றுக் கிடந்தனவாகிய கருவி கரணங்கள் இந்நிலையில் இடையீடாகத் தலைகாட்டுமாயின் அவற்றை அடியோடு கெடுப்பேன் என்று, நினைத்தற்கரிய சிவத்திற்கு உயிர் வற்புறுத்திக் கூறியதாம் என்பது. முன்னதைக்காட்டிலும் இது பேரின்பப்பொருளுக்கு இயைபுடைத்தாதல் காண்க.

கொடித்தேர் மறவர் குழாம்வெங் கரிநிரை கூடினென்கை
வடித்தே ரிலங்கெஃகின் வாய்க்குத வாமன்னும் அம்பலத்தோன்
அடித்தே ரலரென்ன அஞ்சுவன் நின்னைய ரென்னின்மன்னும்
கடித்தேர் குழன்மங்கை கண்டிடிவ் விண்டோய் கனவரையே. 216

பொ - ரை: நின் ஐயன்மார் வரின், நிலைபேறான அம்பலத்தானது அடியை அறியாதார்போல அஞ்சுவேன்; அல்லது,

கொடிகட்டிய தேரும் வீரர்கூட்டமும் கொடிய யானைகளின் நிரையும் அனைத்தும் திரண்டுவரினும் என்கையில் வடிக்கப்பட்டு அழகுடன் விளங்கும் வேலின் நுதிக்கு இரையுதவமாட்டா; நிலைபெற்ற நறுமணத்தை வண்டுகள்நாடும் கூந்தலையுடைய மங்கையே! விண்ணையளாவியுள்ள இப்பெரிய மலையிடத்து யான் செய்வதனைக் காண்பாயாக என்றவாறு.

நின் மெய்யடியார் வரின் அவர்க்கு ஏதம் நேர்தலாகாது என அஞ்சுவேன்; பிறர் யாராயினும் அஞ்சேன்; இதனைச் செயலிற்காண் எனத் தன் ஆற்றலும் காதன்மையுந்தோன்ற உயிர் உரைத்தவாறு. (23)

## அயர்வகற்றல்

### 'இன்பே இடர்க்குத் துணையென்று இயம்பியது'

வெப்பம்மாற்றத் தண்ணீருண்பதுபோல யாமிருவரும் இயைந்துசெல்லும் இவ்வின்பமே இப் பாலைக்கண் யாம் எய்துகின்ற துன்பத்திற்குத் துணையாவது என்று சிவத்தை நோக்கி உரைத்தது.

**முன்னோன் அருண்முன்னும் முன்னா வினையின் முனகர்துன்னும்**
**இன்னாக் கடறிதிப் போழ்தே கடந்தின்று காண்டுஞ்சென்று**
**பொன்னார் அணிமணி மாளிகைத் தென்புலி யூர்ப்புகழ்வார்**
**தென்னா எனவுடை யானட மாடுசிற் றம்பலத்தே.** 217

பொ - ரை: முன்னைப்பழம் பொருட்கு முன்னைப்பழம் பொருளாகிய இறைவனது திருவருளை முற்பிறப்பின்கண்ணும் நினையாத தீவினையையுடைய நீசர் சேரும் துன்பத்தையுடைய இக் காட்டை இப்போதே கடந்து பொன்னிறைந்த அழகிய மணிகளினால் விளங்கும் மாளிகைகளையுடைய தென்புலியூரிலே புகழ்ந்து தோத்தரிப்பார் 'தென்னா' என்றுகூற, என்னை ஆளாகவுடையான் நின்று கூத்தாடுஞ் சிற்றம்பலத்தை இன்றே சென்று காண்பேம்; இதுவே நமக்கு நேரும் இன்பம் என்றவாறு.

புலியூர்ப் பெருமானை முன்னாதார்சேரும் பாலையைக் கடந்து சிற்றம்பலத்தை இன்றே காண்பேம்; இதுவே யாம் எய்தும் இணையிலா இன்பம் என உயிர், இன்பாகிய உன்னோடு இணைந்து செல்லுமிதுவே இப் பாலையைக் கடத்தற்குத் துணையாயது எனக் கூறியவாறு காண்க. (24)

## நெறி விலக்கிக்கூறல்

### 'பெற்றார் இன்பம் பற்றி உரைத்தது'

இங்ஙனம் அயர்வகற்றிச் செல்லும் உயிரைநோக்கி, வழிக்கண் இவரைக் காணப்பெற்றார், நீ தனியை; இனிச்

செல்லும் நெறிக்கண் நன்மக்கள் இல்லை; இவளும் வாடினள்; பொழுதும் கழிந்தது; ஈண்டுத் தங்கிச்செல்க என நெறிவிலக்கிக் கூறாநிற்றல்.

இன்பம்பெற்றோர் இனி மாயைவழி செல்லாதிருத்தி என்றுரைத்தல் என வியாக்கியானம் விளக்கந்தரும். இதன் கருத்து, தம்மூர்க்கண் தத்தம் மனைவியரோடு கூடி இன்பம் பெற்றோராகிய அயலவர், இனி நீ செல்லும்வழி மாயைபோல் மயக்கஞ்செய்வது; மாயையையே அறியாத சிவத்தோடு அவ் வழியிற் செல்லவொண்ணாது; ஈண்டே தங்குக என்று வழி விலக்கியதாம்.

விடலையுற் றாரில்லை வெம்முனை வேடர் தமியைமென்பூ
மடலையுற் றார்குழல் வாடினள் மன்னுசிற் றம்பலவர்க்
கடலையுற் றாரின் எறிப்பொழிந் தாங்கருக் கன்சுருக்கிக்
கடலையுற் றான்கடப் பாரில்லை யின்றிக் கடுஞ்சுரமே. 218

பொ - ரை: விடலையே! இனி நீ போகும் நெறிக்கண் உற்ற நன்மக்களில்லை; இருப்பவர்கள் கொடிய போர்முனையில் வினைசெய்யும் வேடர்கள்; நீயோ தனியை; மெல்லிய பூவிதழைச்சூடி நிறைந்த கூந்தலையுடைய இவள் வழிநடந்த வருத்தத்தால் வாடினள்; நிலைபெற்ற சிற்றம்பலத்தையுடைய வர்க்கு ஆட்படாத கொலைகாரர்களைப்போல விளக்கம் தவிர்த்து அவ்விடத்துச் சூரியன் தன் கதிர்களைச்சுருக்கி மேல்கடலை அடைந்தான்; இக் கொடிய சுரத்தை இப்போது கடப்பாரும் இல்லை; அதனால் ஈண்டுத் தங்குவாயாக என்றவாறு.

இதனால் வழியிடைக் காணப்பெற்றார் சிவமும் உயிரும் மாயை நெறிப்படாது இன்பநெறிக்கண் இனிதே ஏக இங்கே தங்கிச்செல்க என விலக்கியவாறு காண்க. (25)

## கண்டவர் மகிழ்தல்

### 'உயிர் சிவம்கலந்த உண்மைக்கு மகிழ்தல்'

நெறி விலங்கி அவ்வூர்க்கண் தங்கி வழிவருத்தம் தணிந்து ஒருவரையொருவர் நோக்கி இன்புற்றுச் செல்லுகின்ற உயிரையும் சிவத்தையும் கண்டு எதிர்வருவார் இன்புற்று மகிழ்ந்து கூறாநிற்றல்.

உயிர் சிவம் கலந்த தன்மையை இன்புபெற்றார் கண்டு பெருமகிழ்வுற்றது என்பது வியாக்கியானம்.

அன்பணைத் தஞ்சொல்லி பின்செல்லும் ஆடவன் நீடவன்றன்
பின்பணைத் தோளி வருமிப் பெருஞ்சுரஞ் செல்வதன்று
பொன்பணைத் ;தன்ன இறையுறை தில்லைப் பொலிமலர்மேல்
நன்பணைத் தண்ணற வுண்ணளி போன்றொளிர் நாடகமே. 219

பொ - ரை: சிவத்தலைவியின் சிறுபுறத்தையும் அசை நடையையும் காணுதற்காக அன்பால் அணைத்து அழகிய சொல்லை யுடையாளது பின்னே ஆடவன் ஒருவன் செல்லா நின்றான்; முன்செல்ல நாணிப் பாதுகாவலும் பீடுநடையும் காண அவன்பின்னே வேய்போலும் தோள்களை உடையாள் வாராநின்றாள்; இங்ஙனம் இருந்தவாற்றான் இவரது செயல் இப்பெரிய சுரத்தைக் கடப்பதன்று. பொன் ஒருவடிவுகொண்டு பெருத்தாலொத்த இறைவன் எழுந்தருளியிருக்கின்ற தில்லைக் கண் நல்லவயலில் விளங்குகின்ற பூவினிடத்துக் குளிர்ந்த தேனை உண்ட வண்டுகளைப் போன்று இன்பக்களியால் மயங்கிக் கிடக்கும் நாடகம் என்றவாறு.

உயிரும் சிவமும் முன்னும் பின்னுமாக மாறிச்செல்வதைக் கண்ட எதிர்வருவார், இவர்கள்கலப்பில் மகிழ்ந்து, இவர்கள் குறிப்பு சுரத்தைக் கடப்பதல்ல, ஒரு நாடகம்போன்றதென மகிழ்ந்து கூறியதாம். (26)

## வழி விளையாடல்

### 'இன்பிற்கலந்து உயிர் அன்பு அளாவியது'

வழிநடந்த வருத்தத்தால் நெகிழ்ந்த உன்மேனியைக்கண்டு கண்படைத்த பயனைப் பெற்றேன்; இனிச் சிறிது இருந்து கொடுங்கானம் குளிருமளவும் என் செவிநிறைய இன்மொழித் தேன் பருகுவேன் என உயிர் சிவத்தோடு கலந்து விளையாடா நிற்றல். இன்பிற்கலந்து உயிரன்பு அளாவியது என்பது வியாக்கியானம். அன்பு அளாவியதாவது ஒருவரோடு ஒருவர் கலந்து உரையாடல்.

**கண்கடம் மாற்பயன் கொண்டனம் கண்டினிக் காரிகைநின்**
**பண்கட மென்மொழி யாரப் பருக வருகவின்னே**
**விண்கட நாயகன் றில்லையின் மெல்லியல் பங்கனெங்கோன்**
**தண்கடம் பைத்தடம் போற்கடுங் கானகம் தண்ணெனவே. 220**

பொ - ரை: வழிநடந்த வருத்தத்தால் இளைத்த மேனியை உடைய உன்னைக்கண்டு கண்கள் படைத்ததாலாகிய பயனைப் பெற்றேன்; காரிகை! விண்ணுலகங்களுக்குத் தலைவனும் தில்லைக்கண் உமாதேவியை ஒருகூறு உடையானுமாகிய எம் இறைவனது குளிர்ந்த கடம்பையில் உள்ள பொய்கைபோலக் கொடிய கானம் குளிருமளவும் இனிச் சிறிதிருந்து பண்களின் முறைமையை உடைய நினது மெல்லிய மொழியைச் செவிநிறையப் பருக இவ்விடத்து வருவாயாக என்றவாறு.

வழிநடந்துவந்த சிவமும் உயிரும் ஓரிடத்திலிருந்து அன்புரைகளால் தம்முள் அளவளாவியவாறு காண்க. (27)

## நகரணிமை கூறல்

### 'சிவம் தங்கிடம் இது என்று தேர்ந்தது'

எதிர்வருவார், தம்முள் இன்புற்றுச்செல்லும் இவர்களைக் கண்டு, நீவிர் சிறிது விரைந்து செல்லின் நும்பதியை அடையலாம் என்று சிவம் உயிரோடு தங்குமிடம் இது எனச் சுட்டிக்கூறியது.

மின்றங் கிடையொடு நீவியன் றில்லைச்சிற் றம்பலவர்
குன்றங் கடந்துசென் றானின்று தோன்றும் குரூஉக்கமலம்
துன்றங் கிடங்கும் துறைதுறை வள்ளைவெள் ளைநகையார்
சென்றங் கடைதட மும்புடை சூழ்தரு சேணகரே. 221

பொ - ரை: மின்னலை ஒத்த இடையினையுடையாளொடு, நீ இடம் அகன்ற தில்லைச் சிற்றம்பலவரது மலையைக் கடந்து சென்றால், நிறம் பொருந்திய தாமரைகள் நெருங்கி அழகொடு தோன்றும் கிடங்கும், வள்ளைப் பாடலைப்பாடும் வெண்மை யான பற்களையுடைய மகளிர் துறைகடோறும் சென்றடைகின்ற தடாகமும், பக்கங்களிலே சூழ்ந்துள்ள பெரிய நகரும் இடையறாது நிலைபெற்றுத் தோன்றும் என்றவாறு.

சிவம் உயிரோடு கலந்து ஆனந்தமயமாய் விளங்குமிடம் மலைக்கு அப்பால் உள்ள கிடங்கும் தடமும் சூழ்ந்த பெரிய நகரம் என்று கண்டோர் கூறியவாறு. இதில் மலை மேருவெனச் சிவயோகியர்களாற் சுட்டப்படும் உடலாகவும், மலர்ந்த கிடங்கு ஆயிர இதழ்த்தாமரை மலர்ந்த உச்சியாகவும், மகளிர் நீராடுந் துறையோடுகூடிய தடம் உன்மனைமுதலிய அத்யான்மிக சத்திகள் விளங்கும் பிராசாதத்தலங்களாகவும், புடைசூழ விளங்கும் சிவநகர் துவாதசாந்தப் பெருவெளியாகவும் கொள்க. இவற்றின் விரிவைக் காமிகம் மந்திரோத்தாரவிதியினும், சித்தா ந்தசாராவளியினும், சிவஞானபோத மாபாடியம் இரண்டாஞ் சூத்திர உரையினும் காண்க. (28)

## நகர் காட்டல்

### 'அன்பால் அடுத்ததென்று இயம்பியது'

நகரணிமை கூறக்கேட்டு இன்புறக் கொண்டுசெல்லாநின்ற தலைமகன் 'அப் பெரிய நகர்காண் நம்முடையது' என்று அன்போடு கூறியது.

மின்போல் கொடிநெடு வானக் கடலுள் திரைவிரிப்பப்
பொன்போல் புரிசை வடவரை காட்டப் பொலிபுலியூர்
மன்போல் பிறையணி மாளிகை சூலத்த வாய்மடவாய்
நின்போல் நடையன்னம் துன்னிமுன் தோன்றுநன் னீணகரே. 222

*பொ - ரை: நினது நடைபோன்ற நடையினையுடைய அன்னங்கள் நெருங்கி, மன்னனைப்போலப் பிறையையணிந்த மாளிகைகள் அவனைப் போலச் சூலத்தையுடையனவாய் முன்தோன்றுகின்ற நல்ல பெரிய நகர், மடவாய்! மின்போலுங் கொடிகள் நெடிய வானமாகியகடலில் திரையைப் பரப்பவும், பொன்னானியன்ற மதில்கள் மேருமலையைக் காட்டவும் பொலிந்து தோன்றும் புலியூர்காண்; தொழுவாயாக என்றவாறு.*

*புலியூராகிய நமது நகர் இதோ வந்துவிட்டது என்று அன்பொடு அறிவித்தவாறு. (29)*

## பதி பரிசுரைத்தல்

### 'இன்பமாம் இடம் இவையென்று இயம்பியது'

*நமக்கு இன்பமூட்டும் இடங்கள் இவையெனக் குன்று களையும் வாவிகளையும் பொழில்களையும் மாளிகைகளையும் தெய்வப்பதியையும் தனித்தனியே காட்டி இவற்றின் தன்மை இவையாம் எனக் கூறாநிற்றல்.*

**செய்குன் றுவையிவை சீர்மலர் வாவி விசும்பியங்கி**
**நைகின்ற திங்களெய்ப் பாறும் பொழிலவை ஞாங்கரெங்கும்**
**பொய்குன்ற வேதிய ரோதிடம் உந்திடம் இந்திடமும்**
**எய்குன்ற வார்சிலை யம்பல வற்கிடம் ஏந்திழையே. 223**

*பொ - ரை: உவை செய்குன்றுகள்; இவை நல்ல மலர்களை யுடைய வாவிகள்; அவை விண்ணில் இயங்கி வருந்துகின்ற மதி இளைப்பாறும் பொழில்கள்; உவ்விடம் மேலிடம் எங்கும் உலகத்துப் பொய் முதலான குற்றங்கள்கெட மறையவர் வேதஞ் சொல்லும் இடம்; ஏந்திய இழைகளை உடையவளே! இந்த இடமும் அம்பெய்யும் கருவியாகிய மேருமலையாகிய நீண்ட வில்லையுடைய சிற்றம்பல நாதற்கு இருப்பிடம்; இத் தன்மைத்து இவ்வூர் என்றவாறு.*

*இவ்விடம் இம்மையின்பத்தை மிகுவிப்பதுபோல, முத்தியின்பத்தையும் நல்கி ஆனந்தமேயாக அமர்ந்திருக்கும் சிற்றம்பலநாதன் இடம் என உயிர் உரைத்தவாறு. (30)*

## செவிலி தேடல்

### 'திரோதையைக் கடந்த செய்கை உரைத்தது'

*அருட்சத்தியாய் உயிர்க்குச் சிவத்தைச்சார உபகாரப்பட்ட திருவருள் செவிலி முதலாயினார்க்கு மறைத்தலைச் செய்யும் திரோதான சத்தியாய், சிவம் சென்ற இடம் இதுவென உரையாது மறைக்க, செவிலி திரோதையாகிய உன்னையுங் கடந்து சிவம் எங்ஙன் சென்றது? சென்றவகை எப்படி? என்று வினவா நின்றது.*

மயிலெனப் பேர்ந்திள வல்லியின் ஒல்கிமென் மான்விழித்துக்
குயிலெனப் பேசுமெங் குட்டனெங் குற்றதென் நெஞ்சகத்தே
பயிலெனப் பேர்ந்தறி யாதவன் றில்லைப்பல் பூங்குழலாய்
அயிலெனப் பேருங்கண் ணாயென்கொ லாமின் றயர்கின்றதே. 224

பொ-ரை: மயில்போல நடந்து, இளங்கொடிபோல நுடங்கி, மெல்லிய மான்போல விழித்து, குயில் போலப் பேசும் எம்பிள்ளை எங்குச் சென்றது? என் நெஞ்சின்கண்ணே சிவபரம் பொருளாகிய தனக்குப் பயிற்சி என்று அவரவரும் சொல்லும் வண்ணம் இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்கியறியாதவனது தில்லையில் பலவாகிய மலர்களை அணிந்த கூந்தலை யுடையவளே! வேல்போலப் பிறழும் கண்களையுடையவளே! நீ இன்று வருந்துவது என்னையோ? என்றவாறு.

சிவம் அவரவர் பரிபாக நிலைக்கு ஏற்ப அவரவர்களுக்கு அநுபவப் பொருளாதலால் அவரவர்களும் சிவன்பயிலுமிடம் தம் நெஞ்செனத் தனித்தனியே கூறுகின்றார்கள். ஆயினும் என் நெஞ்சைவிட்டு இமைப்பொழுதும் நீங்காதவன் என்பார் 'என் நெஞ்சகத்தே பயில் (பயிற்சி) எனப் பேர்ந்தறியாதவன்' என்றார். அயர்ச்சி - திருவருட்சத்தியின் திரோதான நிலை. (31)

## அறத்தொடு நிற்றல்

### 'அருளே திரோதை ஆம்திறம் உரைத்தது'

செவிலி தேடாநிற்பத் திருவருளாகிய தோழி, தான் அறியாதாள்போல, உன் ஆணையின்வண்ணம் யாம் இக் குன்றில் விளையாடி நின்றேமாக, இவ் வழியே ஒரு பெரியோன் தார்சூடிப் போயினன்; அவனைக்கண்டு நின் மகள் இத் தாரை எம் பாவைக்குத் தருக என வேண்ட அவன் தந்தனன்; உற்றார்க்குரியர் பொற்றொடி மகளிர் கொண்டார்க்குரியர் கொடுத்தார் என்பதனை இன்று எண்ணினள்போலும்; இவ்வளவுதான் அறிவேன் என்று திரோதானமாய் மறைக்குந்திறம் உரைத்தது.

ஆளரிக் கும்மரி தாய்த்தில்லை யாவருக் கும்மெளிதாந்
தாளரிக் குன்றிற்றன் பாவைக்கு மேவித் தழறிகழ்வேற்
கோளரிக் குந்நிக ரன்னா ரொருவர் குரூஉமலர்த்தார்
வாளரிக் கண்ணிகொண் டாள்வண்ட லாயத்தெம் வாணுதலே. 225

பொ-ரை: ஆளாதல் திருமாலுக்கும் அரிதாய், தில்லை நகரார் அனைவர்க்கும் எளிதாயுள்ள திருவடியையுடையவரது இம் மலையிடத்து, தழல்போல் விளங்கும் வேலையுடைய, தாவிப்பற்றுதலில் வல்ல சிங்கத்தை ஒத்தார் ஒருவரது நிறத்தொடு கூடிய மலரானியன்ற மாலையை, வாள் போலும்

*செவ்வரி பரந்த கண்களையுடையாளாகிய எம் ஒளிபொருந்திய நெற்றியினையுடையாள், மகளிர் விளையாட்டுப் பாவைக்கு என்று விரும்பி ஏற்றுக்கொண்டாள்; இத்துணையும் அறிவேன் என்றவாறு.*

*இதனாற் பயன் அவனொடு சென்றிருப்பாள் என அறத்தொடு நின்றவாறு. ஆளரி - நரசிங்கமுமாம்,* *(32)*

## கற்பு நிலைக்கு இரங்கல்

### 'திரோதையும் இரங்கித் திரும்பி உரைத்தது'

*திருவருளின் முன்னிலையாம் திரோதையும் மனமிரங்கி, அவளுக்கு நன்மையாவது அவனை வழிபடுதல்லது பிறிதில்லை யென்று கற்புநிலைக்கு இரங்கா நிற்றல். தோழி திருவருட் சத்தியாகவே அவள் தாய், திருவருளின் முன்னிலையாகிய திரோதையாதல் இங்கு உணர்த்தப்பெறுகின்றது.*

**வடுத்தான் வகிர்மலர் கண்ணிக்குத் தக்கின்று தக்கன்முத்தீக்**
**கெடுத்தான் கெடவிறொல் லோன்றில்லைப் பன்மலர் கேழ்கிளர**
**மடுத்தான் குடைந்தன் றழுங்க அழுங்கித் தழீஇமகிழ்வுற்**
**றெடுத்தாற் கினியன வேயினி யாவன எம்மனைக்கே.** 226

*பொ - ரை: தக்கன் யாகத்தை அழித்தவனும் ஒருஞான்றும் அழிவில்லாத நித்தியனும் ஆகிய கூத்தப்பிரானது தில்லைக்கண், பலவாகிய பூக்கள் நிறமிக்கு விளங்குகின்ற மடுவின்கண் ஆடி அன்று கெடப்புக, அதுகண்டு இரங்கி அணைத்து எடுத்துதவிய தலைவற்கு, வடுவை வகிர்ந்தாற்போலும் கண்களையுடை யாளாகிய இவட்கு இது அறனாயினும் இம் முதுக்குறைவு தகாது; எம் தாய்க்கு இனிச் செய்யலாவது இவளை அங்ஙனம் மடுவிலிருந்து எடுத்தாற்கு இனிய செயல்களேயன்றி வேறின்று எ-று.*

*இதுவரை திரோதையாய் உயிர் சிவத்தை எய்துதற்குத் தடையாய் மறைத்திருந்த செவிலி, சிவத்தின் கருணை நினைந்து இரங்கி உடந்தையாக எண்ணி இனி எம் மனைக்கு ஆவன எனக் கூறுவது காண்க.* *(33)*

## கவன்றுரைத்தல்

### 'இன்பச்சின்னம் கண்டேன் என்றது'

*திரோதையாகிய செவிலி, நெருநல் சிவத்தலைவி என்னை ஆரத்தழுவிச் செய்தன யாவும் இன்று எம்மைவிட்டுப் பிரிதற்கே என்பதை யான் இன்று அறிந்தேன் என்றது.*

**முறுவலக் காறந்து வந்தென் முலைமுழு வித்தழுவிச்**
**சிறுவலக் காரங்கள் செய்தவெல் லாமுழு துஞ்சிதையத்**

தெறுவலக் காலனைச் செற்றவன் சிற்றம் பலஞ்சிந்தியார்
உறுவலக் கானகந் தான்படர் வானாம் ஒளியிழையே. 227

*பொ - ரை: ஒளி பொருந்திய இழையினையுடைய எனது மகளே! அக் காலத்து என்னைப் பார்த்துச் சிரித்து, வந்து என் மார்பை முழுதும் தழுவிச்செய்த தந்திரங்கள் யாவும், எல்லாம் அழிந்துபட வெகுளத்தக்க காலனைச் சினந்தவனது சிற்றம் பலத்தைத் தியானியாதார் சென்று படரும் வலிய காட்டைத் தான் செல்வதற்காகப்போலும்; அப்பொழுது இதனை யான் அறிந்திலேன் என்றவாறு.*

*மங்கையாயின பின்னர் இவள் என்றும் புரியாத தழுவுதல் முகத்தல் இவற்றை நேற்றுச்செய்தாள்; அவள் செய்தன யாவும் இன்று பிரியவோ என்பதை அன்று நான் அறிந்திலேன் என்பதால் திரோதை இன்று சிவ உயிர்ச்சேர்க்கைக்கு உதவுகின்ற உபகாரமலமாதலை உணர்த்தியவாறாம். இன்பச்சின்னம் - தழுவுதலும் முகத்தலும் முதலாயின. (34)*

## அழிநினைந்து இரங்கல்

### 'சிவனது கருணையைத் திரோதை வியந்தது'

*தன் திருவடியின் மென்மையையும், கல்வழிப்போவதால் அவை கன்றிப்போம் வருத்தத்தையும் நினையாது உயிரை ஆட்கொண்டருளுதல் ஒன்றே குறியாகக்கொண்டு சிவம் உடன்செல்லத் துணிந்ததே என்னும் சிவகருணையை நினைந்து திரோதானமான செவிலி வியந்ததாம்.*

தாமே தமக்கொப்பு மற்றில் லவர்தில்லைத் தண்ணனிச்சப்
பூமேல் மிதிக்கிற் பதைத்தடி பொங்குநங் காயெரியுந்
தீமேல் அயில்போற் செறிபரற் கானிற் சிலம்படிபாய்
ஆமே நடக்க அருவினை யேன்பெற்ற அம்மனைக்கே. 228

*பொ - ரை: தாமே தமக்கு ஒப்பாகி, மற்றொருவரும் இல்லாதவராகிய கூத்தப்பிரானது தில்லையில், குளிர்ந்த அனிச்சப் பூவின்மேல் மிதிப்பினும் நடுங்கிக் கொப்புளங் கொள்ளும் அடிகளையுடைய நங்காய்! கொழுந்து விட்டெரியும் தீயின்மேற் பதித்த வேல்போலச் செறிந்த பருக்கை நிறைந்த பாலையில், சிலம்பணிந்த அடியைப் பரப்பி, தீவினையேன் பெற்ற அன்னைக்கு நடக்க இயலுமோ? என்றவாறு.*

*உயிரைத் தொடர்ந்து சென்று ஆட்கொள்ளும் பெருங்கருணை சிவத்திற்குத் தோன்றியது எங்ஙனம் என வியந்தவாறு. (35)*

## நற்றாய்க்கு உரைத்தல்

### 'திரோதை பரைக்கு உயிர்ச்செய்கை உரைத்தது'

*திரோதாயிமாயையாகிற செவிலித்தாய், பராசித்தியாகிய நற்றாய்க்கு உயிர் ஆணவமலங்கெட்டு, அறியாமை நீங்கிச் சிவஞானம் மேலிட்டுச் சிவகரணங்கள் மேவப்பெற்றுச் சிவத்தைத் தமதாக்கி உடன்கொண்டு சென்றதைத் தெரிவியா நிற்றல்.*

**தழுவின கையிறை சோரின் தமியமென் றேதளர்வுற்**
**றழுவினை செய்யுநை யாவஞ்சொற் பேதை யறிவுவிண்ணோர்**
**குழுவினை யுய்யநஞ் சுண்டம் பலத்துக் குனிக்கும்பிரான்**
**செழுவின தாள்பணி யார்பிணி யாலுற்றுத் தேய்வித்ததே. 229**

*பொ - ரை: தன்னைத் தழுவியகை சிறிது சோருமாயினும் தனியள் என்று நைந்து உள்ளந்தளர்ந்து அழுகின்ற தொழிலைப் புரியும் அழகிய சொல்லையுடைய பேதையதறிவு, விண்ணோர் கூட்டம் உய்ய நஞ்சை அமுது செய்து திருவம்பலத்து நிருத்தம் பயிலும் கூத்தப்பிரானுடைய வளமான திருவடிகளைப் பணியாதாரைப்போலப் பிணியான் மெலிவித்தது எ - று.*

*உயிர் செய்த செய்கையானது பணியாதார் பிணியால் மெலிவதுபோல என்னை மெலிவித்தது என்று திரோதை பரைக்கு உயிர்ச்செய்கை உணர்த்தியவாறு காண்க. சோரின் என்ற விடத்துச் சோரினும் என்ற சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. (36)*

## நற்றாய் வருந்தல்

### 'திரோதை உரைக்கப் பரை பரிந்து இரங்கல்'

*இங்ஙனம் திரோதையாகிய செவிலியுரைக்கப் பரையாகிய நற்றாய் அன்பால் வருந்தி இரங்கிக் கூறாநிற்றல்.*

**யாழியன் மென்மொழி வன்மனப் பேதையொர் ஏதிலன்பின்**
**தோழியை நீத்தென்னை முன்னே துறந்துதுன் னார்கண்முன்னே**
**வாழியிம் மூதூர் மறுகச்சென் றாளன்று மால்வணங்க**
**ஆழிதந் தானம் பலம்பணி யாரின் அருஞ்சுரமே. 230**

*பொ - ரை: யாழோசைபோலும் இனிய மெல்லிய மொழியினையும் வலிய மனத்தையும் உடைய பேதை, ஓர் அயலான்பின் தன் தோழியை விட்டு, என்னை அதற்கு முன்பேயே நீங்கி, இப் பழைய ஊரினிடத்தே உள்ளார் கலங்க, பகைவர்முன்பு திருமால் தொழச் சக்கரமீந்த பரமனது அம்பலத்தைப் பணியாதாரைப்போல, போதற்கரிய சுரத்தைக் கடந்து சென்றாள்; இனி எங்ஙனம் பொறுப்பேன் என்றவாறு.*

*நற்றாயாய்ச் சிவமாகிய தன்னையும் பெறுதற்குரிய மூலமாய் இருந்த பரையைத் துறந்துபோனமையின் 'வன்மனப்பேதை'*

என்றாள். வன்மனம் பேதைக்கு உரியது அன்மையின் வன்மனம் காட்டிய இடம், தகாத இடமாய் ஆராய்ந்தறியும் ஆற்றலிலதாகலின் 'பேதை' என்றாள்.

ஏதிலன் என்றது சிவமும், பரையும், திரோதையும் போல உயிர் ஒன்றொடும் தொடர்பிலதாய்க் குணத்தானும் ஆற்றலானும் வேறுபட்டிருந்தலின் கூறியதாம். (37)

## கிளிமொழிக்கு இரங்கல்

### 'பரை இன்பத்தின் பண்புக்கு இரங்கியது'

பரை, இன்பவடிவாகிய சிவத்தின் பண்பு, பண்டு பழகிய பொருள்களையும் விட்டுப் பிரிவதாக இருந்ததே என்று இரங்கிக் கூறியது.

கொன்னுனை வேலம் பலவற் றொழாரிற்குன் றங்கொடியோள்
என்னணஞ் சென்றனள் என்னணஞ் சேரும் எனவயரா
என்னனை போயினள் யாண்டையள் என்னைப் பருந்தடுமென்
றென்னனை போக்கன்றிக் கிள்ளையென் னுள்ளத்தை யீர்கின்றதே. 231

பொ - ரை: கொற்றொழில் முற்றுப்பெற்ற சூலத்தை யேந்திய அம்பலவாணப் பெருமானை வணங்காதாரைப்போலக் கொடியன்ன என் மகள் மலைவழியை எங்ஙனம் செல்லத் துணிந்தாள்? அங்கு எங்ஙனம் தங்குவாள்? என்று யான் கூற, மயங்கி, என் அன்னை போயினள்; எவ்விடத்தள்? என்னை இனிப் பருந்தடித்துக்கொண்டு போய்விடும் என்று என் தாய்போன செலவேயன்றி இக் கிளிசொல்லும் வார்த்தையும் என் நெஞ்சை அறுக்கின்றது என்றவாறு.

பேயொடேனும் பிரிவரிது என்பரே; அங்ஙனமாகவும் தான் பழகிய கிள்ளை முதலியவைகளைவிட்டு உயிரின்பின் சென்றதே சிவம் என்று இரங்கிக் கூறியவாறு காண்க.

இறைவன் கைச்சூலம் சிவசந்நிதியில் அகப்பட்ட சுத்தான் மாக்களிடம் மலம் அணுகாதவண்ணம் அவர்கள் நெஞ்சுருக மும்மலங்களையும் அறுப்பதான சூலமாகவும் (தசாங்கம் 7.) அதனைக் 'கொல் நுனை வெல்' என்றது சூலம் என்ற பொதுமை நோக்கி என்க. கொல்நுனை என்பதனை வினைத்தொகையாக்கி, மலகன்மங்களை வாட்டும் நுனியையுடைய சூலம் என்றது இக் கருத்தை உட்கொண்ட சிறந்த கருத்தாதல் தெளிக. (38)

## சுடரோடு இரத்தல்

### 'பரை திருமேனிப் பண்புக்கு இரங்கியது'

கைக்கிளியும் தானும் வருந்தத் துறந்துசென்ற என் மகள் முகத்தை நின் அழற்கதிர்களான் வெதுப்பாது, தாமரைமலர் போல மலர்த்துக என்று சூரியனை நோக்கி இரந்து கூறாநிற்றல்

**பெற்றே னொடுங்கிள்ளை வாட முதுக்குறை பெற்றிமிக்கு**
**நற்றேன் மொழியழற் கானடந் தாண்முகம் நானணுகப்**
**பெற்றேன் பிறவி பெறாமற்செய் தோன்றில்லைத் தேன்பிறங்கு**
**மற்றேன் மலரின் மலர்த்திரந் தேன்சுடர் வானவனே. 232**

*பொ - ரை: சுடர்வானவனே! பெற்ற என்னொடும் அவள் வளர்த்த கிளியும் வாட, அறிவுமுதிர்ந்த தன்மைமிக்கு நல்ல தேன்போலும் மொழியுடையாள் அழலையுடைய காட்டின்கண் நடந்த அவள் முகத்தை நிறைந்த தேனையுடைய மலரைப்போல மலரச்செய்வாயாக; இதனையே உன்னிடம் யான் இரந்தேன் என்றவாறு.*

*தன்னை வாடச்செய்யினும் அவள் முகத்தை வாடச் செய்யாமல் மலர்த்து என்று கதிரோனை வேண்டிக்கொண்டாள்; தலைவியின் முகம் தாமரையாதலின் கதிரோனெழ மலருமேயன்றி வாடாது என்ற இயல்பான். இது பரை சிவத்தின் மேனிப்பண்பு உணர்ந்து அதற்கு இரங்கியவாறு. (39)*

## பருவநினைந்து கவறல்

### 'இன்பம் உயிரன்பு என்கொள என்றது'

*உயிர் இன்பமாகிய சிவத்திடம் வைத்த அன்பு சிவத்தின் பால் எத்தகைய பயனைக் கருதியோ? இன்பமோ என்றும் மூவாத்தன்மையது; அங்ஙனமாக அது உயிர்க்கு என்ன குற்றேவல் புரிந்து இன்பூட்டும் என்று நற்றாயாகிய பரை கவலா நிற்றல்.*

**வைம்மலர் வாட்படை யூரற்குச் செய்யுங்குற் றேவன்மற்றென்**
**மைம்மலர் வாட்கண்ணி வல்லள்கொல் லாந்தில்லை யான்மலைவாய்**
**மெய்ம்மலர்க் காந்தளைப் பாந்தளென் றெண்ணித்துண் ணென்றொளித்துக்**
**கைம்மல ராற்கண் புதைத்துப் பதைக்குமெங் கார்மயிலே. 233**

*பொ - ரை: தில்லைப்பெருமானது இம் மலையிடத்துச் செறிந்த இதழ்களையுடைய காந்தள்மலரைப் பெரும்பாம்பு என்றுகருதித் துண்ணென்று மறைந்து கைம்மலரால் கண் புதைத்து நடுங்கும் எம் கார்மயிலாகிய மை பூசப்பெற்ற அழகிய ஒளிபெற்ற கண்களையுடையாள், கூரிய மலரணிந்தவளாகிய படையையுடைய ஊரற்குத் தான் செய்யத்தகும் குற்றேவல்களைச் செய்யவல்லளோ என்றவாறு.*

*தலைவற்கு இக் காலத்து இச் செயல் உவப்பானவை என்று அறிவிக்கக் கூடிய முதுபெண்டிரும் ஆண்டு இல்லாமையால் தானே அறிந்துசெய்யும் ஆற்றலுடையளோ என்று தாய்மை இரங்கியது. உயிர் உவப்பச் சிவம் கருணை புரியவல்லதோ என்று பரை இரங்கியவாறு. (40)*

## நாடத்துணிதல்

### 'திரோதை பின் யானே தேடுவன் என்றது'

பருவம் நினைந்து கவலாநின்ற பரைக்கு, நீ ஒன்றும் கவலுதல் வேண்டா; யான் சிவம் சென்றவிடம் சென்று தேடிக் கொணருவேன் என்று திரோதை கூறாநிற்றல். திரோதையின் யானே தேடுவேன் என்று பாடங்கொண்டு பொருளியைபு நாடாது இடர்ப்படுவாரும் உளர். இங்ஙனம் கொள்ளின் இது நற்றாய் கூற்றாதல் வேண்டும். பாடல் செவிலி கூற்றாக இருத்தல் சிந்தித்தற்குரியது.

வேயின தோளி மெலியல்விண் ணோர்தக்கன் வேள்வியின்வாய்ப்
பாயின சீர்த்தியன் அம்பலத் தானைப் பழித்துமும்மைத்
தீயின தாற்றல் சிரங்கண் ணிழந்த திசைதிசைதாம்
போயின எல்லையெல் லாம்புக்கு நாடுவன் பொன்னினையே. 234

பொ - ரை: விண்ணவர்கள் தக்கன் யாகத்தில் பரந்த புகழையுடையவனாகிய அம்பலவாணனை இகழ்ந்து கூறி மூன்றாகிய தீயானது ஆற்றலையும் சிரத்தையும் கண்ணை யுமிழந்து திசைகடோறும் தாம்போயின எல்லையெல்லாம் புக்குப் பொன்னைப்போன்ற தலைவியைத் தேடுவேன்; வேயன்ன தோள்களையுடைய தாயே! நீ மெலியவேண்டா என்றவாறு.

மும்மையென்பது 'இருமையும் ஏற்கும்' என்புழிப்போல ஈண்டு எண்ணின்கண் நின்றது. மும்மைத்தீ - சோம சூரிய அக்கினி. தக்கயாகத்தில் சோமன் வீரபத்திரக் கடவுளின் திருவடியால் தேய்க்கப்பெற்று ஆற்றல் இழந்தான்; சூரியன் கண் இழந்தான்; அக்கினி தலை இழந்தான் என்க. பேராசிரியர் மூன்றன் தொகுதியாகிய தீயினது வலியையும், தலையையும், கண்ணையும் இழந்து என்று உரைகாண்பர்.

இறைவன் மெய்ம்மைசேர்புகழ் புகாத இடமும் இல்லை; அங்கெல்லாம் சென்று தேடுவன் என்றாள்; சிவத்தலைவி சிவன்புகழ் பேசப்படுமிடங்கள் எல்லாம் தயிரில் வெண்ணெய் போல வெளிப்பட்டுநிற்பள் ஆதலால். *(41)*

## கொடிக்குறி பார்த்தல்

### 'பரையே சிவத்தின் குறிப்பண்பு பார்த்தது'

நற்றாய், சிவம் மீட்டும் தன்பால் வரும் அடையாளமாகக் காகங்கரைதல் முதலிய குறிகளைப் பாராநிற்றல்.

பணங்களஞ் சாலும் பருவர வார்த்தவன் றில்லையன்ன
மணங்கொளஞ் சாயலும் மன்னனும் இன்னே வரக்கரைந்தால்
உணங்கலஞ் சாதுண்ண லாமொண் ணிணப்பலி ஒக்குவன்மாக்
குணங்களஞ் சாற்பொலி யுந்நல சேட்டைக் குலக்கொடியே. 235

பொ - ரை: பெரிய குணங்களைந்தான் விளங்கும் நல்ல சேட்டைக்கு உரிய சீரிய காகமே! படங்கள் ஐந்து ஆடாநிற்கும் பருத்த அரவையணிந்தவனது தில்லையைப்போலும் மணங் கொண்டருளிய அழகிய சாயலையுடையாளும் அவள் கணவனாகிய மன்னனும் இப்போதே மீளவும் வரும்வண்ணம் நீ கரைந்தால் வற்றல்மீனை அஞ்சாதிருந்து உண்ணலாம்; தெய்வத் திற்குக் கொடுத்த நல்ல நிணத்தையுடைய பலியை நினக்கே வரைந்து வைப்பேன் என்றவாறு.

மணங்கொள் அஞ்சாயல் என்பதற்கு நறுமணம் பொருந்திய அழகிய சாயலையுடையாள் எனலுமாம். உணங்கல் - உலர்ந்த மீன். சேட்டை-மூதேவி. காகம் மூதேவியின் கொடியும், கழுதை வாகனமுமாம். சேட்டை - உறுப்பைப் புடைபெயர்த்தல் என்பர் பேராசிரியர். சிவத்தின் குறி - சிவம் தான் ஆட்கொண்ட உயிரோடு மீளவரும் அடையாளம். (42)

## சோதிடங் கேட்டல்

### 'திரோதை உயிர்ப்பண்பு தீருமோ என்றது'

திரோதையாகிய செவிலி, உடனழைத்துச் சென்றதாகிய உயிர்ப்பண்பு தீருமோ? மீண்டுவந்து நம் மனையில் வரைந்து கொள்ளுமோ? என ஆய்ந்துகூறுமின் என்று அறிவனால் சோதிடம் கேட்டது.

முன்னுங் கடுவிடம் உண்டதென் றில்லைமுன் னோனருளால்
இன்னுங் கடியிக் கடிமனைக் கேமற் றியாமயர
மன்னுங் கடிமலர்க் கூந்தலைத் தான்பெறு மாறுமுண்டேல்
உன்னுங்கள் தீதின்றி ஓதுங்கள் நான்மறை உத்தமரே. 236

பொ - ரை: முற்பட்டுப் பரந்துசெல்லும் கடிய விடத்தை உண்ட அழகிய தில்லைக்கண் உள்ளானாகிய எல்லார்க்கும் முன்னாயவனது அருளால் இக் காவலோடுகூடிய மனையில் யாம் மணத்தைச் செய்ய, நிலைபெற்ற மணமுள்ள கூந்தலை யுடையாளாகிய தலைவியை இன்னும் யாம் பெறுமாறு உண்டாயின், நான்கு வேதங்'களையும் உணர்ந்த உத்தமர்களே! மனத்தான் ஆய்''ந்து சொல்லுங்கள் என்றவாறு.

கருவிடம் முன்னும் உண்டோன் எனக்கூட்டி, கடல்கடைந்த காலத்து விடமுண்டோன் எனலுமாம். மன்னுங் கடிமலர்க் கூந்தலை என்றான்; என்றும் மாறாத மலர்மணம் கமழுகின்ற கூந்தலையுடையாள் பத்மினிசாதிப் பெண்ணாகலான் என்க. சோதிடர்கள் தேவையறிந்து இதமாகப் பேசபவர்களாதலின் ஆய்ந்து உண்மையைச் சொல்லுங்கள் என வேண்டுவாள்

உன்னுங்கள்; தீதின்றி ஓதுங்கள்; நான்மறை உத்தமரே! என்கின்றாள். வேதமோதியபின் பொய் கூறலாகாது என்ற மரபு வழிநின்று.

இதனால் உயிர் உடனழைத்துப்போன பண்பு மாறி உடனழைத்து வந்து மணக்குமோ என வினவுவதால் திரோதை உயிர்ப்பண்பு தீருமோ என வினாவியது காண்க. (43)

## சுவடுகண்டு அறிதல்

### 'திரோதை சிவம்பெறும் சின்னம் கண்டது'

சோதிடம் கேட்டுத் தேடிச் செல்லாநின்ற செவிலியாகிற திரோதை, மண்ணில் அடிச்சுவடுகளைக் கண்டு இவை சிவம்பெறும் சின்னங்கள்; இவை சிவத்தை உடன்கொண்டு செல்லும் கள்வனாகிய உயிரின் அடிகள் எனத் தேர்தல்.

தெள்வன் புனற்சென்னி யோனம்ப லஞ்சிந்தி யாரினஞ்சேர்
முள்வன் பரன்முரம் பத்தின்முன் செய்வினை யேனெடுத்த
ஒள்வன் படைக்கண்ணி சீறடி யிங்கிவை உங்குவையக்
கள்வன் பகட்டுர வோனடி யென்று கருதுவனே. 237

பொ - ரை: தெளிந்த வளப்பமான கங்கையைச் சிரமேற் கொண்ட சிவபெருமானது சிற்றம்பலத்தைச் சிந்தியாதார் இனம்சேரும், முள்ளையும் வலிய பரலையும் உடைய இப் பாலை நெறிக்கண் காணப்படுகின்ற இவை, முற்பிறவிகளிற் பாவகன்மமே செய்த நான் எடுத்துவளர்த்த ஒளிபொருந்திய வலிய படைபோலும் கண்களையுடையாளின் அடிச்சுவடுகள்; இவை அக் கள்வனாகிய யானைபோலும் மிக்க வலிமையுடையவனின் அடிச்சுவடுகள் என்று உய்த்துணர நின்றேன் என்றவாறு.

திரோதையாய்ச் சிவத்தொடு நெடுநாள் பழகியதால் சிவத்தின் நனைந்தனைய திருவடியின் சுவட்டினை முதலிற்கண்டு, உடன் பதிந்திருப்பதால் இவை அக் கள்வனடியாதல் வேண்டும் என ஊக ஞானத்தால் உணர்ந்து உரைத்தவாறு. (44)

## சுவடுகண்டு இரங்கல்

### 'திரோதை சிவத்தின் சின்னத்திற்கு இரங்கியது'

பூந்தவிசின்மேல் மிதிப்பினும் கன்றிச் சிவக்கும் இம் மெல்லடிகள் இன்று இக் காளையின்பின்னே இந் நிலத்தில் போதற்கு எங்ஙனம் இயைந்தன என்று திரோதை சிவத்தின் அடிச்சுவடுகண்டு இரங்கியது.

பாலொத்த நீற்றம் பலவன் கழல்பணி யார்பிணிவாய்க்
கோலத் தவிசின் மிதிக்கிற் பதைத்தடி கொப்புள்கொள்ளும்

**வேலொத்த வெம்பரற் கானத்தின் இன்றொர் விடலைபின்போங்**
**காலொத் தனவினை யேன்பெற்ற மாணிழை கான்மலரே. 238**

*பொ - ரை; அழகிய பூந்தவிசின்மீது மிதிப்பினும், பாலொத்த திருநீற்றையுடைய அம்பலவாணப் பெருமானது திருவடியைப் பணியாதாரது வருத்தம்போலும் வருத்தம் வாய்ப்ப, பதைபதைத்து அடிகள் கொப்புளங்கொள்ளும் - தீவினையேன் பெற்ற மாட்சிமிக்க இழையினையுடையாளது கான்மலர்கள் இன்று வேலை ஒத்த கொடிய பருக்கை நிறைந்த காட்டில் போதற்குத் தகும் காலை ஒத்தன; எங்ஙனம் ஆற்றவல்ல ஆயின எ-று.*

*அடியார்களின் உள்ளமாகிய காமமாதிய காம்பு களையப் பட்ட மலரின் மீது பொருந்தினும் கன்றிச் சிவக்கும் அடிகள் என்றது சிவத்தின் மென்மையையும் பெருமையையும், காளைபின்னே கானிற் செல்லத்தக்கது எவ்வாறு என்றது அன்பர்க்கிரங்கிய எளிமையையும் உணர்த்தின. (45)*

## வேட்டமாதரைக் கேட்டல்

### 'திரோதை ஏ பெற்றவர் தேற வினாயது'

*திரோதையாகிற செவிலி சிவத்தின் சின்னங்கண்டிரங்கி, சுவடு உணர்த்தும் நெறிக்கண் செல்லாநின்றவள், வழியில் வேட மாதரைக்கண்டு தன் மனம் தெளிய, இவ் வழிப்போந்த இளையாளையும் காளையையும் நீவிர் கண்டதுண்டோ? என வினவாநிற்றல். ஏ பெற்றவர் - அம்பையுடையவர்களாகிய வேடமாதர்.*

*திரோதையே பெற்றவர் தேறவுரைத்தது எனவும் பாடம். வேட மாதர்க்கு கவற்சியில்லையாகவே அவர்க்குத் தெளிய உரைக்கவேண்டிய இன்றியமையாமை செவிலிக்கு இல்லை. ஆதலால் இப் பாடம் ஈண்டுக் கொள்ளப்பெற்றிலது. திரோதையே என ஏகாரத்தை முதற்சொல்லோடு சேர்க்கின் பொருள்நயமும் இக் கிளவிக்குப் பொருந்துமாறும் இல்லையாம். திரோதை சிவத்தின் செய்கையுரைத்தது என்ற வியாக்கியான பாடமோ பின்வரும் பாடற்கொளுவாகவும் காணப்படுகிறது. ஆதலால் வியாக்கியானத்தில் ஏதோ பாடற்பிறழ்வு நிகழ்ந்திருக்க வேண்டும்.*

**பேதைப் பருவம்பின் சென்றது முன்றில் எனைப்பிரிந்தால்**
**ஊதைக் கலமரும் வல்லியொப் பாண்முத்தன் றில்லையன்னாள்**
**ஏதிற் சுரத்தய லானொடின் றேகினள் கண்டனையே**
**போதிற் பொலியுந் தொழிற்புலிப் பற்குரற் பொற்றொடியே. 239**

*பொ - ரை: தாமரைப்பூவின்கண் பொலியும் தொழிலினையும், புலிப்பல்லை அணிந்த கழுத்தையும் உடைய பொற்றொடியே! பேதைப்பருவங் கடந்ததன்பின், வீட்டு முற்றத்தில் எனைப் பிரிந்தால்*

ஊதைக்காற்றுக்கு வருந்தும் கொடியை ஒப்பாள், அநாதிமுத்தனது தில்லையை ஒப்பாள், தனக்கு என்றும் இயைபு இல்லாத பாலை வழியில் அயலான் ஒருவனொடு இன்று போயினள்; நீ கண்டனையோ? அவள் எவ் வண்ணம் போயினள்? என்றவாறு.

வேடப்பெண்ணே! முற்றத்துப்பிரியினும் வாடைக் காற்றுக்குச் சூழலுங் கொடிபோல வருந்துமவள், பேதைப் பருவம் கடந்ததன்பின் அயலானொடு இன்று போயினள்; நீ கண்டதுண்டோ? என வினாவினள், தான் தடையாக இருந்தும் அதனுட்படாது பரிபாகமுற்ற ஆன்மாவோடு சிவம் கலந்து சென்றமையைக் கருதித் திரோதை வினாவியது காண்க. (46)

## புறவொடு புலத்தல்

### 'திரோதை சிவத்தின் செய்கை உரைத்தது'

திரோதையாகிற செவிலி, புறா ஒன்றினைக்கண்டு, அயலுமாய்த் தமியனுமாயுள்ள உயிரோடு, அது சொல்லும் சொற்றுணைகொண்டு நீ செல்லுதல் தகாது என நீயாவது கூறியிருத்தல் கூடாதா? என்று புலந்து கூறாநிற்றல்,

**புயலன் றலர்சடை யேற்றவன் தில்லைப் பொருப்பரசி**
**பயலன் றணைப்பணி யாதவர் போன்மிகு பாவஞ்செய்தேற்**
**கயவன் றமியனஞ் சொற்றுணை வெஞ்சுர மாதர்சென்றால்**
**இயவன் றெனக்கிற் றிலைமற்று வாழி எழிற்புறவே. 240**

பொ - ரை: கங்கைப்புனலை அன்று விரிந்தசடையில் ஏற்றவனும் தில்லைக்கண் உள்ளவனும், மலையரசியாகிய உமா தேவியை ஒருகூற்றில் உடையவனுமாகிய கூத்தப்பெருமானைப் பணியாதவர்களைப்போல மிகுந்த பாவஞ்செய்த எனக்கு அயலானும் தனியனும் ஆகிய அவனது அழகிய சொல்லே துணையாக மாதர் கொடிய சுரத்தைக் கடந்து சென்றால், அழகிய புறவே! இது தகுதியன்று என்று கூறிற்றிலை; வாழ்வாயாக என்றவாறு.

புறவே! நீ கூறின் அவள் செல்லாள் என்பதாம். பாவஞ் செய்தேற்கு இயலன்று எனக்கிறில்லை எனக் கூட்டுக என்பர் பேராசிரியர். அங்ஙனம் கூட்டின் தலைவியைப் பிரிந்து வாடுகின்ற பாவியாகிய எனக்கு உடன்போன அவளைத் தொடர்ந்துசேறல் இயல் அன்று எனக் கூறிற்றிலை என்பது கருத்தாம். மேலும் குரவொடு வருந்தியும், விரதியரை வினாவியும் சுரத்தின்கண் தேடிச்செல்லும் செவிலி, புறவே! நீ பாவஞ்செய்தேற்கு அயலானும் தமியனுமான அவன்சொல் துணையாக மாதர் சென்றால் மாதரைநோக்கி இங்ஙனம் சேறல் இயல் அன்று எனக்கிற்றிலை எனலே சிறந்ததாதல் தெளிக. (47)

## குரவொடு வருந்தல்

### 'திரோதை எங்கும் சிவமே வினாயது'

*திரோதையாகிய செவிலி, என் பாவை நின் கண்ணெதிரே கடத்தைக் கடந்து செல்லாநிற்கவும் தேடுகின்ற எனக்கு, குரவே! இன்னவழி சென்றாள் என்று வாயுந்திறக்கிலை; உனக்கு இது தகுமோ என்று குரவொடு வாடி உரையா நிற்றல்.*

பாயும் விடையோன் புலியூ ரனையவென் பாவைமுன்னே
காயுங் கடத்திடை யாடிக் கடப்பவுங் கண்டுநின்று
வாயுந் திறவாய் குழையெழில் வீசவண் டோலுறுத்த
நீயுநின் பாவையும் நின்று நிலாவிடு நீள்குரவே. 241

*பொ - ரை: குழை அழகைச் செய்ய, வண்டுகள் நின் பாவையைத் தாலாட்ட , நின் பாவையும் நீயுமாக நின்று விளங்கும் நீண்ட குரவமே! பாய்ந்து செல்லும் விடையை உடையவனது புலியூரையொக்கும் எனது பாவைபோல்வாள், நின்முன்னே கொதிக்கும் பாலையிலே அசைந்தாடிக்கொண்டு அதனைக் கடப்பவும் அதனைத் தடுக்காது பார்த்திருந்து, இன்னணம் நிகழ்ந்ததென்று எனக்கு வாயும் திறக்கின்றிலை; இது நினக்குத் தகுமோ? என்றவாறு.*

*குரவ மலர் பாவைபோல்வது ஆகலின், குரவத்தை ஒரு நற்றாய்க்கு ஒப்பிட்டு, ஏ குரவமாகிய தாயே! காதணி விளங்க உன் மகளாகிய மலரை வண்டுகளாகிய செவிலியர் தாலாட்டப் பிறர்நோவு அறியாது என்பாவை கடத்தைக் கடப்பவும் கண்டு நின்றாய்; தேடிவந்த எனக்கு வாய் திறக்கின்றிலை என்ற இயைபு கொள்ளநிற்றல் காண்க. குழை - தளிர், காதணி; பாவை - குரவமலர், பெண்; வண்டு - வண்டு, செவிலி; ஓலிட - ஒலிக்க, தாலாட்ட. சிவத்தைப் பிரிந்த திரோதை எங்கும் சிவத்தை வினாவுதல் காண்க.* (48)

## விரதியரை வினாவல்

### 'திரோதை தவத்தர் திறத்தில் வினாயது'

*சிவத்தைப் பின்தொடர்ந்துவரும் மெய்யடியார்களைப் போல ஒருத்தி ஒரு பெருந்தகையாகிய பக்குவான்மாவைப் பின்தொடர்ந்துவரக் கண்டீரோ? எனத் திரோதை விரதியரை வினவாநிற்றல்.*

சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கஞ் சூழ்சடைவெண்
பொத்திய கோலத்தி னீர்புலி யூரம் பலவர்க்குற்ற
பத்தியர் போலப் பணைத்திறு மாந்த பயோதரத்தோர்
பித்திதற் பின்வர முன்வரு மோவொர் பெருந்தகையே. 242

பொ - ரை: சுத்தியையுடைய பொக்கணத்தையும் எலும்பாகிய அணியையும் கட்டங்கப்படையையும் சுற்றிய சடையையும் உடல்முழுதும் மூடிய வெண்கோலத்தையுமுடைய மாவிரதியரே! புலியூரில் எழுந்தருளியிருக்கும் அம்பலவாணப் பெருமானுக்கு அன்பு பூண்டவர்களைப்போல அடி பருத்து இறுமாந்த முலைகளையுடையாள் ஒருத்தி தனக்குப் பின்னேவர ஒரு பெருந்தகை முன்வருமோ? உரையீர் என்றவாறு.

சுத்தி - கபாலத்தால் இப்பிவடிவாகச் செய்யப்பெற்ற திருநீற்றுச் சம்புடம். கட்டங்கம் - மழு; கட்டுவாங்கம் என்பதன்றிரிபு.

பணைத்து இறுமாந்து என்ற அடைகளைப் பத்தியர்க்கும், முலைகளுக்கும் ஆக்குக. பத்தியர்க்குக் கூறும்போது, நீறணியம்பலவன் மெய்யடியார் ஆயினமே என்று உள்ளத்து நிறைந்த இன்பவுணர்வால் மேனி ஒளி படைத்தலும் மெய்யடியார்கணத்துள் எண்ணப்பட்டு இறுமாந்திருப்பன் கொலோ என்றாங்குத் தாழாத உள்ளத்தராய்ச் செம்மாத்தலும். முலைக்கு முற்கூறப் பெற்றது. முழுதும் வெண்ணீறு சண்ணித்த மேனியை வெண் கோலம் என்றது.

விரதியர் - மாவிரதியர். பலவாய் நித்தமாய் வியாபகமாய்க் காரிய காரணக் கூட்டரவாற்றோன்றும் ஞானத்தால் தனித்தனி வேறாயுள்ள ஆன்மாக்கள், மாயை கன்மம் என்ற இரண்டால் மட்டும் பந்தமுற்றுச் சுக துக்கங்களை அநுபவித்து, சாத்திரங் களிற் கூறப்பெற்ற முறையிலே தீக்கைகளைப் பெற்று, மயிர்ப் பூணூல் என்புமாலை கபாலம் கபால சம்புடம் பொக்கணம் முதலியவற்றைத் தாங்கி, சரியைகளின் வழுவாது ஒழுகி முத்தராய்ச் சிவனொடு சமமாக எல்லாக்குணங்களும் பெற்றவர். மானக்கஞ்சாறர் புராணத்து வரும் மாவிரதியரியல்பைச் சேக்கிழார் கூறுமாற்றான் தெளிக. (49)

## வேதியரை வினாவல்

### 'திரோதை கற்றோரைச் சென்று வினாயது'

விரதியர் உலகியலைத் துறந்து சித்தம் சிவமாக்கி ஒன்றையும் உணராது தன்வசமற்ற தவத்தராதலின் அவர்களிடம் விளக்கம் பெறாத திரோதை, உலகியலில் ஊன்றிநின்று, அறிவியலை அவாவும் வேதியரைக்கண்டு சிவத்தை வினாவியதாம். திரோதை பெற்றோரைச் சென்று வினாயது என்று பாடமாயின் வேத அறிவு பெற்றோரை எனச் செயப்படுபொருள் வருவித்துரைக்க, இன்படைந்தோர் எதிர்சென்ற திரோதை அன்புயிர் சிவத்தில் அடைதலை வினாதல் என்பது திருவாசக வியாக்கியானம்.

**வெதிரேய் கரத்துமென் றோலேய் சுவல்வெள்ளை நூலிற்கொண்மூ**
**அதிரேய் மறையினிவ் வாறுசெல் வீர்தில்லை யம்பலத்துக்**
**கதிரேய் சடையோன் கரமா னெனவொரு மான்மயில்போல்**
**எதிரே வருமே சுரமே வெறுப்பவொர் ஏந்தலொடே. 243**

*பொ - ரை: மூங்கிற்கோலேந்திய கையினையும், மெல்லிய கருமான் தோலையணிந்த பிடரியையும், வெள்ளை நூலையும், முகில் முழக்கம்போலும் வேத ஒலியையும் உடையவர்களாக இந் நெறிக்கண் செல்லும் அந்தணர்களே! மான்போல் வாளொருத்தி அம்பலவாணப் பெருமான் கையிலுள்ள மான் போலும் மருண்ட நோக்கத்தளாய் மயில்போலும் சாயலை யுடையவளாய், எல்லோரையும் வருத்தும் சுரமே இவளைக் கண்டு துன்புற ஒரேந்தலோடு நும்மெதிர் வந்தாளோ? நீவிர் கண்டிரோ? உரைமின் என்றவாறு.*

*கருமான்தோலை மேலாடையாக அணிதல் வேதியரியல்பு. இக் காலத்துப் பூணூலில் தோலின் சிறுதுண்டை முடியிட்டு அணிவர். ஏகதண்டமும், பூணூலும், கருமான்தோலாகிய மேலாடையும், வேதமுழக்கும் வேதியர்க்கு உரியன, வேதங் கற்றார் பாசஞானிகளாதலின் அவர்களாலும் சிவம் காணப் படாது என்பதனை உட்கொண்டு 'எதிரே வருமே' எனத் திரோதை வினாவியவாறாம். (50)*

## புணர்ந்துடன் வருவோரைப் பொருந்தி வினாதல்

### 'திரோதைபெற்ற சிவத்தைக் கேட்டது'

*வேதியர் பாசஞானிகளாதலானும் தம் கன்மானுட்டா னத்திலே உறைந்து நிற்கும் உள்ளத்தராதலானும் அவர்கள் வாய்மொழி பெறாத திரோதை சிவம் உயிருடன் கலந்து சென்ற நிலையிலே எதிர்வரும் தலைவன் தலைவியைக்கண்டு முதற்கண் சிவமும் உயிரும் எனவே மருண்டு பின் அவரன்மையைத் தெளிந்து, நும்போல்வார் இருவர் எதிர்செல்லக் கண்டீரோ என வினவாநிற்றல்.*

*திரோதை பெற்ற சிவத்தைக் காட்டியது என்ற பாடம் கிளவிக்கும் பொருளுக்கும் இயைபின்றியிருத்தலை ஆராய்க.*

**மீண்டா ரெனவுவந் தேன்கண்டு நும்மையிம் மேதகவே**
**பூண்டா ரிருவர்முன் போயின ரேபுலி யூரெனைநின்**
**றாண்டான் அருவரை யாளியன் னானைக்கண் டேனயலே**
**தூண்டா விளக்கனை யாயென்னை யோவன்னை சொல்லியதே. 244**

*பொ - ரை: நும்மைக் கண்டு எம்மவர் மீண்டார் என்று மகிழ்ந்தேன்; இத்தகைய மேன்மையைத் தாங்கிய இருவர் முன்பு*

சென்றனரோ உரைமின் என, புலியூர்க்கண் அடியேனையும் ஒரு பொருளாக மதித்து ஆட்கொண்ட அம்பலவாணப் பெருமானது அணுகுதற்கரிய மலையில் ஆளியையொப்பானை யான் கண்டேன்; தூண்டாவிளக்கனையாய்! அவன் பக்கலின் அன்னை சொல்லியது யாது? அவட்கு அதனைச் சொல்லுவாயாக என்றவாறு.

எதிரே உடன்போக்கின் வந்த இருவரையும் சிவமும் உயிருமாகக் கண்ட திரோதை, அண்மையில் வந்ததும் அவர்களன்மையைக்கண்டு வினாயவாறு காண்க. இதனாலும் காட்டியது என்ற பாடம் சிறவாமை காண்க. இப் பாடங் கொள்ளின் தாம் சிவமும் உயிரும் அன்மையைக்காட்டியது எனப் பொருள் கொள்ளல் வேண்டும். இக் கலித்துறையில் வினாதலும், அவர்கள் விடையிறுத்தலுமாகிய இரண்டும் கூறப் படுதலின் ஒருவாறு அப் பாடமும் ஏற்புடைத்தாகலாம். (51)

## வியந்துரைத்தல்

### 'திரோதை இன்பு உயிரின் செய்திறன் கண்டது'

இன்பாகிய சிவம் உயிர் இவ்விரண்டும் செய்யும் திறன் களைத் திரோதை கண்டு வியந்து கூறாநிற்றல். திரோதையின் புயிரின் செயல்விரித்து உரைத்தது என்பது வியாக்கியானம். இதனானும் முற்கருத்து விளங்குதல் காண்க.

**பூங்கயி லாயப் பொருப்பன் றிருப்புலி யூரதென்னத்**
**தீங்கையி லாச்சிறி யாணின்ற திவ்விடம் சென்றெதிர்ந்த**
**வேங்கையின் வாயின் வியன்கைம் மடுத்துக் கிடந்தலற**
**ஆங்கயி லாற்பணி கொண்டது திண்டிறல் ஆண்டகையே.** 245

பொ - ரை: பொலிவினையுடைய கைலைப்பொருப்பை உடையவனது திருப்புலியூரைப்போலத் தீங்கிலாத சிறியவள் நின்ற இடம் இவ்விடத்து; தன்னோடு எதிர்ந்த வேங்கையின் வாயில் பெரிய கையைப் புகுத்தி அது கிடந்து அலறும்வண்ணம் திண்ணிய ஆற்றலையுடைய ஆண்டகை வேலாற் பணி கொண்டது அவ்விடத்து; அதனால் அவர்சென்ற நெறி இதுவே என்றவாறு.

சிவம் இடையூறின்றி ஒதுங்கி நின்ற இடமும், உயிர் தன்னொடு எதிர்த்தபுலியை வெற்றிகண்ட இடமும் கூறுதல் வாயிலாகத் திரோதை சிவம் உயிர் இவற்றின் செயலை வியந்தவாறு காண்க. (52)

## இயைபு எடுத்துரைத்தல்

### 'திரோதை இன்புருவச் சிவமாக் கண்டது'

திரோதை வேங்கை பட்டதைக்கண்டு வியந்து இதுவே அவர்கள் சென்ற நெறியென்று செல்லாநின்றவள், எதிர்

*வருவாரை வினாவ, அவர் நீ கூறுமவர்களைக் குன்றத் திடைக்கண்டேம்; அவ்விருவரும் தம்முளியைந்து செல்வதைக் கண்டு பெண்ணொருபாகனாக மதித்துத் தொழ எண்ணினேம் என்று அவரியைபு எடுத்துரையாநிற்றல்.*

**மின்றொத் திடுகழல் நூபுரம் வெள்ளைசெம் பட்டுமின்ன**
**ஒன்றொத் திடவுடை யாளொடொன் றாம்புலி யூரனென்றே**
**நன்றொத் தெழிலைத் தொழவுற் றனமென்ன தோர்நன்மைதான்**
**குன்றத் திடைக்கண் டனமன்னை நீசொன்ன கொள்கையரே. 246**

*பொ - ரை: அன்னையே! நீ கூறும் கொள்கையையுடையாரை மலைகளின் நடுவே கண்டோம்; இருவரும் தம்முள் இயைந்து ஒன்றிச்செல்லுதலால். அவன் வீரக்கழலும் அவள் சிலம்பும் மின்திரள் உண்டாக்கா நின்றன; அவனது வெண் பட்டும், அவளது செம்பட்டும் மின்ன ஒரேவடிவாக விளங்குதலால், எல்லாவற்றையும் உடையாளாகிய உமாதேவியாரோடு ஒருவடிவாய்த் திகழும் புலியூரன் என்றேகருதி யாங்களனைவரும் மனம் ஒன்றிப் பெரிதும் அவ்வழகைத் தொழநினைந்தேம்; அவ்வியைபு எத்தகைய நன்மை; அது எம்மாற் சொல்லலாவ தொன்றன்று என்றவாறு.*

*அவ்விருவரும் தம்முள் இயைந்து செல்வது உமையும் சிவமும் ஒரு மேனியாய் அர்த்தநாரீசராம் நிலையாயிருந்தது; அவ்வழகை யாங்கள் மனம் ஒன்றி வணங்க எண்ணினேம் எனச் சிவமாகவே கண்டதை வழிப்போக்கர் சொல்லத் திரோதையும் அங்ஙனமே தியானித்தது என்க. இதனை,*

**"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்**
**பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்**
**சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்**
**கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"**

*என்ற மணிவாசகமும் கோலத்தின் சிறப்பை நன்கு விளக்கும்.*

*பேரின்பக் கொளுவின்வண்ணம் இப்பாடல் திரோதை யாகிற செவிலியின் கூற்று எனக் கருதக்கிடப்பது; சிற்றின்பக் கொளுவும் கலித்துறையின் சொல்லமைதியும் வழிப்போவார் கூற்றாகக் கொள்ளக்கிடக்கிறது. ஆயினும் வழிப்போவார் கூற, திரோதை மனக்கண்ணால் சிவமும் சத்தியும் ஒருங்கு இயைந்த திருமேனியுடைய சிவமாகக் கருதிற்று என்னும் கூற்றும், அதன் விளைவும் உடன் கூறியவாறு எனல் பொருந்துவதாம். (53)*

## மீள வுரைத்தல்

### 'அடியார் சிவத்தோடு ஆவார் என்றது'

இயைபு எடுத்துரைத்த அவர்கள், இத்துணை நேரத்திற்குள் அவர்கள் இருவரும் துன்பம் ஒன்றுமின்றித் தில்லையின் எல்லையை அடைந்து அடியார் கூட்டத்து அடைந்திருப்பர்; அங்குள்ள அடியார்கள் சிவத்தோடுகூடி மகிழ்வர்; திரோதை யாகிய நீ சிற்றூர்க்கு மீள்வதே தகுதி என உரையாநிற்றல்.

மீள்வது செல்வதன் றன்னையிவ் வெங்கடத் தக்கடமாக்
கீள்வது செய்த கிழவோ னொடுங்கிளர் கெண்டையன்ன
நீள்வது செய்தகண் ணாளிந் நெடுஞ்சுரம் நீந்தியெம்மை
ஆள்வது செய்தவன் றில்லையின் எல்லை அணுகுவரே. 247

பொ - ரை: புடைபெயரா நின்ற கெண்டைமீன் போலும் நீண்ட கண்களையுடையாள் இந்தக் கொடிய பாலையில், அத் தன்மைத்தாகிய கடமாவைப் பிளத்தலைச் செய்த தலைவ னொடும் கடந்து துன்பம் ஒன்றுமின்றிச் சென்று, எம்மை ஆட்கொள்ளும் புலியூர்ப் புனிதனது தில்லைநகரின் எல்லையை நணுகுவர்; அதனால் அன்னையே! நீ மீள்வதே செயத்தக்கது; செல்லுதல் தகாது என்றவாறு.

இங்ஙனம் கூறியதனால் திரோதையை நோக்கி, வழிப் போவார், இவ்வளவு நேரத்துள் அவர்கள் இருவரும் தில்லையிற் சென்று அடியார்களோடு கலந்து களிப்பர் என்றது காண்க. (54)

## உலகியல்பு உரைத்தல்

### 'பெற்ற இன்பம் பிறர்கொள்வர் என்றது'

மீண்டுபோ எனக்கூறியும் கவன்றுநிற்கும் திரோதையை நோக்கி வழிப்போவார், நாம் பெற்றனவாகிய பொருள்களான் அடையும் இன்பத்தைப் பிறரே கொள்வர்; அவற்றால் பெற்றவற்குப் பயனில்லையாம் என்று உலகியல்பு உரையா நிற்றல். பெற்ற - வினையாலணையும் பெயராய்ப் பெற்றனவாகிய பொருள்கள் என்.னும் பொருள் தந்தது.

சுரும்பிவர் சந்தும் தொடுகடன் முத்தும்வெண் சங்குமெங்கும்
விரும்பினர் பாற்சென்று மெய்க்கணி யாம்வியன் கங்கையென்னும்
பெரும்புனல் சூடும் பிரான்சிவன் சிற்றம் பலமனைய
கரும்பன மென்மொழி யாருமந் நீர்மையர் காணுநர்க்கே. 248

பொ - ரை: நறுமணத்தாற் சுரும்புகள் மொய்க்கும் சந்தனமும், தோண்டப்பெற்ற கடலின்கண் உண்டான முத்துக் களும், வெண்சங்கும் எத்தேயத்தும் விரும்பினரிடம் சென்று அவர்கள் உடலுக்கணியும் அணியாகும்; பெரிய கங்கை யென்னும்

பெரும்புனலைத் தலைக்கு அணியாகச் சூடும் பெருமானாகிய இறைவனது சிற்றம்பலத்தையொத்த - கரும்பை யொத்த இனிய மெல்லிய மொழிகளையுடைய மகளிரும் ஆராய்ந்தறிவார்க்கு அத் தன்மையரே; நீ கவலவேண்டா என்றவாறு.

- சந்தனம் முதலியன பெற்றபொருட்கு இன்பூட்டாது, அணிபவர்களுக்கே இன்பூட்டுதல்போலப் பொற்றொடி மகளிரும் பெற்றார்க்கு இன்பத்தை அளிக்காது உற்றார்க் குரியராவர் என்று கூறியவாறு. (55)

## அழுங்கு தாய்க்கு உரைத்தல்

**'அடியார் திரோதை அருளே என்றது'**

உலகியல் கூறவும் மனந்தேறாது வருந்தும் திரோதை யைக்கண்டு முன்னிலைப் புறமொழியாக, திரோதை யாண்டும் என்றும் தடையாயிராதே! அது திருவருளாக மாறித் துணை செய்தலும் உண்டே! ஆதலால் உயிர்க்கும் சிவத்திற்கும் இடையீடு செய்யாது மீளுக என எதிர்வருவார் உரையா நிற்றல்.

**ஆண்டில் எடுத்தவ ராமிவர் தாமிவர் அல்குவர்போய்த்**
**தீண்டில் எடுத்தவர் தீவினை தீர்ப்பவன் தில்லையின்வாய்த்**
**தூண்டில் எடுத்த வராறெங்கொ டெற்றப் பழம்விழுந்து**
**பாண்டில் எடுத்தபஃ றாமரை கீழும் பழனங்களே. 249**

பொ - ரை : இவர்தாம் அவ்விடத்து வீட்டில் எடுத்து வளர்த்தவர் போலும்; யாராயிருப்பினும் தம்மை அணுகில் அவர் நரகத்தழுந்தாமே அவர்கள் தீவினையைப்போக்கி ஆட்கொள்பவனது தில்லைப்பதியின்கண் தூண்டிலை விழுங்கிய வரால்மீன் தெங்கில் மோத, அதன் பழம் வீழ்ந்து கிண்ணம்போலும் பூக்களை உயர்த்திய பல தாமரைகளைக் கிழிக்கும் வயல்களைச்சென்று அவர்கள் சேர்வர்; இனித் தீங்கு ஒன்றும் அவர்களுக்கு இல்லை என்றவாறு.

பாவம்! இவர்தாம் வளர்த்தவர்போலும்; அவர்களிருவரும் இந் நேரம் தில்லை சென்று சேர்வர்; அவர்கட்கு ஒரு தீங்கும் இன்று என்று தம்முட் பேசுவார்போலச் செவிலியாகிய திரோதைக்குக் கூறித் திரோதையை உபகாரப்படும் அருட்சத்தியாக மாற்றியது.

## 17. வரைவுமுடுக்கம்

**'வரைவுமுடுக்கம் ஒருபதினாறும்**
**சிவனது கருணை தெரிய உரைத்தவ்**
**வின்பம்பெற அருள் எடுத்தியம்பியது'**

முற்கூறிய வண்ணம் உடன்போக்கு நிகழாதாயின், வரைந்துகோடல் நிகழும் அது தோழியாகிய திருவருளான்

வரைவு விரைவுபடுத்தப்படுதலும், வரைதற்காகப் பொருள் தேடப் பிரிந்துவருதலும் நிகழும். அவற்றுள் வரைவு முடுக்கமாவது, களவில் இன்பமிகுதி கண்ட உயிர் வரையாது காலநீட்டிக்க, அதனைக் கண்ட திருவருள், உயிருக்கு இரங்கி விரைவில் வரைக என முடுக்குதல், அது வருத்தங்கூறல் முதலாகப் பொலிவழிவுரைத்து வரைவுகடாதல் ஈறாகப் பதினாறு கிளவிகளையுடையது.

## வருத்தமிகுதி கூறி வரைவுகடாதல்

### 'சிவனது கருணை தெரியவுரைத்து அவ் இன்பம் பெற வகுத்துரைத்தது'

காலந்தாழ்க்கும் உயிர்க்குச் சிவகருணையிருந்தவாறு இதுவாம் என அறியக்கூறி, இடையீடின்றிச் சிவத்தோடு கலத்தலே உயிர்க்குப் பேரின்பமாமென அறிவுறுத்தி, அதனையெய்தப் பல்லாற்றானும் வகுத்துரையா நிற்றல்.

எழுங்குலை வாழையி னின்கனி தின்றிள மந்தியந்தண்
செழுங்குலை வாழை நிழலிற் றுயில்சிலம் பாமுனைமேல்
உழுங்கொலை வேற்றிருச் சிற்றம் பலவரை யுன்னலர்போல்
அழுங்குலை வேலன்ன கண்ணிக்கென் னோநின் அருள்வகையே. 250

பொ - ரை: எழுகின்ற குலைகளையுடைய வாழையின் இனிய கனிகளைத் தின்று இளமந்திகள் வளமான குலைகளையுடைய வாழைகளின் நிழலிலேயே உறங்கும் மலை நாட்டையுடையாய்! போர்முனைமேல் உழுதலைச் செய்யும் கொலைத்தொழிலில் வல்ல மூவிலைச்சூலத்தை ஏந்திய சிற்றம்பல நாதரை எண்ணாதவர்களைப் போல, வருந்துகின்ற - உலைத்தொழிலில் அமைந்த வேலைப்போலும் கூரிய கண்ணையுடைய தலைவிக்கு நினதருளின் பங்கு யாதோ? இவளது ஆற்றாமைக்கு அது மருந்தன்று என்றவாறு.

இங்ஙனம் இடையிடையே வந்து கலந்தும், பெரும்பாலும் உலகியலில் ஒட்டி வாழ்ந்தும் இரண்டாட்டா நின்ற உன் நிலையைக்கண்டு சிவத்தலைவி பெரிதும் இரங்கி நின்மாட்டுக் கருணைகாட்டா நின்றாள். அவள் காட்டும் கருணைப் பெருக்கிற்கு நீ காட்டும் அருட்கூறு எத்துணைச் சிறியது; அது அவள் கருணைக்கு ஒருசிறிதும் ஈடாகாது; ஆதலால் வரைந்து என்றும் சிவச்சார்புடையவனாக நீ ஆகுக என்று திருவருள் வரைவுகடாயதாம் என்க.

இளமந்தி எழுங்குலை வாழையின் கனி தின்று செழுங்குலை வாழை நிழலில் துஞ்சும் சிலம்பா என்றது, பெண்குரங்கு காவற்காரர்க்கு அஞ்சாது வாழைக்கனி தின்று, இனியும் பழுக்கப்

போகும் செழுங்குலை வாழையின் நிழலிலே தூங்கி, இடையறாது இன்பம் நுகர்வதுபோலச் சிவமும் நீ வரைந்துகொள்வதால் பரையும் திரோதையும் போல்வாருடைய இடையீடின்றி என்றும் இன்பமார்ந்திருக்க வேண்டியது என்ற உள்ளுறை தோன்றத் திருவருள் உரைத்ததாம். (1)

## பெரும்பான்மை கூறி மறுத்தல்

### 'உயிர்ச் சிவப்பெருமை எடுத்து அருட்கு இயம்பியது'

*இங்ஙனம் வரைவுகடாவிய திருவருளுக்கு, உயிர் சிவம் வாழுமிடம் அரம்பையர் வாழும் வானகமோ? குறமகளிர் வாழும் குன்றோ? கூறுக என்று சிவத்தின் பெருமையைக்கூறி வரைவு மறுத்துரையா நிற்றல்.*

பரம்பயன் தன்னடி யேனுக்குப் பார்விசும் பூடுருவி
வரம்பயன் மாலறி யாத்தில்லை வானவன் வானகஞ்சேர்
அரம்பையர் தம்மிட மோவன்றி வேழத்தின் என்புநட்ட
குரம்பையர் தம்மிட மோவிடந் தோன்றுமிக் குன்றிடத்தே. 251

*பொ - ரை:* இம் மலையிடத்தே தோன்றும் இடம், எல்லாப் பொருட்கும் அப்பாலாயவனும், ஆயினும் தன்னடியானாகிய எனக்குப் பெறும் பயனாக எளிதிற் கிடைப்பவனும், விண்ணையும் மண்ணையுங்கடந்து விளங்குதலான தன்னளவைப் பிரமனும் திருமாலுமாகிய பெரிய தேவர்களாலும் அறியப்படாதவனும் ஆகிய தில்லையின்கண் எழுந்தருளியுள்ள தேவதேவனது வானகத்தைச் சேர்ந்த தெய்வ மகளிரது இடமோ? அன்றி, யானைத் தந்தங்களை வேலியாக நட்ட குடில்களையுடைய குறத்தியர் இடமோ? கூறுவாயாக என்றவாறு.

*இதன் கருத்து உயிர் இடம் வினாதல் வாயிலாகச் சிவத்தின் பெருமை கூறி வரைந்துகொள்ள முடியாத அருமையை அறிவித்ததாம்.* (2)

## உள்ளதுகூறி வரைவுகடாதல்

### 'இன்பத்துக்கு இடம் இயல்பு அருள் உயிர்க்கு இயம்பியது'

*திருவருள், யாம் வாழுமிடமும் மலையே; எம்மைப் பெற்றவர்கள் குறவரும் கொடிச்சியுமே; யாங்களும் புனங் காப்பேம் சிலரே; நீ வரைவு வேண்டாமையான் எம்மைப் புனைந் துரைக்க வேண்டா என இடமும் இயல்புங்கூறி வரைவுகடாயது.*

சிறர்கவண் வாய்த்த மணியிற் சிதைபெருந் தேனிழுமென்
றிறால்கழி வுற்றெஞ் சிறுகுடி லுந்தும் இடமிதெந்தை
உறாவரை யுற்றார் குறவர்பெற் றாளுங் கொடிச்சியும்பர்
பெறாவருள் அம்பல வன்மலைக் காத்தும் பெரும்புனமே. 252

பொ - ரை: சிறுவர்களது கவணில் வைத்தடித்த மணியால் சிதைந்த பெருந்தேன் இழுமென்னோசையோடு தேனடையிலிருந்து நீங்கி எமது சிறு குடிலைத் தள்ளுமிடமாகிய இவ்விடம், எம் தந்தையது முற்றூட்டு; எமக்கு உற்றார் குறவர்கள்; பெற்றாளும் கொடிச்சியே; யாமும் தேவர்களுக்கும் அடைய முடியாத அருளையுடைய அம்பலவாணப் பெருமானது மலைக்கண் பெரும்புனத்தைக் காவல் புரிவேம்; நீவிர் வரைவு வேண்டாமையான் புனைந்துரைக்க வேண்டா என்றவாறு.

தேவர்கட்கு அரிய அம்பலவாணர் அருள் எமக்கு எளிமையானது போல, விண்ணகமாதாய் நீர் கூறிய சிலம் உமக்கு எளிமையாம் இடமும் சூழலும் உடையது. ஆதலால் தீயைச் சார்ந்தவழி உருகும் மெழுகுபோலாது என்றும் இடையறாதொழுகும் எண்ணெய் ஊற்றுப்போல, சிவச்சார்பு பெற்று இடையறாப் பேரின்பு நுகர வரைந்துகொள் எனக் கடாயவாறு. (3)

## ஏதங்கூறி இரவரவு விலக்கல்

### 'இன்புருக் காண்டற்கு இரவிலை என்றது'

இரவு என்பது சுத்த கேவலநிலை. அஃதாவது தன்னைச் சார்ந்த பலவேறு வகைப்பட்ட வன்னங்களையே தன்மாட்டுக் காட்டும் இயல்புடைய பளிங்குபோல ஆன்மா, தன்னைச் சார்ந்த இந்திரியங்களின் இயல்பையே தன்மாட்டு விளக்குவதாகிய தனது சார்ந்ததன் வண்ணமாந் தன்மையை முன்னர் சிந்தித் துணர்ந்து கொண்டு, பின்னர் பலவேறுவகைப்பட்ட பொது வியல்பைச் செய்யும் இந்திரியங்களைத் தனக்கு வேறாகக்கண்டு, அவற்றான் ஆகிய பொதுவியல்பு பொதுவியல்பே யாம் எனத் தனது சிறப்பியல்பை உணருமாயின் அது பரம்பொருளாகிய சிவத்திற்கு அடிமையாய், அப் பரம்பொருளியல்பு தன்மாட்டு விளங்கச் செய்யும்; அப்போது முன் விளங்கிய பொதுவியல்பு தனக்கு வேறாய் ஒழியும். இந் நிலையே கேவலம் என்பது.

கருவிகள் தத்தம் தொழிற்பாட்டின் மடங்காது நிற்புழி அவற்றது இயல்பைக் குருவாய் வந்து உணர்த்த உணர்ந்துதான் அவற்றைவிட்டு நீங்கியவழிச் சுத்தமாதல் கூடும். அப்போது உயிர் எய்தும்நிலை சுத்த கேவலமாம். அந் நிலை எய்துதல் எளிதன்று. அவ்வநுபவநிலை எய்துதற்கு இடையில் நேரும் இடையூறுகள் பல. அவற்றை வென்று சுத்த கேவலத்தில் இன்பைக்காண்டல் எளிதன்று எனத் திருவருள் உயிர்க்குணர்த்தி என்றும் சிவச்சார்பு எய்தலாகிய வரை வினைப்புரிக எனக் கடாவுதல்.

**கடந்தொறும் வாரண வல்சியின் நாடிப்பல் சீயங்கங்குல்**
**இடந்தொறும் பார்க்கும் இயவொரு நீயெழில் வேலின்வந்தால்**

படந்தொறுந் தீயர வன்னம் பலம்பணி யாரினெம்மைக்
தொடர்ந்தொறுந் துன்பெண்ப தேயன்ப நின்னருள் தோன்றுவதே.
(253)

*பொ - ரை:* பல சிங்கங்கள், யானையாகிய உணவைத்தேடி, இரவில் காடுகடோறும், காட்டினிடங்கடோறும் சென்று பார்க்கும் வழியின்கண், தனியையாகிய நீ வேல் துணையாக வந்தால், அன்பனே! நினது அருள், படந்தோறும் வெளிப்படும் தீயையுடைய அரவுகளையணிந்த அம்பலவாணப் பெருமானுடைய அம்பலத்தைப் பணியாதாரைப்போல எம்மை விடாதே தொடர்ந்து ஒறுக்கும் துன்பம் என்றே தோன்றுவது. எ - று.

*நினக்கு வரும் ஏதங்கருதி, சுத்தகேவலத்துச் செய்யுந்தலையளி எமக்குத் துன்பமாகவே தோன்றா நின்றது; அதனால் என்றும் உடனுறைதலாகிய இடையூறில்லாத சுத்த கேவலத்துப் பேரின் பந்துய்க்க என்று திருவருள் உணர்த்தியதாம்.* (4)

## பழிவரவுரைத்துப் பகல்வரவு விலக்கல்

### 'இன்புருக்கு ஒளி வேறு; இலை என்றது'

*திருவருள் சுத்தகேவலத்து வாரற்க என்றது வருக என்றதாம் என உட்கொண்டு உயிர் சுத்த சகலமாகிய பகற்கண்சென்று நிற்பத் திருவருள் எதிர்ப்பட்டு இதனால் பழி எழும்; பலர் நகையாடுவர்; அதனால் சகல நிலையில் நனவில் வாரற்க என விலக்கா நின்றது. இன் புருக்கு ஒளிவேறு. இன்புருவாகிய சிவத்தை உயிராகிய நீ எய்துதற்கு உரிய ஒளி இப் பகற்போதன்று; ஞானவிளக்கமாம்; இலை-இஃதில்லையாம் என்றது எனப் பதப் பொருள் காண்க. பகற்குறி - சகலநிலை. ஆன்மா புருவத்தானத்து எல்லாக்கருவிகரணங்களும் காரியப்பட ஆட்சி செய்யும் நனவுநிலை. அதில் ஆன்ம அறிவு பொறிச்சார்பான் காரியப் படுமாயினும் அவ்வறிவான் விளைவது பழியாம். ஆதலால் உண்மைஞானமாகிய சுத்தநிலையான் எய்துதற்குரிய சிவத்தைச் சுத்தாகலத்தால் எய்த இயலாது என விலக்கியவாறாம்.*

களிறுற்ற செல்லல் களைவயிற் பெண்மரங் கைஞ்ஞெமிர்த்துப்
பிளிறுற்ற வானப் பெருவரை நாட பெடை நடையோ
டொளிறுற்ற மேனியன் சிற்றம் பலநெஞ் சுறாதவர்போல்
வெளிறுற்ற வான்பழி யாம்பகல் நீசெய்யும் மெய்யருளே. 254

*பொ - ரை:* வழுக்குப் பாறையின்கண் அகப்பட்டுக் களிற்றி யானையுற்ற துன்பத்தைப் பிடி தீர்க்கின்றவிடத்து, மரத்தைக் கையான் முறித்து பிளிறுதலையுற்ற வானத்தைத் தோயும் பெரிய

மலைகளையுடைய நாடனே! அன்னப்பெடையின் நடை பொன்ற நடையையுடைய உமாதேவியாரொடு கூடி விளங்கும் திருமேனியையுடையவனாகிய கூத்தப்பெருமானது சிற்றம் பலத்தை நெஞ்சாலும் நினையாதாரைப்போல யாம் வருந்த வெளிப்பட்ட பழி பெரிதாகா நின்றது; நீ பகற்கண்வந்து எமக்குச் செய்யும் உண்மையான அருள் என்றவாறு.

நீ சுத்தசகலத்து வந்துசெய்யும் தலையளி அலராய்ப் பலரானும் அறியப்பட்டதாயிற்று; ஆதலால் வரைதலாகிய சுத்தத்தே என்றும் எய்த முயல்க என்றவாறாம். (5)

## தொழுது இரந்துகூறல்

### 'இன்புக்கு இருள் இலை ஏகாய் என்றது'

திருவருள், யாம் சுத்தசகலமாகிய பகற்கண் வாரற்க என்றமையான். சுத்த கேவலமாகிய இரவின்கண் உயிர் சிவத்தைச் சாரமுயலும் என உட்கொண்டு, இன்பச்சிவத்தை எய்துதற்கு இருளும் தகாததாம்; உன்னைத் தொழுது வேண்டிக்கொள்கிறேன்; இவ்விடத்தைவிட்டு அகன்றுபோ என்றது. வரைவு தோன்றத் தலைவனை இரந்தது என்க. இன்புக்கு இருள் மலத்தேகா யினியென, உயிருக்கு இரங்கி அருள் உரைத்தலாகும் என்பது வியாக்கியானம்.

கழிகட் டலைமலை வோன்புலி யூர்கரு தாதவர்போல்
குழிகட் களிறு வெரீஇயரி யாளி குழீஇவழங்காக்
கழிகட் டிரவின் வரல்கழல் கைதொழு தேயிரந்தேன்
பொழிகட் புயலின் மயிலிற் றுவளும் இவள்பொருட்டே. 255

பொ - ரை: பொழிகின்ற கண்ணிற் புனலையுடையதோர் மயில்போல் துவளும் இவள்பொருட்டு, சிங்கத்திற்கும் யாளிக்கும், கழிந்த கண்ணையுடைய தலைகளானியன்ற மாலையைச் சூடும் இறைவனது புலியூரைக் கருதாதார்போல அஞ்சிக் குழிந்த கண்களையுடைய களிற்றி யானைகள், ஓரிடத்தே திரண்டுநின்று, அவ்விடம்விட்டுப் பெயராத மிக்க அச்சத்தையுடைய இராப் பொழுதின்கண் வாராதொழிவாயாக; நின் திருவடிகளைக் கையாற்றொழுது இரந்தேன் என்றவாறு.

இதனால் இன்புருவச் சிவத்தை நீ எய்துதற்கு இருள் ஏற்றதன்று; ஆகையால் இருளைத் துணைக்கொண்டு நீ இரவின்கண் வாரற்க என வரைவு கடாயவாறு காண்க. இருள் - அறியாமையைத் தரும் மூலமலம். (6)

## தாயறிவு கூறல்

**'பரையின் பண்பை உயிர்க்கு அறிவிக்க**
**இன்புடன் திருவருள் இசைத்ததாகும்'**

*திருவருள் இருள்துணைக்கொண்டு வரலாகாதென உயிர்க்கு அறிவிக்கவும் அது பின்னும் குறியிடைச்சென்று நிற்ப, அக்குறிப் பறிந்து திருவருள், நேற்று அரையிருள் யாமத்து நம் சூழலின்கண் ஒரு தேர்வந்து சென்றது அன்னையாகிய பரை கண்சிவந்து என்னை உறுத்து நோக்கினாள் என இன்பச் சிவத்திற்குக் கூறித் தலைவற்கு வரைவுதோன்றத் தாயறிந்தமை கூறலாம்.*

*திருச்கோவையார் உண்மையின் பழைய பதிப்புக்கொளு 'திரோதையும் திரும்பலாம் என்றது' என்றுள்ளது. திரோதை - செவிலி. இது உடன்போக்கில் தலைவியை நாடிச்சென்ற செவிலி திரும்பலாம் என்ற கருத்தினது. உடன் போக்க நிகழாவழியே வரைவுமுடுக்கம் நிகழ்வதாகலின் அது பொருந்தாது என மறுக்க. இது ஏடுபெயர்த்தெழுதுவோராலோ அன்றி ஏட்டின் சிதைவினாலோ நிகழ்ந்த மாற்றமாதல் வேண்டும்.*

**விண்ணுஞ் செலவறி யாவெறி யார்கழல் வீழ்சடைத்தீ**
**வண்ணன் சிவன்றில்லை மல்லெழிற் கானல் அரையிரவின்**
**அண்ணல் மணிநெடுந் தேர்வந்த துண்டாம் எனச்சிறிது**
**கண்ணுஞ் சிவந்தன்னை யென்னையும் நோக்கினள் கார்மயிலே.256**

*பொ - ரை: கார்காலத்து மயிலையொப்பாய்! விண்ணவர் களானும் சென்றறியவொண்ணாத நறுமணங் கமழும் கழலினையும் தாழ்ந்த சடையினையும் உடைய தீவண்ணனாகிய சிவபெருமானது தில்லையில் வளவிய அழகிய கானலினிடத்து அரையிருள் யாமத்து மணிகள் கட்டிய தலையாயதொரு நெடுந்தேர் வந்ததுண்டா என அன்னை சிறிது கண்சிவந்து என்னையும் பார்த்தனள்; இருந்தவாற்றான் இவ்வொழுக்கத்தை அவள் அறிந்தனள்போலும் என்றவாறு.*

*விண்ணவர் - பசுபுண்ணியச் சிறப்பான் மாயேயமான சுவர்க்காதி இன்பங்களை வினைப்போகம் உள்ளவரை துய்க்கும் சகலான்மக்கள். அவர்களும் நம்போல மலமறைப்புடையவர்களே. ஆயினும் வினைபரிபாகம் உண்டாம். சிவஞானப்பேறு இல்லாதவர்கள் ஆதலால் அவர்கள் சிவனடியைச் சென்று பற்றும் திருவருள் வாய்ப்பிழந்தவர்கள்.*

*அங்ஙனம் விண்ணோர்களும் சென்று அறிய முடியாவாயினும் மெய்ஞ்ஞானியர் இட்ட நறுமலரான் மணங்கமழுந்தன்மைய வாக அவர்கட்கு அணியன சிவன்கழல் என்பார் 'வெறியார் கழல்' என்றார். (7)*

## மந்திமேல் வைத்து வரைவுகடாதல்

### 'பெற்றோர் பேறெடுத்து அருள் பெருங்கருணை உரைத்தது'

இங்ஙனம் தாய் அறிந்தமை வாயிலாக வரைவுகடாய திருவருள் மீட்டும், ஒருகடுவன் தன் மந்திக்கு மாங்கனியைத் தேனில் தோய்த்துக்கொடுத்து நுகர்வித்தது, இதனைக்கண்ட என் தோழியாகிய சிவம் இந் நிலை எமக்கு நேர்ந்திலதே என நினைந்து ஆற்றாதாயிற்று என மந்திமேல்வைத்து வருத்தங்கூறி வரைவுகடாயது. பெற்றோர் - கணவன் ஊட்டக் காதலி நுகரும் இன்பம் பெற்றோர், பேறு - அவர்கள் பெற்ற இன்பம். அதனை எடுத்துத் திருவருள் உயிரின்மீது வைத்த பெருங்கருணையால் உரைத்தது என்று பதப்பொருள் கொள்க.

பரையின் பண்பை உயிர்க்கு அறிவிக்க இன்புடன்தானே இசைத்தலாகும் என்பது வியாக்கியானம். இதன்கருத்து, தாய் அறிந்தமையை உயிர்த்தலைவற்கு உணர்த்த அவன் சிறைப் புறமாக நிற்க, இன்பமாகிய தலைவியுடன் திருவருளாகிய தான் கூறியது என்பது.

வான்றோய் பொழிலெழில் மாங்கனி மந்தியின் வாய்க்கடுவன்
தேன்றோய்த் தருத்தி மகிழ்வகண் டாடிரு நீண்முடிமேல்
மீன்றோய் புனற்பெண்ணை வைத்துடை யாளையும் மேனிவைத்தான்
வான்றோய் மதிற்றில்லை மாநகர் போலும் வரிவளையே. 257

பொ - ரை: நீண்ட திருமுடியின்மேல் மீன்கள் பொருந்திய புனலாகிய பெண்ணைவைத்து, எல்லாவற்றையும் உடையாளாகிய பராசக்தியையும் தன்மேனியில் ஒருகூறாக வைத்த கூத்தப்பெருமானது வானைத்தோயும் மதில்களையுடைய தில்லையாகிய பெரிய நகரத்தையொக்கும் வரிகளைப் பொருந்திய வளையல்களையணிந்த தலைவி, வானையளாவும் பொழிலின்கண் உண்டாய மாங்கனியொன்றை ஆண்குரங்கு தேனில் தோய்த்துப் பெண் குரங்கின் வாயிற்கொடுத்து நுகர்வித்து அலை இன்புறுவதைக் கண்டாள் என்றவாறு.

அங்ஙனங்கண்டவள் எமக்கும் இப் பேறு கிட்டிற்றிலதே என்று வருந்தினாள் என்பதும்.

## காவல்மேல் வைத்துக் கண்துயிலாமை கூறல்

### 'உயிர்க்கு இன்பு இடையூறு உண்டென்று இயம்பியது'

மந்தியின் இன்ப முதிர்வுகண்டு வருந்தியதைக்கேட்ட உயிர்த் தலைவன், இங்ஙனம் சிவம் ஊட்ட நாம் உண்ணும் பெரும் பேற்றை யாமும் இழந்திருக்கிறேமே என்று மிக வருந்தி இரவுக் குறிக்கண் சென்று நிற்ப, அந் நிலைமைக்கண் இவ்விடத்துள்ளார்

இவள் காவற்பறை கேட்குந்தொறும் கண் துயிலாதிருப்பது என்னோ எனத் தம்முட் கூறுவர் எனத் திருவருள் கூறாநிற்றல்.

**நறைக்கண் மலிகொன்றை யோனின்று நாடக மாடுதில்லைச்**
**சிறைக்கண் மலிபுனற் சீர்நகர் காக்குஞ்செவ் வேலிளைஞர்**
**பறைக்கண் படும்படுந் தோறும் படாமுலைப் பைந்தொடியாள்**
**கறைக்கண் மலிகதிர் வேற்கண் படாது கலங்கினவே. 258**

பொ - ரை: நறுமணம்பொருந்திய தேன்மலிந்த கொன்றை மலரை அணிந்த கூத்தப்பெருமான் நின்று நடம்புரியும் தில்லையாகிய சிறையில், அது தாங்காது மிகும் புனலையுடைய சீரியநகரை இரவிற்காக்கும் சிவந்த வேலையுடைய இளைஞரது பறைக்கண் ஒலிக்குந்தோறும், தாழாத முலையினையுடைய தலைவியின் கறைமலிந்த ஒளியோடுகூடிய வேல்போலுங் கண்கள் உறங்காவாய்க் கலங்கின என்றவாறு.

காவலர் பறை முழக்குந்தோறும், நம் கலப்பிற்கு இடையீடாயிற்றே எனச் சிவத்தலைவி கண் கலங்கினாள் என்பதாம். இதனால் அவளாற்றாமையுங் கூறி வரைவுகடாவப் பெற்றதாம்.

தில்லை ஞானகாயமாதலின் அங்கு என்றும் நிலைபெற்று நின்று ஐந்தொழிற் கூத்தைப் புரிபவன் என்பார் 'கொன்றை யோன் நின்று நாடகம் ஆடுந்தில்லை' என்றார். சிறை - மதகு. (9)

## பகல் உடம்பட்டாள்போன்று இரவரவு விலக்கல்

### 'சகலம் உடம்பட்டுக் கேவலம் ஒரீஇயது'

சகலநிலையில் கருவி கரணங்கள் எல்லாவற்றொடும் ஆன்மா வினைசெய்யும் நனவில் உயிர் வர ஒத்துக்கொண்டு சில கருவிகரணங்கள்மட்டும் தொழிற்படும் கேவல நிலையில் உயிர் இரவுக்குறிக்கண் வருதலை நீக்கியது.

**கலரா யினர்நினை யார்தில்லை யம்பலத் தான்கழற்கன்**
**பிலரா யினர்வினை போலிருள் தூங்கி முழங்கிமின்னிப்**
**புலரா இரவும் பொழியா மழையும்புண் ணின்னுழைவேல்**
**மலரா வருமருந் தும்மில்லை யோநும் வரையிடத்தே. 259**

பொ - ரை: கீழ்மக்களாயுள்ளார் நினையாத தில்லை அம்பலவாணப் பெருமானுடைய திருவடிகளே நமக்குப் புகலிடம் என்று உறுதிபூண்டு அன்பு செய்யாதாரின் வினைபோல இருள் செறிந்து புலராத இரவும், மின்னியும் இடித்தும் பெய்யும் மழையும் எமக்குப் புண்ணில் நுழையும் வேல் மலராம்வண்ணம் தீயனவாய் வாராநின்றன; நும் மலையில் இதற்கு ஒரு மருந்தும் இல்லையோ? என்றவாறு.

புண்ணில் வேல் நுழைந்தாற்போல எமக்கு, நீ இரவில் வருதல் பெருந்துன்பம் தருவதாயிருந்தது; இதற்கு வேறு மருந்து இல்லையோ நும் வரையிடத்து என்றதால் வரையவேண்டும் என்பதாம்.

சகலம்: கேவலத்திற் கட்டுண்டு கிடக்கும் உயிர்கட்கு அறிவு விளங்கும்பொருட்டு மூலாதாரத்திலேயிருக்கிற பராசத்தி திரோதையாய், தன்னிடத்துண்டான இச்சா ஞானக் கிரியைகளாம். அவற்றுள் ஞானசக்தி சிவதத்துவங்களையும், சிவதத்துவம் சத்தி தத்துவத்தையும் எழுப்ப, அவை சூக்குமையைக் காரியப்படுத்த, சத்தி தத்துவம் கால நியதி கலைகளை எழுப்ப ஆன்மா இவ் வடிவாய்த் துரியத்தில்வந்து பிராண வாயுவுடன் கூடிச் சுழுத்தியில்வந்தவுடன் ஞானசத்தி தானே சுத்த வித்தையை எழுப்ப, அது வித்தைகளை எழுப்ப, அப்போது பஞ்ச கஞ்சுக வடிவான புருட தத்துவம் உருவாகும்; பின்னர் தொண்ணூற்றாறு தத்துவங்களையும் பொருந்தி ஆன்மா வினைகளைச் செய்து சனன மரணப்படுவதான நிலையாம்.

கேவலநிலை மலத்தொடுகூடித் துணையான தத்துவங் களோடு கூடாது உலண்டு போல ஆன்மா செயலற்றுக் கட்டுண்டு கிடக்கும் நிலையாம். கேவலம் - அறியாமை. இரவு மக்கள் வழக்கற்றுச் செயல்மடங்கிக் கிடக்கும் காலமாதலின் இரவுக்குறி கேவலநிலை எனப்பட்டது. (10)

## இரவுடன்பட்டாள் போன்று பகல்வரவு விலக்கல்

### 'கேவலம்போற் சகலம் என்று அருள் இயம்பியது'

திருவருள் கேவலநிலை நுகர்ச்சிக்கு உரியதன்றாகலின் சிவம் அதனை விரும்பிற்றிலது என உயிர் உட்கொண்டு சகலநிலையில் வந்து நிற்ப, திருவருள் எதிர்ப்பட்டு அதுவும் சிவத்திற்கு அலராயிற்று என்று சகலநிலையில் கலத்தற்கு ஒப்பாது கேவல நிலையிலேயே கிடக்க என சகலத்தில் வருதலை விலக்கா நிற்றல்.

இறவரை யும்பர்க் கடவுட் பராய்நின் றெழிலியுன்னிக்
குறவரை யார்க்குங் குளிர்வரை நாட கொழும்பவள
நிறவரை மேனியன் சிற்றம் பலநெஞ் சுறாதவர்போல்
உறவரை மேகலை யாட்கல ராம்பகல் உன்னருளே. 260

பொ - ரை: மேகம் தொடர்ந்து பெய்யாததால், பெய்தலை எண்ணி மலைமேலுறையும் தெய்வங்களைப் பராவிக் குறவர்கள் நின்று ஆரவாரம் செய்யும் குளிர்ந்த வரைமேல் உண்டாகிய நாட்டையுடையவனே! செழுமையான பவளத்தின் நிறம் போலும் நிறமுடைய திருமேனியைப் பொருந்திய சிற்றம்பல நாதனுடைய திருவடியை நினையாதாரைப்போல வருந்த

அரையில் மேகலையணிந்த தலைவிக்கு நின் பகல்வரவாகிய அருள்மிக்க அலராகா நின்றது; அதனால் வாரற்க என்றவாறு.

கேவலத்திலே நின்று கலக்க, சகலம் பேரலராகின்றது என்று திருவருள் கேவல நிலையை மீட்டும் வற்புறுத்தியவாறு. (11)

## இரவும் பகலும் வரவுவிலக்கல்

### 'கேவல சகலமும் மேவிலை என்றது'

திருவருள், சிவக்கலப்பை நாடிப் பரிபாகமுற்றுத் தவிக்கும் உயிரைநோக்கி, நீ கேவல நிலையை வந்தால் நுகர்ச்சியில்லை; சகலத்திலோ அலராகின்றது; ஆதலால் இரண்டிலும் வாரற்க; சுத்தநிலையாகிய வரைவே ஏற்றது எனக் குறிப்பியா நிற்றல்.

சுழியா வருபெரு நீர்சென்னி வைத்தென்னைத் தன்றொழும்பிற்
கழியா அருள்வைத்த சிற்றம் பலவன் கரந்தருமான்
விழியா வரும்புரி மென்குழ லாடிறத் தையமெய்யே
பழியாம் பகல்வரின் நீயிர வேதும் பயனில்லையே. 261

பொ - ரை: சுழித்துக்கொண்டு வரும் மிக்கநீராகிய கங்கையைத் தம் சடைக்கண் வைத்து அடியேனைத் தன் தொண்டில் நீங்காமலிருத்தி அருள்செய்த சிற்றம்பலவனது கையின்கண்ணதாகிய மானைப்போல விழிக்கும் சுருண்ட மெல்லிய கூந்தலையுடைய தலைவி, ஐயனே! நீ பகல்வரின் அலராம்; இரவுவரின் நின்னை எதிர்ப்படுதல் அருமை; ஆதலால் இருபோதும் வாரற்க என்றவாறு.

கேவல சகலங்களில் வாரற்க எனவே சுத்தநிலையில் தோய்க; சிவத்தொடு அனவரதமும் பொருந்திப் பேரின் பெய்தலாம் என்றது. (12)

## காலங்கூறி வரைவுகடாதல்

### 'பக்குவம் ஈது எனப்பரிந்து அருள் இயம்பியது'

திருவருள், உயிரைநோக்கி மதி நிரம்பாநின்றது; வேங்கை பூத்தன; இதுவே சுத்தமாகிய வரைவொடு வருதற்குரிய காலமென வரைவுகடாவா நிற்றல்.

மையார் கதலி வனத்து வருக்கைப் பழம்விழுதேன்
எய்யாத இன்றிள மந்திகள் சோரும் இரும்சிலம்பா
மெய்யா அரியதென் அம்பலத் தான்மதி யூர்கொள்வெற்பின்
மொய்யார் வளரிள வேங்கைபொன் மாலையின் முன்னினவே. 262

பொ - ரை: கரிய வாழைக்காட்டில், வருக்கைப் பலாப்பழம் வீழ்தலாலுண்டான தேனை, இளமந்திகள் அறியாமல் உண்டு,

மயங்கிக்கிடக்கும் பெரிய மலை நாட்டையுடையவனே! மதி நிரம்பா நின்றது; அம்பலவாணப் பெருமானது மலையிலே செறிந்து வளர்ந்த இளவேங்கை மரங்கள் பொன்மாலைபோலப் பூத்துத் தோன்றின; இனி உண்மையாக, உனக்கு அரியது யாது? என்றவாறு.

மந்தி கனியாற் களித்தலைப் போல நீயும் வரைவால் கலந்து தற்போதமழிந்து சிவபோதமிக்கு விளங்குதல் வேண்டும் எனக் குறிப்பித்தவாறு. மதி நிரம்புதல் - அநுபவம் முதிர்தல். வேங்கை பூத்தல் - சிவமணங் கமழப் பெறுதல். (13)

## கூறுவிக்குற்றல்

### 'சிவத்தில் உயிரின்பு ஆர்வதன்றி ஆகாதென்றே அருள் இயம்பியது'

உயிர் சுத்த துரியநிலையாகிய வரைவுபுரிந்து சிவத்தில் பிரியாதே கூடாதே வேறற்றுநின்று இன்புநுகர்வதையின்றி இங்ஙனம் கேவல சகலங்களிற்றிரிதல் ஆகாது என்று அறிந்து கொள்ளாமலிருப்பதால், சிவமாகிய நீயாவது 'சென்று கூறு என்ற குறிப்புத்தோன்ற உயிர் உடம்படாமையைத் திருவருள் சிவத்திற்குத் தெரிவித்தல்.

**தேமாம் பொழிற்றில்லைச் சிற்றம் பலத்துவிண் ணோர்வணங்க**
**நாமா தரிக்க நடம்பயில் வோனைநண் ணாதவரின்**
**வாமாண் கலைசெல்ல நின்றார் கிடந்தநம் அல்லல்கண்டால்**
**தாமா அறிகில ராயினென் னாஞ்சொல்லுந் தன்மைகளே.** 263

பொ - ரை: தேமா மரங்கள் நிறைந்த பொழிலையுடைய தில்லைச்சிற்றம்பலத்தின்கண் தேவர்கள் வந்து வணங்கவும் நாம் விரும்பவும் பரமானந்த நடனம்புரியும் நடராசப் பெருமானை இடைவிடாது எண்ணாதாரைப் போல வருந்த, அழகு மாட்சிமைப்பட்ட மேகலை கழலும்வண்ணம் கண்டு தலையளி செய்யாது நின்றவர் பெருகிக்கிடந்த நம் துன்பத்தைக்கண்டால் தாமாக அறிந்துகொள்ளும் இயல்பிலராயின், நாம் சொல்லும் இயல்புகள் என்னவோ? என்றவாறு.

பேரின்பத்தைச் சுத்த துரிய நிலையிற்றோய்ந்து நுகரவேண்டிய உயிர் கேவல சகலங்களிற் சுழன்று இடையிட்டு இன்பத்தை நுகரின் அதனால் எத்துணைத் துன்பங்கள் விளைகின்றன; இதனைத் தானாக அறிந்துகொள்ள முடியாதபோது நாமாக உணர்த்தி என்ன பயன் எனத் திருவருள் உணர்த்தியவாறு. தானாகக் கனியாததனைத் தடி கொண்டடித்தா பழுக்கவைப்பது என்றாளாம். (14)

## செலவு நினைந்து உரைத்தல்

### 'அருளாற் சிவம் உயிர்க்கு அன்பறிவித்தல்'

*இங்ஙனம் சகல கேவலத்துழலும் உயிர்க்கு, சுத்தநுரியத்தில் பிரியாதே விளங்கும் நிலையினையும் அதனால் விளையும் பயனாகிய பேரின்பத்தையும் உபாயத்தையும் உயிரின்மீது வைத்த கருணையால் சிவம் திருவருளைக்கொண்டு உணர்த்தா நிற்றல்.*

**வல்சியின் எண்கு வளர்புற் றகழமல் கும்மிருள்வாய்ச்**
**செல்வரி தன்றுமன் சிற்றம் பலவரைச் சேரலர்போல்**
**கொல்கரி சீயம் குறுகா வகைபிடி தானிடைச்செல்**
**கல்லதர் என்வந்தா வாறென்ப வர்ப்பெறின் கார்மயிலே.** 264

*பொ - ரை: கார்காலத்து மயிலையொப்பாய்! திருச்சிற்றம் பல நாதரைச் சிந்தியாதார்போலச் சிங்கம் யானையைக் கொல்லாதவண்ணம் பெண் யானை இரண்டு குன்றுகளுக்கு இடையே சென்று புகும் கல்லதரின்கண், நீர் வந்தது எங்ஙனம் என்று வினவுவாரைப்பெற்றால், குரும்பியை உண்பதற்காகக் கரடி உயர்ந்தபுற்றை அகழும் மிக்க இருளில், அவரிருக்குமிடம் தேடிச் செல்லுதல் அரிதன்று; அங்ஙனம் வருந்திச் செல்வே மாயின் அவ்வாறு பரிந்து கேட்பார் இல்லையே என்றவாறு.*

*தம் கருணை தாமே அரிய வழியில் வலியச் செல்வதாக இருந்தும், அதனைப் பாராட்டி இந்த நேரத்தில் இத்தகைய வழியில் எங்ஙனம் வந்தீர் என்று வினவுவார் இல்லையே; வினவுவார் உளராயின் இவ் வழியருமை தோன்றாதே என்று சிவம் உயிருக்குத் தம் கருணைமிகுதியைத் திருவருளைக் கொண்டு விளக்கியவாறு. (15)*

## பொலிவழிவுரைத்து வரைவுகடாதல்

### 'இன்னும் கருணை கண்டிலையோ என்றது'

*தலைவ! சிவத்திற்கு உன்மீதுள்ள எல்லைகாண்பரிய கருணையை இன்னமும் கண்டிலையோ என்று வினாவுதல் வாயிலாகத் திருவருள் வரைவுகடாயது.*

**வாரிக் களிற்றின் மருப்புகு முத்தம் வரைமகளிர்**
**வேரிக் களிக்கும் விழுமலை நாட விரிதிரையின்**
**நாரிக் களிக்கமர் நன்மாச் சடைமுடி நம்பர்தில்லை**
**ஏரிக் களிக்கரு மஞ்ஞையிந் நீர்மையென் எய்துவதே.** 265

*பொ - ரை: யானைகளின் கொம்புகளிலிருந்து முதிர்ந்த முத்துக்களைக் குறத்தியர் கள்ளுக்கு விலையாக முகந்துகொடுக்கும் சிறந்த மலைநாட்டை உடையவனே! பரந்த அலைகளையுடைய*

கங்கையாகிய பெண்ணுக்கு அளிப்பதற்குப் பொருந்திய சடை முடியையுடைய நம்பரது தில்லையின் உள்ளாகிய அழகிய இந்தக் களிப்போடுகூடிய கரிய மயிலை ஒப்பாள் தன் தன்மைகெட்டு இத் தன்மை எய்துவது என்னோ? நீயே உரை என்றவாறு.

சிவம் தம் நிலையிற்றாழ்ந்து திரோதையும் பரையும் முதலான காவலையுங் கடந்து உன்மீது இரங்கி இங்கேவந்து நிற்கவும், நீ தலையளி செய்யாது இங்ஙனம் சகல கேவலங்களிற் சிக்கியுழல்வது என்னோ? விரைவில் சுத்த துரியமாகிய வரைவுபுரிக எனத் திருவருள் உணர்த்தியவாறு. (16)

## 18. வரைபொருட்பிரிதல்

**'வரைபொருட் பிரிதற் றுறை முப்பத்து**
**மூன்றும் கருணை தோன்ற அருளே**
**உணர்த்தலும் உணர்தலும் திரோதையும்**
**பரையும்**
**தெரிசன மாகித் திவ்விய இன்பங்**
**கூடுங் குறியும் குலவி உணர்தல்'**

அங்ஙனம் திருவருள் முன்னின்று உயிரை வரைந்துகொள் அதாவது சுத்த துரியத்து உலாவு என முடுக்கியவுடன், உயிர் அந் நிலையை அடைதற்குரிய அகச்சாதனம் புறச்சாதனங்களை முயன்று தேடாநிற்கும்; அதற்காகச் சிவத்தை விட்டுப் பிரியும்; அதனை அறிவிப்பது வரைவுக்குப் பொருள்தேடப் பிரிதலாகிய இப் பகுதி. இது முப்பத்து மூன்று கிளவிகளையுடையது.

### முலைவிலை கூறல்

**'கைம்மாறு இன்பக்கனத்துக்கு இல்லை என்றது'**

திருவருளால் வரைவு முடுக்கப்பெற்ற தலைமகன், யான் வரைவொடு வர நும் ஐயன்மார் முலைவிலை என்ன கேட்பர்? நீயே கேட்டுச்சொல் என, திருவருள் எல்லாவகையானும் நின்வரவை எமர் ஏற்றுக்கொளின் அல்லது விலை கூறு வாராயின் கைம்மாறாகக் கொடுக்கும் பொருள் எதுவும் எவ்வுலகத்தும் இல்லை எவ்வுலகமும் இல்லை என்றது.

**குறைவிற்கும் கல்விக்கும் செல்விற்கும் நின்குலத் திற்கும்வந்தோர்**
**நிறைவிற்கும் மேதகு நீதிக்கும் ஏற்பினல் லானிணையின்**
**இறைவிற் குலாவரை யேந்திவண் டில்லையன் ஏழ்பொழிலும்**
**உறைவிற் குலாநுத லாள்விலை யோமெய்ம்மை ஓதுநர்க்கே. 266**

பொ - ரை: குறையிரந்து நிற்கும் நின் குணத்திற்கும், கல்விக்கும், எம் இருமுதுகுரவர் தரும் செல்வத்திற்கும், வரைந்து கொள்ளும் நின் குலப்பெருமைக்கும், நீ பெண் பேசுதற்கு

அனுப்பிய தூதின் பெருமைக்கும், மேன்மைதக்க நீதிக்கும் ஆக வரைவினை ஏற்றுக்கொள்ளின் அல்லது நினைத்துப்பார்க்கின், எல்லாப்பொருட்கும் இறைவனும், விளங்கும் மேருமலையை வில்லாக ஏந்தி வளவிய, தில்லையில் உள்ளவனுமாகிய கூத்தப் பிரானது ஏழுலகத்தையும் தரினும், உண்மையை உரைப்பார்க்கு வில்போல வளைந்த நெற்றியையுடைய தலைவிக்கு விலையாமோ? ஆகாது என்றவாறு.

இதனால் இன்பகனமாய் விளங்கும் சிவத்திற்கு மாயேய மான ஏழு உலகம் தரினும் ஈடாகாது; ஆயினும் நின் குலப் பெருமை முதலியன கருதி எமர் வரைவுடம்படுவர் என ஏற்பித்தவாறாம். (1)

## வருமதுகூறி வரைவுடம்படுத்தல்

### 'அடியார்க்கு அலராகாது அணை இன்பு என்றது'

யாம் தொடுத்துக்கூறும் அருங்கலன்களை வரவிட்டு உடனே வரைந்துகொள்; அங்ஙனம் வரையாது நெடுநாள் களவின்கண் ஒழுகின் அதனால் வருங்கருப்பம் முதலான ஏதங்கள் அடியார்க்குப் பழிச்சொல்லாம்; அஃது உண்டாகாமல் இன்புருவச் சிவத்தை அணைவாயாக என்று திருவருள் கூறாநிற்றல்.

**வடுத்தன நீள்வகிர்க் கண்ணிவெண் ணித்தில வாணகைக்குத்**
**தொடுத்தன நீவிடுத் தெய்தத் துணியென்னைத் தன்றொழும்பிற்**
**படுத்தநன் னீள்கழல் ஈசர்சிற் றம்பலம் தாம்பணியார்க்**
**கடுத்தன தாம்வரிற் பொல்லா திரவினின் ஆரருளே.** 267

பொ - ரை: என்னைத் தன் அடியார் கூட்டத்துட்படுத்தி அடிமைகொள்ளும் நல்ல நீண்ட கழலையுடைய ஈசரது சிற்றம் பலத்தைப் பணியாதவர்க்கு வருந்தீங்குகள் வரக்கூடுமாயின் இரவின்கண் உண்டாகிய நின் தலையளி எமக்குப் பொல்லாததாம்; அதனால், வடுவன்ன நீண்ட கண்களை யுடையாளது தூய வெள்ளிய முத்துப்போலும் பற்களை யுடையாளுக்கு எம்மால் தொடுத்துக் கூறப்படும் பொருள்களை நீ அனுப்பி வரையத் துணிவாயாக என்றவாறு.

அலராதற்குரிய அணைவு பொல்லாங்காய் முடிவதற்குமுன் முலைவிலை கொடுத்துச் சுத்த துரியத்து இடைவிடாது சார்ந்து இன்பு எய்துக என வற்புறுத்தவாறாம். (2)

## வரைபொருட்பிரிவை உரையெனக் கூறல்

### 'யான் அன்பால் இன்பமாவுரை என்றது'

அங்ஙனமாயின் நீ கூறும்வண்ணம் பொருள்கொணர்ந்து வரைவேன்; அதுகாறும் யான் பிரிவேன் என்பதை அன்போடு

இன்பத்திடம் சொல்லுக என்று உயிர் திருவருளை வேண்டிக் கொண்டது.

குன்றங் கிடையுங் கடந்துமர் கூறும் நிதிகொணர்ந்து
மின்றங் கிடைநும்மை யும்வந்து மேவுவன் அம்பலஞ்சேர்
மன்றங் கிடைமரு தேகம்பம் வாஞ்சியம் அன்னபொன்னைச்
சென்றங் கிடைகொண்டு வாடா வகைசெப்பு தேமொழியே. 268

பொ - ரை: மின்போலும் இடையையுடையாய்! இனிக் குன்றங்கள் இடைக்கிடைக் கிடக்கும் சிறப்புக்களையுடைய சுரத்தைக் கடந்துபோய், நும்மவர் சொல்லும் நிதியங்களைக் கொணர்ந்து நும்மையும் வந்தடைவேன்; தேன்போலும் மொழியுடையாய்! அதுகாறும் நீ சென்று, அம்பலவாணப் பெருமான் தங்கிய இடைமருது ஏகம்பம் வாஞ்சியம் இத் தலங்களை ஒத்த பொன்னை இடைகொண்டு வாடா வண்ணம் தேறுதல் சொல்லுவாயாக என்றவாறு.

யான் பொருள்தேடி வருந்துணையும் நீ சிவத்தலைவியை ஆற்றியிருக்க என்று திருவருளை வேண்டியவாறு. (3)

## நீயே கூறு என்றல்

### 'அன்பால் இன்பு உறல் உனக்கு எளிது என்றது'

நீ இரவுவரினும் பகலின்கண் பிரிவாயென்பதை உட்கொண்டு கவலும் சிவத்திற்கு, காலந்தாழ்க்காது வருவேன் என்பதை முன்னதாக நின் பிரிவை நீயே அன்போடு உரைப்பாயாக; அங்ஙனம் கூறலே இன்புருவாகிய சிவத்தை எய்துதற்குரிய எளிய உபாயம் என்று திருவருள் உணர்த்தா நிற்றல்.

கேழே வரையுமில் லோன்புலி யூர்ப்பயில் கிள்ளையன்ன
யாழேர் மொழியாள் இரவரி னும்பகற் சேறியென்று
வாழே னெனவிருக் கும்வரிக் கண்ணியை நீவருட்டித்
தாழே னெனவிடைக் கட்சொல்லி யேகு தனிவள்ளலே. 269

பொ - ரை: ஒப்பற்ற வள்ளலே! தனக்குவமையாக எவருமில்லாத அம்பலவாணப் பெருமானது புலியூரின்கண் பயிலும் கிளியையொக்கும் யாழோசைபோலும் மொழியினை யுடையாள், நீ இரவின்கண் வரினும் பகலின்கண் பிரிந்து செல்லவை என்று பிரிவால் நொந்து உயிர்வாழேன் என்று நினைக்கும் செவ்வரி பரந்த கண்களையுடையாளை வசமாக்கிச் சமயம் அறிந்து காலந்தாழ்த்தேன் என்பதை முன்னிட்டு நின் பிரிவை நீயேசென்று உணர்த்துக என்றவாறு.

கேவல துரியமாகிய இரவுக்குறிக்கண் வரின் சகல சாக்கிரமாகிய பகற்குறியின் பிரியுமே என்றும், பகலின்கண்

*வரின் கேவலதுரியத்துப் பிரியுமே என்றும் உயிரின்மீதுள்ள எல்லையிலாக் கருணையால் இன்னற்படும் சிவம் உயிர்வாழேன் என்னும்; ஆதலால் உயிராகிய நீயேசென்று காலநீட்டாது அருகிவருவேன் என்பதால் நின் பிரிவை நீயேயுணர்த்துக என்று திருவருள் உணர்த்தியவாறு காண்க.*

*கிள்ளையன்ன மொழியாள், யாழேர் மொழியாள் என்றதில் கிள்ளைபோலத் தழுதழுத்த இனிய - கற்றதையே கழறும் தன்மை யுடைமைக்கும், யாழ் செவிக்கினிய ஓசையுடைமைக்குமாக உவமிக்கப்பெற்றன. கேழ் - ஒப்பு. கேழ் ஏவரையும் இல்லாதான் - தனக்கு உவமையில்லாதான்.* (4)

## சொல்லாது ஏகல்

### 'எக்காலும் பிரிவில்லை என்றது'

*யான் எவ்வாறு கூறினும் சிவத்தலைவி கருணைமிகுதியான் ஆற்றாளென உயிர் உட்கொண்டு, 'எமக்குள் என்றும் பிரிவில்லை; இருவேமுள்ளும் இருவேம் உறைவேம்; அங்ஙன மிருக்கப் பிரிவென்பதொன்று உண்டாயினன்றே உணர்த்திப் பிரிதல் வேண்டும்; அஃது இல்லையே' எனச் சிவத்தலைவியிடம் தெரிவியாமலே பிரிதல்.*

வருட்டிற் றிகைக்கும் வசிக்கிற் றுளங்கும் மனமகிழ்ந்து
தெருட்டிற் றெளியலள் செப்பும் வகையில்லை சீரருக்கன்
குருட்டிற் புகச்செற்ற கோன்புலி யூர்குறு கார்மனம்போ்ன்
றிருட்டிற் புரிகுழ லாட்கெங்ங னேசொல்லி ஏகுவனே. 270

*பொ - ரை: நுதலும் தோளும் தடவிக்கொடுத்து ஒன்று சொல்லக் குறிப்பேனாயின், இஃது என்கருதிச் செய்கின்றாரிவர் என்று மயங்காநிற்கும்; இனியனசொல்லி வசப்படுத்த எண்ணு வேனாயின் அக் குறிப்பறிந்து அவள் மனம் நடுங்குவள்; பிரிவுணர்த்தி விரைய வருவேன் தாழேன் எனத்தெளிப் பேனாயின் மனமகிழ்ந்து நான் சொல்வதைத் தெளியாள்; ஆகவே அவட்குச் செப்பும் வகையொன்றும் இல்லையாம்; எல்லாருக்கும் பொருள்விளக்கம் புரியும் பகன் என்னும் சூரியன் இருட்டிற் கிடந்து தவிக்கத் துன்புறுத்திய தலைவனது புலியூரை அடையாதார் மனம்போல இருண்ட சுருண்ட குழலையுடை யாட்குப் பிரிவை எவ் வண்ணம் சொல்லிப் பிரிவேன் என்றவாறு.*

*ஒருநிலையும் காணேன் ஆதலால் சொல்லாது ஏகலே தகுதி; யான் மீளும்வரையில் திருவருளாகிய நீ சிவத்தைத் தேற்றுக என்றானாம்.* (5)

## பிரிந்தமை கூறல்

### 'அருள் உயிர்ப்பிரிவு இன்பு ஆர உரைத்தது'

*திருவருள் உயிர் இங்ஙனம் சிவத்தலைவியிடம் தெரிவியாது பிரிந்தது சுத்தகேவலத்து மீளா இன்பந்துய்க்கும் சாதனங்களைப் பெறவேண்டியே என இன்பவடிவாகிய சிவத்தின் திருவுளங் கொள்ளத் தெரிவித்தது.*

**நல்லாய் நமக்குற்ற தென்னென் றுரைக்கேன் நமர்தொடுத்த**
**எல்லா நிதியும் உடன்விடுப் பானிமை யோரிறைஞ்சும்**
**மல்லார் கழலழல் வண்ணர்வண் டில்லை தொழார்களல்லாற்**
**செல்லா அழற்கடம் இன்றுசென் றார்நம் சிறந்தவரே. 271**

பொ - ரை: *நமக்குச் சிறந்தாராகிய உயிர்த்தலைவர், நம் முதியோர் தொடுத்துச்சொன்ன நிதியங்கள் அனைத்தையும் திரட்டிக் கொணருவதற்காக, தேவர்கள் சென்று தொழும் வளமார்ந்த கழல்களையுடைய செந்தீ வண்ணராகிய சிவபெருமானது வளவிய தில்லையைத் தொழார்கள் அல்லது நம்போல்வார் செல்லக்கூடாத கழலையுடைய பாலைவனத்தைக் கடந்து இன்று சென்றார்; அதனால், நல்லாய்! நமக்கு உற்றதை என்னென்று சொல்வேன் என்றவாறு.*

*பாலையாகிய கொடுநெறிக்கண் சென்றமையால் எமக் குற்றது துன்பமும், வரைபொருள் தேடச் சென்றமையால் இன்பமும் விளைதலின் உற்றதை என்னென்றுரைப்பேன் என்றதாம். முலைவிலைக்காகச் செல்லுதற்கு அரிய பாலையிற் சென்றது உயிர் என உயிரின் அன்பின்பெருக்கை அறிவித்துத் திருவருள் இன்புருவச்சிவம் உளங்களிக்கச் செய்தவாறு காண்க. (6)*

## நெஞ்சொடு கூறல்

### 'உயிர் பரிவால் சிவம் கருணையுற்றது'

*உயிராகிய தலைவன் பிரிந்தமை கேட்ட சிவத்தலைவி, தன் நெஞ்சை முன்னிலையாக்கி, நெஞ்சே! வரையாது மறைவின்கண் ஒழுகும் ஒழுக்கத்தை ஒழிந்து வரைந்து சுத்தகேவலத்துத் தோயாதே தோய்ந்து பெறும் பேரின்பத்தை நுகரக் கருதி உயிர் பிரிந்தமை எத்துணைச் சிறந்த நெறி எனக் கூறாநிற்றல்.*

**அருந்தும் விடமணி யாமணி கண்டன்மற் றண்டர்க்கெல்லாம்**
**மருந்தும் அமிர்தமும் ஆகுமுன் னோன்றில்லை வாழ்த்தும்வள்ளல்**
**திருந்துங் கடனெறி செல்லுமிவ் வாறு சிதைக்குமென்றால்**
**வருந்தும் மடநெஞ்ச மேயென்ன மாமினி வாழ்வகையே. 272**

பொ - ரை: *அருந்தியவிடம் அணிசெய்வதான நீலகண்டப் பெருமானும், தேவர்கள் அனைவர்க்கும் பிறவிப் பிணியைப்*

போக்கும் மருந்தும், பேரின்பத்தை வழங்கும் அமுதம்போல் வானும், எல்லாவற்றிற்கும் முன்னோனுமாகிய கூத்தப்பிரானது தில்லையை வாழ்த்தும் நம் வள்ளல், கரவு ஒழிந்து வரைவு மேற்கொள்ளும் இந் நெறி நம்மைக் கெடுக்கும் என்று நீ கருதின், வருந்துகிற மடநெஞ்சமே! யாம் இன்புற்று வாழும் உபாயந்தான் வேறு யாது? என்றவாறு.

உயிர் நம்மீது வைத்த பேரன்பால் இங்ஙனம் பிரியத் துணிந்தது; நீ கவல்வது எதுகருதி? எனச் சிவம் கருணைமிகுத்து நெஞ்சொடு கூறியவாறு காண்க. (7)

## நெஞ்சொடு வருந்தல்

### 'உயிர்க்கே கருணையுற்று இன்பானது'

இதுகாறும், உயிர்த்தலைவர் ஒருவழித்தணந்த காலங் களிலெல்லாம் அவர் தேரைத் தொடர்ந்துசென்ற என் நெஞ்சம் இன்றும் அது செய்யாது என்னொடு இருந்து வருத்தா நின்றது என்று சிவம் கருணைமிகுந்து வருந்தாநிற்றல்.

**ஏர்ப்பின்னை தோண்முன் மணந்தவன் ஏத்த எழிறிகழுஞ்**
**சீர்ப்பொன்னை வென்ற செறிகழ லோன்றில்லைச் சூழ்பொழில்வாய்க்**
**கார்ப்புன்னை பொன்னவிழ் முத்த மணலிற் கலந்தகன்றார்**
**தேர்ப்பின்னைச் சென்றவென் னெஞ்சென் கொலாமின்று செய்கின்றதே.** 273

பொ-ரை: அழகிய நப்பின்னைப்பிராட்டியார் தோளை மணந்த திருமால் நின்று துதிக்க, அழகு விளங்கும் சிறந்த பொன்னையும் தம் நிறத்தால் வென்ற வீரக்கழல் பொருந்திய திருவடியையுடைய சிற்றம்பல நாதனது தில்லைநகரைச் சூழ்ந்துள்ள சோலையிடங்களில் கரிய புன்னை மரங்கள் பொன் போலும் மகரந்தங்கள் அவிழப்பெறும் முத்துக்களாகிய அரும்புகள் சிதறக்கிடக்கின்ற மணற்பரப்பில் எம்மொடு கூடிப்பிரிந்த தலைவரின் தேருக்குப் பின்னே சென்ற என் நெஞ்சு இன்று இங்ஙனம் இருந்து வருந்துவது என்னையோ என்றவாறு.

தலைவர் தேர் சென்றவழியே சென்று பிரிவுத்துன்பத்தைப் போக்கிய என் உள்ளம் இன்று என்னிடமிருந்து வருந்தாநின்றது; இஃதென்னையோ என்று சிவம் கருதியவாறு.

கரியபுன்னை பொன்னைப்போல மலராநின்ற முத்துப் போலும் மணலையுடையதோரிடத்து என்ற பேராசிரியர் உரையில் திருந்திய பாடம் தேவைப்படுதல் காண்க. (8)

## வருத்தங்கண்டு உரைத்தல்

### 'அருள் சிவகருணைக்கு உருகி நோக்கியது'

இங்ஙனம் நெஞ்சொடு வருந்தாநின்ற சிவத்தின் கருணை மிகுதியைக் கண்டு திருவருள் மனம் உருகி உரையாநிற்றல்.

## வானோக்கி வருந்தல்

**'அனுபம் பிறருக்கு அடுத்ததுகண்டு அவ் இன்பப்பிரிவை எண்ணி அன்பாயது'**

போர்முனையாகிய உபதேச நிலைக்களத்திற்குச் சென்ற உயிர், ஆண்டுப் பார்ப்புக்களோடு பெடைக்குருகைத் தன் சிறகில் அடக்கிப் பனிக்குளிருக்குப் பாதுகாக்கும் சேவலைக்கண்டு என்பிரிவு சிவத்திற்கு என்னாங்கொல்லோ என வருந்தா நிற்றல்.

கோலித் திகழ்சிற கொன்றின் ஒடுக்கிப் பெடைக்குருகு
பாலித் திரும்பனி பார்ப்பொடு சேவல் பயிலிரவின்
மாலித் தனையறி யாமறை யோனுறை யம்பலமே
போலித் திருநுத லாட்கென்ன தாங்கொலென் போதரவே. 318

பொ - ரை: குஞ்சுகளோடு பெடைக்குருகை விளங்கும் தன் சிறகு ஒன்றினால் கோலி ஒடுக்கிப் பாதுகாத்துப் பனியால் வருகின்ற குளிரைச் சேவல் தானேற்று வருந்தும் இரவின்கண், திருமாலாற் சிறிதும் அறியப்படாத அந்தணர் உறையும் அம்பலத்தையொத்த அழகிய நெற்றியை உடையாளுக்கு என் பிரிவு என்னவாங்கொல்லோ என்றவாறு.

*சிவத்தைச் சார்ந்து சிவமேயாய் அடையும் பேரின்ப அநுபவம் பிற உயிர் பெறுவதைக்கண்டு, அதாவது பெடை சேவலால் இன்பம் எய்துதலைக்கண்டு, தமது இன்பப்பிரிவை எண்ணி, உயிர் சிவத்தின்பால் காதல் கொண்டமை உணர்த்தப்பெற்றவாறு. (3)*

## கூதிர்கண்டு கவறல்

**'இன்பு அன்பாகி இருத்தலால் உயிரை அன்பே பிரிவாற்றாமை இயம்பல்'**

*பனியும் பனியால் விளையும் குளிருங்கண்டு இன்புருவாகிய சிவத்தலைவி, காதல்மிக்கு, எம்போலப் போர்முனை சென்ற காதலராகிய உயிர்த்தலைவரும் இப் பனியாலும் குளிராலும் வருந்திச் சென்றவினையை முடிக்காது மீள்வரோ என்று கவலாநிற்றல்.*

கருப்பினம் மேவும் பொழிற்றில்லை மன்னன்கண் ஆரருளால்
விருப்பினம் மேவச்சென் றார்க்குஞ்சென் றல்குங்கொல் வீழ்பனிவாய்
நெருப்பினம் மெய்நெடு மாலெழில் தோன்றச்சென் றாங்குநின்ற
பொருப்பினம் ஏறித் தமியரைப் பார்க்கும் புயலினமே. 319

*பொ - ரை: விழுகின்ற இப் பனியிடத்து எல்லோரும் நெருப்புத்திரளை மேவ, திருமால் போன்றதோர் அழகு கண்டார்க்குத் தோன்றுமாறு அங்கு உயர்ந்துநின்ற மலைக்*

*கூட்டங்களில் ஏறிச்சென்று, தனித்தவர்களாகத் தேடி அலையும் புயற்கூட்டம், கருப்பஞ்சோலை சூழ்ந்த தில்லை மன்னனிடம் உண்டாகிய பெருங்கருணையால், தம்மை விரும்புகின்ற வேந்தராகிய தம்மினம் தம்மால் உதவிபெற்று மகிழச் சென்ற நந்தலைவர்க்கும் சென்று தங்குமோ என்றவாறு.*

*அவர் சென்ற இடத்தும் சென்று தங்குமாயின் அவர் எம்மை நினைந்து பிரிவாற்றாது வினைமுற்றாது மீள்வர் எனக் கவன்றதாம்.* *(4)*

## முன்பனிக்கு நொந்துரைத்தல்

### 'பிரிவு அன்புக்கு இலையெனப் பரையை நொந்தது'

*புள்ளும் மாவும் குளிரால் விடாத தம் இளம்பார்ப்பினையும் பெடையையும் அடக்கிவாழும் இவ்விருட்காலத்து, நீ மட்டும் தனிமையில் வாடுக என்று என்னைப் பெற்றவளை நோவதல்லாது யாரை நோவேன் என்று தன் தாயாகிய பரையை நொந்து உரையாநிற்றல்.*

**சுற்றின வீழ்பனி தூங்கத் துவண்டு துயர்கவென்று**
**பெற்றவ ளேயெனைப் பெற்றாள் பெடைசிற காளொடுக்கிப்**
**புற்றில வாளர வன்றில்லைப் புள்ளுந்தம் பிள்ளைதழீஇ**
**மற்றினஞ் சூழ்ந்து துயிலப் பெறுமிம் மயங்கிருளே.** 320

*பொ - ரை: புற்றையுடையன அல்லாத ஒளியையுடைய பாம்புகளை அணிந்தவனது தில்லையில் மக்களே அன்றிப் புள்ளும் பெடைகளைத் தன் சிறகான் ஒடுக்கிப் பிள்ளைகளையும் தழுவி இனம் சூழ்ந்திருக்க நடுங்காது துயில்கின்ற செறிந்த இவ்விருட்கண் மேனியெங்கும் சுற்றி வீழ்கின்ற பனி இடையறாது நிற்பத் துவண்டு வருந்துக என்று என் தாய் ஈன்றாளே; இனி யான் யாரை நோவது என்றவாறு.*

*ஆராக்காதல் பூண்ட உயிரால் பிரிந்ததில்லை; முன்பனியில் இவ்வாறு வருத்தமுறுக என்று என்தாய் என்னைப் பெற்றாளே என்று பரையை நொந்தவாறு.* *(5)*

## பின்பனி நினைந்திரங்கல்

### 'பிரிவு உண்டேல் இன்பம் பெறலாமென்று உயிர் இன்பம் நோக்கி எடுத்துரைத்தது'

*போர்முனைக்குட்சென்ற தலைமகன், மூடுபனி உலகெங்கும் மூடியிருத்தலை அறிந்து, இது அவள் பொறுக்குமளவு அன்று; அவளைச் சொல்வான் ஏன்? என்னாலும் தாங்ககிற்றிலது; தனித்தவர்க்கு இப் பனி அம்புபோல் தைப்பது என்று தலைமகள் துயரத்தைத் தான் நினைந்து இரங்காநிற்றல். இது பிரிவு என்று*

*ஒன்று உளதாயின் அதனால் இன்ப அநுபவம் மிகும் என்பதை எதிர்நோக்கி உயிர் உரைத்ததாம்.*

புரமன் றயரப் பொருப்புவில் லேந்திப்புத் தேளிர்நாப்பண்
சிரமன் றயனைச்செற் றோன்றில்லைச் சிற்றம் பலமனையாள்
பரமன் றிரும்பனி பாரித்த வாபரந் தெங்கும்வையம்
சரமன்றி வான்றரு மேலொக்கும் மிக்க தமியருக்கே. 321

*பொ - ரை: பெரிய பனி உலகமெங்கும் பரந்து துவலைகளைப் பரப்பியவாறு முப்புரங்களும் வருந்த அன்று மேருவாகிய வில்லை ஏந்தி, தேவர்கள் நடுவே பிரமன் தலையைக் கொய்த இறைவனது தில்லைக்கண் உள்ள சிற்றம்பலத்தை ஒத்த இவளளவன்று; மிக்க தனிமையயுடையார்க்கு இப் பனி, உயிர்கவர வானம் வெகுண்டு அம்பைப் பொழியுமாயின் அதனை ஒக்கும் என்றவாறு.*

*பின்பனியால் பிரிவுத்துன்பம் மிகுமாயின் என்னைப்போல அவளும் வருந்துவள்; இணையின் இன்பம் மிகுமென்று உயிர்த்தலைவன் இன்புருவச் சிவத்தைநோக்கி இரங்கா நின்றவாறு காண்க.* *(6)*

## இளவேனில் கண்டு இன்னலெய்தல்

### ‘உயிரின்பு இன்பே உன்னி உரைத்தல்’

*உயிர் தன்பால் எய்தும் இன்பத்தை இன்புருவாகிய சிவம் எண்ணி இவ் விளவேனில் பிரிந்தாருக்கும் வருத்தாநின்றது என்று உரையாநிற்றல்.*

வாழும் படியொன்றுங் கண்டிலம் வாழியிம் மாம்பொழிற்றேன்
சூழும் முகச்சுற்றும் பற்றின வாற்றொண்டை யங்கனிவாய்
யாழின் மொழிமங்கை பங்கன்சிற் றம்பல மாதரியாக்
கூழின் மலிமனம் போன்றிரு ளாநின்ற கோகிலமே. 322

*பொ - ரை: அழகிய தொண்டைக்கனிபோன்ற இதழினையும் யாழினோசை போலும் இனிய மொழியினையும் உடைய உமையொரு பாகனது சிற்றம்பலத்தை விரும்பாத உணவால் தருக்கிய மனம்போல ஒருகாலைக்கு ஒருகால் கருநிறம் மிகாநின்ற குயில்கள் இம்மாம்பொழிலிலே வண்டுகள் மொய்க்கும் இடமெங்கும்வந்து சூழ்ந்துகொண்டன; இனி உயிர் வாழும் வகை கண்டிலேன் என்றவாறு.*

*சிவனைச் சிந்தியாத, சோறுண்டு தருக்கிய மக்கள் மனம் அறியாமையில் மிகுவதுபோலக் குயில்களும் இளமைச் செருக்காலும் உணவுப்பெருக்காலும் கரியனவாயின என்பதன் வாயிலாகச் சிவசிந்தனை அறியாமையை அகற்றும் அருமருந்து என்று குறிப்பித்தவாறு. கருங்குயில் சூழ்ந்தன என்றதனால்*

கூட்டங்களில் ஏறிச்சென்று, தனித்தவர்களாகத் தேடி அலையும் புயற்கூட்டம், கருப்பஞ்சோலை சூழ்ந்த தில்லை மன்னனிடம் உண்டாகிய பெருங்கருணையால், தம்மை விரும்புகின்ற வேந்தராகிய தம்மினம் தம்மால் உதவிபெற்று மகிழச் சென்ற நந்தலைவர்க்கும் சென்று தங்குமோ என்றவாறு.

அவர் சென்ற இடத்தும் சென்று தங்குமாயின் அவர் எம்மை நினைந்து பிரிவாற்றாது வினைமுற்றாது மீள்வர் எனக் கவன்றதாம். (4)

## முன்பனிக்கு நொந்துரைத்தல்

### 'பிரிவு அன்புக்கு இலையெனப் பரையை நொந்தது'

புள்ளும் மாவும் குளிரால் விடாத தம் இளம்பார்ப்பினையும் பெடையையும் அடக்கிவாழும் இவ்விருட்காலத்து, நீ மட்டும் தனிமையில் வாடுக என்று என்னைப் பெற்றவளை நோவதல்லாது யாரை நோவேன் என்று தன் தாயாகிய பரையை நொந்து உரையாநிற்றல்.

சுற்றின வீழ்பனி தூங்கத் துவண்டு துயர்கவென்று
பெற்றவ ளேயெனைப் பெற்றாள் பெடைசிற கானொடுக்கிப்
புற்றில வாளர வன்றில்லைப் புள்ளுந்தம் பிள்ளைதழீஇ
மற்றினஞ் சூழ்ந்து துயிலப் பெறுமிம் மயங்கிருளே. 320

பொ - ரை: புற்றையுடையன அல்லாத ஒளியையுடைய பாம்புகளை அணிந்தவனது தில்லையில் மக்களே அன்றிப் புள்ளும் பெடைகளைத் தன் சிறகான் ஒடுக்கிப் பிள்ளைகளையும் தழுவி இனம் சூழ்ந்திருக்க நடுங்காது துயில்கின்ற செறிந்த இவ்விருட்கண் மேனியெங்கும் சுற்றி வீழ்கின்ற பனி இடையறாது நிற்பத் துவண்டு வருந்துக என்று என் தாய் என்றாளே; இனி யான் யாரை நோவது என்றவாறு.

ஆராக்காதல் பூண்ட உயிரால் பிரிந்ததில்லை; முன்பனியில் இவ்வாறு வருத்தமுறுக என்று என்தாய் என்னைப் பெற்றாளே என்று பரையை நொந்தவாறு. (5)

## பின்பனி நினைந்திரங்கல்

### 'பிரிவு உண்டேல் இன்பம் பெறலாமென்று உயிர் இன்பம் நோக்கி எடுத்துரைத்தது'

போர்முனைக்குட்சென்ற தலைமகன், மூடுபனி உலகெங்கும் மூடியிருத்தலை அறிந்து, இது அவள் பொறுக்குமளவு அன்று; அவளைச் சொல்வான் ஏன்? என்னாலும் தாங்ககிற்றிலது; தனித்தவர்க்கு இப் பனி அம்புபோல் தைப்பது என்று தலைமகள் துயரத்தைத் தான் நினைந்து இரங்காநிற்றல். இது பிரிவு என்று

ஒன்று உளதாயின் அதனால் இன்ப அநுபவம் மிகும் என்பதை எதிர்நோக்கி உயிர் உரைத்ததாம்.

புரமன் றயரப் பொருப்புவில் லேந்திப்புத் தேளிர்நாப்பண்
சிரமன் றயனைச்செற் றோன்றில்லைச் சிற்றம் பலமனையாள்
பரமன் றிரும்பனி பாரித்த வாபரந் தெங்கும்வையம்
சரமன்றி வான்றரு மேலொக்கும் மிக்க தமியருக்கே. 321

பொ - ரை: பெரிய பனி உலகமெங்கும் பரந்து துவலைகளைப் பரப்பியவாறு முப்புரங்களும் வருந்த அன்று மேருவாகிய வில்லை ஏந்தி, தேவர்கள் நடுவே பிரமன் தலையைக் கொய்த இறைவனது தில்லைக்கண் உள்ள சிற்றம்பலத்தை ஒத்த இவளளவன்று; மிக்க தனிமையையுடையார்க்கு இப் பனி, உயிர்கவர வானம் வெகுண்டு அம்பைப் பொழியுமாயின் அதனை ஒக்கும் என்றவாறு.

பின்பனியால் பிரிவுத்துன்பம் மிகுமாயின் என்னைப்போல அவளும் வருந்துவள்; இணையின் இன்பம் மிகுமென்று உயிர்த்தலைவன் இன்புருவச் சிவத்தைநோக்கி இரங்கா நின்றவாறு காண்க. (6)

## இளவேனில் கண்டு இன்னலெய்தல்

### 'உயிரின்பு இன்பே உன்னி உரைத்தல்'

உயிர் தன்பால் எய்தும் இன்பத்தை இன்புருவாகிய சிவம் எண்ணி இவ் விளவேனில் பிரிந்தாருக்கும் வருத்தாநின்றது என்று உரையாநிற்றல்.

வாழும் படியொன்றுங் கண்டிலம் வாழியிம் மாம்பொழிற்றேன்
சூழும் முகச்சுற்றும் பற்றின வாற்றொண்டை யங்கனிவாய்
யாழின் மொழிமங்கை பங்கன்சிற் றம்பல மாதரியாக்
கூழின் மலிமனம் போன்றிரு ளாநின்ற கோகிலமே. 322

பொ - ரை: அழகிய தொண்டைக்கனிபோன்ற இதழினையும் யாழினோசை போலும் இனிய மொழியினையும் உடைய உமையொரு பாகனது சிற்றம்பலத்தை விரும்பாத உணவால் தருக்கிய மனம்போல ஒருகாலைக்கு ஒருகால் கருநிறம் மிகாநின்ற குயில்கள் இம்மாம்பொழிலிலே வண்டுகள் மொய்க்கும் இடமெங்கும்வந்து சூழ்ந்துகொண்டன; இனி உயிர் வாழும் வகை கண்டிலேன் என்றவாறு.

சிவனைச் சிந்தியாத, சோறுண்டு தருக்கிய மக்கள் மனம் அறியாமையில் மிகுவதுபோலக் குயில்களும் இளமைச் செருக்காலும் உணவுப்பெருக்காலும் கரியனவாயின என்பதன் வாயிலாகச் சிவசிந்தனை அறியாமையை அகற்றும் அருமருந்து என்று குறிப்பித்தவாறு. கருங்குயில் சூழ்ந்தன என்றதனால்

*சிவஞானம் உதித்திலது; அதனால் உயிர் எம்மாட்டு இன்பம் பெறுவது எங்ஙனம்? யாம் உயிரை ஆட்கொண்டு உய்யச் செய்வது எங்ஙனம்? என்று இன்புருவச்சிவம் உயிரின்பை உள்ளத்தடைத்து உரைத்தது காண்க.* (7)

## பருவங்காட்டி வற்புறுத்தல்

### 'அருள் சிவத்துக்கு உயிர் வரவுநலம் கூறியது'

*இங்ஙனம் உயிரிரக்கம்கொண்டு வருந்தாநின்ற சிவத்தை நோக்கி, இதோ தண்மழை சொரியும் அருட்கார் ஞானவானில் பரவியது;இன்றோ நாளையோ உயிர்த்தலைவர் வந்துவிடுவார் என்று திருவருள் வற்புறுத்தா நிற்றல்.*

**பூண்பதென் றேகொண்ட பாம்பன் புலியூ ரரன்மிடற்றின்**
**மாண்பதென் றேயெண வானின் மலரும் மணந்தவர்தேர்**
**காண்பதன் றேயின்று நாளையிங் கேவரக் கார்மலர்த்தேன்**
**பாண்பதன் தேர்குழ லாயெழில் வாய்த்த பனிமுகிலே.** 323

*பொ - ரை: கார்காலத்துப் பூக்களை ஊதுகின்ற தேன் வண்டினது பாட்டின் அழகை ஆராயும் குழலையுடையாய்! அணியத்தகும் அணியாகப் பாம்புகளையுடைய புலியூர் அரனது நீலகண்டத்தின் அழகென்று கருதும்வண்ணம் அழகுவாய்த்த பனிமுகில்கள் வான மண்டலத்திலே பரவா நின்றன; அதனால் நம்மை மணந்தவர் தேர் இன்றோ நாளையோ இங்கேவரக் காணப்படுவது அன்றே; இனிக் கவலற்க என்றவாறு.*

*அரன்மிடறு அமரர் உயிரைக் காத்ததுபோலப் பனியால் பிரிவால் வருந்தும் நும் உயிரையும் காக்கும் என்னும் குறிப்புத் தோன்ற 'அரன்மிடற்றின் மாண்பது என்றே எண்ண வானில் பனிமுகில் மலரும்' என்றார்.*

*தேன் - ஒரு சாதிவண்டு. இவள் கூந்தல் இடையறாது வண்டு மொய்க்கும் தன்மையதென்பாள் வேறாகுநயம் தோன்ற தேன், பாண், பதந்தேர் குழலாய் என்றாள் என்க.* (8)

## பருவமென் றென்று கூறல்

### 'அன்பு உயிர்ப்பருவம் இன்பலால் இலை என்றல்'

*கார்ப்பருவம் கண்டும் காதலர் வாராதிருந்தது என்னோ என்று கலங்கா நின்ற சிவத்திற்கு இது பருவமன்று என்று திருவருள் உணர்த்தா நிற்றல்.*

**தெளிதரற் காரெனச் சீரனம் சிற்றம் பலத்தடியேன்**
**களிதரக் கார்மிடற் றோனட மாடக்கண் ணார்முழவம்**

துளிதரற் காரென வார்த்தன ஆர்ப்பத்தொக் குன்குழல்போ
றளிதரக் காந்தளும் பாந்தளைப் பாரித் தலர்ந்தனவே. 324

பொ - ரை: அடியேன் களிப்பு மிக, சிற்றம்பலத்தில் நீலகண்டப் பெருமான் திருநடம்புரிய முகம் அமைந்த முழவங்கள், துளியைத்தரும் முகில்போல முழங்கின; அங்ஙனம் அவை முழங்க இடிமுழக்கு என்று எண்ணிக் காந்தளும் ஒருங்குகூடி, உன் கூந்தலை ஒத்து வண்டுமொய்க்க, பாம்புபோலும் துடுப்புக்களைப் பரப்பி மலர்ந்தன; சீர் அன்னமே! இதனைக் கார்காலமென்று நீ தெளியற்பாலை அல்லை என்றவாறு.

காந்தள் சிற்றம்பலத்து முழக்கப்படும் முழவோசையைக் கேட்டு மலர்ந்தனவேயன்றி இது பருவம் அன்று; பருவமாயின் சொல்தவறாத நமது தலைவர் வரத்தவறாரெனத் தலைமகன் உயர்வும் தலைவியின் உயர்வும் தலைவியின் தெளிவும் உடன் தோன்றக் கூறியவாறு. இதனால் திருவருள் உயிரின் பரிபாகச் சிறப்புக்கூறிச் சிவத்தைத் தெளிவித்தவாறு காண்க. (9)

## மறுத்துக் கூறல்

### 'அருளுயிர்ப்பருவம் அன்றெனச் சிவமும் உண்டே என்பது பருவமென்றுரைத்தது'

இது பருவம் அன்று என்று சிவத்தைத் தெளிவிக்கக் கூறிய திருவருளை நோக்கிச் சிவம், தோன்றியின் மலரைக்காட்டி இதுவும் பொய்யோ என்று மறுத்துக் கூறாநிற்றல்.

தேன்றிக் கிலங்கு கழலழல் வண்ணன்சிற் றம்பலத்தெங்
கோன்றிக் கிலங்குதிண் டோட்கொண்டற் கண்டன் குழையெழினாண்
போன்றிக் கடிமலர்க் காந்தளும் போந்தவன் கையனல்போல்
தோன்றிக் கடிமல ரும்பொய்ம்மை யோமெய்யிற் றொன்றுவதே. 325

பொ - ரை: தேன் போன்றவளே! திசைகளில் விளங்கும் வீரக்கழலை அணிந்த செந்தீவண்ணனும் சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ள எம் தலைவனும் எட்டுத்திக்குகளாக விளங்குகின்ற திண்ணிய தோள்களோடுகூடிய மேகம்போலும் கரிய கண்டத்தை உடையவனும் ஆகிய அம்பலவாணப் பெருமானுடைய காதணியும் அழகிய நாணுமாக விளங்கும் பாம்பையொத்த இம் மணம் பொருந்திய மலர்ந்த காந்தளின் துடுப்புக்களும் புறப்பட்டு, அவன்கையில் விளங்குகின்ற அனலைப்போலத் தோன்றியின் புதுமலரும் உண்மையாகத் தோன்றுகின்றதே; இதுவும் பொய்யோ என்றவாறு.

பாம்பையொத்துக் காந்தள் மலர்ந்தன; கையின்கண் உள்ளதாகிய தீயையொத்துத் தோன்றியும் மலர்ந்தன என்பதாம்

காந்தள் மலருக்குப் பாம்பின்படமும் அம் மலரின் காம்பிற்குப் பாம்பின் உடலும், தோன்றியின் மலருக்குத் தீயும் அதன் காம்பிற்குத் தீயை ஏந்திய திருக்கரமும் உவமைகளாகக் கொள்க. தோன்றிமலரைக் கொண்டுவந்தது கார்ப்பருவமேயென்று சிவம் திருவருளை மறுத்துரைத்தவாறு.

இறைவற்கு எட்டுத்திசைகளும் தோள்களாதலின் 'திக்கு இலங்குதிண் தோள்' என்றார். உலகமே உருவமாகிய இறைவனுக்குத் திசைகள் எட்டும் தோள்களாம் என்க. பேராசிரியர் வேறு கூறினர். (10)

## தேர்வரவு கூறல்

**'அருட்குச் சிவமும் அன்புணர்த்துதலால்**
**உயிர் பிரியாமை வரவெடுத்துரைத்தது'**

*ஆம்! உண்மைதான்; கார் வந்தது; மாறுபட்ட மன்னர்கள் கார்காலத்துப் போர்செய்யார்; தம்முள் பொருந்திவிடுவார்: அதனால் நம் தலைவரது தேர் இல்லில்வந்து தோன்றும் என்று திருவருள் தேர்வரவு கூறாநிற்றல்.*

**திருமால் அறியாச் செறிகழற் றில்லைச்சிற் றம்பலத்தெம்**
**கருமால் விடையுடை யோன்கண்டம் போற்கொண்டல் எண்டிசையும்**
**வருமால் உடன்மன் பொருந்தல் திருந்த மணந்தவர்தேர்**
**பொருமால் அயிற்கணல் லாயின்று தோன்றுநம் பொன்னகர்க்கே. 326**

பொ - ரை: திருமாலும் அறியாத செறிந்த வீரக்கழல் பொருந்திய திருவடியையுடைய தில்லைச் சிற்றம்பலத்திலே எழுந்தருளியுள்ள எமது கரிய திருமாலை இடபமாகக் கொண்டவரது கண்டம்போல இருண்டு கொண்டல்கள் எட்டுத் திசைக்கண்ணும் வாராநின்றன; அதனால் தம்முள் ஒன்றோடொன்று பொருதுகொள்ளுகின்ற பெரிய வேல் போலும் கண்களை உடைய பெண்ணே! நம்மை மணந்தவரது தேர் மாறுபட்ட மன்னர்கள் தம்முள் போர் செய்தலினின்று திருந்துதலால் நமது பொன்னையுடைய இல்லில் இன்று வந்து தோன்றும் என்றவாறு.

செறி கழல்: அன்மொழித்தொகையாகச் செறிந்த கழலையுடைய திருவடியை உணர்த்திற்று. அன்றிக் கழலாகவே கொண்டு திருவருள்மயமான திருவடியைக் காணாதது ஒருவியப் பன்று; திருவடிக்கண்ணுள்ள கழலையே கண்டிலன் திருமால் எனினும் நயம்பயப்பது ஒன்றாம். திருமால் தான் முனைந்து நின்றமையால் அடிகள் அறியப்படாவாயினும் இறைவன் அவனை

விடையாக ஆட்கொண்ட காலத்து அடிவைத்து ஏறுதலால் தீண்டும்பேறு பெற்றான் எனல்போதரக் 'கருமால் விடை உடையோன்' என்றார். அவன் காட்டினாலல்லது ஆன்மாக்கள் காணா என்ற மரபு தோன்றியவாறு காண்க. மணந்தவர் தேர் இன்று தோன்றும் என்ற உரை செவிபுகும் முன்னரே அவள் கண்கள் மதர்த்துத் தளிர்த்து அழகுபெற்றன என்பாள் தலைவியைப் 'பொருமால் அயிற்கண் நல்லாய்' என விளித்தாள். (11)

## வினைமுற்றி நினைதல்

### 'அனுபவங்கண்ட அன்பு உயிர் சிவனது கருணைமுகம் நோக்கிக் கசிந்து உருகியது'

முன்னர் முற்றாத வற்றாத சிவானந்த அநுபவங்கண்ட உயிர் தான் வந்த வினை முற்றியதால் சிவனது கருணை ததும்பும் முகத்தைத் தன்சூழலில் கருத்தால் கண்டு உளம்கசிந்து உருகாநிற்றல்.

புயலோங் கலர்சடை யேற்றவன் சிற்றம் பலம்புகழும்
மயலோங் கிருங்களி யானை வரகுணன் வெற்பின்வைத்த
கயலோங் கிருஞ்சிலை கொண்டுமென் கோபமுங் காட்டிவரும்
செயலோங் கெயிலெரி செய்தபின் இன்றோர் திருமுகமே. 327

பொ - ரை: தொழிற்பாடு சிறந்து விளங்கும் மும்மதில்களை எரியாக்கியபின் இன்று ஓர் அழகியமுகம், கங்கையை உயர்ந்த விரிந்த திருச்சடையின்கண் ஏற்றவனது சிற்றம்பலத்தையே பரவுகின்ற மதமயக்கம் மிக்க பெரிய களியானையையுடைய வரகுண பாண்டியன் இமயத்தில் எழுதிவைத்த கயல்போலும் கண்ணையும் உயர்ந்த பெரிய வில்போலும் புருவத்தையும் உடையதாய், தங்கிய இந்திரகோபம்போலும் வாயையும் காட்டி வாராநின்றது; இனி விரைந்து போவோம் என்றவாறு.

திருக்கயிலைக்காட்சியை ஐயாற்றில் கண்ட அப்பர் பெருமானுக்குப் பிடியொடு பெயரும் களிறும் பெடையொடு ஆடிவரும் கிளியும் நாகொடு உரசிவரும் காளையும் சிவமும் சத்தியுமாகக் காணப்பட்டாற்போல, சிவத்தலைவியை சிந்தை செய்யும் உயிர்த்தலைவனுக்குக் கயல் கண்ணையும் வில் புருவத்தையும் கோபம் வாயையும் நினைவூட்ட எல்லாம் இயைந்து அவள் திருமுகம் எங்கும் காணப்பட்டது என, அநுபவம்கண்ட அன்புயிர் சிவத்தலைவியினது கருணைமுகம் கண்டதைக் கூறியவாறு. இமயத்தில் கயல் பொறித்த முன்னோன் பெருமையை அவன் வழிவந்த வரகுணனுக்கும் ஏற்றிக் கூறியது. (12)

## நிலைமை நினைந்துகூறல்

**'சிவம் பிரிவின்றிக் கருணைசெய் திறத்தைப்
போத அருளொடு புகன்று சென்றது'**

*இங்ஙனம் வினைமுற்றிய பின்னர், சிவத்தோற்றத்தைக் கண்டு அதனைச் சென்றடைய வேண்டுமென்று விரைவோடு வாராநின்ற உயிர்த்தலைவன், சிவத்தலைவியின் நிலைமையை நினைந்து, நமது தேரை விரைவில் செலுத்துக என்று பாகனுக்குக் கூறாநிற்றல்.*

சிறப்பிற் றிகழ்சிவன் சிற்றம் பலஞ்சென்று சேர்ந்தவர்தம்
பிறப்பிற் றுணைந்து பெருகுக தேர்பிறங் கும்மொளியார்
நிறப்பொற் புரிசை மறுகினிற் றுன்னி மடநடைப்புள்
இறப்பிற் றுயின்றுமுற் றத்திரை தேரும் எழினகர்க்கே. 328

*பொ - ரை: விளங்குகின்ற ஒளிநிறைந்த நிறமுடைய பொன்னாற் செய்யப்பட்ட உயர்ந்த மதிலையுடைய ஊரின் தெருவிலே பெடையும் சேவலுமாகச் சேர்ந்து விளையாடி மென்னடையை உடைய மாடப்புறாக்கள் வீட்டு இறப்பின்கண் சேர்ந்து துயின்று முற்றத்தின்கண் இரைதேர்ந்து உண்ணும் அழகை உடைய அவளிருக்கும் வீட்டிற்கு, சிறப்புக்களால் தனித்துவிளங்கும் சிவபெருமானது தில்லைச் சிற்றம்பலத்தைச் சென்று அடைந்தவர்களது பிறவி விரைந்து கழிவதைப்போல இத் தேரானது விரைந்து ஓடுக என்றவாறு.*

*மாடப்புறாக்கள் துணையொடு துயின்று முன்றிலில் இரைதேர்ந்து விளையாடுவதைக்கண்டு தலைவி ஆற்றாள் என்பதனால் சிவத்தலைவிக்குப் பிரிவு என்பது ஒன்று இன்றி விரைந்து அவளைச் சார்ந்து கருணைசெய்ய வேண்டும் என்ற திறத்தைத் தேர்ப்பாகனுக்கு மிக்க அருளோடு சொல்லி விரும்பிச் சென்றவாறாம்.* *(13)*

## முகிலொடு கூறல்

**'அன்புக்கு முன்பு இன்பார உயிர் சென்றது'**

*பாகன் தன் ஆணைவழி காரினும் தேரை விரைந்து செலுத்துவதைக் கண்ட உயிர்த்தலைவன் காரோட்டம்கண்டு இக்கார் தேருக்குமுன்னே அவள் நகருக்குச் செல்லாதிருக்க வேண்டும்; செல்லினும் அவள்கேட்ப முழங்காது ஒழியவேண்டு மென உரையாநிற்றல்.*

அருந்தே ரழிந்தனம் ஆலமென் றோல மிடுமிமையோர்
மருந்தே ரணியம் பலத்தோன் மலர்த்தாள் வணங்கலர்போல்

திருந்தே ரழிந்து பழங்கண் தருஞ்செல்வி சீர்நகர்க்கென்
வருந்தே ரிதன்முன் வழங்கேல் முழங்கேல் வளமுகிலே. 329

பொ - ரை: நஞ்சை அருந்துக, நாங்களனைவரும் அழகு அழிந்தோம் என்று முறையிடும் தேவர்களுக்கு அந் நஞ்சால்வரும் இடரைப்போக்கும் மருந்தானவனும் அழகு பொருந்திய அம்பலத்தின்கண் எழுந்தருளியிருப்பவனும் ஆகிய சிவபெருமானது திருவடிமலரைத் தொழா தாரைப்போல, திருந்திய அழகனைத்தும் அழிந்து துன்பத்தை உண்டாக்கும் எம் செல்வியினது அழகிய ஊரின்கண், வளமுகிலே! வருகின்ற என் தேருக்குமுன் நீ செல்லாது ஒழி; சென்றாலும் அவள்கேட்ப முழங்காது ஒழி என்றவாறு.

இங்ஙனம் முகிலை வேண்டிக்கொண்டது சிவத்தலைவி எம்மாட்டுச் செய்யும் அன்புக்கு முன்பாக அவளைச் சார்ந்து இன்பு ஆர விழைகின்றேன் என்று உயிர் விரைந்தவாறு. (14)

## வரவெடுத்துரைத்தல்

### 'பரசமயாதிபால் சிவமேயாக்கி உயிர்வரல் அருளே புகன்றது'

சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்பதை உணர முடியாத பரசமயவாதிகளையும் பரிபாகமுறுத்தி, அவர் களையும் சிவத்தின் அடிமைகளாக்கி, அவர்கள் தந்த உபதேச காணிக்கைகளோடு உயிர்த்தலைவன் மீண்டுவந்ததைத் திருவருள் சிவத்தலைவிக்கு உணர்த்தா நிற்றல்.

பணிவார் குழையெழி லோன்றில்லைச் சிற்றம் பலமனைய
மணிவார் குழன்மட மாதே பொலிகநம் மன்னர்முன்னாப்
பணிவார் திறையும் பகைத்தவர் சின்னமும் கொண்டுவண்டேர்
அணிவார் முரசினொ டாலிக்கு மாவோ டணுகினரே. 330

பொ - ரை: பாம்பாகிய நீண்டகாதணியால் அழகு பெற்றவனது தில்லைச் சிற்றம்பலத்தை ஒக்கும் நீலமணிபோலும் நீண்ட கூந்தலையுடைய மடமாதே! பொலிக; நம் அண்ணல் வந்து வணங்கியவர்கள் கொடுத்த கப்பத்தையும் வணங்காது பகைத்தவர்களின் அடையாளங்களையும் தமது தேருக்கு முன்னாகக்கொண்டு அழகிய வார்கட்டிய வீரமுரசோடும் ஒலிக்கும் குதிரைகளோடும் வந்து அணுகினர் என்றவாறு.

பணி வார் குழை எழிலோன் என்பதற்குப் பாம்பாலாகிய நீண்ட காதணிக்கு அழகைத் தருபவன் என்றுரைப்பினும் ஆம்.

*பரசமயவாதிகளை ஆட்கொண்டு அவர்கள் தந்த காணிக்கைகளோடு உயிர்த்தலைவர் வந்தார் எனத் திருவருள் உணர்த்தியவாறு. (15)*

## மறவாமை கூறல்

**'அறிவு பிறிதாயின் மறதியுண் டென்ன**
**அருட்கு உயிர் இயம்பி அன்பாயினது'**

*வினைமுற்றி மீண்ட உயிர்த்தலைவன் தலைமகளோடு ஒன்றியிருக்கத் திருவருள் வினையிடத்து எம்மை மறந்திரோ என, தலைமகன் என் நெஞ்சத்திரையில் நும் தலைவியைக் கண்டு கொண்டேயிருக்கும் எனக்கு மறதி என்பது ஏது என்று மறவாமை கூறாநிற்றல். வினைக்கண் உழலும் உயிர் வினைப்போகமே தானாய்த் தனக்கு உபகாரப்படும் சிவத்தை மறத்தல் இயல்பாகலின் திருவருள் எத் தொழிலைச் செய்தாலும் ஏதவத்தை பட்டாலும் சிவத்தலைவியை மறவாமையே அநுபவ ஞானியின் இயல்பாம் என்பது உணர்த்தாநிற்றல்.*

**கருங்குவ ளைக்கடி மாமலர் முத்தங் கலந்திலங்க**
**நெருங்கு வளைக்கிள்ளை நீங்கிற் றிலணின்று நான்முகனோ**
**டொருங்கு வளைக்கரத் தானுண ராதவன் றில்லையொப்பாய்**
**மருங்கு வளைத்துமன் பாசறை நீடிய வைகலுமே. 331**

*பொ - ரை: பிரமனும் சங்கேந்திய கரத்தையுடைய திருமாலும் அறியாதவனது தில்லையை ஒப்பாய்! போர்முனையிலே சூழ்ந்து மன்னனது பாசறைக்கண் யான் தங்கியிருந்தகாலத்தும் கண்ணாகிய கருங்குவளை மலர் கண்ணீராகிய முத்தத்தைக் கலந்து விளங்க நின்று, வளையல்களையணிந்த கிளியை ஒப்பாள் ஒருபோதும் என்னை நீங்கிற்றிலள்; அதனால் பிரிவில்லை என்றவாறு.*

*என் பரிபாக முதிர்வால் விளைந்த சிவபோதம் மாறிச் சீவ போதமாயினன்றே வினையேதானாய் மறதியுண்டாகும்; யான் என்றும் சிவபோதமேயாயிருந்தேன்; அதனால் யான் தனித்துப் பாசறைக்கண் தங்கியபோதெல்லாம் கருணைக் கண்களோடு கூடிய அவள் முகமே தோன்றின என்று என்றும் பிரியாமையையும் மறவாமையையும் உயிர் திருவருட்குணர்த்தியவாறு. (16)*

## 24. பொருள்வயிற் பிரிவு

**'பொருட் பிரிவு இருபதும் அருட்பிரிவுயிரே**
**ஆனந்தமாகி அதுவேதானாய்த்**
**தானே அதுவாய்ப் பேசிய கருணை'**

*சிற்றின்ப நெறியிலே குரவர்களாற் படைக்கப்பட்ட பொருளைக்கொண்டு அறம்புரியின் அதனான்வரும் பயன் அவர்க்காம் அத்துணையல்லது காதலனும் காதலியுமாய*

நம்மிருவர்க்கும் ஆகாதாதலால் பொருள்தேடப் பிரியாநிற்பேன் எனத் தலைமகன் கூறுவன். அங்ஙனமே பேரின்பநெறியில் சுத்த கேவல நெறியாகிய நீயும் நானுமாய் ஏகபோகமாய் நிற்கும் சிவசீவ ஐக்கியமாகிற இன்ப வாழ்வில் உயிர் ஆனந்தமயமாய்த் தானேயது வாய் அதுவேதானாய் அநநியமாய் நின்று, நம் முயற்சியான் ஈட்டிய சாதனங்களைக்கொண்டு நாம் இருவரும் தவவிரத யோக ஞானங்களையும், அதன்வாயிலாகச் சிவபோகத் தையும் எய்துதலே இன்பந்தருவது எனச் சிவத்தலைவிக்கு உணர்த்தி, உயிர் சாதனந் தேடப் பிரியா நிற்றல். கணவன் செய்யும் தவம் காதலிக்கும், காதலி செய்யும் புண்ணியம் கணவற்கு மாதலின், பிறர் முயற்சியாற் பெறும் சாதன்ங்களான் எய்தும் பயன் நம் இருவர்க்கும் அன்றிப் பொருளுடையார் மேற்சேறலின் நாமே முயலவேண்டும் என்றலின் அதுவே தானாய்த் தானேயதுவாய்ப் பேசிய கருணையாயிற்று என்க. இது இருபது கிளவிகளையுடையது.

## வாட்டங் கூறல்

**'பிரிவை உரைக்கின் பிரிவிலை ஆதலால்**
**நீயே உரையென அருளோடு இயம்பியது'**

யான் தலைவியின் புறம் தைவந்து இம்மையின்பமும் மறுமையின்பனும் பொருளான் வரும் என்றேனாக, அவள் கண் பனிமல்க வாடினள்; ஆதலால் இன்று யான் பொருள்வயிற் பிரி வேன் என்று எதிரில் இயம்புவேனாயின் பிரிவேயில்லையாம் ஆதலால் மிக வாடாவண்ணம் பெற்றியும் காலமும் அறிந்து கூறுக எனத் திருவருளுக்கு உயிர் உரையாநிற்றல். பிரிவுரைக்கின்ற பிரிவிலை என்ற பாடம் தவறுடையது என்பதனை, 'இன்புரைக்கின் மன்பரிவுறுமென அன்பாம் உயிரே அருளுடனுரைத்தல்' என்னும் வியாக்கியானக் கொளு கொண்டும் தெளிக.

முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னான் முடியுமெனப்
பனிவருங் கண்பர மன்திருச் சிற்றம் பலமனையாய்
துனிவரு நீர்மையி தென்னென்று தூநீர் தெளித்தளிப்ப
நனிவரு நாளிது வோவென்று வந்திக்கும் நன்னுதலே. 332

பொ - ரை: துறவி கருதும் மறுமையின்பமும் மன்னன் கருதும் இம்மையின்பமும் பொருளான் முற்றுப்பெறும் என்று யான் பொதுவகையாற் கூற, அக் குறிப்பறிந்து அவள்கண் பனியா நின்றது; அங்ஙனம் அவள் வருந்த, பரமன் எழுந்தருளியிருக்கும் சிற்றம்பலத்தை ஒத்தவளே! நீ துன்பம் வருந்தன்மை எக் காரணத் தான் வந்தது? யான் பிரியேன் என்று தூயநீரைத் தெளிவிக்க, அறிவுபெற்ற அவள், அறிவழிந்து கிடந்த காலத்தை யான் பிரிந்த

காலமாகவே எண்ணி, பெருள்வயிற் பிரிந்த நீர் தாமதித்து வருநாள் இதுவோ என்று நன்னுதலாள் வணங்கி நின்றாள்; ஆதலால் நீ அவட்கு உணர்த்தமாற்றான் உணர்த்துக என்றவாறு.

பொதுவகையான் உணர்த்தவே உணர்வு இழந்தநிலை உறுமானால் முன்னின்று விளங்கக்கூறின் விளைவு என்னாம்? ஆதலால் யான் கூறேன்; நீயே கூறுக என்று உயிர் உரைத்தவாறு. (1)

## பிரிவு நினைவுரைத்தல்

**'அநுபவப்பொருளை அளவளாவுதலே பிரிவு என இன்புக்கு அருள் இயம்பியது'**

நுகர்ச்சிக்குரிய சாதனங்களோடு கலந்து நுகரப் படுபொருளாகிய சிவமாகிய நின்னைப் பிரிதலே பிரிவாம் என்று இன்புருவச் சிவத்திற்குத் திருவருள் இயம்பியது.

வறியார் இருமை யறியார் எனமன்னு மாநிதிக்கு
நெறியா ரருஞ்சுரஞ் செல்லலுற் றார்நமர் நீண்டிருவர்
அறியா அளவுநின் றோன்றில்லைச் சிற்றம் பலமனைய
செறிவார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் திருநுதலே. 333

பொ - ரை: திருமாலும் பிரமனுமாகிய இருவர் அடியும் முடியும் அறியாத எல்லையின்கண் நீண்டு நின்றவனது திருச்சிற்றம்பலத்தை ஒத்த செறிந்த நீண்ட கரிய கூந்தலையும் வெள்ளிய பற்களையும் சிவந்த வாயினையுமுடைய திருநுதால்! பொருளில்லாதவர்கள் இருமையின் இன்பத்தையும் அறியார்கள் என்று கருதி நிலை பேறுடைய பெரிய செல்வத்தைத் தேடுவதற்கு, வழி அறிதற்கரிய அருஞ்சுரத்தை நமர் போதலுற்றார் எ-று.

வறியார் இருமையின்பம் அறியார் என்று கருதி அதனைத் தேடிப் பெற்று வருதற்காகவே இப் பிரிவினை உயிர் மேற் கொண்டது எனத் திருவருள் சிவத்திற்கு உரைத்தது காண்க. (2)

## ஆற்றாது புலம்பல்

**'பிரிவு இலையெனில் பிரிவு உண்டோ என்ன அருளுக்கு இன்பே ஆர உரைத்தது'**

திருவருட்டோழி பிரிவு இல்லை இல்லை என்றுகூறி இப்போது பிரிவை உணர்த்தினாள்; இதற்கு யான் கூறுவதற்கு யாதுளது என்று இன்பச்சிவம் அருளுக்கு அறிவித்துப் புலம்பாநிற்றல்.

சிறுவாள் உகிருற் றுறாமுன்னஞ் சின்னப் படுங்குவளைக்
கெறிவாள் கழித்தனள் தோழி எழுதிற் கரப்பதற்கே
அறிவாள் ஒழிகுவ தஞ்சனம் அம்பல வர்ப்பணியார்
குறிவாழ் நெறிசெல்வர் அன்பரென் றம்ம கொடியவளே. 334

பொ - ரை: தோழியாகிய கொடியவள், யான் மையெழுதத் தொடங்கின் எழுதுகின்ற காலம் அவ்வளவும் காதலர் தோன்றாமையால் யான் மையெழுதாமையை அறிவாள்; சிற்றம்பல நாதனை வணங்காதவர்கள் வணங்காமைக்கு அடையாளமான நெறியிடத்து அன்பர் செல்வார் என்று, ஒளியையுடைய சிறிய நகம் சிறிதே பொருந்தவும் பொருந்துவதற்கு முன்னே பொடிபடும் குவளைப் பூவிற்கே வெட்டுதற்குக் கருவியாக வாளை உறைகழித்தாள்; யான் கூறுவது உண்டோ? என்றவாறு.

நகம்படுவதற்கு முன்பே பொடிபடும் குவளை மலருக்கு வாளை உறை கழித்தாற்போல, பிரிவிலை பிரிவிலை என்று கூறிவந்த திருவருட்டோழி அம்பலவாணரைப் பணியாதார் செல்லும் தீநெறிக்கண் உயிர்த்தலைவர் செல்வார் என்று இப்போது உரைத்தது என்னே என்று இன்புருவச்சிவம் புலம்பியவாறு காண்க. (3)

## ஆற்றாமை கூறல்

**'பிரிந்தவளாவலால் வரும்பெரும் போதம்**
**திருமேனி தன்னில் திகழும் என்றது'**

நீ பொருள்தேடப் பிரியின் பிரிவுநோயால் அவள்முலை பொன்பூக்கும்; கண் முத்தம் சொரியும்; நெடுந்தூரம் போய் நீ தேடும் பொருள் யாது? என்று திருவருள் உயிருக்குச் சிவத்தின் பிரிவாற்றாமை கூறாநிற்றல்.

**வானக்கடிமதிற் றில்லையெங் கூத்தனை யேத்தலர்போல்**
**கானக் கடஞ்செல்வர் காதல ரென்னக் கதிர்முலைகள்**
**மானக் கனகந் தருமலர்க் கண்கண்முத் தம்வளர்க்கும்**
**தேனக்க தார்மன்னன் என்னோ இனிச்சென்று தேர்பொருளே. 335**

பொ - ரை: மேகங்களை உடைய காவலோடுகூடிய மதிலாற் சூழப்பட்ட தில்லையில் எழுந்தருளியுள்ள எம் கூத்தப் பெருமானை வாழ்த்தாதார் போல, காதலர் கானகத்தையுடைய சுரத்தே செல்வர் என்று சொல்ல, ஒளியையுடைய முலைகள் பெருமையோடுகூடிய பொன்னைத் தாராநின்றன; மலர் போலும் கண்கள் முத்தம் சொரிந்தன; அதனால் தேனொடு மலர்ந்த மாலையையுடைய மன்னனே! இனி நீ சென்று தேடும்பொருள் யாதோ? என்றவாறு.

மானம் - பெருமை. கனகம் தருதலாவது சுணங்கு பூத்தல். இதனால் பிரிந்த சிவத்தலைவியின் திருமேனியில் ஆவலால் சுணங்கு பூக்கும் என்று விளையும் உணர்ச்சியை உயிருக்குத் திருவருள் உணர்த்தியவாறு. (4)

## திணை பெயர்த்துரைத்தல்

**'பெற்ற உயிர்க்குப் பிரிவிலை என்றது'**

*எனக்கு அருளைப் புலப்படுத்தி எத்தனையோ புகழுரைகளையும் புனைந்துரைகளையும் கூறி எம் கருணையை முழுதும் பெற்ற உயிர், என்றும் எம்மைப் பிரியாது சார்ந்தேயிருக்கும்; இது வேறுயிராம் எனத் திணைபெயர்த்துரையா நிற்றல்.*

சுருடரு செஞ்சடை வெண்சுட ரம்பல வன்மலயத்
திருடரு பூம்பொழில் இன்னுயிர் போலக் கலந்திசைத்த
அருடரு மின்சொற்க ளத்தனை யும்மறந் தத்தஞ்சென்றோ
பொருடரக் கிற்கின் றதுவினை யேற்குப் புரவலரே. 336

*பொ - ரை: சுருண்ட செஞ்சடையில் வெண்மதியை அணிந்த அம்பலவனது பொதியமலைக்கண், இருண்ட பூம்பொழிலிலே இன்னுயிர்போல ஒன்றுபட்டு நமக்குக்கூறிய இனிய சொற்கள் அத்தனையும் மறந்து தாம் அத்தஞ்சென்றோ காவலர் தீவினை யேற்குப் பொருள்தரத் தொடங்குகின்றது; இது தகுமோ? என்றவாறு.*

*இனியன கூறி எம் கருணையைப்பெற்ற உயிராயின் அதற்குப் பிரிவு இல்லையாம்; இது வேறு; ஆதலால் பிரிந்தது எனப் பாலைத் தலைவனைப் புலத்தற்குரிய மருதத் தலைவனாக்கித் திணைபெயர்த்து உரைத்தவாறு.* *(5)*

## பொருத்தமறிந்துரைத்தல்

**'அருளும் பாராட்டல் அன்பேயன்றி
வேறள வளாவலும் வேண்டாம் என்றது'**

*திணை பெயர்த்து உயிரைப் புலந்து கூறிய சிவத்தலைமகளைக் கண்டு திருவருள், உயிர்க்குப் பொருள்மேல் அன்பேயன்றி வேறொன்றனொடும் கலப்பில்லை என்று உரையாநிற்றல்.*

மூவர்நின் றேத்த முதலவன் ஆடமுப் பத்துமும்மைத்
தேவர்சென் றேத்துஞ் சிவன்றில்லை யம்பலஞ் சீர்வழுத்தாப்
பாவர்சென் றல்கும் நரக மனைய புனையழற்கான்
போவர்நங் காதலர் என்னாம் உரைப்பது பூங்கொடியே. 337

*பொ - ரை: திருமாலும் பிரமனும் ருத்திரனுமாகிய மூவரும் நின்று துதிக்க எல்லாப் பொருளுக்கும் முதல்வனாகிய பெருமான் திருநடம்புரிய முப்பத்து மூன்றுகோடி தேவர்கள் சென்று ஏத்தும் சிவனது தில்லையம்பலத்தின் நன்மையைப் புகழாத பாவத்தை உடையார் சென்று தங்கும் நரகத்தை ஒக்கும், செய்தாற்போலும் அழலையுடைய காட்டைப்*

போவார் போன்றிருந்தார் உன் காதலர்; பூங்கொடி போல்வாய்! நான் உரைப்பது என் என்றவாறு.

தலையாய தேவர் மூவரும் ஏனைய முப்பத்து மூன்று கோடி தேவர்களும் நின்று ஏத்த முதலவன் நின்று ஆடும் தில்லை என்க. மூவராவார் பிர்மா, ருத்திரன், விஷ்ணு என்னும் மூவர். இந்திரன் என்பர் பேராசிரியர். உருத்திரராவார் இறைவனாணைவழி நின்று உலகு முதலியவற்றைத் தத்தம் காரணத்தொடுக்கிநிற்கும் பத முத்தியிலிருப்பார். முதல்வன் எல்லாம் தோன்றிநின்று அழியச் சங்காரகாரணனாயிருப்பவன். பாவர் - பாவத்தையுடையவர். (6)

## பிரிந்தமை கூறல்

### 'பிரிந்தும் பிரியாபோல் உயிர் அன்பை அருளே சிவத்துக்கு ஆர உரைத்தது'

உயிர் சாதனங்களைத் தேடப் பிரிந்தும் தாமே பிரிவுணர்த்தின் நீ மேனியொளி வாடுவை என உட்கொண்டு கடிதில் மீள்வதாகச் சொல்லிச் சென்றாரென்று திருவருள் சிவத்தலைவிக்கு உயிரகன்றமையைக் கூறாநிற்றல்.

தென்மாத் திசைவசை தீர்தரத் தில்லைச்சிற் றம்பலத்துள்
என்மாத் தலைக்கழல் வைத்தெரி யாடும் இறைதிகழும்
பொன்மாப் புரிசைப் பொழிற்றிருப் பூவண மன்னபொன்னே
வன்மாக் களிற்றொடு சென்றனர் இன்றுநம் மன்னவரே. 338

பொ - ரை: தெற்குத்திசை குற்றம் நீங்க எனது கருந்தலைக் கண் கழல்களை வைத்துத் தில்லைச் சிற்றம்பலத்திலே எரியேந்தி ஆடுகின்ற இறைவனது பொன்னாலாகிய பெரிய மதிலாற் சூழப் பட்ட பொழில்களையுடைய திருப்பூவண நகரை ஒத்த பெண்ணே! நம் மன்னர் வலிய பெரிய களிறுகளோடு இன்று பொருள்தேடப் புறப்பட்டார் என்றவாறு.

முன்னின்று உணர்த்த முடியாமையான் பிரிந்தும் பிரியாதது போல உயிர் சிவத்தின்பால் வைத்த அன்பைத் திருவருள் சிவத்திற்குக்கூறி, தலைவர் இன்று சென்றாரென்று உணர்த்தியவாறு.

கயிலையை உடையது வடக்கு, தில்லையை உடையது தெற்கு என இரு திசைகளுக்குமுள்ள ஏற்றத்தாழ்வு நீங்க இரு திசைகளிலும் பெருமான் தங்கினார் என்பார் 'தென்மாத்திசை வசைதீர்தர' என்றார் என்பாரும் உளர். 'தென்னாட்டவரும் சொர்க்கம்புகுதலால்' என்னும் தொடரால் தென்னாட்டவர் களுக்குச் சொர்க்கமில்லை என்ற ஒருவசையிருந்தது; அதனைத் தீர்க்க, தில்லையம்பலத்தில் சிவம் எழுந்தருளினார் என்பர் சிலர். 'தென்னாடுடைய சிவமே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா

போற்றி' என்பதனால் தென்னாடு சிவபோகமாகிய முத்தியை விரும்புவதன்றித் தோன்றி அழிதல்மாலைத்தாகிய சொர்க்கத்தை விரும்பாது என்பதே அத் தொடர்க்குக் கருத்தாமன்றித் தென்னாட்டவர் முத்தி எய்தார் என்பது கருத்தன்று. இது தென்னாட்டவர்க்குப் புகழன்றி வசையாகாததை உணர்க. தென்மாத்திசைக்கு இனி விளைய இருக்கும் வசைகள் தீர இறைவன் தில்லையில் எழுந்தருளினான் என்பதே கருத்து. என்மாத்தலைக் கழல்வைத்து என்பது மணிவாசகருக்கு இறைவன் திருவடி சூட்டிய நிகழ்ச்சியை உணர்த்துவது. (7)

## இரவுறு துயரத்திற்கு இரங்கியுரைத்தல்

### 'அருளுயிர்ப் பிரிவு சூனியத்திலுண்டே என இன்பக்கதிர்வரவு அன்பெடுத்துரைத்தது'

எல்லாம் உறங்கும் நடுஇருள் யாமமாகிய சூனியகாலத்தில் அருளோடு கூடிய உயிர் பிரிதலால் விளைந்த நோய் சிவத்தலைவியைப் பெரிதும் வருத்துமே; இன்பம் தருவதாகிய கதிர் எப்போது வருமோ? என்று சிவத்தலைவியின்பால் இரக்கங்கொண்ட திருவருட்டோழி உரையாநிற்றல்.

ஆழியொன் றீரடி யும்மிலன் பாகன்முக் கட்டில்லையோன்
ஊழியொன் றாதன நான்குமைம் பூதமும் ஆறொடுங்கும்
ஏழியன் றாழ்கட லும்மெண் டிசையும் திரிந்திளைத்து
வாழியன் றோவருக் கன்பெருந் தேர்வந்து வைகுவதே. 339

பொ - ரை: சக்கரமோ ஒன்று; பாகனோ இரண்டு கால்களும் இல்லாதவன்; இவ்வுறுப்புக் குறையோடு ஐந்து பூதமும் தத்தம் காரணத்தினுள் ஒடுங்கும் முக்கண்ணனாகிய தில்லையானுடைய ஊழிக்காலமும் ஒவ்வாத பெருமையை உடைய நான்கு யாமத்தும், ஏழு கடல்களையும் எட்டுத் திசைகளையும் திரிந்து இளைத்தன்றோ சூரியனது பெரிய தேர் ஈண்டு வந்து தங்கப் போகிறது; தேர் வருவது எப்போது? இவள் ஆற்றுவது எப்போது என்றவாறு.

சூரியன் தேருக்கு ஒற்றைச் சக்கரமாதலின் 'ஆழி ஒன்று' என்றார். (8)

## இகழ்ச்சி நினைந்தழிதல்

### 'முன்னும் பிரிவிலை பின்னும் பிரிவிலை ஆகிலும்மேனியைப் பிரிதல் அரிதென்றது'

உயிர் தனு கரண புவன போகங்களோடு பொருந்தாது கேவல நிலையில் செயலற்றுக் கிடந்தகாலத்தும் பிரிவு என்பது ஒன்றன்றிச் சிவத்தோடு உயிரால் உணரப்படாத ஒன்று

கானமர் குன்றர் செவியுற வாங்கு கணைதுணையாம்
மானமர் நோக்கியர் நோக்கென மானற் றொடைமடக்கும்
வானமர் வெற்பர்வண் டில்லையின் மன்னை வணங்கலர்போல்
தேனமர் சொல்லிசெல் லார்செல்லல் செல்லல் திருநுதலே. 274

பொ - ரை: தேன், இனிமையைக் கற்க விரும்பும் சொல்லினை யுடையாய்! கானில்வாழுங் குறவர் தம் காதுவரை இழுத்த கணையைத் தமக்கு வாழ்க்கைத் துணையாகிற மனைவியரது நோக்கொடு ஒக்கும் என்று கருதி அம்மானைக் குறித்த இலக்கினையுடைய அம்பை மடக்கிக்கொள்ளும் மேகங்கள் தங்கிய மலை நாட்டையுடைய நம் தலைவர் செல்கின்றாரல்லர்; அழகிய நுதலையுடையாய்! வளவிய தில்லைநாதனை வணங்காதாரைப்போலத் துன்பத்துச் செல்லற்க என்றவாறு.

நம் தலைவரது வெற்பின்கண் வாழ்வார் கருணை மிக்கவர்கள்; தம் துணைவியர் கண்ணையொக்கும் கண்ணை யுடையது என்று மானின்மேல் தொடுத்த கணையை மடக்கிக் கொள்ளும் தூய மனம் படைத்தவர்கள்; அத்தகைய குறவர் வாழும் மலைத்தலைவர் நாம் வருந்தச்செல்லார்; வருந்தற்க என்று மிக்க கருணையைச் செலுத்தும் சிவத்தலைவியை நோக்கித் திருவருள் உரைத்தவாறாம். (9)

## வழியொழுகி வற்புறுத்தல்

**'கருணை இங்ஙன மாயின் உயிரும்**
**இன்பேயாரும் என்று அன்புற உரைத்தது'**

பிரிவால் துன்புறுகின்ற சிவத்தின் கருணைமிகுதியைக் கண்டு திருவருள் யாம் உரையால்தேற்றிப் பயனின்றாம்; அதுகிடக்க இவ் வேறுபாடு இவட்குவந்தவாறென்னோ என்று அயலார் ஐயுறா நிற்பர்; அவர்கட்காகவேனும் யாம் ஆற்றி யிருத்தல் வேண்டும் என அவள்வழியொழுகி ஆற்றும்வண்ணம் வற்புறுத்தா நிற்றல்.

மதுமலர்ச் சோலையும் வாய்மையும் அன்பும் மருவிவெங்கான்
கதுமெனப் போக்கும் நிதியின ருக்குமுன் னிக்கலுழ்ந்தால்
நொதுமலர் நோக்கமொர் மூன்றுடை யோன்றில்லை நோக்கலர்போல்
இதுமலர்ப் பாவைக்கென் னோவந்த வாறென்பர் ஏந்திழையே. 275

பொ - ரை: அவரைக் கண்ணுற்ற தேன்சிந்தும் மலர்களை யுடைய சோலையையும், அவர் அன்று நின்னிற்பிரியேன் பிரியின் தரியேன் என்ற சூளுறவையும், நாடோறும் வழிவழியாக வளர்ந்துவந்த அன்பையும், நம்மொடு கலந்து திடீரென பாலையிற்பிரிந்த பிரிவையும், நிதி தேடுதற்குரிய முயற்சி

யினருமையையும் நினைத்து நீ இங்ஙனம் கலுழ்ந்தால், அயலார் முக்கட்பெருமானது தில்லையைத் தியானியாதார்போலத் தாமரைமலர் மேலிருக்கும் திருமகள் போன்றாளாகிய இவளுக்கு இவ் வேறுபாடு எதனால் வந்தது என்று ஐயுறா நிற்பர்; அதனால் நீ வருந்தற்க என்றவாறு.

பலநாளும் விரும்பிச் செய்த பணிகளால் வெளிப்பட்டு வளர்ந்துவந்த அன்பு, இன்று சொல்லாமல் விரைந்து பிரிந்தமையாற் சுருங்காது; எம்மிடம் பிரிவைக்கூறின் யாம் ஆற்றேம் என்ற அன்பின் மிகுதியாலாயதே என்று எண்ணி ஆற்றுக என வற்புறுத்தவாறாம். (10)

## வன்புறை எதிரழிந்து இரங்கல்

**'பின்னும் சிவமே பெருங்கருணையாயது'**

*திருவருள், சிவத்தின்வழியே ஒழுகி வற்புறுத்தாநிற்ப, பின்னும் சிவம் உயிர்த்தலைவன் சுத்தகேவலத்துப் பேரின்பம் எய்துதலாகிய வரைவிற் காலந்தாழ்த்த அதனை ஆற்றாது பெருங் கருணையாற் சிறந்து உயிர்க்கு இரங்கி வருந்திக் கூறாநிற்றல்.*

**வந்தாய் பவரையில் லாமயில் முட்டை இளையமந்தி**
**பந்தா டிரும்பொழிற் பல்வரை நாடன்பண் போவினிதே**
**கொந்தார் நறுங்கொன்றைக் கூத்தன்றென்றில்லை தொழார்குழுப்போல**
**சிந்தா குலமுற்றுப் பற்றின்றி நையுந் திருவினர்க்கே. 276**

பொ - ரை: கொத்துக்களாக நிறைந்த நல்ல கொன்றையை யணிந்த கூத்தப்பெருமானது அழகிய தெற்கின்கண்ணதாகிய தில்லைப்பதியைத் தொழாதார் கூட்டத்தைப்போல, கலக்க முற்றுப் பற்றுக்கோடின்றி வருந்தும் திருவினையுடையார்க்கு, சென்று ஆராய்வாரையில்லாத மயிலின் முட்டையை இளைய மந்தி பந்து விளையாடும் பெரிய பொழில்களையுடைய பலமலைகள் பொருந்திய நாட்டையுடையவனது இயல்போ இனிதாகா நின்றது என்றவாறு.

பாதுகாப்பாரில்லாத மயில்முட்டையால், ஈன்று வருத்தமறியாத இளமந்தி மயிலின் வருத்தமும் முட்டையின் மென்மையும் பாராது பந்தாடுவதுபோல, காதலரால் வினவப்படாத என் காமத்தை நீ இஃதுற்றறியாமையான் என் வருத்தமும் காமத்தின் மென்மையும் பாராது இவ்வாறு உரைக்கின்றாய் என உள்ளுறைவகையால் தோழியை நெருங்கி வன்புறை எழிரழிந்தவாறு கண்டுகொள்க என்பது பேராசிரியர் உரை. இதில் வரைவுநீடும் தலைவனிடம் சிவம் பின்னும் பெருங் கருணைகொண்டு திருவருளாகிய தோழியின் வற்புறுத்தற்கு எதிரழிந்து கூறினமை காண்க. (11)

## வாய்மை கூறி வருத்தந்தணித்தல்

**'உயிர்ப் பரிவெடுத்து அருள் உவந்து அரற்கு உரைத்தது'**

உயிர் என்றும் குறையாத மாறாத அன்புடையது; ஆதலால், சூள் தப்பாது என்று திருவருள் சிவத்தலைவிக்கு எடுத்தறிவித்தது.

மொய்யென்ப தேயிழை கொண்டவன் என்னைத்தன் மொய்கழற்காட்
செய்யென்ப தேசெய்த வன்றில்லைச் சூழ்கடற் சேர்ப்பர்சொல்லும்
பொய்யென்ப தேகருத் தாயிற் புரிகுழற் பொற்றொடியாய்
மெய்யென்ப தேதுமற் றில்லைகொ லாமிவ் வியலிடத்தே. 277

பொ - ரை: வலிமையையுடைய என்புகளையே தனக்கு அணியாகக் கொண்டவனும் அடியேனைத் தன்னுடைய வலிய திருவடிகளுக்கு ஆட்செய்யென்றே வெளிப்பட்டு நின்று ஆணை வழங்கியவனுமாகிய அம்பலவாணப் பெருமானது தில்லையைச் சூழ்ந்திருக்கின்ற கடற்றுறையை உடையவரது சொல்லும் பொய் என்பது நினக்குக் கருத்தாயின், சுருண்ட குழலையுடைய பொற்றொடியே! இவ்வுலகத்து மெய் என்பது சிறிதும் இல்லைபோலும் என்றவாறு.

உயிரின் உண்மையன்பையும், சொல்மாறாது நடக்கும் தூய்மையையும் திருவருள் சிவத்திற்குத் தெரிவித்து வருத்தம் தணித்தவாறு.

(12)

## தேறாது புலம்பல்

**'அருள் இயம்பியும் அரன் கருணைமிக்கு எழுந்தது'**

திருவருள் முன்நின்று இங்ஙனம் பலசொல்லித் தேற்றியும் சிவம் உயிரின் மாட்டுவைத்த பெருங்கருணையால் உயிரை ஆளுமாறு எங்ஙனே என்று தேறாது புலம்பியது.

மன்செய்த முன்னாள் மொழிவழி யேயன்ன வாய்மைகண்டும்
என்செய்த நெஞ்சும் நிறையுநில் லாவெனை தின்னுயிரும்
பொன்செய்த மேனியன் தில்லையு றாரிற் பொறையரிதாம்
முன்செய்த தீங்குகொல் காலத்து நீர்மைகொல் மொய்குழலே. 278

பொ - ரை: நெருங்கிய கூந்தலையுடையவளே! தலைநாட் புணர்ச்சியில் தலைவன் செய்த சூளுறவின்படி அதன் மெய்ம்மையைக் கண்டுவைத்தும் என் மனமும் என் நிறையும் என்னளவில் நிற்கின்றில; இவை என்செய்தன? அதுவுமன்றி என் இனிய உயிரும், பொன்னிறத்தை ஒத்த நிறமுடைய திருமேனியனாகிய சிவபெருமானது தில்லையை அடையாதாரைப்போல வருத்தம் பொறுக்கமுடியாததாக இருந்தது; இவை இப்படியாதற்கு ஏது யான் முன்செய்த தீவினையோ? அன்றிக் காலத்தின் இயல்போ அறிகின்றிலேன் என்றவாறு.

*நெஞ்சம் நில்லாமையாவது இத்துணைப் பரிபாகமும் சிவப்பணியும் செய்யும் உயிர் எம்மாட்டு உண்மையன் புடையதோ என்று ஐயப்படுதல். நிறை நில்லாமையாவது இவ்ஐயம் புறத்தார்க்குப் புலனாகா நிற்றல். பொன் செய்த மேனியன் என்பது 'பொன்செய்த மேனியினீர்' என்னும் திருப்பாடலை நினைவூட்டுவது. செய்த - உவமவுருபு. தில்லையை உறாதார்க்கு மலமாயை கன்மங்களான் உயிர்ப்பொறை மிகுதல் போலத் தமக்கும் உயிரிரக்கமாகிய பொறை மிகுவதாயிற்று என்று சிவம் தனிமையால் இரங்கியவாறு.* *(13)*

## காலம் மறைத்துரைத்தல்

### 'அருள்சிவம் நோக்கிக் காலம் அன்று என்றது'

*சிவத்தலைவி காந்தள் கருவுற்றதைக்கண்டு உயிர்த்தலைவன் உரைத்தகாலம் இதுவாம் என்று உட்கொண்டு கலங்காநிற்ப, நமர் தினைக்காகக் கடவுளைப் பரவ, கடவுளது ஆணையால் காலமன்றியும் கார் நீரைச் சொரிய, அதனை அறியாது காந்தள் மலர்ந்தது; நீயும் காலம் என்று கருதிக் கலங்கற்க எனத் திருவருள் சிவத்தை நோக்கிக் கூறாநிற்றல். அருள்சிவம் நோக்கிக் காலம் ஈது என்றது என்பது பிழைபட்ட பாடம். இன்பின்பிரிவு கண்டு அன்பால் காலம் இது அன்றென அருளே அறைதலாகும் என்பது வியாக்கியானம். இதுவும் முற்கருத்தை வலியுறுத்துதல் காண்க.*

**கருந்தினை யோம்பக் கடவுட் பராவி நமர்கலிப்பச்**
**சொரிந்தன கொண்மூச் சுரந்ததன் பேரரு ளாற்றொழும்பிற்**
**பரிந்தெனை யாண்டசிற் றம்பலத் தான்பரங் குன்றிற்றுன்றி**
**விரிந்தன காந்தள் வெருவரல் காரென வெள்வளையே.** 279

*பொ - ரை: வெள்வளையையுடையாய்! கரிய தினையைக் காப்பதற்காகக் கடவுளை வணங்கி நம்மவர் ஆரவாரிக்க, அக் கடவுள் ஆணையால் மேகங்கள் பருவமன்றியும் மழையைச் சொரிந்தன; அதனைக் கார்காலம் என்றுகருதி, மேன்மேல் பெருகிய பேரருளால் அடிமைக்குதவாத என்னையும் அடிமையாக்கி நடுநிலைமையின்றி ஆட்கொண்ட சிற்றம்பல நாதனது திருப்பரங்குன்றில் காந்தளும் நெருங்கி மலர்ந்தன; அதனால் தலைவன் கூறிய கார்காலம் இது என்று நீ அஞ்சவேண்டாம் என்றவாறு.*

*இதனால் திருவருள் காலம்மாறினும் தலைவர் சூள்பொய்யார் என்றவாறு காண்க.* *(14)*

## தூது வரவுரைத்தல்

### 'உயிர்க்கருணை யான் அறிவேன் என்றது'

இங்ஙனம் காலம் மறைக்கவும் கவலாநின்ற சிவத்தின் சிந்தையைக் களிப்பிக்கத் திருவருள், தோழியே! ஒரு தூது வந்திருக்கிறது என்று உரையா நிற்றல்.

**வென்றவர் முப்புரம் சிற்றம் பலத்துநின் றாடும்வெள்ளிக்**
**குன்றவர் குன்றா அருடரக் கூடினர் நம்மகன்று**
**சென்றவர் தூதுகொல் லோவிருந் தேமையும் செல்லல்செப்பா**
**நின்றவர் தூதுகொல் லோவந்து தோன்றும் நிரைவளையே. 280**

பொ - ரை: அடுக்கான வளையல்களை உடையவளே! முப்புரங்களை வென்றவரும் திருச்சிற்றம்பலத்தினுள் எழுந்தருளித் திருநடம் புரிகின்ற கயிலைவாணருமாகிய இறைவனது குறையாத அருள் கொண்டுவந்து கூட்ட நம்மோடு கலந்து நம்மைவிட்டுப் பிரிந்தவர் அனுப்பிய தூதோ? பிரிந்து வருந்துகின்ற எமக்கு இனிவரும் துன்பத்தைச் சொல்லாநின்ற அயலார் அனுப்பிய தூதோ? யாதோ ஒரு தூது வந்து தோன்றாநின்றது என்றவாறு.

வரைவு ஏற்பிக்கத் தூதனுப்புமளவு உயிர்க்குச் சிவத்தின் மாட்டுப் பேரன்பு பிறந்ததைத் திருவருள் சிவத்திற்கு உணர்த்தியவாறு.

திருவருள் கருணைமிகுதியால் மெலியும் சிவத்தைத் தேற்றுவதற்காக வந்த தூது இன்னாரது என்று அறியாதது போலக்கூறி உயிரின் பெருங்கருணையைச் சிவத்திற்குத் தெரிவித்ததாம். உயிர் கருணை உண்டாதலை அருள்கண்டு உரைத்தல் என்பது வியாக்கியானம். இதுவும் இப் பொருளை நன்கு விளக்கும். அங்ஙனமாகவும் 'உயிர்க்குக் கரணம் யான் வேறிலை என்றது' என்று பொருள் விளங்காத இயைபில்லாத பாடங்கொள்ளுதல் பிழையாம் என்க. *(15)*

## தூதுகண்டு அழுங்கல்

### 'கரணம் ஒன்றுண்டோ என அருள் கருதியது'

தூதுவரவு உரைப்பக்கேட்டுச் சிவத்தலைவி மனமகிழ் வோடு நின்று, இஃது அயலவர் தூதாகையால் வருவதும் போவது மாயிரா நின்றது; எம் தலைவர் தூது இன்னும் வரவில்லையே என்று அயலார் தூது வரவுகண்டு தலைவி வருந்தியது. சிற்றின்பக்கொளுவும் 'அயலுற்ற தூது வரக் கயலுற்ற கண்ணி மயலுற்றது' எனத் தலைவி கூற்றாகவே உரைத்தல் காண்க. 'முன்புறு கரணங்கண்டு இன்பு நின்றிரங்கல்' என வியாக்கியானக்

கொளுவும் இதனைக் கருதுகிறது. அங்ஙனமாகக் 'கரணம் ஒன்றுண்டோ என அருள் கருதியது' எனத் தோழி கூற்றாகப் பேரின்பக் கொளு இருப்பது நன்கு ஆராய்தற்குரியது. ஆதலால் பேரின்பக்கொளுவின் பாடம் வேறாக இருத்தல் வேண்டும்.

**வருவன செல்வன தூதுக ளேதில வான்புலியூர்**
**ஒருவன தன்பரின் இன்பக் கலவிகள் உள்ளுருகத்**
**தருவன செய்தென தாவிகொண் டேகியென் நெஞ்சிற்றம்மை**
**இருவின காதலர் ஏதுசெய் வானின் றிருக்கின்றதே. 281**

பொ - ரை: அயலார் தூதுகள் வருவன செல்வனவாகா நின்றன; தூய புலியூர்க்கண் உள்ள ஒப்பற்ற சிவனுடைய அன்பரைப்போல மனமுருகும் இன்பக்கலவிகளைச் செய்து பின் என் ஆவியையும் உடன்கொண்டு சென்ற, எனது நெஞ்சில் தன்னையிருத்தின காதலர் இன்னும் இன்று தூதனுப்பாது சும்மா இருப்பது என்னசெய்யக் கருதியோ? என்றவாறு.

சிவம் கருணைமிக்கு, உயிர் தன்னை எய்துதற்கரிய உபாயந்தேடாது வாளா இருத்தற்கு வருந்தியவாறு. (16)

## மெலிவுகண்டு செவிலி கூறல்

**'சிவம் உயிரோடு சேர்ந்ததென்று**
**திரோதை உணர்ந்து செப்பியதாகும்'**

தம்மை எய்துதற்குரிய பரிபாகமும் சிவபுண்யமும் திருவருட் சேர்க்கையும் இல்லாத அயலான்மாக்கள் பலர் வேடத்தால் மெய்யன்பர்போல நடித்து, உபாயங்களை மேற்கொண்டு, அவை முற்றுப்பெறாமற் போதலைக்கண்ட சிவத்தலைவி, பரிபாகமுற்ற உயிர் இன்னும் சுத்தகேவலத்து எய்தும் பரிபாகம் பெற்றிலதே யென்று இரங்கி மெலியாநிற்ப, அதனைக்கண்ட திரோதை சிவம் பண்டுபோல் இலது; கலப்பான்விளைந்த கலக்கமும் மெலிவும் படைத்துளது என்று அடிமுதல் முடிகாறும் உற்றுநோக்கிக் கூறாநிற்றல்.

**வேயின மென்றோள் மெலிந்தொளி வாடி விழிபிறிதாய்ப்**
**பாயின மேகலை பண்டையள் அல்லள் பவளச்செவ்வி**
**ஆயின ஈசன் அரர்க் கமரன்சிற் றம்பலத்தான்**
**சேயின தாட்சியிற் பட்டன ளாமித் திருந்திழையே. 282**

பொ - ரை: முள்ளிலா மூங்கிற்கினமான மெல்லியதோள் மெலிந்து ஒளிவாடி, விழிவேறுபட்டு, பரந்த மேகலையை யுடைய இவள் பண்டைத் தன்மையள் இல்லள்; அதனால், இத் திருந்திழை செம்பவளத் திருமேனி படைத்த ஈசனும்,

தேவதேவனும் ஆன சிற்றம்பலத்தானுடைய மகனான முருகன் ஆட்சிசெய்யும் இடத்தை எதிர்ப்பட்டாள்போலும் என்றவாறு.

சேயின் ஆட்சிக்குரிய இடத்து எதிர்ப்பட்டமையால் விழிவேறுபடுதல் ஒளிகுன்றல் முதலிய வேறுபாடுகளையுற்றாள் என்று கூறி இரங்கியவாறு.

சிவம், எங்குமாய் எல்லாமாய் எல்லையிலா ஆற்றலதாய் விளங்கும் நிலையிலிருந்து இரங்கி, உயிர்களையாட்கொள்ள அருளுருத்தாங்கி அவரவர் நிலைக்கு ஏற்ப இறங்கிவருகின்ற நிலையில், அஃதாவது உயிரொடு ஒன்றியிருக்குங் காலத்து, கோடிசூரியப் பிரகாசமான தன்னொளி குன்றி உயிரின் காணும்வன்மைக்கேற்பக் குறைதலும், விழி ஒன்றையும் பற்றாது வேற்றுக் குறிப்பாதலும் முதலான கருணையான் விளைந்த மாற்றங்களை ஏற்றன. ஆதலால், சிவம் சேயினதாட்சி யிற்பட்டதுபோலும் என்று திரோதை கூறியதாம்.

இப் பாடற்குப் பேரின்பக்கொளு பழைய பதிப்புக்களில் 'திரோதை சிவத்திற் சேர்ந்ததெனத் திரும்புதல்' என்றுள்ளது. இக் கொளு இப் பாடற்கருத்திற்குச் சிறிதும் இயைபில் லாமையும், 'சிவத்தின் உயிர்சேர் திறம் திரோதை கண்டு-ரைத்தல்' என்ற வியாக்கியானக்கொளு பழையபதிப்பின் பாடத்திற்குத் துணையாகாமையும் காண்க. இத்தகைய பாடபேதச் சிறப்புக்கள் பலவற்றையும் தந்து சைவத்தமிழைப் பாதுகாத்துவரும் திருவாவடுதுறை ஆதீனத்துச் செந்தமிழ் நூற்களஞ்சியச் சிறப்பினை உளங்கொண்டு மகிழ்க. (17)

## கட்டுவைப்பித்தல்

### 'திரோதை சிவத்தின் சேர்சின்னம் கண்டது'

அங்ஙனம் மெலிவு உணர்ந்து வருந்திய திரோதை சிவத்தினது அணங்கு சேர்ந்த அடையாளங்களைக் கட்டுவித்தியைக்கொண்டு கட்டுவைப்பித்து அறிந்து உரைத்தது.

சுணங்குற்ற கொங்கைகள் சூதுற் றிலசொல் தெளிவுற்றில
குணங்குற்றங் கொள்ளும் பருவ முறாள்குறு காவசுரர்
நிணங்குற்ற வேற்சிவன் சிற்றம் பலநெஞ் சுறாதவர்போல்
அணங்குற்ற நோயறி வுற்றுரை யாடுமின் அன்னையரே. 283

பொ - ரை: சுணங்கைப் பொருந்திய கொங்கைகள் சூதாடுகாயின் தன்மையை அடைந்தன இல்லை; சொற்கள் குதலைமை நீங்கி விளக்கம் பெற்றில; நல்லது கெட்டது அறியும்பருவம் அடையாதவள் இவள்; இத்துணை இளையளாயிருப்பதால், அன்னைமீர்! தன்னைவந்தடையாத திரிபுர அசுரர்களின் நிணத்தைக்குற்றிய சூலவேலையுடைய சிவனது சிற்றம்பலத்தை

*மனத்தால் நினையாதாரைப்போல இவ் வணங்கு உற்றநோயைத் தெளிய அறிந்து சொல்லுமின் என்றவாறு.*

*கருணைமிகாத இளம்பருவத்திலே இங்ஙனம் மெலிதற்குக் காரணம் அணங்குற்றதாதல் வேண்டும்; உண்மையை ஆராய்ந்து உரைமின் என்று திரோதை வேண்டியது.* (18)

## கலக்கமுற்று நிற்றல்

**'சிவத்துயிர் சேர்ந்த திறம் உலகறிதல்**
**அருள்கண்டு இது வழியாமோ என்றது'**

*கட்டுவிச்சியின் வாயிலாகச் சிவத்தில் உயிர்சேர்ந்து இன்பார்ந்த தன்மையைப் பிராகிருத உலகம் அறிந்துவிடக் கூடுமே என்று திருவருள்கண்டு, தன் தாயாகிய திரோதையை நோக்கி, இவள்மேனியின் மெலிவையுணர இது உண்மையான உபாயமாகாதென விலக்குதல்.*

**மாட்டியன் றேயெம் வயிற்பெரு நாணினி மாக்குடிமா**
**சூட்டியன் றேநிற்ப தோடிய வாறிவள் உள்ளமெலாம்**
**காட்டியன் றேநின்ற தில்லைத்தொல் லோனைக்கல் லாதவர்போல்**
**வாட்டியன் றேர்குழ லார்மொழி யாதன வாய்திறந்தே.** 284

*பொ - ரை: இவள் மனம்போன போக்கெல்லாம் புலப்படுத்தி, அன்றுதொட்டு தில்லைக்கண் எழுந்தருளியுள்ள பழைமைக் கெல்லாம் பழையனாகிய கூத்தப்பெருமானைக் குருமுகத்தான் அறியாதாரைப்போல வருந்த நம்மை வாட்டி, அழகிய கூந்தலை யுடைய பெண்கள் அன்றுரையாத பழியையும் வெளிப்படச் சொல்லி, இப்போது, எம்மிடமுள்ள பெரிய நாணத்தையும் கொன்றல்லவே, நாம் பிறந்த பெருங்குடிக்கும் குற்றமூட்டியன்றே இக் கட்டுவிச்சி நிற்பது; இனி என்செய்தும்? என்றவாறு.*

*கட்டிவித்தி குறிசொன்னால் நம் மறை அனைத்தும் வெளிப்படும்; குடி மாசுண்ணும்; நாணழியும் என்று திருவருள் வருந்திக் கூறியவாறு.* (19)

## கட்டுவித்தி கூறல்

**'சிவம் உயிருற்ற திவ்வியம் தெரிந்தது'**

*கட்டுவித்தி செவிலியாகிய திரோதையின் விருப்பபடிக் கட்டுவைத்துச் சிவம் உயிரைச்சார்ந்து இன்பூட்டியது என்ற தெய்வநிகழ்ச்சியைத் தெரிவிக்க, திரோதை தெரிந்தது.*

**குயிலிதன் றேயென்ன லாஞ்சொல்லி கூறன்சிற் றம்பலத்தான்**
**இயலிதன் றேயென்ன லாகா இறைவிறற் சேய்கடவும்**
**மயிலிதன் றேகொடி வாரணங் காண்கவன் சூர்தடிந்த**
**அயிலிதன் றேயிதன் றேநெல்லிற் றோன்றும் அவன்வடிவே.** 285

பொ - ரை: இது குயிலோசையன்றே என்று வியக்கத்தகும் இனிய மொழியாளாகிய உமாதேவியை ஒருகூற்றிலுடையானும் சிற்றம்பலத்தானும், இவன் தன்மை யாது என்று கூறமுடியாத இறைவனும் ஆகிய சிவபெருமானுடைய சேயாகிய முருகன் ஏறிச்செல்லும் மயிலன்றே இது; இது கொடியாகிய கோழி; காண்க; வலிய சூரனைக்கொன்ற வேலன்றே இது; இவை அனைத்தும் சொல்லுவதென்? பரப்பிய இந் நெல்லின் வந்து தோன்றுவது அவனுருவம் இதுவன்றே; எல்லீருங்காண்மின் என்றவாறு.

தன்னியல்பு தானறியாத் தன்மையனாகிய சிவனுடைய சேய் கடாவும் மயிலும், ஏந்தும் கொடியும், வேலும் தோன்றுதலின் இவளை அணங்கியது முருகன்றி வேறொன்றும் அன்று என்றாள் கட்டுவித்தி. இங்ஙனம் கூறின் குறிபார்த்துக் கூறல் பொய்யாம் எனின், ஆகாது; தலைவனுடன் கூட்டத்தைத் தெய்வமேறித் தானுணர்ந்தாளாயினும் அதனை வெளிப்படுத்தாது உலகியல் நோக்கி இங்ஙனம் உரைத்தாள். உரைத்தாளாயினும் தமிழர் மரபுபற்றி உண்மையுணருவர். இதற்குப் பேராசிரியர் கூறும் தடை விடைகள் தமிழர் மரபுக்கும் தெய்வநெறிக்கும் பேரரண் செய்துபோதலை உணர்ந்து நயங்காண்க.

இறைவன் இப்படியன் இவ் வண்ணத்தன் இவனிறைவன் என்று எழுதிக்காட்டொணாத் தன்மையனாதலானும், ஆரானுங்காண்டற்கரியன் ஆதலானும், தன்மை பிறராலறியாத தலைவன் ஆதலானும் 'இயல் இதன்றே என்னலாகா இறை' என்றார். *(20)*

## வேலனையழைத்தல்

### 'திரோதை சிவத்தின் செயல்வெளியாக்கல்'

கட்டுக்கேட்ட திரோதை வேலனையழைத்து வெறியாடப் பணித்துச் சிவம் உயிரோடு கலந்ததால் விளைந்த விளைவுகளை வெளிப்படுத்துதல். திரோதை சிவன் இன்பின்செயல் வெளிப்படுத்தல் என்பது வியாக்கியானம்.

**வேலன் புகுந்து வெறியா டுகவெண் மறியறுக்க**
**காலன் புகுந்தவி யக்கழல் வைத்தெழிற் றில்லைநின்ற**
**மேலன் புகுந்தென்கண் நின்றான் இருந்தவெண் காடனைய**
**பாலன் புகுந்திப் பரிசினின் நிற்பித்த பண்பினுக்கே.** 286

பொ - ரை: காலன் வலியவந்து தன் ஆற்றல் கெட்டொழிய ஒரு கழலைவைத்து அழகிய தில்லைக்கண்நின்ற மேலோனாகிய கூத்தப்பெருமான் புகுந்து எளியனாகிய என்னிடத்து நின்றான்; அவனிருந்த வெண்காடு அனைய இப் பிள்ளை இக் குடியிற்

*பிறந்து வெறியாட்டமாகிய இத்தன்மையில் நிற்பித்த பண்பினுக்கு வேலன் வந்து வெறியும் ஆடுக; வெள்ளாட்டுக் குட்டியையும் பலியாக அறுக்க என்றவாறு.*

*வெறியாடுதலில் மறியறுத்தல் ஒருகூறாயினும் வெறியாடலே தகாது; அதனுள்ளும் தகாதது மறியறுத்தல் என்பதுதோன்ற வேறு கூறினளாம். மகனை அன்னை வந்தாள் எனல்போலவும், மகளை அம்மா வா எனல் போலவும் உவகை முதலியனபற்றி இன்புறுதல் இலக்கணம். அவற்றுள் இது வெளிப்படையாக உவகைபோற்றோன்றினும் தம்குடி மாசுணலின் செறல் பற்றியதாகக் குறிப்பால் உணர்த்தப்பெற்றது. 'பாலன் புகுந்து இப்பரிசினின் நிற்பித்த பண்பினுக்கு' என்பதனால் சிவத்தின்செயலை வெளிப்படுத்தியவாறு காண்க.* *(21)*

## இன்னலெய்தல்

**'எங்கும் நாமன்றி இல்லையின்பு என்றது'**

*தாயர் வெறியாடுதற்கு வேலனை அழைப்பக்கேட்ட சிவத்தலைவி எங்கும் நமக்கு இன்பம் இல்லை என வருந்தாநிற்றல்.*

**அயர்ந்தும் வெறிமறி யாவி செகுத்தும் விளர்ப்பயலார்**
**பெயர்ந்தும் ஒழியா விடினென்னை பேசுவ பேர்ந்திருவர்**
**உயர்ந்தும் பணிந்தும் உணரான தம்பலம் உன்னலரின்**
**துயர்ந்தும் பிறிதின் ஒழியினென் னாதும் துறைவனுக்கே.** 287

*பொ- ரை: வெறியாடியும் மறியின் உயிரை மடித்தும் பின்னும் நிறவேறுபாடு ஒழியாதாயின் அயலார்பேசுவன என்னாம்; வெறியாட்டாகிய வேற்று நிகழ்ச்சியால் இவ் விளர்ப்பு ஒழியுமாயின் யாம் தலைவன் என்று தம்முள் மாறுபட்டு அயனும் திருமாலும் அன்னமாய்ப் பறந்துசென்றும் ஏனமாய்த் தாழ்ந்து சென்றும் அறியப்படாதவனது அம்பலத்தை நினையாதாரைப் போல வருந்தியும் இத் துறைவனுக்கு நாம் என்னாவோம்? இருவாற்றானும் உயிர்வாழ்தல் அரிது என்றவாறு.*

*இருவர் என்றது அயன் மால் இருவரையும். இறைவனை உணர வேண்டின் நான் என்னும் முனைப்பு அடங்கி எல்லாம் அவன்செயல் என்று அறிந்து பணிந்திருத்தலும், நம்மை அநாதியே பற்றியுள்ள மலமாயை கன்மங்களை அவனருள் நீரால் கழுவ, சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானத்தால் உயர்தலும் உபாயங்களாம்.*

*அதிகாரமலத்தில் கட்டுண்ட அவர்களிருவரும் அன்னமாய்ப் பறந்து உயர்ந்தும், பன்றியாய்த் தோண்டித் தாழ்ந்தும் உணராராயினர், வருந்தினர் என்பதாம். இறைவனை உயர்ந்தும் பணிந்தும் உணர*

முடியாதது போல எமக்கு விளர்ப்பு ஒழியினும் ஒழியாதுவிடினும் துன்பமேயாம் என்று இயையும் கொள்க. (22)

## வெறிவிலக்குவிக்க நினைதல்

### 'யாமன்றிப் பிறவிலை என்று அன்பு இயம்பியது'

இந் நிலையில் உயிரால் யாமடைந்த இந் நோய் பிறராற் சிதைக்கப்படின் நாண் துறந்து நாமே வெறிவிலக்குவிப்போம் எனச் சிவம் வெறிவிலக்குவிக்க நினையாநிற்றல்.

அன்பு - சிவம், யாமன்றி - திருவருளாகிய நீயும் சிவமாகிய யானுமன்றி, பிற இலை - வெறியை விலக்கும் உபாயம் வேறு இல்லையாம் எனப் பொருள் கொள்க.

சென்றார் திருத்திய செல்லனின் றார்கள் சிதைப்பரென்றால்
நன்றா அழகிதன் றேயிறை தில்லை தொழூரிணைந்தும்
ஒன்றாம் இவட்கு மொழிதல்கில் லேன்மொழி யாதுமுய்யேன்
குன்றார் துறைவர்க் குறுவேன் உரைப்பனிக் கூர்மறையே. 288

பொ - ரை: மிக வருந்தியும் என்னோடு உயிர் ஒன்றாய்ப் பழகுகின்ற தோழியாகிய இவளுக்கும் நாணினால் உரைக்க மாட்டுகிலேன்; உரையாமலிருந்தாலும் வேறொருவழியால் உயிர்வாழ மாட்டேன்; ஆதலால் மணற்குன்றுகள் நிறைந்த துறையை உடைய தலைவர்க்குச் சிறந்த யான் இந்த மிக்க மறையை இவட்குச் சொல்லுவேன்; தலைவன் உண்டாக்கிய இந்த நோயைத் தீர்ப்பவர் முருகனோ? பிறரோ? யாரோ? சிலராயின் இது மிகவும் அழகிது என்றவாறு.

வெறி என்பது திணைத்தெய்வ வழிபாடாதலானும், அணங்குகொண்டார் ஆட்டமாதலானும், உயிர்க்கொலையை முதன்மையாகக் கொண்டமையானும் உயிரிரக்கத்தையே பண்பாகக்கொண்ட நாம் - இன்ப அன்பாகிய சிவத்தையே வழிபடும் நாம் நாணைத் துறந்து மறையை உரைத்தாவது விலக்குதல் இன்றியமையாததாம் என யாமன்றிப் பிறரில்லாமையை அன்பு உணர்த்தியவாறு. (23)

## அறத்தொடு நிற்றலை உரைத்தல்

### 'சிவமே அருட்கு உயிர்ச்செய்தி உரைத்தது'

எதுவரினும் வருக; சத்தியமாகச் சொல்கிறேன்; இதனைக் கேள் என்று சிவமே திருவருளுக்கு உயிரின் செயலைக் கூறாநிற்றல்.

யாயும் தெறுக அயலவர் ஏசுக ஊர்நகுக
நீயும் முனிக நிகழ்ந்தது கூறுவல் என்னுடைய

**வாயும் மனமும் பிரியா இறைதில்லை வாழ்த்துநர்போல்**
**தூயன் நினக்குக் கடுஞ்சூள் தருவன் சுடர்க்குழையே.** 289

*பொ - ரை:* ஒளிவிடுகின்ற குழையை உடையவளே! எனது வாயையும் மனத்தையும் பிரியாத இறைவனது தில்லையை வாழ்த்துகின்றவர்களைப் போல, தூயேன் நினக்குக் கடிய சத்தியத்தைச் செய்துதருவேன்; அயலார் ஏசுக; ஊர் நகுக; தாயும் வெகுளுக; நீயும் என்னை வெறுக்க; நடந்ததை நான் சொல்லுவேன் கேட்பாயாக என்றவாறு.

உயிரின் செய்தியை யான் உரைக்கும்போது இத்தனை ஏச்சும் பேச்சும் பிறக்கும்; வெறுப்பும் மூளும்; ஆயினும் நடந்தது இது என்று சிவத்தலைவி அறத்தொடு நிற்றலை உரைத்தவாறு.

வாயும் மனமும் பிரியா இறை என்றது "மனத்தகத்தான் வாக்கினுள்ளான்" என்ற அரசின் தாண்டகப் பகுதியை நினைவுறுத்துவது. தூயன் என்பது தன்மை ஒருமைவினைப் பெயர்ச்சொல். (24)

## அறத்தொடு நிற்றல்

### 'அருட்சிவமே எடுத்தியம்பியது'

அறத்தொடுநிற்க முற்பட்ட சிவம் உயிர்க்கலப்பை அப்படியே சொல்லாமல் யான் கடற்கரையில் விளையாட, கரைபுரண்டு வந்த கடலோதம் என்னை அடித்துக் கொண்டுபோக அஞ்சி, தோழியோ தோழியோ என்று நின்னை விளித்தேன்; அவன் அருளோடுவந்து தன் கை தந்தான்; அதனை நின் கை என்று தீண்டினேன்; அவன் என்னைக் காத்துக் கரைக்கண் விட்டுப் போயினான்; இதுகாறும் அதனை நாணினால் உன்னிடம் சொன்னேனல்லேன் என்று அறத்தொடு நிற்றல்.

**வண்டலுற் றேமெங்கண் வந்தொரு தோன்றல் வரிவளையீர்**
**உண்டலுற் றேமென்று நின்றதொர் போழ்துடை யாண்புலியூர்க்**
**கொண்டலுற் றேறுங் கடல்வர எம்முயிர் கொண்டுதந்து**
**கண்டலுற் றேர்நின்ற சேரிச்சென் றானொர் கழலவனே.** 290

*பொ - ரை:* விளையாடுகின்ற எங்களிடத்து ஒரு தோன்றல், வரிவளையீர்! நும் சிறுமனைக்கு உண்ணக்கருதி வந்தோம் என்று சொல்லி நின்றபொழுது, எல்லாவற்றையும் உடைமையாகக் கொண்ட புலியூர் எல்லையிலே கீழ்காற்று மோதக் கரைமேல் வந்து ஏறும் கடல் என்மேல்வர என் உயிரைக்காத்து எனக்குத் தந்து வீரக்கழலை அணிந்த ஒருவன் கண்டல் மரம் அழகுசெய்யும் சேரியின்கண் சென்றான்; இனித் தக்கது செய்க எ-று.

இது சிவமே உயிர்மாட்டு அருள்புரிந்து கலப்புண்மையை இயம்பியவாறு காண்க. (25)

## ஐயந்தீரக் கூறல்

### 'அருளே சிவத்தை வியந்தெடுத்து உரைத்தது'

சிவம் அறத்தொடு நிற்கக் கேட்ட திருவருள், குடிக்குப் பழிவரினும் உயிர்க்குப் பழிவராமல் உண்மையை மறைத்துக் கூறுமது என்னோ எனச் சிவத்தைப் பாதுகாத்தல் தோன்றக் கூறாநிற்றல்.

**குடிக்கலர் கூறினுங் கூறா வியன்றில்லைக் கூத்தனதாள்**
**முடிக்கல ராக்குமொய் பூந்துறை வற்கு முரிபுருவ**
**வடிக்கலர் வேற்கண்ணணி வந்தன சென்றுநம் யாயறியும்**
**படிக்கல ராமிவை யென்னாம் மறைக்கும் பரிசுகளே. 291**

பொ - ரை: வளைந்த புருவத்தையுடைய மாவடுவின் வகிர்போலப் பரந்த வேல்போலும் கண்ணையுடையவளே! யாராலும் உரைக்கமுடியாத அகன்ற பெருமையையுடைய தில்லைக் கூத்தருடைய தாள்களைத் தன்முடிக்குப் பூவாக்கும் மொய்த்த பூக்களையுடைய துறையை உடையவனுக்கு வந்தன வாகிய பழிகளைப் பரவுதலால் நம் தாயும் அறிவாள்; உலகத்திற்கெல்லாம் அலராகும்; அதனால் நம் குடிக்கு அலர் கூறினாலும் இவற்றை மறைத்துச்சொல்லும் தன்மைகள் என்னோ? என்றவாறு.

ஆட்கொண்ட பிறகு ஆன்மாவிற்குப் பழி வரலாகாது என்று அருள்நோக்குடன் சிவம் வியந்தவாறு. (26)

## வெறிவிலக்கல்

### 'அருள் பிறிதொன்றுமிலை உயிர் சிவமே யாதல் கண்ட ஏது இயம்பியது'

உயிர் சிவமேயாயிற்று; அதற்குரிய ஏதுக்களே சிவத்திடம் விளங்குவவாயின; அஃதன்றி முருகணங்கிற்று என்பன முதலான பிற ஏதுக்கள் ஒன்றும் இல்லையாம் எனக் கூறித் திருவருள் வெறிவிலக்கா நிற்றல்.

**விதியுடை யாருண்க வேரி விலக்கலம் அம்பலத்துப்**
**பதியுடை யான்பரங் குன்றினிற் பாய்புனல் யாமொழுகக்**
**கதியுடை யான்கதிர்த் தோணிற்க வேறு கருதுநின்னின்**
**மதியுடை யார்தெய்வ மேயில்லை கொல்லினி வையகத்தே. 292**

பொ - ரை: இவ் வெறியாட்டில் கள்ளுண்ணும் விதியுடையார் கள்ளுண்ணுக; யாம் அதனை விலக்கேம்; அது கிடக்க; சிற்றம்

பலத்தை விருப்பமான பதியாக உடையவனது பரங்குன்றினில் பரந்த புனலோடு யாம் ஒழுக, எம்மை எடுத்தற்காக வந்தவனது ஒளிபொருந்திய தோள்கள் நிற்க, இந் நோய் தீர்தற்கு வேறு உபாயங்கருதும் நின்னைப்போலும் அறிவுடையார், தெய்வமே! இவ்வுலகத்து இப்போது இல்லைபோலும் எ-று.

இதனால், திருவருளாகிய தோழி இவள் மெலிவிற்குக் காரணம் எம்மை எடுத்தவன் தோள்களே; அணங்கன்று என்று கூறியவாறு.

வேரி - தேனுமாம். அம்பலத்து பதி உடையான் - அம்பலத்தே பதிதலையுடையான் எனலுமாம். பதிதல் - தங்குதல். கதி - செலவு. மதியுடையார் - குறிப்புமொழி. (27)

## செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது

### 'திரோதைக்கு அருளே சென்று இயம்பியது'

வெறியாட்டெடுப்பித்த தாயர்களில் திரோதையாகிற செவிலித்தாயர்க்கு அவள் மகளாகிய திருவருட்டோழியே சென்று, யாம் தினைப்புனங்காத்த காலத்து எம்மீதுவந்த யானையினின்று மீட்டார் ஒருவர் உளர் எனச் சிவம் உயிரொடு ஒன்றிய உண்மையினை உரைத்தது.

**மனக்கிளி யாயின்றி யான்மகிழ் தூங்கத்தன் வார்கழல்கள்**
**எனக்களி யாநிற்கும் அம்பலத் தோனிருந் தண்கயிலைச்**
**சினக்களி யானை கடிந்தார் ஒருவர்செவ் வாய்ப்பசிய**
**புனக்கிளி யாங்கடி யும்வரைச் சாரற் பொருப்பிடத்தே.** 293

பொ - ரை: மனக்களிப்புடன் இன்று யான் மகிழ்ச்சி மிகும்வண்ணம், தன் நீண்ட திருவடிகளை எனக்கு வழங்கும் அம்பலத்தானது பெரிய குளிர்ந்த கயிலைக்கண், எம்புனத்தில் வரும் சிவந்த வாயையுடைய பசிய கிளிகளை யாம் ஓட்டும் சிறுமலைகளையுடைய பெரிய மலையின்கண் ஒருவர் எம்மீது கோபத்துடன் வரும் மதக்களிப்பையுடைய யானையை மாற்றினார்; இனி ஏற்பது செய்க என்றவாறு.

யானையினின்று மீட்டார் என்ற குறிப்பால் சிவம் உயிரை ஆட்கொண்டு ஒன்றிய உண்மையைத் திரோதை அறியத் திருவருள் உணர்த்தியது. (28)

## நற்றாய்க்குச் செவிலி அறத்தொடு நிற்றல்

### 'திரோதை பரைக்குச் சென்று இயம்பியது'

திருவருள் வாயிலாக உண்மையறிந்த திரோதை, பரையின்பாற் சென்று, இளைய பருவத்தேயே இல்வாழ்க்கை ஏற்றுக்கொண்ட இவளை என்னசொல்லிப் புகழுவேம் என்று உரையாநிற்றல்.

இளையா ளிவளையென் சொல்லிப் பரவுதும் ஈரெயிறு
முளையா அளவின் முதுக்குறைந் தாள்முடி சாய்த்திமையோர்
வளையா வழுத்தா வருதிருச் சிற்றம் பலத்துமன்னன்
திளையா வருமரு விக்கயி லைப்பயில் செல்வியையே. 294

பொ - ரை: தேவர்கள் தலையைச் சாய்த்து வணங்கியும் வாழ்த்தியும் வரும் சிற்றம்பலத்தின்கண் உள்ளவனாகிய மன்னனது திளைத்துவரும் அருவிகள் இடைவிடாது ஒழுகுகின்ற கயிலைக் கட்பயிலும் திருவாட்டியை - இளைய பருவத்தாளாகிய இவளை என்னசொல்லிப் புகழுவேம்; முன்எழும் இருபற்களும் முளைப் பதற்குமுன்னே அறிவு முதிர்ந்தாள் என்றவாறு.

அறிவு முதிர்தலாவது சாரத்தக்காரைச் சார்த்தி நுகர்ச்சிப் பொருளாதல். திரோதை - செவிலி; பரை - நற்றாய். (29)

## தேர்வரவு கூறல்

### 'அருள் உயிர்வரவைச் சிவத்திற்கு இயம்பியது'

திரோதை பரைக்கு உண்மையுரைக்குங்கால் தேரொலி கேட்க, திருவருள் உள்ளமுவந்து ஓடிச்சென்று சிவத்திற்கு உயிரின்வருகை தெரிவியாநிற்றல்.

கள்ளினம் ஆர்த்துண்ணும் வண்கொன்றை யோன்றில்லைக் கார்க்கடல்வாய்ப்
புள்ளினம் ஆர்ப்பப் பொருதிரை ஆர்ப்பப் புலவர்கடம்
வள்ளினம் ஆர்ப்ப மதுகரம் ஆர்ப்ப வலம்புரியின்
வெள்ளினம் ஆர்ப்ப வரும்பெருந் தேரின்று மெல்லியலே. 295

பொ - ரை: மெல்லியல்! கள்ளை வண்டினங்கள் ஒலித் துண்ணும் வளவிய கொன்றை மாலையை உடையவனது தில்லையை அணைந்த கரிய கடலிடத்துப் பறவைகள் ஒலிக்க, கரையை வந்து மோதும் அலைகள் ஒலிக்க, புலவர்களின் வள்ளிய இனம் மங்கல ஒலியால் ஆர்ப்ப, வண்டுகள் ஆர்ப்ப, வலம்புரிச்சங்கம் ஒலிக்க இன்று நமது காதலரின் பெரிய தேர் வாராநின்றது என்றவாறு.

இதுகாறும் மணியொலியையும் அவித்துவந்த தேர் இன்று வரைந்தெய்த முழக்குடன் வாராநின்றது எனத் திருவருள் மகிழ்ந்து கூறியவாறு.

## மணமுரசு கேட்டு மகிழ்ந்துரைத்தல்

### 'சிவமணம் உயிர்பெறல் அருள்கண்டு மகிழ்ந்தது'

சிவமணம் சீவனுக்குள்ளே பூக்க இருப்பதைத் திருவருள் கண்டும், அதற்குரிய மணமுரசு இல்லில் முழங்குவதைக் கேட்டும் மகிழ்ந்துரையா நிற்றல்.

பூரண பொற்குடம் வைக்க மணிமுத்தம் பொன்பொதிந்த
தோரண நீடுக தூரியம் ஆர்க்கதொன் மாலயற்கும்
காரணன் ஏரணி கண்ணுத லோன்கடற் றில்லையன்ன
வாரண வும்முலை மன்றலென் றேங்கும் மணமுரசே. 296

*பொ - ரை : பழையர்களாகிய பிரமன் மால் இருவர்களுக்கும் மூல காரணனும் அழகிய நெற்றிக்கண்ணை யுடையவனும் ஆகிய கூத்தப்பிரானது கடல்சூழ்ந்த தில்லையை ஒத்த வாராற் கட்டப்படும் அளவைச்சென்று கலந்த முலைகளை உடையாளது மணமுரசு ஒலிக்கும்; அதனால் நிறைகுடம் வைக்க; மணியும் முத்தும் பொன்னில் அழுத்திய வாயிற்றோரணங்கள் எங்கும் ஓங்குக; வாச்சியங்கள் ஒலிப்பனவாக என்றவாறு.*

*மால் அயற்கும் காரணன் - மால் அயன் தோன்றுவதற்கும், தத்தம் தொழிலில் நிற்றற்கும் காரணனாக இருப்பவன் என்பதாம். நம்மைநோக்க நம் அனைவரையும் படைத்துக்காக்கும் அவர்கள் பழையராதலின் 'தொல்மால் அயன்' எனப்பெற்றது.*

## ஐயுற்றுக் கலங்கல்

### 'இன்னும் உயிர்க்கு இடையூறு உண்டோ என்றது'

*மணமுரசு கேட்டுத் திருவருள் மகிழ்ந்து மனையை அலங்கரியா நிற்ப, சிவம், கேட்கும் இம் முரசொலி எம்மால் ஆட்கொள்ளப்பெற்ற உயிர்க்கோ அன்றி வேற்றவர்க்கோ என்று ஐயுற்றுக் கலங்கிக் கூறாநிற்றல்.*

அடற்களி யாவர்க்கும் அன்பர்க் களிப்பவன் துன்பவின்பம்
படக்களி யாவண் டறைபொழிற் றில்லைப் பரமன்வெற்பின்
கடக்களி யானை கடிந்தவர்க் கோவன்றி நின்றவர்க்கோ
விடக்கறி யாநம் விழுநகர் ஆர்க்கும் வியன்முரசே. 297

*பொ - ரை: மிக்க மகிழ்ச்சியை விளைக்கும் நமது சிறந்த இல்லின்கண் முழங்குகின்ற இப் பெரிய முரசம், பிறவியான் வரும் துன்ப இன்பங்கள் தொலைய இயல்பான பேரின்பத்தை அன்பராயினார் யாவராயினும் அவர்களுக்கு வழங்கும், வண்டுகள் களித்து ஒலிக்கும் பொழிலையுடைய தில்லைநாதனது வெற்பிலே மதயானை நம்மீது வாராமல் மாற்றினவர்க்கோ அன்றி இயைபு ஒன்றும் இல்லாதவர்க்கோ அறியேன் என்றவாறு,*

*மிக்க விருப்பு ஐயத்தையே விளைக்கும் என்பது பழமொழி யாதலின், திருவருள் உண்மையுணர்ந்து மகிழவும் மனையைப் புனையவும், சிவம் அவ்வுயிர்தானோ அன்றி வேறோ என ஐயுற்றுக் கலங்குதல் காண்க. அடு அல்களி - அடுதல் செய்யாத பேரின்பம்.*

அடக்களி என்பது பாடமாயின், யான் என்னும் அகங்காரம் அழியப் பேரின்பந்தருவோன் என்க. (32)

## நிதிவரவு கூறாநிற்றல்

**'உடல் பொருள் உயிர் இன்பு உவந்தது என்றது'**

உயிர் இன்புருவாய சிவத்தை எய்தற்காக, உடல்பொருள் இவற்றைக் கொண்டுவந்து நம் கடைவாயிலில் தங்கியது என்று திருவருள் உவந்துரைத்தது.

**என்கடைக் கண்ணினும் யான்பிற ஏத்தா வகையிரங்கித்**
**தன்கடைக் கண்வைத்த தண்டில்லைச் சங்கரன் தாழ்கயிலைக்**
**கொன்கடைக் கண்டரும் யானை கடிந்தார் கொணர்ந்திறுத்தார்**
**முன்கடைக் கண்ணிது காண்வந்து தோன்றும் முழுநிதியே. 298**

பொ-ரை: கடையேனாகிய என்னிடத்தும் யான் பிறதெய்வம் தொழாவகைத் தனது கடைக்கண்ணருளை வைத்த குளிர்ந்த தில்லைக்கண் உளனாகிய சங்கரன் எழுந்தருளியுள்ள கயிலையிடத்து, தமக்கொரு பயனும் 'கருதாதே நமக்கு இறுதியைப் பயக்கும் மதயானையை அன்று ஓட்டியவர், நம் கடைவாயிலில் குறைவில்லாத செல்வத்தைக் கொணர்ந்து விட்டார்; இதனை நீ காண்பாயாக என்றவாறு.

ஐயுற்றுக் கலங்கிய தலைவியின் ஐயம் நீங்கத் திருவருள் யானையை வென்று நம்மைக் காத்தவரே நமர்வேண்டிய அளவைவிடப் பெருநிதியைக் கொணர்ந்து நம் கடைவாயிலில் குவித்தார்; சென்று காண்பாயாக என்று உணர்த்தியவாறு.

இயற்கைப்புணர்ச்சிக் காலத்தில் உயிரையும், வழி நாட்புணர்ச்சிக்கண் உடலையும் நும்மிடம் காணிக்கையாகக் கொடுத்த உயிர் இன்று பெரும் பொருளைத்தந்து, அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமையெல்லாமும் குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ என்று கூறி நிற்கின்றது என்பதாம். (33)

## 19. மணச்சிறப்புரைத்தல்

**'மணச்சிறப் புரைத்தல் வருமோ ரொன்பதும்**
**உயிர் சிவமணம் பெற்று உண்மையின்பாகிப்**
**பரைகடந்து இன்பப் பண்பால் நிற்றல்'**

சுத்த கேவலத்துச் சிவமும் உயிரும் கலந்த கலப்பாகிய வரைவுநிகழ்ந்த பின், இங்ஙனமிருந்தது என அதன் சிறப்புக் கூறுதல். உயிர் சிவமணம் பெற்று உண்மையாதல் என்பது வியாக்கியானம். இது ஒன்பது கிளவிகளையுடையது.

## மணமுரசு கூறல்

### 'உயிர் சிவமணம் சிவத்துக்கு அருளே உரைத்தது'

*மலம் காரியப்படாது தேய்ந்து வலிகுன்றிச் சத்திநிபாதமும் பெற்ற உயிர் சிவமணம் கூடற்கு முன்னறிவிப்பாகிய நாத ஓசை அநுபவம் பெற்றது என்று திருவருள் சிவத்துக்கு அறிவியாநிற்றல்.*

**பிரசந் திகழும் வரைபுரை யானையின் பீடழித்தார்**
**முரசந் திகழும் முருகியம் நீங்கும் எவர்க்குமுன்னாம்**
**அரசம் பலத்துநின் றாடும் பிரானருள் பெற்றவரிற்**
**புரைசந்த மேகலை யாய்துயர் தீரப் புகுந்துநின்றே.** 299

*பொ - ரை: நிறமுள்ள மேகலையை அணிந்தவளே! யாவருக்கும் முன்னோனாக விளங்கும் அரசனும், தில்லையம் பலத்தில் நின்று திருநடம் புரியும் தலைவனும் ஆகிய பெருமானது அருள்பெற்றாரைப்போல, நம் துன்பம் அகல, தேனொழுகும் மலையிடத்து யானையினது வலிமையை நம் பொருட்டு அழித்தவரது மணமுரசம் திகழ்கின்றது; அதுவேயுமன்றி வெறியாடல் காரணமாக முழங்கும் இசைக் கருவிகளும் நீங்காநின்றன; இனிக் குறையொன்றும் இல்லை என்றவாறு.*

*மணமுரசு கேட்கின்றது; நம் தலைவர் வந்துவிட்டார் எனத் தோழி தலைமகளுக்கு அறிவித்தவாறு.* (1)

## மகிழ்ந்துரைத்தல்

### 'அருளே சிவன் அநாதிக் கருணை வியந்தது'

*மணமுரசொலியாகிய நாதரிசனம் செய்த திருவருள், சிலம்பன் தந்த காணிக்கைகளை விடாமல் வைத்து அதுவே பற்றுக்கோடாக ஆற்றியிருந்தாள் சிவத்தலைவி எனச் சிவத்தின் அநாதியேயுள்ள கருணையை வியந்தது.*

**இருந்துதி யென்வயிற் கொண்டவன் யானெப் பொழுதுமுன்னும்**
**மருந்து திசைமுகன் மாற்கரி யோன்றில்லை வாழ்த்தினர்போல்**
**இருந்து திவண்டன வாலெரி முன்வலஞ் செய்திடப்பால்**
**அருந்துதி காணு மளவும் சிலம்பன அருந்தழையே.** 300

*பொ - ரை: அன்பர்கள் செய்யும் பெரிய துதிகளை என்னிடமும் உண்டாக்கிக் கொண்டவனும், யான் எப்பொழுதும் நினையும்வண்ணம் இன்சுவைத்தாய மருந்தாகவுள்ளவனும், பிரமனுக்கும் திருமாலுக்கும் அரியோனும் ஆகிய அம்பலவாணப் பெருமானது தில்லையை வாழ்த்தினர்போல, சிலம்பன் தந்த அரிய தழைகள், இப்போது தீயை வலம்வந்து வசிட்டமுனிக்கு*

இடப்பால் உள்ள அருந்ததி மீனைக் காணுமளவும் வாடாமலிருந்து விளங்கின என்றவாறு.

இதன் கருத்து, தழையை ஆதாரமாகக்கொண்டு வரையுமளவும் ஆற்றியிருந்தாள் தலைவி எனத் திருவருளாகிய தோழி மகிழ்ந்துரைத்தவாறு.

இரும் துதி - மனங்கனிவிக்கும் பெரிய தோத்திரங்கள்; இருந்துதி என்வயிற் கொண்டவன் என்பது, எனதுரை தனதுரையாக என்னொடு கலந்துநின்று வாழ்த்த வாய் தந்து வாழ்த்திக் கொண்டவன் என்பதாம். முன்னும் மருந்து - நினைந்து நினைந்து மகிழும் அமுதம்போல்வான். (2)

## வழிபாடு கூறல்

### 'அருள் திரோதைக்கு உயிர் அத்துவிதம் செப்பல்'

மணம் முடிந்தபின்னர் மணமனையில் இருவர்வாழ்வும் கண்டுகளிக்க வந்த திரோதைக்குத் திருவருள் உடம்பும் உயிரும் போல ஒருவரையொருவர் இன்றியமையாமையால், சிவத்தின் திருவுளக்குறிப்பை உயிர் கடவாது, கமலங்கலந்த தேனும் சந்தன மரமும் போலக் கூடிக் கற்பின்வழியே நின்று உயிர் சிவத்தின் குறிப்பில் ஒழுகாநின்றது என்று கூறாநிற்றல்.

**சீரிய லாவியும் யாக்கையும் என்னச் சிறந்தமையால்**
**காரியல் வாட்கண்ணி யெண்ணக லார்கம லங்கலந்த**
**வேரியும் சந்தும் வியறந் தெனக்கற்பின் நிற்பரன்னே**
**காரியல் கண்டர்வண் டில்லை வணங்குமெங் காவலரே. 301**

பொ - ரை: அன்னாய்! கரிய கண்டத்தையுடையவரது தில்லையை வணங்கும் எம் காவலராகிய உயிர்த்தலைவர் சீர்மையோடியலும், உடலும் உயிரும்போல் தம்முட் சிறந்தமையால் கரிய நிறமாகிய இயல்பினையுடைய ஒளி பொருந்திய கண்களையுடையாளாகிய நும் மகளது கருத்தைக் கடவார்; தாமரைத்தேனும் சந்தனமரமும் சுவையும் மணமும் அவற்றைத் தாங்கிய பொருளுமாய்த் தம்முளியைந்து தம் இடப்பெருமையை விளக்கினாற்போல இவர்களும் தம்முட்கூடி, இவளது வழிபாட்டின்கண்ணே நிற்பர் எ-று.

தாமரைத்தேன் முதலாயின பிறந்த இடத்திற்கேற்ற மணத்தையும் பொருளுக்கேற்ற சுவையையும் பொருந்திக் குலப்பெருமையும் குணமும் தோன்ற நின்றதுபோல, இருவரும் தாம் பிறந்த குடிப்பெருமையும் குணநலமும் தோன்ற வாழ்கின்றனர் என்பதாம். (3)

## வாழ்க்கை நலங்கூறல்

### 'திரோதை பரைக்கு உயிர்சேர் இன்பு உரைத்தது'

*மணமனையில் சிவம் உயிர் அவை தம்முள் ஒன்றிவாழும் இன்பவாழ்வைக் கண்ட திரோதை, தன்மனை சென்று பரைக்கு, உன்னைப்போல அவ்விருவரும் இன்ப அன்பால் வாழ்கின்றனர் எனக் கூறாநிற்றல்.*

**தொண்டினம் மேவுஞ் சுடர்க்கழ வேலன்றில்லைத் தொன்னகரில்**
**கண்டன மேவுமில் நீயவள் நின்கொழு நன்செழுமென்**

**தண்டின மேவுதிண் டோளவன் யானவள் தற்பணிவோள்**
**வண்டின மேவுங் குழலாள் அயன்மன்னும் இவ்வயலே.** 302

*பொ - ரை: தொண்டர்கூட்டத்து விரும்பி எழுந்தருளும் ஒளிவிடுகின்ற கழலையுடையானது தில்லையாகிய பழையநகரில், யான்கண்ட இல்லம் நம் இல்லத்தோடொக்கும்; நின்மகள் நின்னோடு ஒப்பள்; தண்டுக் கூட்டங்களையொக்கும் வளவிய மெல்லிய திண்ணிய தோள்களையுடையான் நின் கொழுநனோ டொக்கும்; அவளைப் பணிந்து குற்றேவல் செய்வாளாகிய என் மகள் என்னோடு ஒப்பள்; வண்டுக் கூட்டங்கள் மொய்க்கும் கூந்தலையுடையாளது சுற்றுப்புறம் இச் சூழலை ஒக்கும்; வேறு சொல்லவேண்டுவது யாது? என்றவாறு.*

*அனைத்தானும் நின்மகள் நின்னை ஒப்பாளாய் அனனியமாய் ஆன்மாவுடன் கலந்துநின்றாள் என்பதாம். தண்டு - மூங்கில். தலைவன்தோள் தலைவிக்கு ஊறினிமை பயத்தலின் 'தண்டினமேவும் தோள்' என்றாள். (4)*

## காதல் கட்டுரைத்தல்

### 'திரோதை பரைக்கு உயிர்செய் பணி உரைத்தது'

*அவர்கள் வாழ்வின் சிறப்பு ஒருபுறமிருக்க, உயிர் சிவத்தின்மேல் வைத்த கட்டுக்கடங்காத காதலால், நெற்றியில் பொட்டெழுதினும் பொறையாம் என்று பொட்டும் எழுதாமல் காத்து வருகின்றது எனத் திரோதை பரைக்கு உயிரின் தொண்டுநலம் சொன்னது.*

**பொட்டணி யானுதல் போயிறும் பொய்போல் இடையெனப்பூண்**
**இட்டணி யான்றவி சின்மல ரன்றி மிதிப்பக்கொடான்**
**மட்டணி வார்குழல் வையான் மலர்வண் டுறுதலஞ்சிக்**
**கட்டணி வார்சடை யோன்றில்லை போலிதன் காதலனே.** 303

*பொ - ரை: மகுடமாகக் கட்டப்பட்ட அழகிய நீண்ட சடையையுடையானது தில்லையை ஒப்பாளின் காதலன்,*

பொய்போலும் இடை ஒடியுமென்று அணிகலன்களை அணிவியான்; அடி நோவும் என்று மலர்த்தவிசில் மிதிக்க நேரினும் காம்புகளைந்த அனிச்ச மலர்களின் மீதன்றி மிதிக்க விடான்; வண்டுகள் மொய்த்தற்கு அஞ்சி, கூந்தற்கண் தேனோடு கூடிய புதிய பூக்களைச் சூட்டான் என்றவாறு.

இவை சிவத்தின் அருமையினை அறிந்த ஆன்மாவின் செயல்களாம் எனத் திரோதை பரைக்கு உரைத்தது. (5)

## கற்பறிவித்தல்

### 'திரோதை பரைக்கு இன்பாக அறத்திறம் உவமைத்திறத்தால் உவந்து உரைத்தது'

இங்ஙனம் உயிரின் பேரன்பை உரைத்த திரோதை, இஃதிருக்க, சிவம் உயிரையன்றி வேறொரு பொருளுளதாகக் கருதாது; அதனால் உயிரும் பிரிந்து சிவத்தொண்டு புரிய எங்கேகினும் மீளவந்து சிவத்தின் இல்லில் அதன்பக்கல் உறைவதன்றி வேறு எங்கும் தங்கியறியாது; இதுவே சிவம் உயிர் இரண்டன் இயல்பு எனப் பரைக்கு உவம வாயிலாக விளக்கி உரைத்தது.

**தெய்வம் பணிகழ லோன்றில்லைச் சிற்றம் பலமனையாள்**
**தெய்வம் பணிந்தறி யாளென்றும் நின்று திறைவழங்காத்**
**தெவ்வம் பணியச்சென் றாலுமன் வந்தன்றிச் சேர்ந்தறியான்**
**பௌவம் பணிமணி யன்னார் பரிசின்ன பான்மைகளே. 304**

பொ - ரை: பிறரால் வழிபடப்பெறும் தெய்வங்கள் தாம் உய்ய வணங்கும் கழலோனது தில்லைச் சிற்றம்பலத்தையொத்த தலைவி என்றும் பிற தெய்வங்களைத் தொழுதறியாள்; முன்னின்று வணங்கிக் கப்பங்கட்டாத பகை காலில்விழுந்து வணங்கும் வண்ணம் அதனை வெல்லச் சென்றாலும் அம் மன்னவன் அவளில்லத்திலல்லது பிற இடங்களில் தங்கியறியான்; கடலீன்ற முத்தினைப்போல்வார் இயல்பு இத் தன்மையன என்றவாறு.

தலைவி தெய்வந்தொழாள் கொழுநற்றொழுதெழுவாளாக இருந்தாள் என்றதாம். கடல்தந்த முத்து இடத்தானும் ஒளியானும் தன்மையானும் உயர்ந்தே விளங்கி நற்சார்பையும் பெறுதல்போல, இவரும் குலத்தானும் தலத்தானும் நலத்தானும் சிறந்து உயர்ந்தனர் என்பதாம். (6)

## கற்புப்பயப்புரைத்தல்

### 'போதம் இன்பு உயிர்க்கெனப் பரைக்கு உரைத்தது'

அவள் அவனையொழிய வணங்காமையால், அவன் ஊருங்களிலும் வழக்கமாக உறங்கும் பந்தியிடத்தன்றிப்

புறந்தங்கியறியாது ஆதலான் அவள்கற்பு வடமீனை வெல்லுந் தன்மையது என, சிவபோதமே உயிர்க்குரியதான தன்மையைத் திரோதை பரைக்கு அறிவித்ததாம். இன்பின்வசமாம் அன்பு உயிரன்பு, முன்பாம் பரைக்கு முன்னருள் உரைத்தது என்பது வியாக்கியானம்.

**சிற்பந் திகழ்தரு திண்மதிற் றில்லைச்சிற் றம்பலத்துப்**
**பொற்பந்தி யன்ன சடையவன் பூவண மன்னபொன்னின்**
**கற்பந்தி வாய்வட மீனுங் கடக்கும் படிகடந்தும்**
**இற்பந்தி வாயன்றி வைகல்செல் லாதவன் ஈர்ங்களிறே.** 305

பொ - ரை: சிற்பத்தொழில் சிறந்துவிளங்கும் திண்ணிய மதில்சூழ்ந்த தில்லையின் சிற்றம்பலத்தில் உள்ளவராகிய பொற்றகட்டை நிரல்படப் பரப்பினாற்போன்ற விரித்த செஞ்சடையையுடைய பெருமானது பூவண நகரை ஒக்கும் பொன்னனையாளின் கற்பு, அந்திக்காலத்துத் தோன்றும் அருந்ததி மீனையும் கற்பால் வெல்லும்; அதனால் அவனது மதத்தால் ஈரியகளிறும் நிலத்தைக் கடந்து நெடுந்தூரம் செல்லினும் தன்னில்லின்கண் பந்தியிடத்தல்லது தங்காது என்றவாறு.

கற்புடைய மகளிர்களால் அந்திக்காலத்துத் தொழப்படுதலான் அருந்ததியை 'அந்திவாய் மீன்' என்றாள். இதனால் சிவபோதமே உயிரின்கண் மிக்குத் தோன்றுவதால் இருவரும் தம் முள்வேறின்றி ஒத்தார் எனப் பரை உவந்தவாறு காண்க. இன்பு போதம் உயிர்க்கு என இயைத்துப் பொருள் கொள்க. (7)

## மருவுதலுரைத்தல்

### 'உயிர் இன்பு ஒன்றாய் மருவுதல் உரைத்தது'

*திரோதையாகிய செவிலி, உயிரும் இன்புருவச்சிவமும் தம்முள் வேறின்றி ஒன்றாய் நிலவுதலைக் கூறாநிற்றல்.*

**மன்னவன் தெம்முனை மேற்செல்லு மாயினும் மாலரியே**
**றன்னவன் தேர்புறத் தல்கல்செல் லாது வரகுணனாந்**
**தென்னவன் ஏத்துசிற் றம்பலத் தான்மற்றைத் தேவர்க்கெல்லாம்**
**முன்னவன் மூவலன் னாளுமற் றோர்தெய்வம் முன்னலளே.** 306

பொ - ரை: மன்னவன் பகைமுனைக்கண் செல்வானாயினும் பெரிய ஆண்சிங்கத்தையொப்பான் தேர் தன் நிலையிலல்லது புறத்துத் தங்குதல் அறியாது; வரகுண பாண்டியன் வணங்கும் சிற்றம்பலத்திலே எழுந்தருளியிருப்பவனும், ஏனைய தேவர் களனைவர்க்கும் முதல்வனுமாகிய தில்லைக் கூத்தப்பெருமானது

மூவலூரை ஒப்பாள், வேறொரு தெய்வத்தைத் தெய்வமாகக் கருதாள் என்றவாறு.

உயிரும் இன்பும் பிரிப்பின்றி ஒன்றிச் சிவானந்தமாய் விளங்குதலைச் செவிலி தெரிவித்தல் காண்க. (8)

## கலவியின் பாங்கூறல்

### 'ஒன்றற்று இரண்டற்று ஒன்றும் உலவாது ஒழியாததனைத் திருவருள் உரைத்தது'

ஆன்மாவும் சிவமும், நுகர்வானும் நுகர்பொருளுமாம் பொருட்டன்மையால் ஒன்றற்று, கலப்பான் இரண்டற்று, நுகர்ச்சியாகிய பேரின்பத்து வற்றாமலும் முற்றாமலும் ஆன்ம போதமும் கண்ணொளியும்போலத் தம்முள் அத்துவிதமாய் விளங்குதலைத் திருவருள் பரைக்குக் கூறாநிற்றல். உயிர் சிவம் மருவி ஒன்றிரண்டொளிரச் செயிர்தீர் இன்பத்திறம் அருள் உரைத்தல் என்பது வியாக்கியானம்.

ஆனந்த வெள்ளத் தழுந்துமொ ராருயிர் ஈருருக்கொண்
டானந்த வெள்ளத் திடைத்திளைத் தாலொக்கும் அம்பலஞ்சேர்
ஆனந்த வெள்ளத் தறைகழ லோனருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம்வற் றாதுமுற் றாதிவ் வணிநலமே. 307

பொ - ரை: இன்ப வெள்ளத்தாழும் ஒருயிர், ஒருருவில் இன்பந்துய்த்தலாராமையின் இரண்டுடம்பு எடுத்து அவ்வின்ப வெள்ளத்திடைக்கிடந்து திளைத்ததனோடொக்கும்; அதுவே யுமன்றி, அம்பலத்துள் எழுந்தருளியுள்ள ஆனந்தவெள்ளத்தைச் செய்யும் ஒலிக்கின்ற கழலையணிந்த திருவடியையுடையானது அருளைப் பெற்றவர்கள் எய்தும் இன்பம்போல ஆனந்த வெள்ளமும் ஒருகாலத்தும் குறைவுபடாது; இவ்வணி நலமும் முதிராது என்றவாறு.

சிற்றம்பலநாதன் அருளைப் பெற்றவர்கள் எய்தும் சிவானந்தப் பேறுபோல, இவர்கள் எய்தும் இன்பமும் வற்றாது முற்றாது என்றும் நிலைத்த பேரின்பமாம் என்பதாம்.

உயிர் எனச் சிவம் எனப் பொருளால் வேறாயினும் நுகர்வோர்க்கும் நுகரப்படு பொருட்கும் உள்ள இயைபால் இரண்டாந்தன்மையற்று, நுகரப்படுதலின் ஒன்றாந்தன்மையும் அற்று ஒன்றாதலும் வேறாதலும் உடனாதலும் ஆகிய மூன்று தன்மையும் ஒருசேர இயைவதாய அத்துவிதக்கலப்பான் பேரின்ப வெள்ளத்தாழ்ந்தது என்றவாறு. (9)

## 20. ஓதற்பிரிவு

**'கல்வியிற்பிரிவு ஒரு நான்கும்**
**புல்லும் ஆனந்த இன்பபூரணம்**
**சொல்லும் பயனின் திறம்பாராட்டல்'**

*வரைந்து இல்லொழுக்கம் பூண்டபின் உயிர் பிரியும் முதற் பிரிவு ஓதற்பிரிவு. அஃதாவது தாம் இதுவரை கற்ற கல்வி சாதனக்கல்வி ஆதலின் சாத்தியக் கல்வியாகிய சிவஞானத்தை எய்துதற்குரிய ஞானசாத்திரங்களை முறையே கேட்கும் முறையி விருந்து கேட்க ஞானாசாரியன்பாற் பிரிகின்ற பிரிவாம். உயிர் வரைந்த துணையானே சுத்தகேவலத்துத் துரியாதீதநிலையில் பேரின்பம் எய்திற்றாயினும் அதனை நுகர்தல் மாத்திரையாய் மடங்கிக்கிடத்தலன்றி நுவலவாராமையான், அவ்வானந்த இன்ப பூரணத்தைச் சொல்லி இன்புறும் வாய்ப்பாக விளையும் பிரிவாம். இது நான்கு கிளவிகளையுடையது.*

### கல்வி நலங்கூறல்

**'இன்பனுபோக நூற்பாராட்டென்னை?**
**அன்பின் அருளே அரற்கு அறிவிக்கெனல்'**

*இன்ப அநுபவ நூற்படிப்பினைப் பற்றிப் பாராட்டி யான் பேசியது என்னையெனின், யான் சிவாநுபவப் பயிற்சிக்காகப் பிரியவிருப்பதை அருளே சிவத்திற்கு அன்புடன் அறிவிக்க என்று உயிர் திருவருளினிடம் வேண்டாநிற்றல். உயிரனு போக நூற் பாராட்டை மருவினதென்றருளை மன்னின்புறு சிவத்திற்கு உரைத்தது என்பது வியாக்கியானம். இதன் பொழிப்பு, சிவத்தொடு மருவிச் சிவானந்தத்துத் திளைக்கும் உயிர் அநுபவ நூலைச் சிறப்பித்துப் பாராட்டியது என்று அருளோடு கூடிய சிவத்திற்கு உயிர் உரைத்ததாம் என்பது. இதுவும் முற்கருத்தையே விளக்குதல் காண்க. இன்பனுபோக நூற்பாராட்டென்னை அன்பினருளே அரற்கறிவுறுத்தல் எனப் பாடங்கொண்டு இடர்ப்படுவாருமுளர். அப் பாடம் கருதியது விளங்காமையானும், துறையின் போக்கிற்கு ஒவ்வாமையானும் பொருந்தாமை தெளிக.*

சீரள வில்லாத் திகழ்தரு கல்விச்செம் பொன்வரையின்
ஆரள வில்லா அளவுசென் றாரம் பலத்துணின்ற
ஓரள வில்லா வொருவன் இருங்கழல் உன்னினர்போல்
ஏரள வில்லா அளவின ராகுவர் ஏந்திழையே. 308

*பொ - ரை: ஏந்திழாய்! நன்மைக்கு எல்லையின்றி விளங்கும் கல்வியாகிய மேருமலையின் மிக்க அளவில்லாத எல்லையை அடைந்தவர்கள், சிற்றம்பலத்தின்கண் நின்ற ஓர் அளவும்*

இல்லாத ஒப்பற்ற அம்பலவாணப் பெருமானது திருவடிகளை அறிந்து தியானித்தவர்களைப்போல நன்மைக்கு எல்லை யில்லாத தன்மையர் ஆவர் என்றவாறு.

திருச்சிற்றம்பல நாதனது திருவடியை அறிந்து தியானிப் பவர்கள் அவ்வின்பே தானாய் எல்லையற்ற தன்மையராதல் போல, உயிர் சிவத்தைச் சார்ந்து சிவானந்தம் முற்றிய அநுபவ ஞானிகள்பாற் சென்று அநுபவத்து அழுந்தி நின்று பயிறலை விரும்புவதாக உயிர் திருவருளுக்கு உரைத்தவாறு.

கல்வியைச் செம்பொன்வரை என்றது அளக்கலாகா அளவும் பொருளும் துளக்கலாகா நிலையும் தோற்றமும் தூய்மையும் உடைமையான் என்க. ஏட்டுக்கல்வியை எல்லையறக் கற்றவர்களும் அமைதியை நாடின் அநுபவக் கல்வியை விழைவர் என்பது. (1)

## பிரிவு நினைவுரைத்தல்

**'அறியார் போன்றிருக்கும் அனுபவ இலக்கணம்**
**என்றருள் இன்புக்கு அன்பற்ற துரைத்தது'**

அநுபவ அறிவு அடைதல் வேண்டுமென்று உயிர் கல்வி நலத்தையுரைக்கக் கேட்ட திருவருள், உயிரின் பிரிதற் குறிப்பை அறிந்து இன்புருவாய சிவத்திற்கு உரையா நிற்றல்.

**வீதலுற் றார்தலை மாலையன் றில்லைமிக் கோன்கழற்கே**
**காதலுற் றார்நன்மை கல்விசெல் வீதரும் என்பதுகொண்**
**டோதலுற் றாருற் றுணர்தலுற் றார்செல்லன் மல்லழற்கான்**
**போதலுற் றார்நின் புணர்முலை யுற்ற புரவலரே. 309**

பொ - ரை: செல்வீ! இறந்தவர்களின் தலையானியன்ற மாலையை உடையானாகிய தில்லைப்பெரியோனது திருவடிக் கண் அன்புற்றாரது நன்மையைக் கல்வி தரும் என்று கருதி, ஓதலுற்ற பெரியோர்களை அடைந்து எல்லா நூல்களையும் உணர, நின் ஆகத்தை அடைந்த அரசர் துன்பம் நிறைந்த அழலையுடைய காட்டில் செல்ல எண்ணினார் என்றவாறு.

எல்லாரும் அழியத் தான் ஒருவனே நித்தியனாய் என்றும் விளங்குபவன் என்பதை யாம் உணர்ந்து உய்ய இறைவன் தலை மாலையை அணிந்திருக்கின்றான். இறைவன் திருவடிக்கண் என்றும் நீங்காத அன்புபூண்டார் எய்தும் நன்மையனைத்தையும் கல்விதரும் என்று கருதி, அதனை ஓதலுற்றார் என்பதாம். அவ்வளவில் அமையாது மேலும் அநுபவஞானம் விழைந்தார் என்பாள் 'உணர்தலுற்றார்' என்றாள். ஒருவகை அநுபவத்தில் உறுதி பூண்டவர்க்கு அதனை அடைதற்கண் இடையிடும்

*துன்பங்கள் பல என்பாள் 'செல்லல் மல் அழற்கான் போதலுற்றார்' என்றாள். (2)*

## கலக்கங் கண்டுரைத்தல்

### 'இன்பிற்பிரிவிலை என்றருள் கண்டது'

*கல்விக்காதல் பூண்டு உயிர் பிரிய எண்ணியதைக் கேட்ட சிவத்தலைவி கலங்கினாளாக, அதனைக்கண்ட திருவருள், தலைவ! கல்வியை விரும்பினர் என்று கேட்டளவிலேயே காய்ச்சிய வேல் காதில் புகுந்ததுபோல வருந்துகின்ற இவள் பிரிவை எங்ஙனம் ஆற்றுவள் என்று இன்புருவச் சிவத்திடம் கூறியதாம்.*

**கற்பா மதிற்றில்லைச் சிற்றம் பலமது காதல்செய்த**
**விற்பா விலங்கலெங் கோனை விரும்பலர் போலவன்பர்**
**சொற்பா விரும்பின ரென்னமெல் லோதி செவிப்புறத்துக்**
**கொற்பா இலங்கிலை வேல்குளித் தாங்குக் குறுகியதே. 310**

*பொ - ரை: கல் பரப்பப்பட்ட மதிலையுடைய தில்லைச் சிற்றம்பலத்தைக் காதலித்த பரந்தமலையை வில்லாக ஏந்திய எம் தலைவனை விரும்பாதவரைப்போல, சொல்லானியன்ற பாவாகிய நூலைக் கற்க விரும்பினர் என்று நம் அன்பர்சொல்ல, அச் சொல் மெல்லிய கூந்தலையுடையாளது செவியில் கொல் தொழில் நிறைந்து விளங்குகின்ற இலைவடிவாகிய வேல் சென்று தைத்ததுபோலச் சென்று எய்திற்று; இனிப் பிரிவை எங்ஙனம் ஆற்றுமோ? என்றவாறு.*

*இறைவனிடத்து உண்மையன்பு பூண்டார் கல்வியென்னும் பல்கடல் பிழைப்பராதலின் 'விரும்பலர்போல் சொற்பா விரும்பினர்' என்றாள். பிரிவர் என்று கூறக் கேட்டவுடன் வருந்தும் இவள் யாதாவள் என இன்புருவச் சிவத்திற்கு உயிரின்பால் உள்ள கருணை குறைவு இன்மையைத் திருவருள் கண்டு கூறியவாறு. (3)*

## வாய் மொழிகூறித் தலைமகள் வருந்தல்

### 'பிரிவொருகாலும் இன்றென அருளுக்கு இன்பே அன்பாய் எடுத்தெடுத்துரைத்தது'

*இங்ஙனம் கலக்கம் கண்டுரைத்த திருவருளுக்கு, இனிப்பிரியேன் ஆற்றேன் என்று சொன்ன உயிரே பிரியுமாயின் நாம் சொல்லுவது என்னோ? என்று உயிரின் சூளுறவைச் சொல்லிச் சிவம் வருந்தாநிற்றல்.*

**பிரியா மையுமுயி ரொன்றா வதும்பிரி யிற்பெரிதுந்**
**தரியா மையுமொருங் கேநின்று சாற்றினர் தையன்மெய்யிற்**

பிரியாமை செய்துநின் றோன்றில்லைப் பெரிய லூரரன்ன
புரியா மையுமிது வேயினி யென்னாம் புகல்வதுவே. 311

பொ - ரை: தையல்நாயகி தன் திருமேனியினின்று பிரியாமையைச் செய்துநின்ற பெருந்தன்மையை உடைய தில்லைப்பெருமானது புலியூரை ஒத்த பெருமையோடுகூடிய தலைவர், பிரியாமையையும் இருவர்களுக்கும் உயிர் ஒன்றா தலையும் பிரியின் தரியாமையையும் அக் காலத்து நம்முன்னின்று ஒருங்கே கூறினர்; அத்தகையவர் இப்பொழுது பிரியாமையைப் பொய்யாகக் கண்டோம்; ஆதலால் ஏனையவும் அங்ஙனமே; இனி நாம் சொல்வது என் என்றவாறு.

தலைநாட்புணர்ச்சியில் காகத்து இருகண்ணிற்கு ஓர்மணி கலந்தாங்கு இருவராகத்தும் ஒருயிர் கண்டனம் என்ற உயிர், இப்போது பிரிந்தமையால் அவர் கூறிய ஏனையவும் அங்ஙனமே பொய்யாம் என இன்புருவச் சிவம் அன்பால் எடுத்தெடுத்துப் பலகால் பன்னியுரைத்து வருந்தியவாறு. (4)

## 21. காவற்பிரிவு

**'காவற்பிரிவுத் துறையோரிரண்டும்**
**இன்பத் திறத்தை எங்கும் காண்டல்'**

எல்லா உயிர்களையும் அரசன் பாதுகாக்க என்னும் தருமநூல் விதியின்வண்ணம் யாம் இன்புறுந்திறத்தை உலகெங்கும் காண்பேன் என்று உயிர் நாடு முழுதும் காணப் பிரிதலாம். இதுபிரிவறிவித்தல், பிரிவுகேட்டிரங்கல் என்னும் இருகிளவி களையுடையது.

### பிரிவறிவித்தல்

**'உலகம் யாவும் இன்பமாய்க்காணும்**
**அருமை அருளே அறிந்து உரைத்தது'**

உலகம் அனைத்தும் இன்பமாக வாழ்தல் வேண்டும் என்ற குறிப்புடன் உயிர் பிரிகின்றதனை அறிந்த திருவருள் சிவத்திற்கு அறிவித்தல்.

மூப்பான் இளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள்
வீப்பான் வியன்றில்லை யானரு ளால்விரி நீருலகம்
காப்பான் பிரியக் கருதுகின் றார்நமர் கார்க்கயற்கண்
பூப்பால் நலமொளி ரும்புரி தாழ்குழற் பூங்கொடியே. 312

பொ - ரை: கரிய கயல்போலும் கண்ணினையும் பூவின்கண் உள்ள நலமாகிய மணம்விளங்கும் சுருண்ட தாழ்ந்த குழலையு முடைய பூங்கொடியை யொப்பவளே! அனைவர்க்கும் மூத்தவனும், எல்லார்க்கும் இளையவனும், உலகத்தோற்றத்திற்கு முன்னுள்

ளோனும், யாவும் அழியத் தானழிந்துபடாது பின்னுள்ளவனும், மூன்று புரங்களையும் அழிப்பவனும், அகன்ற தில்லைக்கண் உள்ளானும் ஆகிய அம்பலவானப்பெருமான் திருவருளால் நமர் விரிந்த நீராற் சூழப்பட்ட உலகத்தைக் காக்கப் பிரியக்கருதா நின்றார் என்றவாறு.

மூப்பான் - முதியவன். எல்லா உயிர்களும் தத்தம் வினைக் கீடாக உருமேனி கொள்ளுவதற்கு முன்பே, தனது இச்சையின் வண்ணம் திருமேனி கொண்டு எல்லாரையும் உடலொடு புணர்த்து தலாகிய படைப்பைப் புரிந்தவனாதலின் 'மூப்பான்' என்றது.

படைக்கப்பட்ட எல்லாரும் முதிர்ந்து அழியவும், தான் மட்டும் மாறாது மடியாது என்றும் நீங்கா இளமை யோடிருத்தலின் 'இளையவன்' என்றது.

காலமும், அதன்காரணமான மாயையும் தொன்மையானவை. அவற்றையும் காரியப்படுத்தித் தனு கரண புவன போகங்களைப் படைக்கும் தலைவனாதலின் 'முன்னவன்' என்றது.

உலக முதல்யாவும் தத்தம் காரணத்துள் ஒடுங்கவும் அக் காரணங்களையும் தன்னகத்தடக்கி எச்சனாக நிற்றலின் 'பின்னவன்' என்றது.

மும்மலகாரியமான முப்புரங்களையும் ஞானவொளி தரும் புன்முறுவல் ஒன்றானே எரித்தலின் 'முப்புரங்கள்வீப்பான்' என்றது. வீத்தல் - அழித்தல்.

உலகில் படைப்பவன் படைப்பதும், காப்பவன் காப்பதும், அழிப்பவன் அழிப்பதுமாகிய தொழில்கள் யாவும் இறைவன் திருவருளாணையின் வண்ணம் நிகழ்தலின், அவனன்றி ஓரணுவும் புடைபெயரா ஆதலின், இத் தலைவன் காப்பதும் இறைவனருளால் என்பான் 'அருளால் விரிநீருலகம் காப்பான்' என்றாள். (1)

## பிரிவு கேட்டிரங்கல்

**'இன்பம் அநாதி இயல்பெடுத்தருளி அன்பிற் கருணை எடுத்தியம்பியது'**

இன்ப வடிவாகிய சிவத்தலைவி, உயிரின் அநாதியியல்பான பிறவுயிர்களைப் பாதுகாக்கும் பெற்றியை எடுத்துக்கூறி, அன்று எம்மை யானையினின்று பாதுகாத்த கருணையாளராகிற உயிர், இன்று அவ்வுயிரையின்றி உறுதுணையில்லாத எம்மைப் பிரியலாமோ என்று எடுத்தியம்பியது.

**சிறுகட் பெருங்கைத்திண் கோட்டுக் குழைசெவிச் செம்முகமாத்**
**தெறுகட் டழியமுன் உய்யச்செய் தோர்கருப் புச்சிலையோன்**

உறுகட் டழலுடை யோனுறை யம்பலம் உன்னலரின்
துறுகட் புரிகுழ லாயிது வோவின்று சூழ்கின்றதே. 313

பொ-ரை: செறிந்த தேனையுடைய மலர்களையணிந்த சுருண்ட குழலையுடையவளே! சிறிய கண்களையும் பெரிய கையையும், திண்ணிய கொம்பினையும், குழைந்த செவியினையும், சிவந்த முகத்தினையும் உடைய யானையினது கொல்லுந் தொழிலின் கட்டுக்குலைய, தாய்தந்தையராற் பாதுகாக்கப்படும் இளமையில் எம்மைக்காத்த தலைவர், கரும்பு வில்லையுடைய மன்மதனைச் சென்று எரித்த கண்ணில் தீயையுடையவனது அம்பலத்தைத் தியானியாதார்போல, தம்மையல்லது பற்றுக் கோடில்லாத இன்று எம்மைக் கண்ணோட்டமின்றி நினைக்கின்ற இச் செயல் பிரிவோ? எ-று.

முன் யானையைக்கொன்று எம்மைக் காத்து இன்பூட்டிய அநாதியான பண்டைய நிலையைக்கூறி, அத்தகைய ஆன்மா பிறிதொரு துணையுமில்லாத இன்று இவ்வாறு விரிவது தகுமோ என்றதாம். (2)

## 22. பகைதணிவினைப்பிரிவு

**'பகைதணிவித்தற் றுறையோரிரண்டும்
எங்கும் இன்பக் கனமென்றியறல்'**

அறியாமையானோ தன்னலத்தானோ பேராசையானோ செருக்கானோ தம்முள் மாறுபட்ட வேந்தர்க்குற்ற பகையைத் தணிவித்துக் கூட்டுவிக்குந் தொழிற்காகப் பிரியும் பிரிவு. இது எங்கும் இன்பகனமாகிய அமைதியைக் காணுதலாம். இது இருகிளவிகளையுடையது.

### பிரிவு கூறல்

**'உலகில் இன்பன்றி அறியாமை இலையென்(று)
அநுபவம் உற்றது அருளே செப்பல்'**

உலகெங்கும் உணரப்படுவது இன்பமொன்றே அல்லது அறியாமையில்லை என்று தாம் பெற்ற அநுபவத்தைத் தலைவனாகிய உயிர் உலகிற்கும் உணர்த்திச் சமாதானத்தை நிலைநாட்டப் பிரிவதைச் சிவத்திடம் அருள் கூறுதலாம்.

மிகைதணித் தற்கரி தாமிரு வேந்தர்வெம் போர்மிடைந்த
பகைதணித் தற்குப் படர்தலுற் றார்நமர் பல்பிறவித்
தொகைதணித் தற்கென்னை யாண்டுகொண் டோன்றில்லைச் சூழ்
பொழில்வாய்
முகைதணித் தற்கரி தாம்புரி தாழ்தரு மொய்குழலே. 314

*பொ - ரை: எனக்கு வரவிருக்கும் பல பிறவிக்கூட்டங்களைத் தணித்தற்காக என்னை ஆண்டுகொண்டோனது தில்லையின் கண் சூழ்ந்துள்ள தொழிற்கண்ணுள்ள போதுகளால் தனது நறுநாற்றத்தை மாற்றுதற்கு அரிதாய சுருண்ட தாழ்ந்த கூந்தலையுடையவளே! ஒருவர் செருக்கை ஒருவர் தணித்தற்கு அரிதாகிய இரு வேந்தர்கள் தம்முள் புரியும் கொடிய போரின் கண் நெருங்கிய பகையை மாற்றுதற்காக நமர் போகத்துணிந்தார் என்றவாறு.*

*சமாதானம் என்ற ஒன்றிலேயே அமைதியும் ஆனந்தமும் இருப்பதையறிந்த நம் தலைவர் உலகு அறியாமையிற் சிக்கிச் செருக்குற்று மடிதலாகாது என்பதைக் காட்டப் பிரிந்தார்; விரைவில் வருவர் என்றாள். மிகை - செருக்கு.*

*யான் பல பிறவிகளில் ஈட்டிய வினைகள் ஆகாமிய சஞ்சிதங்களாகச் சேர்ந்துள்ளன; அவற்றை உண்டு கழிக்கப் பல பிறவிகள் வர இருந்தன; என்மீது கருணைகொண்ட கண்ணுதற் பெருமான் பிறவித்தொகை தணித்தற்காக என்னை ஆண்டு கொண்டான் என்பார் இங்ஙனம் கூறினார். (1)*

## வருத்தந்தணித்தல்

**'வேறாய்க்காண்டல் அநுபவம் அன்றென**
**அருளே உருக்கத்தான் மிக அறிந்தது'**

*பிரிவுகேட்டு உள்ளுடைந்து வருந்தாநின்ற சிவத்தலைவியை நோக்கி, தலைவி! நீ என்னை உயிரின் வேறாகக்காண்டல் அநுபவமாகாது; ஒன்றாய்க் காண்டலே உற்றதாம்; ஆதலால் பிரிவை எண்ணி மனம் உருகற்க என்று திருவருள் தேற்றியதாம்.*

**நெருப்புறு வெண்ணெயும் நீருறும் உப்பும் எனவிங்ஙனே**
**பொருப்புறு தோகை புலம்புறல் பொய்யன்பர் போக்குமிக்க**
**விருப்புறு வோரைவிண் ணோரின் மிகுத்துநண் ணார்கழியத்**
**திருப்புறு சூலத்தி னோன்றில்லை போலுந் திருநுதலே. 315**

*பொ - ரை: தன்கண் மிக்க அன்பு பூண்டவர்களை விண்ணோரினும் மிக உயர்த்தி, பகைகொண்டவர் மாய அசைக்கப்படும் சூலத்தை ஏந்தியவனது தில்லையை ஒக்கும் அழகிய நெற்றியையுடையவளே! இம் மலையைச் சேர்ந்த மயில்போல்வாளே! நெருப்பைச் சார்ந்த வெண்ணெயையும், நீரைச் சார்ந்த உப்பையும் போலக் கரைந்து உருகி இங்ஙனம் புலம்பற்க; அன்பர் போக்குப் பொய் என்றவாறு.*

*ஒன்றனபின்னர் வேறாதல் என்றுமில்லை; பேரின் பமாக்கரை சேர்ந்தார் என்றும் மீண்டு அதனிற் பிரியாராதலால்*

*பிரிந்ததாக எண்ணிக் கவலற்க எனத் திருவருள் சிவத்தைத் தேற்றியவாறு காண்க.* *(2)*

## 23. வேந்தற்கு உற்றுழிப்பிரிவு

**'உற்றுழிப் பிரிவு ஈரெட்டும் ஆனந்தம்
பெற்ற ஆராமை முற்ற உரைத்தல்'**

ஒரு வேந்தனுக்கு ஒரு வேந்தன் தோற்றுவந்தடைந்தால் அவனுக்கு உதவி செய்தற்காகப் பிரிதல். பொருவானும் பொரப்படுவானுமாகிய வேந்தர்கள் இருவரும் ஆணவகாரிய மாகிய அறியாமையும் அகங்காரமும் ஆசைப்பெருக்கமும் உடையவர்கள். அவர்கள் தாம்பெரியர் தாம்பெரியர் எனப் பொருது ஒருகுணம் விஞ்சுதலால் ஒருவருக்கு ஒருவர் தோற்று, சுத்ததுரியானுபவமுடைய உயிராகிய தலைவனைச் சார்ந்து 'அறியாமையார் எம்முட் பொருதேம்; இவன்வென்றான் நான் தோற்றேன்; நீதியுள்ள இடத்தை நும்நேர்மையால் உயர்த்துக' என வேண்டிச் சரண்புகுந்தவிடத்துச் சுத்தான்மா அறியாமைக்கு இரங்கி அதனைப் பாதுகாத்தல் இன்றியமையாதது ஆகலின் அங்ஙனம் காக்கத் துரியானுவமாகிற வாழ்க்கையிலிருந்து பிரிந்து சகலநிலையிற் சிறிதுதங்கி என்றும் செயற்படாது வலிமடங்கிய ஆணவம் செயற்படுவதுபோலக் காட்டிக் காத்தல் உற்றுழிப்பிரிவாம். இது பதினாறு கிளவிகளையுடையது.

### பிரிந்தமை கூறல்

**'அருளுயிர் இன்பம் அடுத்தோர்க்கு உரிமை
என்ன உதவியாம் என்றரற்கு உரைத்தது'**

*சுத்தகேவல நிலையையடைந்த உயிர்த்தலைவர் அருளொன்றே காரணமாகக் கொண்டு தம்மைச் சரணென்று வந்தடைந்த அகங்காரம் ஒடுங்கிய உயிர்க்கு எத்தகைய உதவியும் புரிதலே தமக்கியல்பாம் எனப்பிரிந்தார் என்று திருவருள் சிவத்திற்கு உரையா நிற்றல்.*

போது குலாய புனைமுடி வேந்தர்தம் போர்முனைமேல்
மாது குலாயமென் னோக்கிசென் றார்நமர் வண்புலியூர்க்
காது குலாய குழையெழி லோனைக் கருதலர்போல்
ஏதுகொ லாய்விளை கின்றதின் றொன்னார் இடுமதிலே. 316

பொ - ரை: *மடமையும் அழகும் பெற்ற மெல்லிய நோக்கத்தையுடையாய்! பூக்கள் விளங்குகின்ற அழகிய முடியையணிந்த வேந்தரது போர்முனைமேல், நம் தலைவர் சென்றார்; வளவிய புலியூர்க்கண், காதால் அழகுபெற்ற*

குழையையுடைய பெருமானைத் தியானியாதாரைப்போல, பகைவர் இட்ட மதில் இன்று என்னவாயிற்றோ என்றவாறு.

இன்று என்னவாயிற்றோ என்றது இத்துணை நேரம் சென்றவினையை முடித்துத் திரும்புவர்; தாழார் என்பதாம். மாது - அழகு. 'மாதர் காதல்' ஆதலின் காதல்தோன்றும் கண்களையுடையாய் எனலுமாம். காது குலாய குழை எழிலோன். 'பூணுட்பட்டிடாது ஒலையின் பூணென மாணக்காதெனும் வள்ளை கவின்செய' என்றாங்கு ஏனைய அணிகள் உறுப்பின் மேற்கிடந்து அவ்வுறுப்புகட்கு அணி செய்வனவாக, குழை மட்டும் காதுட்கிடந்து காதால் அழகுபெற்றது என்றவாறு. (1)

## பிரிவாற்றாமை கார்மிசை வைத்தல்

**'அனுபவம் அடுத்தோர்க்கு அறிவித்திடவும்**
**அன்பே இன்பாய் அங்கும் கலந்தது'**

உயிர், தாம்பெற்ற சுத்தகேவல அநுபவத்தைத் தம்பால் வந்தடைந்த வேந்தராகிய பரிபாகர்களுக்கு உணர்த்தித் தெளிவிக்கப் பிரியாநிற்க, அங்கும் இன்புருவாகிய என்நினைவு இக் காரினால் தோன்றுமே! அன்பர் வருந்துவரே என்று கார்மேல் வைத்துப் பிரிவாற்றாமையைக் கூறாநிற்றல்.

**பொன்னி வளைத்த புனல்சூழ் நிலவிப் பொலிபுலியூர்**
**வன்னி வளைத்த வளர்சடை யோனை வணங்கலர்போல்**
**துன்னி வளைத்தநந் தோன்றற்குப் பாசறைத் தோன்றுங்கொலோ**
**மின்னி வளைத்து விரிநீர் கவரும் வியன்முகிலே.** 317

பொ - ரை: காவிரியாற்றுப் புனல் சூழ்ந்து வளைத்ததால் விளங்கும் புலியூரில் வன்னித்தளிரால் வளைக்கப்பட்ட சடையையுடையவனை வணங்காதாரைப்போல, பகைவனை நெருங்கி வளைத்த நம்முடைய தோன்றற்கு, மின்னி உலகை வளைத்து உவரிநீரைப் பருகும் மேகம் பாசறையிற்சென்று தோன்றுமோ? என்றவாறு.

தோன்றுமாயின் என்போல அவரும் பிரிவாற்றாது கவல்வர்; வினையிற் சோர்வர் என்று வருந்துவதாகக் கூறினாள். அநுபவம் - உயிர் சுத்தகேவலமாகிய, பிரியாது என்றும் சிவத்தைச் சார்ந்தே உறைவதாகிய பேரின்ப அநுபவம். அடுத்தோர்க்கு - செருக்கு அடங்கி 'நீயே சரண், நீ அடைந்த இன்ப நிலையை எமக்கும் அறிவித்து உய்ய ஆட்கொண்டருள வேண்டும்' என்று வந்து சரண்புகுந்த உயிர்க்கு அறிவித்திடவும் - செருக்கடக்கி உணர்த்தவும், அன்பே இன்புருவச் சிவமாய், அங்கும் - உணர்த்துகின்ற மும்மல காரியம் போக்கும் போர்முனைக்கண்ணும், கலந்தது - முகில் காரணமாகக் கலந்தது எனக் கொளுவிற்குப் பொருள் காண்க. (2)

இருந்தது; பின்னும் சுத்தகேவல நிலையில் மாசு அகன்று அதுவேதானாய்ச் சிவானந்த வெள்ளத்துள் திளைத்துப் பிரிவின்றி இருந்தது; ஆயினும் மேனியைத் தாங்கிநிற்கும் சகல நிலையிலே சிவத்தை இகழ்ந்து உயிர் பிரிதல் கவர்ச்சியைத் தருவது ஒன்றென்று சிவத்தலைவி இகழ்ச்சி தெரிந்து அழியாநிற்றல்.

பிரியா ரெனவிகழ்ந் தேன்முன்னம் யான்பின்னை எற்பிரியின்
தரியா ளெனவிகழ்ந் தார்மன்னர் தாந்தக்கன் வேள்விமிக்க
ளரியா ரெழிலழிக் கும்மெழி லம்பலத் தோனெவர்க்கும்
அரியான் அருளிலர் போலன்ன என்னை அழிவித்தவே. 340

பொ - ரை: கேவலநிலையில் உயிர்க்கு உணர்வின்மையால் பிரியாது என யான் இகழ்ந்திருந்தேன்; அப்போது என்னை விட்டுப்பிரியின் சிவம் தரியாது என உயிர் என்னை இகழ்ந் திருந்தது; நாம் பிரியின் இவள் உயிர் தாங்காளென உயிர் எமக்கு முன்நின்று உணர்த்துதல் இகழ்ந்தது; அத்தகைய இரு இகழ்ச்சி களும் தக்கனது வேள்வியில் முத்தீ நிறைந்த மிக்க அழகை அழித்த அழகனாகிய அம்பலத்தானும் யாவர்க்கும் அரியவனும் ஆகிய பெருமானது அருளில்லாதாரைப்போல வருந்த என்னை அழிவித்தன என்றவாறு.

அன்ன என்னை அழிவித்த என இயைக்க. (9)

## உருவு வெளிப்பட்டு நிற்றல்

### 'பிரியு மிடமெலாம் சிவமே கண்டது'

இல்லில் சிவத்தலைவி இங்ஙனம் உயிர்த்தலைவன் இகழ்ந்து சென்றமை குறித்துவருந்த, பொருட்பற்றோடு பிரிந்த தலைமகன் தலைவிக்குப் பிரிவுணர்த்தாது வந்துவிட்டோமே என்பதை எண்ணி, பார்க்குமிடமெங்கும் ஒரு நீக்கமறச் சிவத்தலைவியையே காணலுற்று மேற்போக மாட்டாது மீளலுற்றுச் சுரத்திடை நிற்றல்.

சேணுந் திகழ்மதிற் சிற்றம் பலவன்றெண் ணீர்க்கடனஞ்
சூணுந் திருத்து மொருவன் திருத்தும் உலகினெல்லாம்
காணுந் திசைதொறுந் கார்க்கய லுஞ்செங் கனியொடுபைம்
பூணும் புணர்முலை யுங்கொண்டு தோன்றுமொர் பூங்கொடியே.
341

பொ - ரை: நெடுந்தூரத்தினும் காணப்படும் மதிலை உடைய சிற்றம்பலத்தானும் தெளிந்த நீரையுடைய கடலிலிருந்து உண்டான நஞ்சை உணவாகத் திருத்தும் ஒப்பில்லாதானும் ஆகிய நடராசப் பெருமானால் படைக்கப்படுகின்ற உலகெங்கும் பார்க்கும் திசைகள்தோறும், கண்ணாகிய கரிய கயல்மீன் களையும் வாயாகிய செங்கனிகளையும் பசும்பொன்னாற்

*செய்யப்பட்ட அணிகலன்களையும் நெருங்கிய முலைகளையும் கொண்டு பூங்கொடி தோன்றாநின்றது என்றவாறு.*

*அன்பின் பெருக்கத்தினால் சென்ற இடமெல்லாம் சிவத்தைக்கண்டு, அதுவே செம்பொருள்; உலகப்பொருளால் ஆவது ஒன்றுமில்லை என்று உயிர்த்தலைவன் சுத்தகேவலத் தானமாகிய சிவத்தலைவி வாழும் இல்லுக்குத் திரும்பத் திருவுளம்கொண்டு சுரத்திடையே கூறியது. (10)*

## நெஞ்சொடு நோதல்

### 'செல்லிடம் எங்கும் சிவமென உணர்தல்'

*மீள நினைத்த உயிர்த்தலைவன் பின்னும் பொருள் மேற்செல்லும் உள்ளத்தினனாய் மீளமாட்டாது மயங்க, தன் நெஞ்சை நோக்கி இப்பொழுது நீ எதற்குப் போக முயல்கின்றாய் என நொந்து கூறாநிற்றல்.*

**பொன்னணி யீட்டிய வோட்டரு நெஞ்சமிப் பொங்குவெங்கா**
**னின்னணி நிற்குமி தென்னென்ப தேயிமை யோரிறைஞ்சும்**
**மன்னணி தில்லை வளநக ரன்ன வன நடையாள்**
**மின்னணி நுண்ணிடைக் கோபொருட் கோநீ விரைகின்றதே.342**

*பொ - ரை: பொற்குவியலைத் தேட ஓடும் நெஞ்சமே! இப்போது நீ விரைகின்றது, தேவர்கள் சென்று வணங்கும் மன்னனது அழகிய தில்லையாகிய வளநகரை ஒக்கும் அன்னத்தின் நடைபோலும் நடையை உடையாளது மின்போலும் நுண்ணிடைக்கோ? அன்றிப் பொருளுக்கோ? அன்றி இரண்டற்கும் அல்லவோ? இவ்வழல் பொங்கும் இவ்வெங்கானத்தைச் சேர்ந்து போகாமலும் மீளாமலும் நிற்கின்ற இஃது யாது? என்றவாறு.*

*இன்போ? பொருளோ? உனக்கு விருப்பாவது இரண்டில் ஒன்று; விரைந்து உணர்க என்று நெஞ்சிற்கு அறிவித்தானாம். (11)*

## நெஞ்சொடு புலத்தல்

### 'போதந்தனை இகழ்ந்து அருளே பூண்டது'

*நெஞ்சொடு நொந்த உயிர்த்தலைவன் பேயிடத்தும் செய்ய முடியாத பிரிவை இவளிடத்தே எளிதாக்குவித்து இவ்விடத்துப் போந்த நினது சிக்கனத்தன்மை அஞ்சத்தக்கது எனத் தற்போத மாகிய நெஞ்சை இகழ்ந்து தன்னைத் தலைவியோடு கூட்டுவித்த திருவருளைத் தனக்குத் துணையாகப் பூண்டமை புகலாநிற்றல்.*

நாய்வயி னுள்ள குணமுமில் லேனைநற் றொண்டுகொண்ட
தீவயின் மெனியன் சிற்றம் பலமன்ன சின்மொழியைப்
பேய்வயி னும்மரி தாகும் பிரிவெளி தாக்குவித்துச்
சேய்வயிற் போந்தநெஞ் சேயஞ்சத் தக்கதுன் சிக்கனவே. 343

பொ - ரை: நாயினிடமுள்ள நன்றியறிதலாகிய குணமும் இல்லாத என்னையும் நல்ல தொண்டனாக ஏற்றுக்கொண்ட தீவண்ண மேனியனது சிற்றம்பலத்தை ஒக்கும் இன்மொழியாளிடத்து, பேயினிடத்தும் செய்தல் அரிதாம் பிரிவை எளிதாகச் செய்வித்து நெடுந்தூரமாகிய இவ்விடத்துப் போந்த நெஞ்சமே! உன் உறுதி அஞ்சத்தக்கது என்றவாறு.

திருவருள் சிவத்தைச் சேரச்செய்யும் உபகாரசத்தி. உயிர்த் தலைவன் பொருட்பற்றை விளைத்துத் தற்போதத்தை இகழ்ந்து அருளைப் போற்றியவாறு உயர்த்துவது இத் திருப்பாடல். (12)

### நெஞ்சொடு மறுத்தல்

**'இன்பன்றி வேறு பெறுவதும் இலை என்று அன்பாய்ப் போதம் அருளேயாயது'**

எம்மால் எய்தக்கடவது இன்புருவச் சிவமேயன்றிப் பொருளன்று என்று உயிர் ஆரா அன்போடு சீவபோதத்தைச் சிவபோதமாக்கியது. இன்பன்றி வேறு பிரிவரவலை என்று பாடம் கொள்வாரும் உளர். இதன் பொருள் விளங்கவில்லை. இத் துறைக்கு விளக்கம்கூறும் வியாக்கியானமும் 'இன்பேயன்றி வேறு இலது பொருளென, அன்புயிர் போதம் உயிர்க்கு அருளே ஆயது' என்னும் இதுவும் நாம் கொண்ட பாடத்தையும் அதன் கருத்தையும் நன்கு விளக்குதல் காண்க.

தீமே வியநிருத் தன்றிருச் சிற்றம் பலமனைய
பூமே வியபொன்னை விட்டுப்பொன் தேடியிப் பொங்குவெங்கான்
நாமே நடக்க ஒழிந்தனம் யாம்நெஞ்சம் வஞ்சியன்ன
வாமே கலையைவிட் டோபொருள் தேர்ந்தெம்மை வாழ்விப்பதே.344

பொ - ரை: நெஞ்சமே! தீயேந்திய நிருத்தத்தை உடையவனது தில்லைச் சிற்றம்பலத்தை ஒக்கும் செந்தாமரைப் பூவின்கண் மேவிய பொன்னாகிய திருமகளைவிட்டு வேறொரு பொன்னைத் தேடி இவ்வழல் பொங்கும்கானில் நாமே நடப்பீராமின்; யாம் போக்கொழிந்தோம்; பொருள்தேடி எம்மை வாழவைப்பது வஞ்சிக்கொடியையொத்த மேகலையை உடையாளை விட்டோ? யாம் இதற்கு உடன்படேம் என்றவாறு.

*செய்யப்பட்ட அணிகலன்களையும் நெருங்கிய முலைகளையும் கொண்டு பூங்கொடி தோன்றாநின்றது என்றவாறு.*

*அன்பின் பெருக்கத்தினால் சென்ற இடமெல்லாம் சிவத்தைக்கண்டு, அதுவே செம்பொருள்; உலகப்பொருளால் ஆவது ஒன்றுமில்லை என்று உயிர்த்தலைவன் சுத்தகேவலத் தானமாகிய சிவத்தலைவி வாழும் இல்லுக்குத் திரும்பத் திருவுளம்கொண்டு சுரத்திடையே கூறியது.* *(10)*

## நெஞ்சொடு நோதல்

### 'செல்லிடம் எங்கும் சிவமென உணர்தல்'

*மீள நினைத்த உயிர்த்தலைவன் பின்னும் பொருள் மேற்செல்லும் உள்ளத்தினனாய் மீளமாட்டாது மயங்க, தன் நெஞ்சை நோக்கி இப்பொழுது நீ எதற்குப் போக முயல்கின்றாய் என நொந்து கூறாநிற்றல்.*

**பொன்னணி யீட்டிய வோட்டரு நெஞ்சமிப் பொங்குவெங்கா**
**னின்னணி நிற்குமி தென்னென்ப தேயிமை யோரிறைஞ்சும்**
**மன்னணி தில்லை வளநக ரன்ன வன நடையாள்**
**மின்னணி நுண்ணிடைக் கோபொருட் கோநீ விரைகின்றதே.342**

*பொ - ரை: பொற்குவியலைத் தேட ஓடும் நெஞ்சமே! இப்போது நீ விரைகின்றது, தேவர்கள் சென்று வணங்கும் மன்னனது அழகிய தில்லையாகிய வளநகரை ஒக்கும் அன்னத்தின் நடைபோலும் நடையை உடையாளது மின்போலும் நுண்ணிடைக்கோ? அன்றிப் பொருளுக்கோ? அன்றி இரண்டற்கும் அல்லவோ? இவ்வழல் பொங்கும் இவ்வெங்கானத்தைச் சேர்ந்து போகாமலும் மீளாமலும் நிற்கின்ற இஃது யாது? என்றவாறு.*

*இன்போ? பொருளோ? உனக்கு விருப்பாவது இரண்டில் ஒன்று; விரைந்து உணர்க என்று நெஞ்சிற்கு அறிவித்தானாம்.* *(11)*

## நெஞ்சொடு புலத்தல்

### 'போதந்தனை இகழ்ந்து அருளே பூண்டது'

*நெஞ்சொடு நொந்த உயிர்த்தலைவன் பேயிடத்தும் செய்ய முடியாத பிரிவை இவளிடத்தே எளிதாக்குவித்து இவ்விடத்துப் போந்த நினது சிக்கனத்தன்மை அஞ்சத்தக்கது எனத் தற்போத மாகிய நெஞ்சை இகழ்ந்து தன்னைத் தலைவியோடு கூட்டுவித்த திருவருளைத் தனக்குத் துணையாகப் பூண்டமை புகலாநிற்றல்.*

நாய்வயி னுள்ள குணமுமில் லேனைநற் றொண்டுகொண்ட
தீவயின் மெனியன் சிற்றம் பலமன்ன சின்மொழியைப்
பேய்வயி னும்மரி தாகும் பிரிவெளி தாக்குவித்துச்
சேய்வயிற் போந்தநெஞ் சேயஞ்சத் தக்கதுன் சிக்கனவே. 343

பொ - ரை: நாயினிடமுள்ள நன்றியறிதலாகிய குணமும் இல்லாத என்னையும் நல்ல தொண்டனாக ஏற்றுக்கொண்ட தீவண்ண மேனியனது சிற்றம்பலத்தை ஒக்கும் இன்மொழி யாளிடத்து, பேயினிடத்தும் செய்தல் அரிதாம் பிரிவை எளிதாகச் செய்வித்து நெடுந்தூரமாகிய இவ்விடத்துப் போந்த நெஞ்சமே! உன் உறுதி அஞ்சத்தக்கது என்றவாறு.

திருவருள் சிவத்தைச் சேரச்செய்யும் உபகாரசத்தி. உயிர்த் தலைவன் பொருட்பற்றை விளைத்துத் தற்போதத்தை இகழ்ந்து அருளைப் போற்றியவாறு உயர்த்துவது இத் திருப்பாடல். (12)

## நெஞ்சொடு மறுத்தல்

### 'இன்பன்றி வேறு பெறுவதும் இலை என்று அன்பாய்ப் போதம் அருளேயாயது'

எம்மால் எய்தக்கடவது இன்புருவச் சிவமேயன்றிப் பொருளன்று என்று உயிர் ஆரா அன்போடு சீவபோதத்தைச் சிவபோதமாக்கியது. இன்பன்றி வேறு பிரிவரவலை என்று பாடம் கொள்வாரும் உளர். இதன் பொருள் விளங்கவில்லை. இத் துறைக்கு விளக்கம்கூறும் வியாக்கியானமும் 'இன்பேயன்றி வேறு இலது பொருளென, அன்புயிர் போதம் உயிர்க்கு அருளே ஆயது' என்னும் இதுவும் நாம் கொண்ட பாடத்தையும் அதன் கருத்தையும் நன்கு விளக்குதல் காண்க.

தீமே வியநிருத் தன்றிருச் சிற்றம் பலமனைய
பூமே வியபொன்னை விட்டுப்பொன் தேடியிப் பொங்குவெங்கான்
நாமே நடக்க ஒழிந்தனம் யாம்நெஞ்சம் வஞ்சியன்ன
வாமே கலையைவிட் டோபொருள் தேர்ந்தெம்மை வாழ்விப்பதே.344

பொ - ரை: நெஞ்சமே! தீயேந்திய நிருத்தத்தை உடையவனது தில்லைச் சிற்றம்பலத்தை ஒக்கும் செந்தாமரைப் பூவின்கண் மேவிய பொன்னாகிய திருமகளைவிட்டு வேறொரு பொன்னைத் தேடி இவ்வழல் பொங்கும்கானில் நாமே நடப்பீராமின்; யாம் போக்கொழிந்தோம்; பொருள்தேடி எம்மை வாழவைப்பது வஞ்சிக்கொடியையொத்த மேகலையை உடையாளை விட்டோ? யாம் இதற்கு உடன்படேம் என்றவாறு.

*எம்மால் எய்தலாவது இன்புருவச் சிவமன்றிப் பொருளன்று எனத் தெளிந்து திருவருள்மயமாய் உயிர் உரைத்தவாறு.* *(13)*

## நாளெண்ணி வருந்தல்

### 'அருளே பிரிவின் அளவாராய்ந்தது'

*பொருள்வயிற் பிரிந்த தலைவன் வரவு நீட, அதனை நினைந்து தலைமகள் வருந்த, அதனைக் கண்ட திருவருட்டோழி தலைவன் சென்ற நாளையெண்ணி வருந்தாநிற்றல்.*

**தெண்ணீர் அணிசிவன் சிற்றம் பலஞ்சிந்தி யாதவரின்**
**பண்ணீர் மொழியிவ ளைப்பையு ளெய்தப் பனித்தடங்க**
**ணுண்ணீர் உகவொளி வாடிட நீடுசென் றார்சென்றநாள்**
**எண்ணீர் மையினில னுங்குழி யும்விரல் இட்டறவே.** 345

*பொ - ரை: தெளிந்த கங்கைநீரைச் சூடிய சிவனது சிற்றம் பலத்தைச் சிந்தியாதாரைப்போல வருந்த, பண்ணின் நீர்மையை யுடைய மொழியோடு கூடிய இவளை நோய் பொருந்த, குளிர்ச்சியையுடைய கண்ணகத்து நீர் சிந்த, மேனி ஒளிவாட, பொருள் தேடப் பிரிந்தநாளை எண்ணுந்தன்மையால் பல்கால் இட்டிட்டு விரல்தேய நிலமும் குழியும்; இனி எங்ஙனம் ஆற்றும்? என்றவாறு.*

*தலைவன் பிரிந்தநாள் மிகுந்தமையின் பிரிவாற்றாத சிவத்தலைவி கடந்த நாட்களை எண்ணி வருந்தியதைக்கண்ட திருவருள், தானும் வருந்தியவாறு காண்க.* *(14)*

## ஏறுவரவு கண்டு இரங்கியுரைத்தல்

### 'அருள் உயிர்ப்பருவங்கண்டு அன்பாயுரைத்தது'

*பொருள்தேடித் தன் நகருக்குத் திரும்புகின்ற தலைமகன், ஈனாக்கன்றோடு இளங்காளை வருதலைக்கண்டு, இம் மாலைக் காலம் சிவத்தலைவி பொறுக்குமளவிற்றன்று என்று கூறாநிற்றல்.*

**சுற்றம் பலமின்மை காட்டித்தன் தொல்கழல் தந்ததொல்லோன்**
**சிற்றம் பலமனை யாள்பர மன்றுதிண் கோட்டின்வண்ணப்**
**புற்றங் குதர்ந்துநன் ணாகொடும் பொன்னார் மணிபுலம்பக்**
**கொற்றம் மருவுகொல் லேறுசெல் லாநின்ற கூர்ஞ்செக்கரே.** 346

*பொ - ரை: திண்ணிய கொம்பினால் அழகிய புற்றைத் தோண்டி இரும்பினாலாகிய மணிகள் ஒலிக்க வெற்றியைப் பொருந்தின கொலைத் தொழிலில்வல்ல ஆனேறு நல்ல நாகொடு ஊரிடத்துச் செல்கின்ற சுரக்கும் செக்கர் வானமுடைய மாரிக்காலம் சுற்றத்தால் பயனின்மை உணர்த்திப் பிறவிநோய்க்கு மருந்தான தனது பழமையான திருவடிகளைத் தந்துதவிய*

தொல்லோனது தில்லைச் சிற்றம்பலத்தை ஒப்பாளது அளவன்று; இனி என்னாகுவள் என்றவாறு.

நாகொடு காளை வருதலைக்கண்டு மாரிக்காலம் தலைவிக்கு இன்னல் தருவது என உளம்கொண்ட அருளுயிர், மாலைக்காலமாகிய பருவம்கண்டு சிவத்தின்பால் அன்புமிக்கு உரைத்தமை காண்க. (15)

## பருவங்கண்டு இரங்கல்

**'இன்பந்தனக்கு இது பருவம் என்றே
அன்பாய் உயிர்மிகும் அருளால் உரைத்தது'**

இங்ஙனம் காளையின் வரவுகண்டு கலங்கிய தலைமகன், முகில்கள் விரவுதலால் சோலைகள்தோறும் மயில்கள் ஆடாநின்ற கார்காலம் இன்ப உருவாகிய சிவத்தலைவி என்னை எதிர்நோக்கும் பருவமாம் என்று அன்புகூர்ந்து கருணை உள்ளத்தோடு கார்ப் பருவம் கண்டு இரங்காநிற்றல்.

கண்ணுழை யாதுவிண் மேகங் கலந்து கணமயிறொக்
கெண்ணுழை யாத்தழை கோலிநின் றாலும் இணமலர்வாய்
மண்ணுழை யாவும் அறிதில்லை மன்னன தின்னருள்போல்
பண்ணுழை யாமொழி யாளென்ன ளாங்கொன்மன் பாவியற்கே.347

பொ - ரை: ஆகாயத்தில் மேகங்கள் நெருங்குதலால் கண் சென்று நுழைய மாட்டாது, கொத்தாகிய மலர்களையுடைய பொழில்கள்தோறும் மயிற்கூட்டங்கள் கூடி நின்று எண்ணுள் சென்றடங்காத தோகையை விரித்தாடும்; மண்ணிடத்து எல்லா உயிர்களும் அறிந்து அநுபவிக்கும் மிக எளிமை உடையவனாகிய தில்லை மன்னனது இனிய அருள்போலும்; பண் அருகிற் சென்று அணையவும் முடியாத இனிய மொழியினையுடையாள் தீவினையேனாகிய எனக்கு எத் தன்மையள் ஆவாளோ? அறிகின்றிலேன் என்றவாறு.

கார்ப்பருவம் வந்தது; களி மயில் பொழிலிடத்தே ஆடா நின்றன; இதுவே என்வரவை அவள் நோக்கியிருக்கும் பருவம்; இத்துணை நேரம் எத் தன்மையளோ என்று உயிர் அருளால் இரங்கியவாறு. (16)

## முகிலொடு கூறல்

**'போதத்துக்கு முன்பு அன்பு இன்பமுற்றது'**

பருவங்கண்டு, இரங்கி விரைந்து வருகின்ற தலைமகன் தற்போதமாகிய முகிலைநோக்கி முகிலே! இங்கெல்லாம் என்னை முற்பட்டு ஏகுவாயாயினும் அவள் நகரத்திற்கு என்னின்

முற்படாது ஒழிக என அன்புவடிவாகிய உயிர் இன்ப வடிவாகிய சிவத்தை அடைய முற்படுமாறு மொழியாநிற்றல்.

அற்படு காட்டினின் றாடிசிற் றம்பலத் தான்மிடற்றின்
முற்படு நீண்முகில் என்னின்முன் னேன்முது வோர்குழுமி
விற்படு வாணுத லாள்செல்லல் தீர்ப்பான் விரைமலர்தூய்
நெற்படு வான்பலி செய்தய ராநிற்கும் நீணகர்க்கே. 348

பொ - ரை: மாலைக்காலத்து இருளுகின்ற இடுகாட்டிலே நின்று ஆடுகின்றவனும் சிற்றம்பலத்தானுமாகிய சிவனது கண்டத்தைப்போல இருண்டு முற்படாநின்ற நீண்ட முகிலே! முதுபெண்டிர் கூடி வில் தாழும் ஒளிபொருந்திய நுதலாளது துன்பத்தைப்போக்க மணமலர்களைத் தூவி நெல்லொடு கலந்த தூய பலியைக்கொடுத்து வீட்டுத்தெய்வத்தை வணங்கும் பெரிய இல்லத்திற்கு என்னின் முற்படாதொழிக என்றவாறு.

இங்ஙனம் வேண்டிக்கொள்வதால் முனைந்துசெல்லு கின்ற முகிலாகிய போதத்துக்கு முன்பாக, அன்பையுடைய உயிர் இன்புருவச் சிவத்தை எய்த எண்ணியதை அறிவித்தல் காண்க. (17)

## தேர்வரவு கூறல்

**'அருளுயிரன்பின் அமர்ந்து வருதல்
இன்பம் தனக்கு முன்னியம்பியது'**

கார்ப்பருவம் வந்து இவளது ஆவியைக் கவர இருந்த காலத்துத் தேர் வந்தமையைத் திருவருள் சிவத்தலைவிக்குத் தெரிவியாநிற்றல்.

பாவியை வெல்லும் பரிசில்லை யேமுகில் பாவையஞ்சீர்
ஆவியை வெல்லக் கறுக்கின்ற போழ்தத்தின் அம்பலத்துக்
காவியை வெல்லு மிடற்றோன் அருளிற் கதுமெனப்போய்
மேவிய மாநிதி யோடன்பர் தேர்வந்து மேவினதே. 349

பொ - ரை: முகில் பாவைபோல்வாளது அழகிய சிறப்பினையுடைய ஆவியைக் கவரக் கருதியகாலத்து அம்பலத்துள்ள நீலப்பூவை வெல்லும் கழுத்தை உடையவனது அருளைப்போல, சென்று திரட்டிய பெரும் பொருளோடு நம் அன்பர் தேர் கதுமென வந்து பொருந்திற்று; அதனால் வரக்கடவதனை வெல்லும் தன்மை இல்லைபோலும் என்றவாறு.

பாவி - வரக்கடவது: வடசொல். உற்றகாலத்து உயிர்த் தலைவன் வந்தான் என்ற செய்தியை அருட்டோழி அன்போடு இன்பத்தலைவிக்கு இயம்பியவாறு. (18)

## இளையர் எதிர்கோடல்

### 'சிவப்பெருங்கருணையால் உவப்பு இன்பாம் உயிர் அருட்பெரு வளத்தொடும் அன்பு இன்பானது'

தேர்வரவு அறிந்த இளையர்கள் உயிர்த்தலைவனைச் சென்று எதிர்கொள்ளா நிற்றல். சிவபெருமானது பெருங் கருணையால் உள்ளம் கொள்ளா வியப்போடு இன்பின்பால் எய்த இருக்கும் உயிர் அருளாற் கிடைத்த பெரிய நிதியத்தோடு அன்பும் இன்புமாய்க் கலக்கக் காளையர் எதிர்கொள்ளுதலாம்.

யாழின் மொழிமங்கை பங்கன்சிற் றம்பலத் தானமைத்த
ஊழின் வலியதொன் றென்னை ஒளிமே கலையுகளும்
வீழும் வரிவளை மெல்லிய லாவிசெல் லாதமுன்னே
சூழுந் தொகுநிதி யோடன்பர் தேர்வந்து தோன்றியதே. 350

பொ - ரை: ஒளியையுடைய மேகலை அரையினின்றும் அகன்றது; வரிகளோடு கூடிய வளைகள் கழன்றுவீழ்ந்தன; மெல்லிய இயல்புடையாள் உயிரை விடுவதற்குமுன் சூழ்ந்துவரும் திரண்ட செல்வத்தோடு அன்பர் தேர் வந்து தோன்றிற்று; யாழின் மொழிமங்கையை இடப்பாகத்திலுடைய சிற்றம்பலத்தான் அமைத்த ஊழைக்காட்டினும் வலியதொன்று யாது? என்றவாறு.

உடல் மெலிந்து உயிர் அகல இருந்த அக் கணத்துப் பெருநிதியோடு அன்பர்தேர் வந்து தோன்றிற்று; எல்லாம் இறைவன் ஆணை என்று இளையர் எதிர்கொண்டு உயிர்த் தலைவனை வரவேற்கும்போது கூறியது. *(19)*

## உண்மகிழ்ந்துரைத்தல்

### 'அறிவும் போகமும் பிரிவிலை என்று நெஞ்சிடை இன்பாய் நிறைந்தது என்றது'

பொருள்முடித்து இளைஞர் எதிர்கொள்ளவந்த தலைமகன் தலைவியோடு பள்ளியிடத்தனாயிருந்து யான் அறிவு, நீ போகம்; அறிவும் போகமும் என்றாவது எங்காவது பிரிந்திருக்குமா? அவற்றிற்கு என்றும் பிரிவேயில்லை; எம் நெஞ்சிடை இன்பமாக நிறைந்திருக்கிறது என்று மகிழ்ந்து கூறாநிற்றல்.

மயின்மன்னு சாயலிம் மானைப் பிரிந்து பொருள்வளர்ப்பான்
வெயின்மன்னு வெஞ்சுரஞ் சென்றதெல் லாம்விட போன்டிமியூர்க்
குயின்மன்னு சொல்லிமென் கொங்கையென் அங்கத் திடைக்குளிப்பத்
துயின்மன்னு பூவணை மேலணை யாமுன் துவளுற்றதே. 351

*பொ - ரை: மயில்போலும் சாயலையுடைய இம் மானைப் பிரிந்து பொருள் தேடற்காக வெயில்நிலைபெற்ற வெய்ய சுரத்திலே சென்ற துன்பமெல்லாம், விடையை உடையவனது புலியூரிலுள்ள குயிலோசைபோலும் இனிய சொல்லை உடையாளது மெல்லிய கொங்கைகள் என் உறுப்புக்களிடை மூழ்கும்வகை துயிலுதற்குரிய பூவணையில் அணைவதற்கு முன்னே மறைந்தது என்றவாறு.*

*இதுகாறும் பொருள்தேடச் சென்றவிடத்து உண்டான வேனிற் கொடுமை, இவள் கொங்கை என் அங்கத்தில் மூழ்குவதற்கு முன் மறைந்து, எம் இருவர் நெஞ்சத்தும் இன்ப நுகர்ச்சியாய் நிறைந்தது என்று உயிர்த்தலைவன் உரைத்தவாறு.* (20)

## 25. பரத்தையிற் பிரிவு

**'பரத்தையிற் பிரிதல் எண்ணாறொன்றும்**
**உரைத்த சிவானந்த முற்றது வாம்பின்**
**எப்பதம் எவ்வுயிர் எவ்வுலகியாவும்**
**அப்படியேகண்டு அறிவு பூரண**
**மாகிநின் றளவில் அனுபவம் பெற்று**
**நின்ற தன்மை நிலைமை உரைத்தது'**

*சிற்றின்ப நெறியில் தலைமகளிடம் கண்ட இன்பத்தை இடையே பரத்தையின்பாலும் நுகரப் பிரியாநிற்றல் பரத்தையிற் பிரிவாதல்போல, சுத்தகேவலத் தானத்தில் சிவமென உயிரென வேறு உணர்தலின்றி அதுவே தானாய்ச் சிவத்தன்மை அடைந்து அடங்கிக்கிடந்த உயிர், அறிவுபூரணமாய் எங்கும் இன்பமாயிருத்தலை அறிந்து நுகர்தலே பேரின்பநெறியிற் பரத்தையிற் பிரிவாம். திருவாசக வியாக்கியானம் பரத்தையிற் பிரிதலாவது 'உரைத்த சிவானந்தமாண்டெல்லாம் பூரண மாய்க்கண்ட அநுபூதி' என்று விளக்கம் கூறும். இது நாற்பத் தொன்பது கிளவிகளையுடையது.*

### கண்டவர் கூறல்

**'பத்தியிடத்தும் விதியுண்டோ**
**என்றுதம் அடியார் உள்ளே நினைந்தது'**

*தலைமகன் எல்லாம் சிவமயம் எனக் காண்டலை ஒழித்து, ஓரிடத்துமட்டும் அன்புசெய்தற்கு விதியும் உண்டோ என்று மெய்யடியார்கள் தம் மனத்துள் எண்ணித் தம்முள் கூறாநிற்றல்.*

**உடுத்தணி வாளர வன்றில்லை யூரன் வரவொருங்கே**
**எடுத்தணி கையே றினவளை யார்ப்ப இளமயிலோர்**
**கடுத்தணி காமர் கரும்புரு வச்சிலை கண்மலரம்**
**படுத்தணி வாளிளை யோர்சுற்றும் பற்றினர் மாதிரமே:** 352

பொ - ரை: கச்சாகவும் அணியாகவும் கொண்ட ஒளி பொருந்திய அரவை உடையவனது தில்லைக்கண் உளனாகிய ஊரன் இவ் வீதிக்கண்வர, தெரிந்து அணியப்பட்ட கையினிடத் துளதாகிய இனவளையல்கள் ஒலிக்க இளமயிலின் அழகை ஒத்து மிக்க அழகை உடைய கரிய புருவமாகிய வில்லில் கண்மலராகிய அம்பைச்சேர்த்து அணிகளிலிருந்து உண்டாகிய ஒளியை உடைய மகளிர் ஒருங்குகூடித் திசை முழுதும் பற்றினர்; இதனை இவன் காதலி அறியின் என்னாம் என்றவாறு.

அன்பு யாரிடத்தும் செய்யத்தக்கதா? அதற்கொரு விதி வரம்பு இல்லையா? என்று எண்ணிய மெய்யடியார்கள், உயிர்த்தலைவன் அறிவு பூரணமாய் சிவத்தலைவியிடம் செலுத்திய அன்பை அனைத்துயிர்கள்மாட்டும் ஒப்பச் செலுத்து தலை உணர்ந்து, தம்முள்ளே, சிவத்தலைவி அறியின் என்னாம் என்று கூறாநின்றமை காண்க.

## பொறையுவந்துரைத்தல்

### 'அருளே சிவப்பொறை அறிந்து உரைத்தது'

உயிர்த்தலைவன் அறிவு பூரணமாய் எல்லாம் சிவமாக எண்ணி அன்பு செய்தலை அறிந்த சிவத்தலைவி; மறந்தும் புறந்தொழாமையன்றே நெறிநிற்பார் செயல்; அங்ஙனமாக உயிர் எமக்கே உரிய உள்ளத்தைப் பொதுமையாக்கியதே என்று மனமுடைந்தும் புறத்து வெளிப்படாமல் பொறுத்தமைகண்ட திருவருட்டோழி உவந்து கூறாநிற்றல்.

சுரும்புறு கொன்றையன் தொல்புலி யூர்ச்சுருங் கும்மருங்குல்
பெரும்பொறை யாட்டியை யென்னின்று பேசுவ பேரொலிநீர்க்
கரும்புறை யூரன் கலந்தகன் றானென்று கண்மணியும்
அரும்பொறை யாகுமென் ஆவியும் தேய்வுற் றழிகின்றதே. 353

பொ - ரை: பெரிய ஒலிக்கும் நீரையுடைய கரும்பு தங்கும் ஊரையுடையவன் கலந்து அகன்றான் என்று கருதுதலான் என் கண்மணியும் தாங்குதற்கரிய சுமையாயிற்று; என் உயிரும் தேய்ந்து தேய்ந்து அழிகின்றது; யான் இவ்வாறாகவும் கலங்காநின்ற, வண்டுகள் வாழும் கொன்றை மலரை உடையானது பழையதாகிய புலியூரில் சுருங்கிய இடையினையுடைய பெரிய பொறுமையையுடைய இவளை யான் இன்றுபேசுவன என் எ-று.

கண்மணியும் அரும்பொறையாகும் என்றது பரத்தையிற் பிரிந்த தலைமகன் வருவான் என்று வழிமேல் விழிவைத்து நோக்கி என் கண்மணிகள் பயனிழந்தமையால் எனக்கு ஒரு சுமையாயின என்று வெறுத்துக் கூறியவாறாம். சேரியிடத்தான் என்ற செய்தியைக் கேட்ட எனக்கே இது நிகழுமாயின் தலைவி

*இதனைக்கேட்டும் தன்துயரை வெளிப்படுத்தாது, பொறையுடையவளாயிருக்கின்றாளே! என்று உவந்தவாறு.* (2)

## பொதுப்படக் கூறி வாடியழுங்கல்

### 'இன்பம் உயிர்விதி எண்ணி இரங்கியது'

*பொறையுவந்துரைத்த தோழிக்கு முன்னிலைப் புறமொழியாக, என்னைப்போல இனி எவள் தனது நலங்கவரக் கொடுத்துத் தமது அணையையே துணையாகக்கொண்டு உயிர்தேய இருக்கின்றாளோ என்று பொதுப்பட உயிரின் விதியை எண்ணியிரங்கிக் கூறாநிற்றல்.*

அப்புற்ற சென்னியன் றில்லை யுறாரின் அவருறுநோய்
ஒப்புற் றெழினலம் ஊரன் கவரவுள் ளும்புறம்பும்
வெப்புற்று வெய்துயிர்ப் புற்றுத்தம் மெல்லணை யேதுணையாச்
செப்புற கொங்கையர் யாவர்கொல் ஆருயிர் தேய்பவரே. 354

*பொ - ரை: புனலையுற்ற சிரத்தையுடையானது தில்லையை மனமொழி மெய்களான் உறாதாரைப்போல எம் எழிலின் நலத்தைத் தலைவன் கவர்ந்துகொள்ள, தில்லையையுறாதார் உறும் நோயைப் பெற்று உள்ளும் புறமும் வெதும்பி; வெய்தாக மூச்சுவிட்டு, தம் மெல்லணையே துணையாக, கிண்ணம் போலும் கொங்கையையுடைய மகளிர் தம் அரிய உயிர் தேய இருப்பவர் பிறர் யாரோ? என்றவாறு.*

*இங்ஙனம் பல மகளிரை மணத்தல் உயிர்த்தலைவன் விதிபோலும்; ஆதலால் மலர்தேடும் வண்டுபோல ஆண்கள் பலரை மணந்து பிரிய, பிரிவாற்றாது வெம்பி, வெய்துயிர்த்து உயிரழிபவர் என்னைப்போல இன்னும் எத்தனை மகளிரோ எனப் பிற மகளிர்க்கு இரங்கிக்கூறியதாம்.* (3)

## கனவிழந்துரைத்தல்

### 'மறந்தும் உயிர் இன்பகலா நின்றது'

*தலைமகனது கொடுமையை நினைந்து வாடும் சிவத்தலைவி, கனவிடை உயிர்த்தலைவன் வந்து புல்லத் தன் மார்பைத்தர அக் கனவை மறந்து நனவென்றெண்ணி மயங்கிப்புலந்து, இன்புருவாகிய நான் உயிரைப் புல்லாது இகழ்ந்து அகன்றேன் என்று திருவருட்டோழிக்குக் கூறாநிற்றல்.*

தேவா சுரரிறைஞ் சுங்கழ லோன்றில்லை சேரலர்போல்
ஆவா கனவு மிழந்தேன் நனவேன் றமளியின்மேற்
பூவா ரகலம்வந் தூரன் தரப்புலம் பாய்நலம்பாய்
பாவாய் தழுவிற்றி லேன்விழித் தேனரும் பாவியனே. 355

பொ - ரை: நலம் பரந்த பாவாய்! ஊரனாகிய தலைவன் என்னுடைய படுக்கையில்வந்து மாலையணிந்த மார்பைத்தர அவனோடு மேவாமையின் பின்னும் தனிமையாய், நனவென்று மயங்கித் தழுவிலேன்; அதுமட்டுமன்றிப் பாவியாகிய யான் விழித்துக்கொள்ளவும் செய்தேன்; அதனால் தேவரும் அசுரரும் தம் பகைமை ஒழிய ஒருங்குவந்து வணங்கும் கழலையுடையவனது தில்லையைச் சேராதாரைப்போல ஐயோ கனவுமிழந்தேன் என்றவாறு.

இங்ஙனம் மறந்து கனவை நனவாக மயங்கி உயிர் என்னொடு புல்லி இன்பமார்தலை இன்புருவச்சிவமாகிய யான் அகலா நின்றமையைத் திருவருளுக்கு உணர்த்தியவாறாம். (4)

## விளக்கொடு வெறுத்தல்

### 'இன்பம் சுடரொடு இரங்கி உரைத்தது'

கனவிழந்தமை கூறி வருந்தாநின்ற தலைமகள், நீயாகினும், பொய்முகம் காட்டிக் கரத்தலாகாது என்று உயிர்த்தலைவர்க்கு உரைத்திலையே என்று விளக்கொடு வெறுத்து இரங்கி உரையாநிற்றல்.

செய்ம்முக நீல மலர்தில்லைச் சிற்றம் பலத்தரற்குக்
கைம்முகங் கூம்பக் கழல்பணி யாரிற் கலந்தவர்க்குப்
பொய்ம்முகங் காட்டிக் கரத்தல் பொருத்தமன் றென்றிலையே
நெய்ம்முக மாந்தி யிருண்முகங் கீழும் நெடுஞ்சுடரே. 356

பொ - ரை: முகத்தால் நெய்யைக் குடித்து இருண்முகத்தைக் கிழிக்கின்ற நெடிய சுடரே! வயல்முகத்தனவாகிய நீலமலர்கள் மலராநின்ற தில்லைச் சிற்றம்பலத்தின்கண் உளனாகிய அரனுக்கு முன்கைகளைக் கூப்பிக் கழலைத் தொழாதார்போல மணந்தவர்க்குப் பொய்மையான முகத்தைக் காட்டி மறைதல் தகுதியன்றென்று தலைவர்க்குக் கூறிற்றிலையே! வேறு கூறுவார் யார்? என்றவாறு.

இன்பம் என்றது தலைவியை. சிவத்தலைவி இன்பவடிவினளாதலின் இன்பம் என்றே உண்மை எங்கும் வழங்குவதாயிற்று. பொய்முகங்காட்டி மறைதல் தகாது என்று உயிர்க்கு உரைக்கும் வண்ணம் சுடரொடு இரங்கிக் கூறியவாறு காண்க. (5)

## வாரம்பகர்ந்து வாயின் மறுத்துரைத்தல்

### 'இன்புயிர் அன்பே எடுத்துரைத்தது'

விளக்கொடு வெறுத்துக் கூறாநின்ற சிவத்தலைவி, உயிர்த் தலைவன் இன்ப அறிவு முதிர்ந்து அனைத்தும் சிவமாய்க்காணும் தன்மையில் ஒழுகிவந்து வாயிலினிடந்து நிற்ப, தலைவர் வண்டை

ஒத்தவர் யாம் மலரனையேம்; மலர் மலர்ந்து புதுமைநலம் பொருந்திக் கள்ளொடு கவினும்போது கள்ளையுண்ண வண்டு மலரை விடாது சுற்றும்; அதுபோல மகளிரும் புதுமைநலம் பெற்று விளங்கும்போது ஆடவர் வளையவருவர்; இது அவரியல்பு; அவர்கள் வந்தபோது ஏற்றுக்கொள்வது எம் கடமை என்று வாயில் நேர்வித்தார்க்கு, சேரிக்கண் ஊரனை வளைத்துவைத்து வேண்டினார்க்கே உரியன மாலையும் தோளும்; யான் மன்னனைப் பரத்தையர்க்கு முற்றூட்டாகக் கொடுத்துவிட்டேனென்று மறுத்துக் கூறாநிற்றல். உயிர் இன்புருவாய சிவத்திடம் செலுத்தும் அன்பு இப்படிப் பொதுமையாயது என்று சிவத்தலைவி வாயில்நேர்வார்க்கு எடுத்துரைத்ததாம்.

**பூங்குவ ளைப்பொலி மாலையும் ஊரன்பொற் றோளிணையும்**
**ஆங்கு வளைத்துவைத் தாரேனுங் கொள்கநள் ளாரரணம்**
**தீங்கு வளைத்தவில் லோன்றில்லைச் சிற்றம் பலத்தயல்வாய்**
**ஓங்கு வளைக்கரத் தார்க்கடுத் தோமன் உறாவரையே. 357**

*பொ - ரை:* குவளைப்பூவான் இயன்ற பொலிகின்ற மாலையையும் ஊரனது பொன்போலும் இரண்டு தோள் களையும் தம்முடைய இல்லத்திலேயே வளைத்து வைத்துக் கொண்டு, வேண்டியவர்கள் யாரேனும் கொள்வார்களாக; பகைவரது கோட்டைகள் தீங்கு எய்தவளைக்கப்பட்ட வில்லை யுடையவனது தில்லைச்சிற்றம்பலத்திற்கு அயலதாகிய இடத்தில் வாழுகின்ற உயர்ந்த வளையை அணிந்த கையை உடையார்க்கு மன்னனை முற்றூட்டாக அளித்து விட்டோம் என்றவாறு.

உறாவரை - முற்றூட்டு; அதாவது சர்வமானியம். வளைத்து வைத்தார் என்றது கண்ணாலும் சொல்லாலும் நடையாலும் உடையாலும் மயக்கி இல்லத்தை நினையாது தலைவனை வளைத்து வைத்துக்கொண்டவர்கள் என்பதாம். ஆரேனும் என்றது குறிப்பிடத்தக்க குணநலமும் குலநலமுமில்லாதார் என்னும் குறிப்பினது. பரத்தையர் புறஞ்சேரிக்கண் வாழும் இயல்பினர் ஆதலின் 'சிற்றம்பலத்து அயல்வாய் ஓங்கு வளைக்கரத்தார்' என்றாள்.

அவர்களது கைவளையல்களே உறுதுணையாய்த் தங்கள் மேனியை விலைக்கு விற்பதற்கு உதவுகின்றன என்பாள் 'ஓங்கு வளை' என விதந்து கூறினாள். அடுத்தோம் என்றது தலைவன் மாலையும் தோளும் பல பிறவிதோறும் தொடர்ந்துவரும் உரிமையுடையது; அதனைப் பரத்தையரது இளமைநலத்தில் தலைவர்க்கு உவர்ப்பு உண்டாம்வரை அனுபவிப்பதற்காக அளித்தோமென உரிமைதோன்ற உரைத்தவாறு. (6)

## பள்ளியிடத்து ஊடல்

### 'இன்பம் இகழ்தல் அன்பெனக் கண்டது'

இங்ஙனம் பரத்தையிற் பிரிந்துவந்து வாயிற்கண் நின்ற தலைமகன், ஆற்றாமையை வாயிலாகக்கொண்டு பள்ளியிடத் தானாக, தலைமகள் அவனைநோக்கித் தங்களை இடைவிடாது நுகர்தற்குத் தவஞ்செய்யாத தீவினையேம் என எம்மை யாம் நொந்துகொள்வதல்லது நின்னை நோவது என்னோ? நின் காதலிமார், பலரிடம் கற்று நினக்குப் புதிதாகச்செய்த அப் புல்லுதலை யாம் செய்யமாட்டோம்; அதனால் எம்மைத் தொடற்க; எம் கலையைத் தீண்டற்க எனச் சிவத்தலைவி உயிர்த் தலைவனை இகழ்தலே இன்பம் எனக் கருதிப் புலவாநிற்றல்.

தவஞ்செய்தி லாதவெந் தீவினை யேம்புன்மைத் தன்மைக்கெள்ளா
தெவஞ்செய்து நின்றினி யின்றுனை நோவதென் அத்தன்முத்தன்
சிவன்செய்த சீரரு ளார்தில்லை யூரநின் சேயிழையார்
நவஞ்செய்த புல்லங்கண் மாட்டேம் தொடல்விடு நற்கலையே. 358

பொ - ரை: அனைவருக்கும் தந்தையும் இயல்பாகவே பாசங்களில் நீங்கியவனுமாகிய சிவனால் செய்யப்பட்ட சிறந்த அருள்நிறைந்த தில்லையிலுள்ள ஊரனே! முற்பிறப்புக்களில் தவம்செய்யாத கொடிய தீவினையை உடையம் யாம்; எம்முடைய புன்மைத் தன்மைக்காக எம்மை இகழாது துன்பத்தைச் செய்து நின்று இன்று உன்னை நோவது என்னாம்; அதுகிடக்க, உன் காதலியர் செய்யும் புதுமுறைப் புல்லுதல்களை யாம் புரிய மாட்டேம்; அதனால் எனது மேகலையைத் தீண்டற்க; விடுக என்றவாறு.

புல்லங்கள் மாட்டேம் நற்கலைவிடு என உயிர்த்தலைவனை இகழ்தலே இன்பம் எய்துதற்கரிய அன்பாம் எனச் சிவத்தலைவி கண்டு புலந்தாளாம். இதன் பயன் கலவியின்பம் மிகுதலாம் என்க.

(7)

## செவ்வணிவிடுக்க இல்லோர் கூறல்

### 'பலபாராட்டிலும் இன்பு அகலாதென அடியார்தாமே அறிந்து கூறியது'

இவ்வாயத்தார் முன்பு புறத்தார்மனைக்கண் இக் குறியை அறிவிக்க இவள் செல்வது நமக்கு மிகவும் இளிவரவுடைத்து எனச் செவ்வணிவிடுக்க விரையும் இல்லோராகிய அடியார்கள் அறிந்து தம்முள் கூறாநிற்றல். 'பரசமயத்தினும் பாராட்டேன் என விரைவும் இன்பு அடியார் மேவி உரைத்தல்' என்பது வியாக்கியானம். பரசமயம் என்றது பரத்தையர் இல்லத்தை,

ஒத்தவர் யாம் மலரனையேம்; மலர் மலர்ந்து புதுமைநலம் பொருந்திக் கள்ளொடு கவினும்போது கள்ளையுண்ண வண்டு மலரை விடாது சுற்றும்; அதுபோல மகளிரும் புதுமைநலம் பெற்று விளங்கும்போது ஆடவர் வளையவருவர்; இது அவரியல்பு; அவர்கள் வந்தபோது ஏற்றுக்கொள்வது எம் கடமை என்று வாயில் நேர்வித்தார்க்கு, சேரிக்கண் ஊரனை வளைத்துவைத்து வேண்டினார்க்கே உரியன மாலையும் தோளும்; யான் மன்னனைப் பரத்தையர்க்கு முற்றூட்டாகக் கொடுத்துவிட்டேனென்று மறுத்துக் கூறாநிற்றல். உயிர் இன்புருவாய சிவத்திடம் செலுத்தும் அன்பு இப்படிப் பொதுமையாயது என்று சிவத்தலைவி வாயில்நேர்வார்க்கு எடுத்துரைத்ததாம்.

பூங்குவ ளைப்பொலி மாலையும் ஊரன்பொற் றோளிணையும்
ஆங்கு வளைத்துவைத் தாரேனுங் கொள்கநள் ளாரரணம்
தீங்கு வளைத்தவில் லோன்றில்லைச் சிற்றம் பலத்தயல்வாய்
ஓங்கு வளைக்கரத் தார்க்கடுத் தோமன் உறாவரையே. 357

பொ - ரை: குவளைப்பூவான் இயன்ற பொலிகின்ற மாலையையும் ஊரனது பொன்போலும் இரண்டு தோள் களையும் தம்முடைய இல்லத்திலேயே வளைத்து வைத்துக் கொண்டு, வேண்டியவர்கள் யாரேனும் கொள்வார்களாக; பகைவரது கோட்டைகள் தீங்கு எய்தவளைக்கப்பட்ட வில்லை யுடையவனது தில்லைச்சிற்றம்பலத்திற்கு அயலதாகிய இடத்தில் வாழுகின்ற உயர்ந்த வளையை அணிந்த கையை உடையார்க்கு மன்னனை முற்றூட்டாக அளித்து விட்டோம் என்றவாறு.

உறாவரை - முற்றூட்டு; அதாவது சர்வமானியம். வளைத்து வைத்தார் என்றது கண்ணாலும் சொல்லாலும் நடையாலும் உடையாலும் மயக்கி இல்லத்தை நினையாது தலைவனை வளைத்து வைத்துக்கொண்டவர்கள் என்பதாம். ஆரேனும் என்றது குறிப்பிடத்தக்க குணநலமும் குலநலமுமில்லாதார் என்னும் குறிப்பினது. பரத்தையர் புறஞ்சேரிக்கண் வாழும் இயல்பினர் ஆதலின் 'சிற்றம்பலத்து அயல்வாய் ஓங்கு வளைக்கரத்தார்' என்றாள்.

அவர்களது கைவளையல்களே உறுதுணையாய்த் தங்கள் மேனியை விலைக்கு விற்பதற்கு உதவுகின்றன என்பாள் 'ஓங்கு வளை' என விதந்து கூறினாள். அடுத்தோம் என்றது தலைவன் மாலையும் தோளும் பல பிறவிதோறும் தொடர்ந்துவரும் உரிமையுடையது; அதனைப் பரத்தையரது இளமைநலத்தில் தலைவர்க்கு உவர்ப்பு உண்டாம்வரை அனுபவிப்பதற்காக அளித்தோமென உரிமைதோன்ற உரைத்தவாறு. (6)

## பள்ளியிடத்து ஊடல்

### 'இன்பம் இகழ்தல் அன்பெனக் கண்டது'

இங்ஙனம் பரத்தையிற் பிரிந்துவந்து வாயிற்கண் நின்ற தலைமகன், ஆற்றாமையை வாயிலாகக்கொண்டு பள்ளியிடத் தானாக, தலைமகள் அவனைநோக்கித் தங்களை இடைவிடாது நுகர்தற்குத் தவம்செய்யாத தீவினையேம் என எம்மை யாம் நொந்துகொள்வதல்லது நின்னை நோவது என்னோ? நின் காதலிமார், பலரிடம் கற்று நினக்குப் புதிதாகச்செய்த அப் புல்லுதலை யாம் செய்யமாட்டோம்; அதனால் எம்மைத் தொடற்க; எம் கலையைத் தீண்டற்க எனச் சிவத்தலைவி உயிர்த் தலைவனை இகழ்தலே இன்பம் எனக் கருதிப் புலவாநிற்றல்.

தவஞ்செய்தி லாதவெந் தீவினை யேம்புன்மைத் தன்மைக்கெள்ளா
தெவஞ்செய்து நின்றினி யின்றுனை நோவதென் அத்தன்முத்தன்
சிவன்செய்த சீரரு ளார்தில்லை யூரநின் சேயிழையார்
நவஞ்செய்த புல்லங்கண் மாட்டேம் தொடல்விடு நற்கலையே. 358

பொ - ரை: அனைவருக்கும் தந்தையும் இயல்பாகவே பாசங்களில் நீங்கியவனுமாகிய சிவனால் செய்யப்பட்ட சிறந்த அருள்நிறைந்த தில்லையிலுள்ள ஊரனே! முற்பிறப்புக்களில் தவம்செய்யாத கொடிய தீவினையை உடையம் யாம்; எம்முடைய புன்மைத் தன்மைக்காக எம்மை இகழாது துன்பத்தைச் செய்து நின்று இன்று உன்னை நோவது என்னாம்; அதுகிடக்க, உன் காதலியர் செய்யும் புதுமுறைப் புல்லுதல்களை யாம் புரிய மாட்டேம்; அதனால் எனது மேகலையைத் தீண்டற்க; விடுக என்றவாறு.

புல்லங்கள் மாட்டேம் நற்கலைவிடு என உயிர்த்தலைவனை இகழ்தலே இன்பம் எய்துதற்கரிய அன்பாம் எனச் சிவத்தலைவி கண்டு புலந்தாளாம். இதன் பயன் கலவியின்பம் மிகுதலாம் என்க.

(7)

## செவ்வணிவிடுக்க இல்லோர் கூறல்

### 'பலபாராட்டிலும் இன்பு அகலாதென அடியார்தாமே அறிந்து கூறியது'

இவ்வாயத்தார் முன்பு புறத்தார்மனைக்கண் இக் குறியை அறிவிக்க இவள் செல்வது நமக்கு மிகவும் இளிவரவுடைத்து எனச் செவ்வணிவிடுக்க விரையும் இல்லோராகிய அடியார்கள் அறிந்து தம்முள் கூறாநிற்றல். 'பரசமயத்தினும் பாராட்டேன் என விரைவும் இன்பு அடியார் மேவி உரைத்தல்' என்பது வியாக்கியானம். பரசமயம் என்றது பரத்தையர் இல்லத்தை,

இன்பு அடியார் என்றது செவ்வணிவிடுக்க விரையாநின்ற இல்லோரை. இதனை அடிக்கொண்டு முற்கூறிய பேரின்பக் கொளுவை ஆராயின், பல பாராட்டிலும் - புறச்சமயத்தார்கள் பலர் தாமெய்தும் முத்திநிலையைப் பாராட்டிக் கூறினும், இன்பு அகலாது என - சிவத்தோடு சேர்ந்து எய்தும் இன்பைப்போலப் பரந்துபட்டதாகாது என்று, மெய்யடியார்கள் அறிந்து கூறியதாகக் கருத்துக்கொள்க.

**தணியுறப் பொங்குமிக் கொங்கைகள் தாங்கித் தளர்மருங்குல்**
**பிணியுறப் பேதைசென் றின்றெய்து மாலர வும்பிறையும்**
**அணியுறக் கொண்டவன் றில்லைத்தொல் லாயநல் லார்கண் முன்னே**
**பணியுறத் தோன்றும் நுடங்கிடை யார்கள் பயின்மனைக்கே.** 359

பொ - ரை: பிறையையும் அப் பிறைக்குப் பகையாகிய அரவையும் தனக்கு அணியாகக் கொண்டவனது தில்லையிலே, பழைய இவள் ஆயத்தில் உள்ளாராகிய மகளிர்கள்முன்னே, அரவுபோலத் தோன்றும் அசைகின்ற இடையை உடைய பரத்தையர் நெருங்கிய மனைக்கண், தாழ்வுபொருந்த வளருகின்ற இக் கொங்கைகளைத் தாங்கித் தளருகின்ற இடையையுடைய இவள் வருந்தச் செவ்வணி சூடிய இப் பேதை இன்று சென்று எய்துமாயின் இஃது எமக்குப் பெரிதும் இளிவரவுடைத்து என்றவாறு.

பரத்தையர்கட்குள்ள இடையழகும் முலையழகும் செவ்வணி தாங்கிச் செல்லும் எம் ஏவல்மகட்கே உண்டு என்பாள், 'பொங்கும் இக்கொங்கைகள் தாங்கித் தளர் மருங்குல் பிணியுறப் பேதை சென்று எய்தும்' என்றாள். பரத்தையர் அல்குல் அரவுபோலும் என்றது உருவொப்புமட்டுமன்று; பண்பும் ஒத்ததாம். அரவு கடித்து நஞ்சூட்டிக் கொல்லுதல்போல இவர்களது அல்குலும் பிணியூட்டிக்கொல்லும் என்றவாறு.

உயிர்த்தலைவனைப் போன்ற பொதுமை நோக்குடைய காமுகர் பலர் எல்லா மகளிரையும் ஒப்பப்பாராட்டினும் ஒப்ப இன்பம் காணினும், சிவத்தலைவியைச் சேர்ந்து காணுகின்ற இன்பம் ஆகாது என்று மெய்யடியார் தாமே அறிந்து துணிந்து கூறியவாறு காண்க. (8)

## அயலறிவுரைத்து அவளழுக்கமெய்தல்

### 'பலர்கண்டாலும் இன்பு அகலாது என்றது'

யாம் செவ்வணி அணிந்து சேடியை அனுப்புவேமாயின், ஒருத்தி நமக்குத் தர நாமவனை எய்தும்படியாயிற்றே நம்முடைய பெண்தன்மை என்று அயலார் அறிவரே என எண்ணிச் சிவத் தலைவி வருந்தாநிற்றல். பலர் கண்டாலும் - அயல் மாதர்கள் பலர்

இவள் செவ்வணியணிந்து செல்வதைக் கண்டாலும், இன்பு அகலாது - தலைவன் வந்து தலையளி செய்தலால் நமக்குக் கிடைக்கும் இன்பம் என்றும் அகலாது, நமக்கே உரியது என்று தலைவி கூறியதாகக்கொள்க.

இரவணை யும்மதி யோர்நுத லார்நுதிக் கோலஞ்செய்து
குரவணை யுங்குழ லிங்கிவ ளாலிக் குறியறிவித்
தரவணை யுஞ்சடை யோன்றில்லை யூரனை ஆங்கொருத்தி
தரவணை யும்பரி சாயின வாறுநந் தன்மைகளே. 360

பொ - ரை: இரவில் தோன்றும் பிறைபோலும் நெற்றியை உடைய பெண்களின்முன்னே செவ்வணியாகிய கோலத்தைச் செய்து குரவமலர் அணிந்த இவளால் இக் குறிப்பை அறிவித்து, பாம்பு சுற்றிய சடையையுடையவனது தில்லையூரனைப் பரத்தையர் மனைக்கண் ஒருத்தி நமக்குக் கொடுக்க, நாம் எய்தும்படியாயிற்றே நம்முடைய பெண்தன்மைகள் என்றவாறு.

தன் கைப்பொருளைப் பிறர்கையிற் கொடுத்துப் பின்பு அவர்களை எதிர்நோக்கியிருப்பவர்களைப் போல ஏழேழு பிறவியிலும் நமக்கு உரிமையான தலைவனை அவள் நமக்குத்தர நாம் நுகர்வதா நமது பெண்மைக்கு அழகு என்று அழுங்கியவாறு செவ்வணி அணிந்து சேடியை விடுத்துழி எத்தனை மகளிர்கள் இடைவழியிலே காண்பர்; இக் குறிப்பினை அறிவர்; ஆயினும் இன்பு அகலாது என்றதாம். *(9)*

## செவ்வணி கண்ட வாயிலவர் கூறல்

### 'இன்பங்கண்டவர்க்கு எங்குமின்பாகல்'

செவ்வணி அணிந்த சேடியைக்கண்ட பரத்தையின் வாயிலி லுள்ள மகளிர் தம்முள், இங்கே எம் தலைவியிடத்து இன்பம்கண்ட தலைவர்க்கு எங்கும் இன்பாயிற்று என்று கூறாநிற்றல். இன்பின் பருவம் முன்பறிவித்த அன்பின் அடிகளை அடிகண்டுரைத்தல் என்னும் வியாக்கியானமும் சிவத்தலைவி பூப்பெய்துதலாகிய கருணையின் கனிவு எய்திமையை அறிவிக்க வந்த அன்புடைய அடியவர்களைக்கண்டு பரத்தையின் வாயிலவர் உரைத்தனர் என்ற இக் கருத்தினதாதல் காண்க.

சிவந்தபொன் மேனி மணிதிருச் சிற்றம் பலமுடையான்
சிவந்தவந் தாளணி யூரற் குலகிய லாறுரைப்பான்
சிவந்தபைம் போதுமஞ் செம்மலர்ப் பட்டுங்கட் டார்முலைமேற்
சிவந்தவஞ் சாந்தமுந் தோன்றின வந்து திருமனைக்கே. 361

பொ - ரை: செம்பொன்னைப் போலும் மேனியையுடைய மணிபோல்வானும் திருச்சிற்றம்பலம் உடையானுமாகிய சிவனது

சிவந்த அழகிய தாள்களை முடிக்கு அணியாக்கிய தலைவர்க்கு உலகியல்நெறியை உணர்த்த வேண்டி, நம் திருமனையில் சிவந்த பசிய பூவும் செம்மலர்ப்பட்டும் வாரால் கட்டுதலைப் பொருந்திய முலையின்மேல் அழகிய செஞ் சந்தனமும் வந்து தோன்றின; இனி அறத்தின் குறைபாடு வராமல் தலைவன் தன் இல்லத்திற்கு ஏகல்வேண்டும் என்றவாறு.

பூப்பாடெய்திய ஈராறுநாளும் கருவயிற்றூறும் காலமாதலின் பிரியப்பெறான் பரத்தையிற் பிரிவோன் என்பது உலகியல் ஆதலானும், தலைவி பூத்தமையுணர்த்த செவ்வணி அணிந்த சேடியை விடுத்தல் மரபாகலானும் ஊரவர்க்கு உலகியலான் உரைக்கச் சிவந்த மலரும் செம்பட்டும் செஞ்சாந்தமும் வந்து நம் திருமனைக்கே தோன்றின என்றாள். இது உலகியவாயினும் பரத்தையின் வாயிலவர் தம் தலைவியை விட்டுப் பிரிவானே என்ற ஏக்கத்தால், 'இன்பம் கண்டவர்க்கு எங்கும் இன்பாகும் எமக்கு என்னாயிற்று? என்று குறிப்பால் தம் ஏக்கமுணர்த்தினர். அதன் பயன் பன்னிரண்டு நாள் கழித்ததும் இங்கே விரைந்து வருதல் வேண்டும் என்னும் குறிப்பு. (10)

## மனைபுகல்கண்ட வாயிலவர் கூறல்

### 'இன்புடையோர்க்குப் புகல் இன்பேயென்று அன்புடையோர்கள் அறிய உரைத்தது'

செவ்வணிகண்ட தலைமகன் பரத்தை வீட்டினின்று வந்து தம்மனையில் தடையின்றிப் புக அதனைக்கண்ட வாயிலவர், இவ்வளவு காலம் எங்கோ கழித்து வாயிலின்றிப் புகுகின்றான்; இல்லற தருமத்தை எண்ணி இவனொடு புலந்து இவனுக்கு அடங்காதார் ஒருவருமில்லை என்று தம் முள் உரைத்தது.

**குராப்பயில் கூழை யிவளின்மிக் கம்பலத் தான்குழையாம்**
**அராப்பயில் நுண்ணிடை யாரடங் காரெவ ரேயினிப்பண்**
**டிராப்பகல் நின்றுணங் கீர்ங்கடை யித்துணைப் போழ்திற்சென்று**
**கராப்பயில் பூம்புன லூரன் புகுமிக் கடிமனைக்கே. 362**

பொ -ரை: முன்பு இரவும் பகலும் வாயில் பெறாதுநின்று வாடுகின்ற குளிர்ந்த கடைவாயிலை இவ்வளவுகாலம் கழித்துக் காலந்தாழ்த்தாது விரைந்து, முதலைகள் பயிலுகின்ற பொலிவாகிய புனலையுடைய ஊரன் இக் காவல்மனையில் புகுந்தான்; குரவ மலரைச்சூடிய குழலையுடைய இவளினும் மேம்பட்டு, அம்பலத் தானின் காதணியாகிய அரவையொத்த நுண்ணிய இடையினை யுடைய மகளிர் எவர், இவனொடு புலந்து அடங்காதார்; இல்லற நெறிக்காக எவரும் அடங்குவர் என்றவாறு.

அம்பலத்தான் குழையாம் அராப்பயில் நுண்ணிடையார் எனக் குல மகளிரைக் குறிப்பித்தது, அம்பலத்தானுக்கு அணியாகிய அரா வேறெவரையும் தீண்டாதது, வேறெவராலும் தீண்டப் படாதது; அதுபோன்ற சிறந்த கற்பொழுக்கமுடையார் எனக் குறிப்பித்தவாறாம். இல்லறநெறி என்ற ஒன்று இன்மையான் இத்தகைய சூழ்நிலை பரத்தையர்க்கு ஏற்படின் அவர்கள் புலந்துரைப்பர், யாம் புலவேம் என்பதும் தோன்ற நின்றது. இதனால் இன்புடையோனாகிய உயிர்த்தலைவனுக்குத் தடை யின்றி மனைபுகுதல் இன்பமே என்று சிவத்தலைவியினிடத்து அன்புடையவர்களாகிய வாயிலோர் தம்முள் அனைவரும் அறிய ஒருவருக்கொருவர் உரைத்தவாறு காண்க. (11)

## முகமலர்ச்சி கூறல்

### 'உயிர் இன்படைந்தது அடியார் தேறியது'

பரத்தையிற் பிரிந்த தலைமகன் செவ்வணிகண்டு வீடு திரும்பினான் என்று சொல்லுமளவில் தலைமகள் கண்கள் சிவந்தன; அப் புலவி நோக்கத்திற்கு எதிராகக் காதலன் நோக்கினான்; கண் சிவப்பாறியது; முகம் மலர்ந்தது, இதனைக் கண்ட அவ்விடத்திலுள்ள அடியவர்கள் உயிர்த்தலைவன் சிவத்தைச் சார்ந்து இன்பு அடைந்தது எனத் தம்முள் கூறாநிற்றல்.

வந்தான் வயலணி யூரன் எனச்சின வாண்மலர்க்கண்
செந்தா மரைச்செவ்வி சென்றசிற் றம்பல வன்னருளான்
முந்தா யினவிய னோக்கெதிர் நோக்க முகமடுவிற்
பைந்தாட் குவளைகள் பூத்திருள் சூழ்ந்து பயின்றனவே. 363

பொ - ரை: வயல்கள் அழகுசெய்யும் ஊரன் வந்தான் என்று சொல்லுமளவில், சினத்தோடு கூடிய வாள்போன்ற மலர்ந்த கண்கள் செந்தாமரைப் பூவினது செவ்வியை அடைந்தன; சிற்றம்பல நாதனருளால் முன்பு உண்டாகிய பெரிய அவ்வூடல்நோக்கத்திற்கு எதிராக உயிர்த்தலைவன் நோக்க, முகமாகிற மடுவில் பசிய தண்டினையுடைய குவளைப் பூக்கள் மலர்ந்து இருண்டு நெருங்கின; என்ன இல்லறக்கிழத்தியோ எ -று.

வயலணி ஊரன்வந்தான் என்னாது, 'கண்டனன் கற்பினுக் கணியை என்றாற்போல 'வந்தான் வயலணி ஊரன்' என வினையை முற்கூறியது இல்லவர்க்கு அவன்வரவின்கண் இருந்த இச்சை மிகுதியைக் குறிப்பிப்பது. புலவியால் கொல்லுவாள்போல் நோக்குகின்றாள் ஆதலின் 'சினவாள் கண்' என்றாள். கொல்லு வாள்போல் நோக்கினும் தம் இயற்கையான மென்மையில் குறைந்தில என்பாள் 'மலர்க்கண் செந்தாமரைச் செல்வி சென்ற'

என்றாள். வியன்நோக்கு - பெரிய புலவிநோக்கு. கண்கள் மலர்ந்தன என்பார் அணி நலந்தோன்ற முகமடுவில் குவளை மலர்கள் பூத்து இருள்சூழ்ந்து பயின்றன என்றார். (12)

## காலநிகழ்வுரைத்தல்

**'இன்புடையோர்க்குக் கருணை எளிதென**
**அன்புடையோர்கள் அறிய உரைத்தது'**

*தலைமகனது ஆற்றாமையைத் தலைமகள் நீக்காதிருப்ப, இன்பம் கருதிவந்த இவர்க்கு எளிதில் கருணைசெய்ய வேண்டும் என்று உழையராய அன்புடையோர்கள் சிவத்தலைவிக்குத் தெரிய உரையாநிற்றல்.*

**வில்லிகைப் போதின் விரும்பா அரும்பா வியர்களன்பிற்**
**செல்லிகைப் போதின் எரியுடை யோன்றில்லை யம்பலஞ்சூழ்**
**மல்லிகைப் போதின்வெண் சங்கம்வண் டூதவிண் டோய்பிறையோ**
**டெல்லிகைப் போதியல் வேல்வய லூரற் கெதிர்கொண்டதே.** 364

*பொ - ரை: வில்லியாகிய காமனது கையில் அம்பாகிய பூக்களில் விருப்பில்லாத அரிய குறிப்புடையவர்கள் தனக்குச் செய்த அன்பின்கண் விரும்பிச்செல்வோனும், கையாகிய தாமரையில் தீயையுடையானும் ஆகிய இறைவனது தில்லையம் பலத்தைச் சூழ்ந்த மல்லிகையின்போதாகிய வெண்சங்கை வண்டூத, விண்ணிற்றோய்ந்த பிறையோடு இராப்பொழுது கைம் மலரில் தங்கும் வேலையுடைய வயலூரற்கு மாறுகொண்டது என்றவாறு.*

*இராப்பொழுது மல்லிகை மலரானும் பிறையானும் தலைவற்கு இன்னாதாயிற்று; அதனால் அவன் புகுந்தான்; ஆதலால் நீ புலத்தலாகாது என வாயில்நேர்வாராகிய அன்புடை யோர்கள் அறிவித்தவாறு. விருப்பத்தை விளைவிக்கும் வில்லி கைப்போது, மெய்யடியார்கட்கு விருப்பத்தை விளைவித்திலது; அதனால் அவர்கள் மலரம்பினிடம் அன்பிலராயினர்; இறைவன் பால் அன்பு செய்வாராயினர்; அவ்வன்பை விரும்பி, அரவகலல் குலார்பால் ஆசை நீத்தவர்க்கே வீடு தருகுவம் என்று வேதஞ் செப்பிய தலைவன் செல்வானாயினன் என்பதாம். பாவியர் - பாவனை முதிர்ந்த அடியார்.*

*மல்லிகைப்போது வெண்சங்காகக்கொண்டு வண்டூத என்ற கருத்து 'மல்லிகையே வெண்சங்கா வண்டூத' எனப் புகழேந்தி யாராலும் எடுத்தாளப்பெற்றுள்ளது.* (13)

## எய்தலெடுத்துரைத்தல்

### 'இன்பம் பெற்றவுயிர் அன்பாய் மகிழ்ந்தது'

பூப்பாகிய கனிவுகண்டு சிவத்தின்பாற் சேர்ந்தவுயிர், புறத்தொழுக்கத்தால் சிவத்திற்கு விளைந்த புலவியைத் தீர்த்துப் புல்லி இன்பம் பெற்றமை கேட்டு அவ்விடத்துள்ளார் அன்பாய் மகிழ்ந்துரையா நிற்றல்.

புலவித் திரைபொரச் சீறடிப் பூங்கலஞ் சென்னியுய்ப்பக்
கலவிக் கடலுட் கலிங்கஞ்சென் றெய்திக் கதிர்கொண்முத்தம்
நிலவி நிறைமது ஆர்ந்தம் பலத்துநின் றோனருள்போன்
றுலவிய லாத்தனம் சென்றெய்த லாயின ஊரனுக்கே. 365

பொ - ரை: புலவியாகிய அலை மோத, காதலி தன் சீறடியாகிய பொலிவினையுடைய அணியைச்சென்னியிற் சூட்ட, புலவி நீங்கிக் கலவியாகிய கடலுள் துகிலைப்பற்றி, பற்களாகிய ஒளியொடு கூடிய முத்தின்கட் பொருந்தி சிற்றம்பலத்து நின்றவனது அருள்போல ஒருநாளுந் தளராத முலைகள் ஊரற்கு, சென்று பெறுதற்கு எளியவாயின என்றவாறு.

இது அவ்விடத்துள்ளார் கூற்று. புலவிதீர்ந்து கலவி பெற்றதைக் கண்டோர் உவந்துரைத்தது. கலிங்கம் - ஆடை; ஒருதேயம் என்ற பொருளும் தோன்ற நிற்றல் காண்க. (14)

## கலவிகருதிப் புலத்தல்

### 'இன்பம்மிகும்படி அன்பு அறிவித்தது'

அன்புருவச்சிவம் கலவியிற்களித்து மயங்கியபோது, இத்தகைய இன்பப் புணர்ச்சியை இவன் பிறர்மாட்டும் புரிந்திருப்பான்அன்றே எனக் கருதிப் பொருமி அழுது பின்னும் கலவியை உளங்கொண்டு புலவாநிற்றல்.

செவ்வாய் துடிப்பக் கருங்கண் பிறழச்சிற் றம்பலத்தெம்
மொய்வார் சடையோன் அருளின் முயங்கி மயங்குகின்றாள்
வெவ்வா யுயிர்ப்பொடு விம்மிக் கலுழ்ந்து புலந்துநைந்தாள்
இவ்வா றருள்பிறர்க் காகும் எனநினைந் தின்னகையே. 366

பொ - ரை: இனிய நகையையுடையாள், செய்ய வாய் துடிப்ப, கரிய கண்கள் பிறழச் சிற்றம்பலத்தில் உள்ளானாகிய எம்முடைய நெருங்கிய சடையை உடையவனது அருள் பெற்றவர்போல முயங்கி இன்பக்களியில் மயங்குகின்றவள், இவ்வாறு இத் தலைவர் நமக்கு அருளும் அருள் பிற மாதர்க்கும் ஆகுமே என எண்ணி, வெய்ய வாயால் மூச்சுவிடுதலோடு விம்மிக் கலுழ்ந்து புலந்து வருந்தினாள் என்றவாறு.

இங்ஙனம் தலைவி புலத்தல் மேலும் இன்பம் மிகும்படியாம் என்க. வெவ்வாய் உயிர்ப்பொடு என்பதற்கு வெய்ய இடத்தை யுடைய நெட்டுயிர்ப்போடு என்பது பேராசிரியர் உரை. (15)

## குறிப்பறிந்து புலந்தமை கூறல்

### 'அன்பால் இன்பென்று ஆராய்ந்து உரைத்தது'

புலவி தீர்ந்து இருவரேயாய்ப் பள்ளியிற்கிடந்த தலைவி, பின்னுமொரு குறிப்புவேறுபாடு கண்டு புலந்து இப் பள்ளி பலரைப்பொறாது என்று இழிய, அதனைக்கண்ட உழையர், அன்பால் இன்பெய்தலாமே அன்றி இங்ஙனம் அடிக்கடி புலத்தல் ஆகாதே; அங்ஙனமிருக்க இவள் இவ்வாறு இழிதற் குரிய குறிப்பு என்ன நிகழ்ந்ததோ எனத் தம்முட் கூறாநிற்றல்.

**மலரைப் பொறாவடி மானும் தமியண்மன் னன்னொருவன்**
**பலரைப் பொறாதென் றிழிந்துநின் றாள்பள்ளி காமனெய்த**
**அலரைப் பொறாதன் றழல்விழித் தோனம் பலம்வணங்காக்**
**கலரைப் பொறாச்சிறி யாளென்னை கொல்லோ கருதியதே. 367**

*பொ - ரை:* மன்னன் ஒருவன்; மலரையும் பொறாத மெல்லிய அடியையுடைய மான்போல்வாளும் தனியள்; ஆயினும் பள்ளி பலரைத் தாங்காது என்று கூறிப் பள்ளியினின்றும் இறங்கினாள்; மன்மதன் எய்த மலரம்பைப் பொறுக்காது அன்று விழியால் அழலெழ விழித்தவனது அம்பலத்தை வணங்காத கீழோரைப்பொறாத சிறியவள் இந் நிலைமையில் கருதியது என்னோ? என்றவாறு.

இழிந்து நின்றாள் என்பது கதுமென இழிந்தாள் என விரைவு தோன்றநின்றது. இன்னகை, இவ்வாறு அருள் பிறர்க் காகும் என நினைந்து புலந்து நைந்தாள் என்ற உழையர் கூற்றைத் தலைவன் வெறொருத்தியை எண்ணிக் கூறியதாகத் தவறாக உட்கொண்டு இவ்வமளி பலரைப் பொறாதெனப் புலந்தாள். உழையர்கூற்றின் குறிப்பாலே தலைமகனது குறிப்பை அறிந்து இவ்வகை தலைமகள் புலம்ப வாயில்கள் தம்முட் சொல்லியது இது. அன்பால் இன்பமே அன்றிப் புலத்தலாகியவன் பால் இல்லையாம் என்று வாயில்கள் ஆய்ந்துரைத்ததாம். (16)

## வாயிலவர் வாழ்த்தல்

### 'அடியார் உயிரின்பு அகமிக மகிழ்ந்தது'

பரத்தையர் வீதிக்குச் சேடியை விடுத்தவுடன் தலைவியின் பருவங்கெடாது மெலிவறிந்து இவளது பொலிவொடு வந்தமையான் தலைவன் மெய்யே வாய்மையுடையன் என, அடியார்கள் உயிர் எய்தும் இன்பிற்காக மனமகிழ்ந்துரைத்தல்.

வில்லைப் பொலிநுதல் வேற்பொலி கண்ணி மெலிவறிந்து
வல்லைப் பொலிவொடு வந்தமை யானின்று வான்வழுத்துந்
தில்லைப் பொலிசிவன் சிற்றம் பலஞ்சிந்தை செய்பவரின்
மல்லைப் பொலிவய லூரன்மெய் யேதக்க வாய்மையனே. 368

பொ - ரை: வில்போலும் நுதலையும் வேல்போலும் கண்களையும் உடையாளது மெலிவறிந்து, விரைய அதற்கரிய பொலிவோடு வந்தமையான், விண்ணவர் போற்றும் தில்லைக் கண் விளங்கும் சிற்றம்பலத்தைச் சிந்தை செய்வாரைப்போல வளத்தாற்பொலியும் வயல்சூழ்ந்த மருதத் தலைவன் உண்மை யாகவே நல்ல மெய்ம்மையுடையவன் என்றவாறு.

அடியாரென்றது உழையராய் புலவிக்கண் வாயிலாவாரை. அவர்கள் கலவியிலும் புலவியிலும் தலைவன் தலைவியரைக் கண்காணிக்கும் இயல்பினர். ஆதலால் அவர்கள் கூற்றுத் தலைவர்கள் பள்ளியிடத்தாராய்த் தனித்துறையும் நிலையினைப் பற்றியும் நிகழாநின்றது. (17)

## புனல்வரவு உரைத்தல்

### 'அடியார் உயிருக்கு இன்பாம் எங்கும் என்றது'

உழையராயினார், புதுப்புனல் ஆற்றில்வந்தது; இனிப் புனலாட்டிற்காகப் பரத்தையொடு சென்று உயிர்த்தலைவன் இன்பம் நுகர்வன்; அதனால் சிவத்தலைவி புலப்பள் எனத் தம்முட் கூறாநிற்றல். அடியார் உயிருக்கு இன்பு எங்கும் ஆம் என்றது எனக் கூட்டுக.

சூன்முதிர் துள்ளு நடைப்பெடைக் கிற்றுணைச் சேவல்செய்வான்
தேன்முதிர் வேழத்தின் மென்பூக் குதர்செம்ம லூரன்றிண்டோள்
மான்முதிர் நோக்கினல் லார்மகி ழத்தில்லை யானருளே
போன்முதிர் பொய்கையிற் பாய்ந்தது வாய்ந்த புதுப்புனலே. 369

பொ - ரை: சூல்முதிர்ந்த துள்ளும் நடையையுடைய பெடைக்கு ஈனும் இல்லைச் செய்யவேண்டித் துணையாகிய சேவல் தேன்போலும் சாறு முதிர்ந்த கரும்பின் மெல்லிய பூவைக்கோதும் தலைமையையுடைய ஊரனது திண்டோள் களை, மான் பார்வைபோலும் பார்வையையுடைய பெண்கள் பலர்கூடி இன்புற, தில்லையானது அருளையொத்து நீர்முதிர்ந்த பொய்கையுள் நல்ல புதுப்புனல் பாய்ந்தது; இனிப் புனலாடித் தன் காதலியைப் புலவியாற் சிவப்பிக்கும் போலும் என்றவாறு.

சேவல் ஈனில் செய்யும் செம்மலூரன் என்றது பூப்பாடிய பின் தலைவன் இல்வயிற்றங்கி இன்பருந்தினான் ஆதலின்

அவளும் கருவுற்றாள்; இனி அவட்கு ஈனில் செய்யும் கடப்பாடுடையனாவன்; அதனால் அவளிற்பிரிந்து புதுப் புனலாட்டில் பரத்தையொடு கூடி மகிழ்வான்; அதுகேட்டுத் தலைவி புலப்பாள்; கண் சிவப்பாள் என்பதாம். உயிர் பூரணஞானம் பெற்றமையால் அதற்கு எங்கும் இன்பாம் என்று அடியார் கூறியது காண்க. (18)

## தேர்வரவு கண்டு மகிழ்ந்து கூறல்

**'இன்புடையோரால் எவர்க்கும் இன்பாமென**
**அடியார் நோக்கி அகமிக மகிழ்ந்தது'**

புதுப்புனல் வந்தமை கேட்ட உயிர்த்தலைமகன் புனலாட்டு விழாவிற்காகப் பரத்தையர்சேரிக்கண் தேரிற்செல்ல, பரத்தையர் கண்டு இன்புடைய தலைவரால் எவர்க்கும் இன்பம் உண்டாம் என, அங்கும் ஏவல் மகளிராயிருப்பவர்கள் கண்டு மனமிக மகிழ்ந்து உரையாநிற்றல்.

**சேயே யெனமன்னு தீம்புன லூரன்றிண் டோளிணைகள்**
**தோயீர் புணர்தவந் தொன்மைசெய் தீர்சுடர் கின்றகொலம்**
**தீயே யெனமன்னு சிற்றம் பலவர்தில் லைந்நகர்வாய்**
**வீயே யெனவடி யூர்நெடுந் தேர்வந்து மேவினதே.** 370

பொ - ரை: சுடர்விடுகின்ற திருமேனி தீயேயென்று சொல்ல நிலைபெற்ற சிற்றம்பலவரது தில்லைக்கண் உள்ளீராகிய மலரை ஒக்கும் அடியையுடையவர்களே! பெரிய தேர்வந்து பொருந்தியது; இவனைப் புணருந் தவத்தை முற்பிறவியிற் செய்தவர்களே! வடிவால் முருகனே எனத்தகும், இனிய புனல்சூழ்ந்த ஊரனது திண்ணிய தோளிணையை அணைமின் எ-று.

கொலம்: கோலம் என்பதன் குறுக்கம். கோலம் - மேனி. எங்கும் சிவமாய்க்காணும் செவ்வியோர் எங்கும் போகத்தை நுகர்ந்து, எவர்க்கும் இன்புதவுவர் என அடியார் மகிழ்ந்ததாம். (19)

## புனல் விளையாட்டில் தம்முள் உரைத்தல்

**'உலகில் எப்பணிகள் உற்றும் உயிர்க்கு**
**இன்பம் பிரிவிலை என்றே உரைத்தது'**

புனல் விளையாடும்போது, பரத்தையர், உலகில் எப் பணிகளைச் செய்யினும் உயிர்க்கு என்றும் இன்பத்தினின்று பிரிதலில்லையாம்; ஆயினும் நுகர்வோராகிய நாம், வான் அரமங்கையர்போல வேறொருத்திவந்து இவரை மயக்கிப்

போகாதவண்ணம் முன்னுறக்காத்து இன்பம் நம்பாலதாக்கல் வேண்டும் எனத் தம்முட் கூறாநிற்றல்.

அரமங் கையரென வந்து விழாப்புகும் அவ்வவர்வான்
அரமங் கையரென வந்தணு கும்மவள் அன்றுகிராற்
சிரமங் கையணைச்செற் றோண்றில்லைச் சிற்றம் பலம்வழுத்தரப்
புரமங் கையரினை யாதைய காத்துநம் பொற்பரையே. 371

பொ - ரை: தேவப்பெண்களைப் போலவந்து புனலாட்டு விழாவிலே புகும் அவரவர்களே! நாமெல்லாம் இத் தன்மையே மாக, விண்ணுலகமாதைப்போல அவள் வந்தணுகா நின்றாள்; தன்னிடமேயிருக்க இவரைத் திரிப்பள்; அன்று அவ்விடத்து நகநுதியால் பிரமன் சிரங்கொய்தவனது தில்லையின் சிற்றம் பலத்தை வழுத்தாத புரங்களின் மங்கையரைப்போலப் பின் வருந்தாது நம்முடைய அழகியாரை முன்னதாகவே நாம் காப்போம் என்றவாறு.

நாம் நுகரும் இன்பத்தை அவள் கவர்வள்; அதற்கு முன்பாகவே நம்மைவிட்டு இவர் பிரியாதவண்ணம் காப்போம் என; உயிர் எங்கும் இன்பங்காணும் முற்றறிவினது; புறத் தாராகிய நாம் நம்மில் வேறிடத்தும் இன்பங்காணாதபடி இவரைக் காப்பேம் என்றவாறு காண்க. இதனையே அன்புடையாரிடத்து யாவரும் உறும் என, முன்பு அணை மதத்தான் முன்னி உரைத்தது என்னும் வியாக்கியானக் கொளுவும் விளக்கி நிற்றல் காண்க. முன்பு அணை மதம் - முன்பு கூடிக்களித்த செருக்கு.

(20)

## தன்னை வியந்துரைத்தல்

### 'செய்பணியெல்லாம் சிவனின்பு என்றது'

புறம்போகாது இவனை முற்படக் காத்துக்கொள் என்ற சேடியர் வார்த்தை கேட்ட பரத்தை, இவரைப் புறம்போக விட்டேனாயின் யானும், இவரை என்மாட்டிழந்து வருந்தும் இவர் மனைக்கிழத்தியாவேன்; இவர்க்கு நாம் செய்யும் பணிகள் யாவும் சிவம் உயிர்க்குச் செய்யும் உபகாரமாகிய இன்பந்தானே; யாமும் சிவமேயாவேம்; எத் தொழிலும் சிவச்செயலாம் என்று தம்மை வியந்துரையாநிற்றல்.

கனலூர் கணைதுணை யூர்கெடச் செற்றசிற் றம்பலத்தெம்
அனலூர் சடையோன் அருள்பெற் றவரின் அமரப்புல்லும்
மினலூர் நகையவர் தம்பா லருள்விலக் காவிடின்யான்
புனலூ ரனைப்பிரி யும்புன லூர்கணப் பூங்கொடியே. 372

*பொ - ரை:* கனல்பரந்த கணையால், ஒன்றற்கொன்று துணையான மூன்று ஊர்கெட அழித்த சிற்றம்பலத் துள்ளானாகிய எம்முடைய தீயையொக்கும் சடையானது அருளைப் பெற்றவர்போலச் செம்மாந்து, அவனைச் செறியப் புல்லாநின்ற ஒளி பரந்த நகையையுடையவரிடத்து அவனருள் செல்லாவண்ணம் விலக்கேனாயின் யான் புனலூரனாகிய தலைவனைப் பிரிந்திருக்கும் நீர்மல்கும் கண்களையுடைய அவன் மனைக்கிழத்தியாகிய அப் பூங்கொடியாவேன் என்றவாறு.

யான் மாற்றாள் எவளும் இவனைப் பொருந்தவிடேன்: விடுவேனாயின் என்மாட்டு அவனைவிட்டுத் தவிக்கும் தலைவியாவேன் எனப் பரத்தை தன்னை வியத்தல்வாயிலாக, எம் மகளிர் இவனைத் துய்த்தாலும், எத் தொண்டு புரிந்தாலும் அவையனைத்தும் சிவனின்பேயாம் என்று வியந்ததாம். *(21)*

## நகைத்துரைத்தல்

### 'இன்பமே பணிகண்டு அன்பாய்க்கொண்டது'

*இங்ஙனம் தன்னை வியந்து தருக்கிய பரத்தையின் சொல்லை இன்புருவச் சிவமாகிய தலைவி கேட்டு, இப் பரத்தைக்கும் தங்கைகள் தோன்றின் தாமே செருக்கடங்கும் என அன்பாய்க் கூறாநிற்றல்.*

**இறுமாப் பொழியுமன் றேதங்கை தோன்றினென் எங்கையங்கைச்**
**சிறுமான் தரித்தசிற் றம்பலத் தான்றில்லை யூரன்றிண்டோள்**
**பெறுமாத் தொடுந்தன்ன பேரணுக் குப்பெற்ற பெற்றியினோ**
**டிறுமாப் பொழிய இறுமாப் பொழிந்த இணைமுலையே. 373**

*பொ - ரை:* அங்கைக்கண் சிறிய மானையேந்திய சிற்றம்பலத் தானது தில்லைக்கண் உளனாகிய ஊரனது திண்ணிய தோள் களைப் பெறுதலால் உண்டாகிய பெருமையோடும் தன்னவாகிய அவன் அணுக்கத்தைப் பெற்ற தன்மைகளோடும், இறுமாப் படங்க, இணைமுலைகளும் இறுமாப்பு அடங்காநின்றன; இனியொரு தங்கை தனக்கும் தோன்றின் என் தங்கையினுடைய இறுமாப்பும் ஒழியுமன்றே! அதனால் பின்வருவது அறியாது தன்னைப் புகழ்கின்றாள் என்றவாறு.

இதனால் இன்புருவச் சிவம்,பரத்தையர் கூற்றைக் கேட்டு அதுவும் ஒரு பணியெனக்கொண்டு, எனக்கு இவள் வாய்த்தது போல இவளுக்கும் ஒரு தங்கை வாய்ப்பின் இவளும் பணியென அன்பாய்க்கொள்ள நேருமே என்று கூறியவாறாம். *(22)*

## நாணுதல் கண்டு மிகுத்துரைத்தல்

### 'அருளுயிர் அன்புக்குக் கண்டுவந்தது'

தலைவனைப் பரத்தையரிடம் புனலாடவிட்டு, தமியே வைகுந்தலைவி இஃது அவனுக்குப் பழியாம் என நாணி மறைப்பதுகண்ட தோழி, அவளது கற்பின் பொற்பினை மிகுத்துக் கூறாநிற்றல். அருளாகிய தோழி உயிர்மாட்டுச் சிவத்தலைவி செலுத்தும் பேரன்பைக்கண்டு அதற்கு உவந்துரைத்ததாம்.

வேயாது செப்பின் அடைத்துத் தமிவைகும் வீயினன்ன
தீயாடி சிற்றம் பலமனை யாடில்லை யூரனுக்கின்
றேயாப் பழியென நாணியென் கண்ணிங்ங னேமறைத்தாள்
யாயா மியல்பிவள் கற்புநற் பால இயல்புகளே. 374

பொ - ரை: சூடப்படாது செப்பிலடைக்கப்பட்டுத் தனியே கிடக்கும் பூவைப்போலும், தீயில் நடிப்பானது சிற்றம்பலத்தை ஒப்பாள், தில்லை ஊரனுக்கு இன்று பொருந்தாப்பழி பொருந்து மென்று நாணித் தனது ஆற்றாமையை என்னிடத்தும் இங்ஙனம் மறைத்தாள்; அதனால் இவளது கற்பு நமக்கெல்லாம் தாயாமியல் புடையது; இவளுடைய நாணம் முதலிய நல்லியல்புகள் நல்ல பகுதியின்பாற்பட்டவை என்றவாறு.

இங்ஙனம் உயிர் எங்கும் சிவமாயிருத்தலை அறிவு முதிர்வால் கண்டு, அதனினும் சிவம் தன்னியல்பில் குன்றாது உயிரிடம் அன்பு பாராட்டுதலைக் கண்டு உவந்து உரைத்தவாறு. (23)

## பாணன் வரவுரைத்தல்

### 'அருள்உயிர்ப் பாராட்டு அன்பென்றியம்பியது'

தனியிருந்து வருந்தாநின்ற சிவத்தலைவியை நோக்கி, உயிர்வேந்தனைத் துயிலெழுப்ப விறலியும் பாணனும் நம் இல்லில் துயிலெழு மங்கலம்பாட வந்து நின்றார் எனப் பாணன்வரவு உரையாநிற்றல்.

விறலியும் பாணனும் வேந்தற்குத் தில்லை யிறையமைத்த
திறலியல் யாழ்கொண்டு வந்துநின் றார்சென் றிராத்திசைபோம்
பறலியல் வாவல் பகலுறை மாமரம் போலுமன்னோ
அறலியல் கூழைநல் லாய்தமி யோமை அறிந்திலரே. 375

பொ - ரை: விறலியும் பாணனும் தில்லைப்பெருமானால் அமைக்கப்பட்ட வெற்றியோடு விளங்கும் யாழை நம் வேந்தற்குத் துயிலெழு மங்கலம்பாடக் கொண்டுவந்து நின்றார்கள்;

கருமணலின் தன்மைபோலும் கரிய கூந்தலையுடைய நல்லாய்! இராப்பொழுது சென்று திசைகளைக் கடந்து பறக்கும் தன்மையையுடைய வாவல் பகற்பொழுதில் உறையும் பெரிய மரம்போலும் தமியேமை இவர் அறிந்திலைபோலும் என்றவாறு.

இறைவன் பேரூழிக்காலத்து எல்லாவற்றையும் தன்னகத்து அடக்கி நல்வீணை வாசிக்குமாதலின் 'இறையமைத்த யாழ்' என்றார். இரவின்கண் ஊர்ப்புறத்துச்சென்று பரத்தைபால் இன்பந்துய்த்து, பகற்காலத்துத் தம் இல்லின்கண் உறையும் தலைவன், திசைகடந்து சென்று பழுமரம் பார்த்துத் துய்த்துப் பகற்காலத்துவந்து பெரிய மரத்தில் தங்கும் வாவலுக்கு ஒப்பாவன் எனக் கருதுவித்தவாறு காண்க.

பாணரும் விறலியரும் உயிர்த்தலைமகனைப் பாராட்டுதல் தம் அன்பை வெளிப்படுப்பதாகிய இன்பவாயில் என்று சிவத்தலைவிக்குத் திருவருளாகிய தோழி தெரிவித்தவாறு காண்க. (24)

## தோழி இயற்பழித்தல்

### 'அருள் இன்பக்கனி அறிய அலருரைத்தது'

எம்முடைய உயிர்த்தலைவன் இன்பமுதிர்வு எங்குமா யிருத்தலை அறிந்து புறம்போகா நின்றான்; எம் இல்லில் தக்கிருந்திலன் என அனைவரும் அறிய இயற்பழித்து, திருவருட்டோழி அலர் அறிவியா நிற்றல்.

**திக்கின் இலங்குதிண் டோளிறை தில்லைச்சிற் றம்பலத்துக்**
**கொக்கின் இறக தணிந்துநின் றாடிதேன் கூடலன்ன**
**அக்கின் நகையிவள் நைய அயல்வயின் நல்குதலான்**
**தக்கின் றிருந்திலன் நின்றசெவ் வேலெந் தனிவள்ளலே. 376**

பொ - ரை: திக்கின்கண் விளங்கும் திண்ணிய தோள்களை உடைய இறைவனும் தில்லைச் சிற்றம்பலத்திலே கொக்கினது இறகை அணிந்து ஆடுபவனுமாகிய சிவபெருமானுடைய தெற்கின்கண்ணதாகிய கூடல்நகரை ஒக்கும் சங்குமணி போலும் இனிய பற்களையுடைய இவள் வருந்த அயலிடத்து இன்பமார்ந்திருத்தலால் எல்லாராலும் அறியப்பட்டுநின்ற செவ்வேலையுடைய எம்முடைய ஒப்பற்ற வள்ளல் இன்று தக்கிருந்திலன் என்றவாறு.

கொக்கிற்கு: ஒருவகைப் பூவுமாம். கூடலன்ன இவள் என்றது கூடல் நகர் பாண்டிய மரபினராலன்றி மற்றவர் கைப்படாது விளங்குதலைப்போல இவளும் குலத்தானும் நலத்தானும்

சிறந்த தலைவனையன்றிப் பிற தெய்வத்தையும் தொழாத்தகையள் என்பது உணர்த்தா நின்றது. அக்கு - சங்கு மணி; பற்களுக்கு உவமை. நல்குதல் - புணர்ந்து தலையளி செய்தல். தக்கின்றிருந் திலன் - தகுதியோடிருந்திலன். உயிர்த்தலைவன் இன்பமுதிர் வால் எங்கும் இன்பம்காணும் தகவின்மையைத் திருவருட்டோழி எல்லாரும் அறிய அலராக்கி உரைத்தவாறு காண்க. (25)

## உழையர் இயற்பழித்தல்

### 'அடியார் உயிரின்பு அறியமாறாய் உரைத்தது பின்னும் எடுத்தெடுத்தியம்பல்'

அணுக்கத் தொண்டராயுள்ளார் உயிர்த்தலைவன் சிவத் தலைவியைவிட்டு எங்கும் இன்பம்காண முயலுதலைப் பன்முறை எடுத்தெடுத்துப் பழித்துரையா நிற்றல்.

அன்புடை நெஞ்சத் திவள்பே துறவம் பலத்தடியார்
என்பிடை வந்தமிழ் தூறநின் றாடி இருஞ்சுழியல்
தன்பெடை நையத் தகவழிந் தன்னம் சலஞ்சலத்தின்
வன்பெடை மேற்றுயி லும்வய லூரன் வரம்பிலனே. 377

பொ -ரை: அடியவர்களின் எலும்புகளுக்கிடையே அமுதம் ஊற அம்பலத்தின்கண் நின்று ஆடுவானது பெரிய திருச்சுழியலென்னும் தலத்தில் தன்பெடை வருந்தத் தகுதி கெட்டு அன்னமானது சலஞ்சலம் என்னும் வலிய பெடையின் மேல் கிடந்து உறங்குகின்ற வயல்களாற் சூழப்பட்ட ஊரை உடையவன், தன்மாட்டு அன்புடைய நெஞ்சத்தோடு கூடிய இவள் மயங்க இதற்குப் பரியாமையின் தகவிலன் ஆவன் எ - று.

தலைவியை 'அன்புடை நெஞ்சத்திவள்' எனவே, பரத்தையர் அஃது என்றும் இலரென்று சுட்டியவாறாம். அன்னச் சேவல் தன்பெடை வருந்த, சலஞ்சலத்தின் பெடைமேல் உறங்கும் ஊரன் என்றது, தலைவன் சிவத்தினிடம் கண்ட பேரின்பத்தை, அரி அயன் சூரியன் கணபதி முதலியோரிடத்தும் காண முற்படும் தகுதியற்றவன் என்பதைக் குறிப்பித்தவாறு. (26)

## இயற்பட மொழிதல்

### 'அடியார்க்குச் சிவன் உயிரன்பு உரைத்தது'

இங்ஙனம் தலைவனை இயற்பழித்துரைத்த அடியார்களை நோக்கிச் சிவத்தலைவி, என் உயிர்த்தலைவன் இன்று என் நெஞ்சத்தின்கண்ணான்; உறக்கத்தும் என்னைவிட்டுப் பிரியான்; இத்தகையோனை நீ குறைகூறுவது என்? என்று உயிரன்பை இயற்பட மொழியாநிற்றல்.

அஞ்சார் புரஞ்செற்ற சிற்றம் பலவரந் தண்கயிலை
மஞ்சார் புனத்தன்று மாந்தழை யேந்திவந் தாரவரென்
நெஞ்சார் விலக்கினும் நீங்கார் நனவு கனவுமுண்டேல்
பஞ்சார் அமளிப் பிரிதலுண் டோவெம் பயோதரமே. 378

*பொ - ரை: பகைவர்களுடைய முப்புரங்களைச் செற்ற சிற்றம்பலவனது அழகிய குளிர்ந்த கயிலைக்கண் மஞ்சார்ந்த புனத்தின்கண் அன்று மாந்தழை ஏந்திவந்த தலைவர், இன்று நனவில் என் நெஞ்சத்தின்கண்ணார்; யான் விலக்கினும் என் நெஞ்சினின்று நீங்கார்; தூக்கமும் உண்டாயின் பஞ்சு நிறைந்த படுக்கையிலே எம் முலையைவிட்டுப் பிரிந்ததும் உண்டோ? நீர் கொடுமை கூறுவது என் என்றவாறு.*

*நனவினும் கனவினும் தன்னைவிட்டு நீங்காமையால் உயிர் அன்புடையது என்று அடியார்க்குச் சிவத்தலைவி செப்பியவாறு. (27)*

## நினைந்து வியந்துரைத்தல்

**'பலபணி செய்யினும் பரனின்பன்றி**
**வேறிலை என உயிர் வியந்துரைத்தது'**

*யான் பரத்தையர்களோடு கூடினும் வேறொன்றில் உள்ளம் செலுத்தினும் அங்கெல்லாம் சிவமே காணலறுகின்றது; பள்ளம் புகுபுனல்போல் உள்ளத்துப் புகுந்து உறைகின்றது என்று உயிர் பல பணி செய்யினும் பரனின்பு அல்லாது வேறின்மையை வியந்து உரையாநிற்றல்.*

தெள்ளம் புனற்கங்கை தங்குஞ் சடையன்சிற் றம்பலத்தான்
கள்ளம் புகுநெஞ்சர் காணா இறையுறை காழியன்னாள்
உள்ளும் புகுமொரு காற்பிரி யாதுள்ளி யுள்ளுதொறும்
பள்ளம் புகும்புனல் போன்றகத் தேவரும் பான்மையளே. 379

*பொ - ரை: தெளிந்த புனலாகிய கங்கைதங்கிய சடையை யுடையவனும் சிற்றம்பலத்தானும் கள்ளமனத்தவர் காணாத் தன்மையனும் ஆன இறைவன் உறைகின்ற சீர்காழித் திருநகரை ஒத்த தலைவி, யான் வேறோரிடத்து உள்ளம் செலுத்தினும் தான் என்னை நினைந்து ஒருகாலும் பிரியாது என் உள்ளத்துப் புகாநின்றாள்; அவ்வாறன்றித் தன்னை நினைக்குந்தோறும் மேட்டிலிருந்து பள்ளத்தில்புகும் தண்ணீரைப்போல எம் மனத்தின்கண் வரும் தன்மையள்; அதனால் அவளைப் பிரிந்து இருத்தல்அரிதுபோலும் என்றவாறு.*

*யான் வேறொன்றில் உள்ளம் செலுத்துதல் முதலாகிய பல பணிகளைச் செய்தாலும் அங்கெல்லாம் சிவன் இன்பே*

தெரிகின்றமையின் யாவும் சிவமாதலைக்கண்டு தெளிகின்றேன்; சிவமன்றி வேறெதையும் தெரிகின்றிலேன் என உயிர் வியந்துரைத்தவாறு காண்க. (28)

## வாயில் பெறாது மகன்திறம் நினைதல்

**'இன்பும் அடியார் கூட்டம் என்றே**
**அன்பாய் உயிரே அகமிரங்கியது'**

இன்பத்தால் விளைந்த அடியானாகி மகனும் என்னை அறியாது என்பால் வந்து அணைகின்றிலன்; யான் கொங்கையை நண்ணுவது எவ்வாறு என்று உயிர்த்தலைவன் இரங்கி உரையாநிற்றல்.

**தேன்வண் டுறைதரு கொன்றையன் சிற்றம் பலம்வழுத்தும்**
**வான்வண் டுறைதரு வாய்மையன் மன்னு குதலையின்வா**
**யான்வண் டுறைதரு மாலமு தன்னவன் வந்தணையான்**
**நான்வண் டுறைதரு கொங்கையெவ் வாறுகொல் நண்ணுவதே.** 380

பொ - ரை: தேனும் வண்டும் உறையும் கொன்றைப்பூவை அணிந்தவனது சிற்றம்பலத்தைத் துதிக்கும், சொர்க்கபோகத்தை எனக்கு வழங்கும் மெய்மையை உடையவனும் நிலைபெற்ற தலைமைபொருந்திய இனிய வாயை உடையவனும் வளவிய கடற்றுறைதந்த பெரிய அமிர்தத்தை ஒப்பவனும் ஆகிய மகன் என்னைவந்து அணைகின்றிலன்; நறுமணத்தால் வண்டுகள் உறைகின்ற கொங்கைகளையுடையவளை யான் பொருந்துவது எவ்வாறு? என்றவாறு.

சிற்றம்பலத்தை வழுத்துவார் எய்தும் வானை வழங்கும் வாய்மையன், குதலைவாயான், அமுதன்னவன் என, மகன்வந்து அணைவதால் தான் எய்த இருக்கும் மறுமையின்பமும் செவியின்பமும் ஊறின்பமும் தோன்ற மகனைப் பாராட்டினான்.

மகனையே வாயிலாகக்கொண்டு தலைவியை அணைய விரும்பிய உயிர்த்தலைவர்க்கு அவன் அணையாமை ஏமாற்ற மாயிற்று. மகன் அணைவு - அடியார் கூட்டத்தோடு பொருந்துதல். இதனால் தான் அணையக் கருதும் இன்பம் மகவாகிய அடியாரால் விளைவதாம் என்று அன்பாய் உயிர் இரங்கியவாறு காண்க. (29)

## வாயிற்கணின்று தோழிக்குரைத்தல்

**'எப்பணி செயினும் அருளின்றி இன்பிலையென**
**உயிரே அருளுக்கு உவந்துரைத்தது'**

உயிராகிய யான் புறஞ்சென்று புலன்விருந்தாக எப் பணியைச் செயினும் அருள் துணையிருந்தாலல்லது எனக்கு அன்புருவச்

*சிவத்தைச் சார்தலிலையாம் என்று உயிர் அருளாகிய தோழிக்கு உவந்துரையா நிற்றல்.*

**கயல்வந்த கண்ணியர் கண்ணிணை யான்மிகு காதரத்தான்**
**மயல்வந்த வாட்டம் அகற்றா விரதமென் மாமதியின்**
**அயல்வந்த ஆடர வாடவைத் தோனம் பலம்நிலவு**
**புயல்வந்த மாமதிற் றில்லைநன் னாட்டுப் பொலிபவரே. 381**

*பொ - ரை: விழுங்குதற்கு வந்த பாம்பைப் பெரிய பிறைமதியின் பக்கத்து ஆடவைத்த இறைவனது அம்பலம் நிலை பெற்ற, புயல்வந்து தங்கிய பெரிய மதில்சூழ்ந்த தில்லையின் நல்ல நாட்டிலே விளங்குபவராகிய கயலைப்போலும் கண்களை யுடைய மகளிரின் கண்ணிணையால், மிகுந்த அச்சத்தான் விளைந்த மயக்கத்தாலுண்டான வாட்டத்தை நீக்காதவிரதம் யாதாம் என்றவாறு.*

*'மா மதியின் அயல்வந்த.......பொலிபவரே' என்ற பகுதி, இறைவன் இயல்பாகவே பகைகொண்ட பொருள்களிரண் டையும் அடுத்தடுத்து அண்மையில்வைத்து அதன் பகை தீர்த்து வாழப் பணித்ததுபோல, திருவருளாகிய நீயும் செயற்கையால் புலவியும் ஊடலும் துனியுமாகப் பகைகொண்ட எம்மை ஒருங்குகூட்டிக் காதன்மையோடு இன்பார வைத்தல் வேண்டும் என்ற உள்ளுறை தோன்ற நிற்பது காண்க. (30)*

## வாயில்வேண்டத் தோழி கூறல்

### 'எப்பணியும் சிவனன்றி இலையென அருளே சிவனுக்கு அறிய உரைத்தது'

*உயிர் பரிபாகமுற்ற காலத்துச் செய்யும் எந்தப்பணியும் சிவப்பணியாமன்றி வேறாகாது எனச் சிவத்திற்குத் திருவருட் டோழி தெரிவியாநிற்றல். இது தோழி தலைவிக்கு உரைத்ததாக அமைந்திருப்பது. ஆகவே பேரின்பக்கொளுவில் ஏதோ பிழைபட்ட பாடம் இருத்தல் வேண்டும். அது அருளே உயிருக்கு அறிய உரைத்தது என்று இருப்பின் நலமாம். திருவாசக வியாக்கியானமும் 'பரமதத் துயிர் பண்புறு தொழிலும் இங்கு உதவிடுமன்பு முற்ற உரைத்தது' என்று சிற்றின்பக் கிளவியை முழுதும் ஒத்த பேரின்பக்கிளவியாதல் காண்க. ஆதலால் எப் பணியும் என்னும் இப் பேரின்பக் கொளுவுக்குப் பரத்தையர்சேரியின் கண்ணும் இங்கும் நீ செய்யும்பணி சிவப்பணியன்றி வேறில்லையாமென உயிருக்குத் திருவருள் தெரிய உரைத்ததாக இருத்தல் காண்க. அடுத்து வருகின்ற தோழி வாயில்வேண்டல் என்னும் கிளவியும் கிளர்த்து*

வோள் தோழியாகவும், கேட்பவள் தலைவியாகவும் இருத்தலின் இக் கிளவி 'எப்பணியும் சிவனன்றி இலையென அருளே உயிர்க்கு அறிய உரைத்தது' என இருப்பதே பொருந்துவதாம்.

கூற்றா யினசின ஆளியெண் ணீர்கண்கள் கோளிழித்தால்
போற்றான் செறியிருட் பொக்கமெண் ணீர்கன் றகன்றபுனிற்
றீற்றா எனநீர் வருவது பண்டின்றெம் ஈசர்தில்லைத்
தேற்றார் கொடிநெடு வீதியிற் போதிரத் தேர்மிசையே. 382

பொ - ரை: கூற்றம்போலக் கொடிய சினத்தையுடைய யாளிகளைத் துன்புறுத்துவனவாகக் கருதீர்; கண்களின் பார்வையைக் கெடுத்தாற்போலச் செறிந்த இருளின் மிகுதியையும் இடையூறாக எண்ணீர்; கன்றை விட்டுப் பிரிந்த புனிறுதீராத பசுவைப்போல முன்பு நீர் எம்மாட்டு வருவது; இன்று எம்முடைய ஈசரது தில்லையிலே எமது பகைவர் வாழும் கொடிகட்டிய நெடியவீதியில் எம்மாட்டு வந்த தேர்மீதேறிப் போகாநின்றீர்; இதுவன்றோ எம்மாட்டு நும்மருள் என்றவாறு.

எம் பகைவராகிய பரத்தையரது வீதிக்கண் செல்லுதலும் சிவப்பணியன்றி வேறில்லை; யாதொரு தெய்வம் கொண்டீர் அத் தெய்வமாகி ஆங்கே மாதொருபாகனார்தாம் வருவர் ஆதலின் நீர் பரத்தையரைப் பிரியினும் அது எம் பணியாயிற்று என்று தோழி உயிருக்கு உணர்த்தியவாறு. (31)

## தோழிவாயில் வேண்டல்

### 'அருளே சிவத்துக்கு உயிர் இன்பாகி யேன்றுவந்து அருளே சிவத்துக்கு உரைத்தது'

உயிர் பேரன்பு பூண்டு கடைவாயிற்கண் வந்துநிற்கின்றது; அது புறத்தொழுக்கமுடையதாயினும் நீ உவர்க்காது என்று உவந்தருளுக என்று சிவத்தலைவியைத் திருவருள் வாயில் வேண்டாநிற்றல்.

வியந்தலை நீர்வைய மெய்யே யிறைஞ்சவிண் ணோய்குடைக்கீழ்
வயந்தலை கூர்ந்தொன்றும் வாய்திற வார்வந்த வாளரக்கன்
புயந்தலை தீரப் புலியூ ரரனிருக் கும்பொருப்பின்
கயந்தலை யானை கடிந்த விருந்தினர் கார்மயிலே. 383

பொ -ரை: கார்மயிலே! கயிலைமலையைத் தூக்கவந்த கொடிய அரக்கனுடைய கையும் தலையும் உடலின்நீங்கப் புலியூர்ப்பெருமான் வாளாவிருக்கும் கயிலைமலையின்கண்ணே மெல்லிய தலையையுடைய யானையை நம்மேல் வராமல் அன்று மாற்றிய நம் விருந்தினர், தமது விண்ணளாவிய குடையின்கீழ்,

கடல்புடை சூழ்ந்த உலகமெல்லாம் உண்மையாக வணங்கத் தம் பெருமை நினையாது நம் கடைவந்து நின்று வேட்கைமிக ஒன்றும் சொல்லுகின்றிலர்; இனி மறுத்தல் அரிது என்றவாறு.

நன்றியறிதல் ஒன்றைநோக்கியேனும் நீ அவரை ஏற்றுக் கொள்ளல் வேண்டும் என்பாள் 'கயந்தலை யானை கடிந்த விருந்தினர்' என்றாள். இதனால் அருள் உயிரின்பால் இரங்கி, ஏன்று உவந்து அருளுக என வேண்டியவாறு காண்க. (32)

## மனையவர் மகிழ்தல்

### 'அடியார் உயிரின் பண்புகண்டது'

அடியார்களாகிய மனையவர்கள், உயிர்த்தலைவன் தம் பெருமைநோக்காது சிவத்தின் கருணை ஒன்றையே நோக்கிக் கடைவாயிற்கண் நிற்கின்றான் என்று திருவருள் வாயில் வேண்ட, சிவம் கண் சிவந்ததைக்கண்டு மகிழ்ந்து கூறாநிற்றல்.

**தேவியங் கண்டிகழ் மேனியன் சிற்றம் பலத்தெழுதும்**
**ஓவியங் கண்டன்ன ஒண்ணுத லாடனக் கோகையுய்ப்பான்**
**மேவியங் கண்டனை யோவந் தனனென வெய்துயிர்த்துக்**
**காவியங் கண்கழு நீர்ச்செவ்வி வெளவுதல் கற்றனவே. 384**

பொ - ரை: தேவி அவ்விடத்து விளங்கும் மேனியை உடையவனது சிற்றம்பலத்தின்கண் எழுதப்பட்ட ஓவியத்தை ஒத்த ஒளிபொருந்திய நுதலையுடையாளுக்கு உவகையளிப்பதற்காக காதலன் வந்தான் என்ற வாச்சிய ஒலியைக் கேட்டிலையோ? என்று கண்டார் கூறக்கேட்டு, வெய்துயிர்த்து, குவளை மலர் போலும் கண்கள் செங்கழுநீர்ப்பூவின் செவ்வியை வவ்வின; இனி என்ன நிகழும் என்றவாறு.

சிவத்தலைவியின் காவியம் கண் கழுநீர்ச் செவ்வியை வவ்வின என்று உயிரின் பண்பால் சிவம் பெற்ற சிந்தையை அடியார்கள் அறிந்து மகிழ்ந்து கூறியமை காண்க.

## வாயின் மறுத்துரைத்தல்

### 'சிவம் அருள்நோக்கி அருட்செய்கை உரைத்தது'

இங்ஙனம் அடியார்களாகிய மனையவர்கள் சிவத் தலைவியின் சிறுகோபம் கண்டு மகிழ இன்றுதான் நம் காதலர் நம் கடையைக் கண்டார் என்று தலைவனது அருட்செய்கையைத் திருவருள் சிவத்தை நோக்கிக் கூறாநிற்றல்.

**உடைமணி கட்டிச் சிறுதே ருருட்டி யுலாத்தருமிந்**
**நடைமணி யைத்தந்த பின்னர்முன் நான்முகன் மாலறியா**

விடைமணி கண்டர்வண் டில்லைமென் றோகையன் னார்கண்முன்னம்
கடைமணி வாணகை யாயின்று கண்டனர் காதலரே. 385

பொ - ரை: முத்துப்போலும், ஒளிபொருந்திய நகையை யுடையாய்! உடைமணியை அரையிற்கட்டிச் சிறுதேர் உருட்டி உலாவும் இந்த நடைமணியாகிய மகனை நமக்குத் தந்தபின் , முன் நான்முகனும் மாலும் அறியாத விடையையுடைய நீலகண்டரது வளவிய தில்லையின்கண் மெல்லிய மயிலை ஒப்பார்கள்முன்னே, நம்முடைய கடைவாசலைக் காதலர் இன்று கண்டார்; இதுவன்றோ நம்மிடம் அவர்காட்டும் அருள் என்றவாறு.

புதல்வனைத் தந்தபின் இன்றுதான் நம் கடைவாசலை அவர் கண்டார் என்றது, இதுவரை அவர் புறந்தொழுக்கத்துத் திரிந்தார் என்று புலக்கும் சிவத்தலைவி புலவி நீங்கி அருள வேண்டும் என்று தோழி உரைத்தவாறு காண்க. (34)

## பாணனொடு வெகுளுதல்

### 'பரசமயத்தில் பரிவாகாது என்று இன்பே உயிருக்கு எடுத்துரைத்தது'

திருவருளாகிய தோழிக்கு வாயில்மறுத்த தலைவி 'நின்னிடத்து என்றும் நீங்காத அன்புடையார்' என்று நீ பொய் சொல்ல வேண்டுமோ? புறச்சமயத்தில் பரிவு ஆகாது என்று உயிருக்கு எடுத்துப் பாணன் வாயிலாக உணர்த்தா நிற்றல்.

மைகொண்ட கண்டர் வயல்கொண்ட தில்லைமல் கூரநின்வாய்
மெய்கொண்ட அன்பின ரென்பதென் விள்ளா அருள்பெரியர்
வைகொண்ட வூசிகொற் சேரியின் விற்றெம்மில் வண்ணவண்ணப்
பொய்கொண்டு நிற்கலுற் றோபுலை யாத்தின்னி போந்ததுவே. 386

பொ - ரை: கருமைநிறம் பொருந்திய கண்டத்தை உடையவரது வயல்பொருந்திய தில்லையைச் சூழ்ந்த ஊரவராகிய தலைவர் 'நின்னிடத்து உண்மையன்பு உடையவர்' என்று நீ சொல்லவேண்டுமோ? எம்மிடத்து நீங்காத அருளால் பெரிய வரன்றோ; அதுகிடக்க, கூர்மை பொருந்திய ஊசியைக் கொற் சேரியின்கண் விற்று, எம் இல்லத்துவந்து நல்ல நல்ல பொய்யைக் கொண்டு நிற்கவோ? புலையனாகிய ஆதின்னி! நீ வந்தது எ-று.

எம்மிடம் உண்மையன்புடையவர் என்று நீ சொல்லி நான் தெரிய வேண்டா; நீங்காத அருளுடைய பெரியவர் அவர்; ஆயினும் சிவமாகிய எம்மிடத்து அன்பு பூணுதலேயன்றிப் பரசமயத்திலும் பரிவு பூணுதலாகாது; அதனை மறைக்க நீ எம் இல்லில்வந்து பொய்சொல்லி நிற்கவேண்டா என்று சிவத்தலைவி உயிருக்குப் பாணன்வாயிலாக எடுத்துரைத்தது காண்க. (35)

## பாணன் புலந்துரைத்தல்

**'பரசமயங்கள் பாறி எய்த்தது'**

*தலைமகள் வெகுண்டு உரையாநிற்ப, பாணன், நீ வெகுள்வது நன்றன்று; பல்லாண்டு வாழ்க: யான் வேண்டியவிடத்துப் போவேன் என்று புறச்சமயங்கள் சிதைந்து அதனால் உண்மை யின்பம் விளையாமையைக் குறிப்பிக்கப் புலந்து கூறாநிற்றல்.*

**கொல்லாண் டிலங்கு மழுப்படை யோன்குளிர் தில்லையன்னாய்**
**வில்லாண் டிலங்கு புருவம் நெரியச்செவ் வாய்துடிப்பக்**
**கல்லாண் டெடேல்கருங் கண்சிவப் பாற்று கறுப்பதன்று**
**பல்லாண் டடியேன் அடிவலங் கொள்வன் பணிமொழியே.** 387

*பொ - ரை: கொற்றொழில் அவ்விடத்து விளங்கும் மழுப்படையை ஏந்திய இறைவனது குளிர்ந்த தில்லையை ஒப்பாய்! வில்லை அடிமையாக்கி விளங்கும் புருவம் நெரிய, செவ்வாய் துடிப்ப, என்னை அடித்தற்குக் கல்லை அவ்விடத்து எடுக்கவேண்டா; கரிய கண்களில் உண்டான சிவப்பை நீ ஆற்றுவாயாக; என்னை வெகுள்வது நன்றன்று; உனக்குப் பல்லாண்டு கூறுவேன்; எம்மைப் பணிகொள்ளும் மொழியை உடையாய்! அடியேன் நின் அடியை வலங்கொள்ளா நின்றேன் என்றவாறு.*

*கொல் ஆண்டு இலங்கும் மழுப்படையோன் குளிர் தில்லை அன்னாய் என்று தலைவியை விளித்தது, கொல்லுதல் தொழிலைத் தன் விருப்பம்போல அடக்கி ஆளும் மழுப் படையை இறைவன் ஏந்தியிருந்தும் அதனைத் தொழிற் படுத்தாதிருக்கின்றார்; எறிவதற்குரிய கருவி நின் கையில் இல்லாதிருந்தும் நிலத்திலிருந்து தேடி எடுக்கின்றாய் என்ற இடித்துரை தோன்றக்கூறியதாம். தில்லை என்றும் குளிர்ச்சியாய் இருத்தல்போலத் தில்லையை ஒத்த நீயும் வெகுளலாகாது என்பதாம்.*

*பாணன் பல்லாண்டு கூறிய நயத்தைப் பேராசிரியர், தலை மகனுடன் ஊடல்தீர்ந்து கூடியிரும் என்று சொல்லியது நுமக்குத் தவறாகத் தோன்றுமாயின் பல்லாண்டும் இப்படித் தனித்திருப்பீர் என்று வளமாகத் தன் பாண வார்த்தை கூறியவாறு என்று அறிக என்பர். இந் நயம் நன்கு உணர்ந்து இன்புறுதற்கு உரியது. இதனால் பரத்தையின்பமாகிய பரசமய முடிவுகள் சிதைந்தன; அதுகண்டு தலைவன் சிவபோகமே பெரிதென்று உன்பால் தூதனுப்பினான்; அதனை நீ உணருகிற்றிலை என்று பாணன் புலந்தவாறு காண்க.* (36)

## விருந்தொடு செல்லத் துணிந்தமை கூறல்

### 'உண்மைப் பணிகண்டு அடியார் உவந்தது'

வாயில்பெறாது பாணன் நீங்க, தலைவன் விருந்தொடு செல்லத் துணிந்தான் என்று கேட்ட அளவில் தலைவியின் கண் சிவப்பாறிக் கருங்குவளையினது செவ்வி பரந்தது என மனையோ ராகிய மெய்யடியார்கள் உவந்து தம்முள் கூறாநிற்றல்.

மத்தக் கரியுரி யோன்றில்லை யூரன் வரவெனலும்
தத்தைக் கிளவி முகத்தா மரைத்தழல் வேன்மிளிர்ந்து
முத்தம் பயக்குங் கழுநீர் விருந்தொடென் னாதமுன்னம்
கித்தக் கருங்குவ ளைச்செவ்வி யோடிக் கெழுமினவே. 388

பொ - ரை: களிப்பையுடைய யானையின் தோலைப் போர்த்தவனது தில்லைக்கண் உள்ள தலைவனது வரவு என்று சொல்லத் தொடங்குதலும் கிளியின் மொழிபோலும் மொழியை உடைய தலைவியினது முகமாகிய தாமரையில் தழலையுடைய வேல்போலப் பிறழ்ந்து நீர்த்துளியாகிய முத்துக் களைச் சொரியும் கண்ணாகிய செங்கழுநீர்ப்பூ விருந்தொடு என்று சொல்லுவதற்குமுன் விரைவாகக் கருங்குவளையின் செவ்வி பரந்து மேவின; என்ன மனையறக்கிழத்தியோ என்றவாறு.

கிழவன் கிழத்தியருள் என்ன வெகுளியிருப்பினும் கிழவன் விருந்தொடு வந்தான் என்றபோது கிழத்தி சினம்மாறிச் செய்வனசெய்யத் தலைப்பட்ட உண்மையைக்கண்டு இல்லோ ராகிய அடியார்கள் உவந்தவாறு. (37)

## ஊடல் தணிவித்தல்

### 'அருளே அன்புகண்டு அரற்கு எடுத்துரைத்தது'

விருந்தை ஏற்றுக்கொண்ட நீ, தலைவன் நம் செல்வனைத் தனக்குத் துணையாகக்கொண்டு தோன்றுதலான் அவனது உள்ளன்பைக் கண்டு அவனுக்கு அருள்செய்க எனத் திருவருளாகிய தோழி சிவமாகிய தலைவிக்கு எடுத்துரைத்து ஊடல் தணிவியாநிற்றல்.

கவலங்கொள் பேய்த்தொகை பாய்தரக் காட்டிடை யாட்டுவந்த
தவலங் கிலாச்சிவன் தில்லையன் னாய்தழு விம்முழுவிச்
சுவலங் கிருந்தநந் தோன்றற் றுணையெனத் தோன்றுதலால்
அவலங் களைந்து பணிசெயற் பாலை அரசனுக்கே. 389

பொ - ரை: கவற்சிகொள்ளும் பேய்க்கூட்டங்கள் கரணங் களைப்பாய இடுகாட்டில் ஆடுதலை விரும்பிய அழிவில்லாத இறைவனது தில்லையை ஒப்பவளே! தழுவி முத்தம்கொண்ட பிடரியின்கண் ஏறியிருந்த நம்முடைய குழந்தையைத் தமக்குத்

*துணையாகக் கருதி வந்து தோன்றுதலால், நின் மனத்துள்ள கவலையை நீக்கி அரசனுக்குப் பணிசெய்க என்றவாறு.*

*சிவத்தலைவிகொண்ட தணியா ஊடலைத் தம் மகனைத் துணைக்கொண்டு செல்லின் அகற்றலாம் என்ற உபாயம் தெரிந்துவந்த அன்பின் உயர்வை அருள்கண்டு சிவத்திற்குக் கூறித் தெளிவித்தவாறு.* *(38)*

## அணைந்தவழி ஊடல்

**'இன்பம் பணிமுழுது அன்பாக்கொண்டு பின்பும் புதிதாய் அன்பு பேணியது'**

*தோழியால் ஊடல் தணிவிக்கப்பெற்றுப் பள்ளியிடத் தாளாய சிவத்தலைவி, தலைவன் செய்யும் ஊடல் தணிவினை களாகிய பலவற்றையும் அன்பாக ஏற்றுக்கொண்டு பின்பும் புதிதாய் அன்பை விரும்பி யாம் மேனிமுழுதும் பால்சுரக்க இருப்பேம்; நீ செய்கின்ற இக் கள்ளத்தை விரும்பேம்; அதனால் என் காலைத் தொடாது ஒழி; என் கையை விடு எனக் கூறாநிற்றல்.*

**சேறான் திகழ்வயற் சிற்றம் பலவர்தில் லைநகர்வாய்**
**வேறான் திகழ்கண் ணிளையார் வெகுள்வர்மெய்ப் பாலன்செய்த**
**பாறான் திகழும் பரிசினம் மேவும் படிறுவவேம்**
**காறான் தொடறொட ரேல்விடு தீண்டலெங் கைத்தலமே.** 390

*பொ - ரை: சேல்மீன் விளங்கும் வயலையுடைய சிற்றம்பலவனது தில்லையிலுள்ளவராகிய வேல்போலும் கண்ணையுடைய இளைய காதலிகள் நீ செய்கின்ற இதனை அறிந்தால் நின்னை வெகுள்வர்; அஃதில்லாமலும் என் மேனி சிறுவனால் உண்டாக்கப்பட்ட பால் தோன்றும் தன்மையை உடையேம்; மேலும் யாம் இருவரும் பொருந்தும் நாணமற்ற கள்ளத்தை விரும்பேம்; அதனால் எம் காலைத் தீண்டாதே; எம்மைத் தொடவேண்டா; எம் கைத்தலத்தைத் தீண்டற் பாலையல்லை; விடு என்றவாறு.*

*விருந்தேற்றுத் தன் பாலன்வாயிலாகத் தோழியால் ஊடல் தணிந்து பள்ளியிடத்தடைந்தும், சிவத்தலைவி இங்ஙனம் ஊடுவது பின்பும் புதிதாய் அன்பு பேணுவதாதல் அறிக.* *(39)*

## புனலாட்டுவித்தமை கூறிப் புலத்தல்

**'உண்மைப்பணியும் உண்டோ இன்பம் செம்மையாய்விடில் எனச் சிவமே உரைத்தது'**

*பரத்தையைப் புனலாட்டுவித்து அது செய்யாதார்போல எம் மனையின்கண் வந்து நிற்பதால், உமக்கு உண்மைப்பணி என்பதும் ஒன்றுண்டோ? செம்மையான இன்பத்தை நீர்*

பொருந்தினால் எனச் சிவத்தலைவி உயிர்த்தலைவர்க்கு உரைத்துப் புலவாநிற்றல்.

செந்தார் நறுங்கொன்றைச் சிற்றம் பலவர்தில் லைநகரோர்
பந்தார் விரலியைப் பாய்புன லாட்டிமன் பாவியெற்கு
வந்தார் பரிசுமன் றாய்நிற்கு மாறென் வளமனையிற்
கொந்தார் தடந்தோள் விடங்கா லயிற்படைக் கொற்றவரே. 391

பொ - ரை: பூங்கொத்துக்களாகிய மாலையை அணிந்த பெரிய தோளையும் நஞ்சைக் கக்கும் வேலையும் உடைய கொற்றவ! எனது வளமனையில் வந்து நிற்கின்றபடி பந்து பயின்ற விரலாள் ஒருத்தியை, சிவந்த மாலையாகப் பூக்கும் நறிய கொன்றையையுடைய சிற்றம்பலவனது தில்லை நகர்க்கண் பாய்கின்ற ஆற்றுநீரிலே நீராட்டுவித்து வெளிப்படக் குற்றம் செய்தார் சிலர் நிற்கும் தன்மையும் அன்றாய், தவறு செய்யாதார் வந்து நிற்குமாறுபோல வந்து நிற்பாராயின் அது பாவியேற்குப் பொறுத்தல் அரிது என்றவாறு.

யாம் நுகரக் கருதும் இன்பம் எங்கும் ஒருபடித்தாயிருக்கும் சித்தாந்த சைவத்தில் எய்தும் முத்தியின்பம் போன்றதே பரசமயங்களில் எய்துகின்ற இன்பமும் என்று எண்ணாமல் இன்பநுகர்ச்சி செம்மையாய்விடின் உண்மைப்பணி என்று உரைக்கவும் வேண்டுமோ என்று சிவமாகிய தலைவி உரைத்து ஊடியவாறு. (40)

## கலவி கருதிப் புலத்தல்

### 'ஆனந்தத்துக்கு அன்பு பிறிதிலை என்று சிவமே எடுத்தெடுத்துரைத்தது'

தலைமகள், ஊடலைத் தீர்க்க நுதலும் தோளும் தைவந்து தலையளிசெய்யா நின்ற தலைமகனோடு, எம்முடைய குடிலுக்கு வந்து அன்று நீசெய்த தலையளியை வேண்டுதியாயினும் இன்று வேண்டேம்; நீர் வந்த இவ்வளவே போதும் என ஆனந்தமாகிய இன்பக்கலவியைக் கருதித் தலையளியாகிய அன்பு வேண்டாம் என்று புலவாநிற்றல்.

மின்றுன் னியசெஞ் சடைவெண் மதியன் விதியுடையோர்
சென்றுன் னியகழற் சிற்றம் பலவன்றென் னம்பொதியில்
நன்றுஞ் சிறியவ ரில்லெம தில்லநல் லூரமன்னோ
இன்றுன் திருவருள் இத்துணை சாலுமன் எங்களுக்கே. 392

பொ - ரை: மின்னலை ஒத்த நெஞ்சடையில் வெண்மதியை உடையவனும் நல்லூழ் உடையோர் சென்று தியானித்த கழல்களை உடைய சிற்றம்பலவனுமாகிய கூத்தப்பெருமானு

டைய தெற்கின்கண்ணதாகிய பொதிய மலையினிடத்து எமது குடி பெரிதும் சிறியவரது குடி; அதனால் நல்ல ஊரை உடையாய்! இன்று உனது திருவருள் எங்களுக்குவந்த இவ்வளவேபோதும்; தலையளி செய்யவேண்டா என்றவாறு.

நும் வருகையே எமக்குப் பேரானந்தம் விளைத்தலின் தலையளி செய்தலாகிய அன்புமுறைகள் ஒன்றையும் வேண்டேம் என்று சிவத்தலைவி கலவி கருதிப் புலந்து எடுத்துரைத்தவாறு காண்க. (41)

## மிகுத்துரைத்து ஊடல்

### 'பெற்றிடின் ஞானமுதன் மூன்று இலையெனல்'

*கலவி கருதிப் புலவாநின்ற தலைவி தலைமகனுடன், நீர் விழுமிய நாட்டில் விழுமிய ஊரில் விழுமிய குடியில் உள்ளீர்; எம்மொடு புணர்தல் நுமக்கு விழுமிது அன்று என அவனை மிகுத்துரைத்தல்வாயிலாக, உயிர் உண்மைஞானம் பெற்றால் சரியை கிரியை யோகம் என்ற மூன்றும் இல்லையாம் என்று அறிவியாநிற்றல். சரியைமுன் மூன்றுக்கும் சமனலவோ என்றரிதா ஞானப்பெருமை இன்புரைத்தது என்ற திருவாசக வியாக்கியானமும் இதனை நன்கு விளக்கும்.*

**செழுமிய மாளிகைச் சிற்றம் பலவர்சென் றன்பர்சிந்தைக்**
**கழுமிய கூத்தர் கடிபொழி லேழினும் வாழியரோ**
**விழுமிய நாட்டு விழுமிய நல்லூர் விழுக்குடியீர்**
**விழுமிய அல்லகொல் லோவின்ன வாறு விரும்புவதே. 393**

பொ - ரை: வளமான மாளிகைகளால் சூழப்பட்ட சிற்றம் பலத்தை உடையாராகிய அன்பர் சிந்தைக்கண் சென்றுசேரும் கூத்தப்பெருமானது காவலையுடைய உலகம் ஏழினும் சிறந்த நாட்டில் சிறந்த நல்லூரில் சிறந்த குடியில் உள்ளவரே! எம்போல்வாரிடத்துப் புணர்ச்சியை விரும்புவது நுமக்கு விழுமியது அன்றே என்றவாறு.

பெருநெருப்புக்கு ஈரமில்லாதவாறுபோல உண்மை ஞானம் பெறின் சரியையாதி மூன்று சாதனங்களும் குணநலம் முதலியனவும் இல்லை என்பதை 'விழுமிய நாட்டு விழுமிய நல்லூர் விழுக்குடியீர் விழுமிய அல்லகொல்லோ இன்னவாறு விரும்புவதே' எனக் குறிப்பித்தாள். (42)

## ஊடல்நீட வாடியுரைத்தல்

### 'பெற்றார்க்கு ஆனந்தம் பிறிது இலை என்றது'

*தணிக்கத் தணியாது தலைமகள் மேலும் ஊடாநிற்ப, அன்று அம் மலையினிடத்து நோய் தணிக்கும் நோக்கத்தைத்*

தந்து ஆட்கொண்ட அச் சிவத்தலைவி இவளன்று; நம்மை வருத்துவதோர் மாயை இவள் என்று தன் நெஞ்சிற்குச் சொல்லித் தலைமகன் வாடாநிற்றல். முன் தலைநாட் புணர்ச்சியில் கருணைக்கண் நோக்கம் பெற்றார்க்கு அன்று கிடைத்த ஆனந்த உருவினதாகிய பெண்ணமுதம் பிறிதாம்; இது இல்லையாம் என்று வாடாநிற்றல்.

**திருந்தேன் உயநின்ற சிற்றம் பலவர்தென் னம்பொதியில்**
**இருந்தேன் உயவந் திணைமலர்க் கண்ணினின் நோக்கருளிப்**
**பெருந்தே னெனநெஞ் சுகப்பிடித் தாண்டநம் பெண்ணமிழ்தம்**
**வருந்தேல் அதுவன் றிதுவோ வருவதொர் வஞ்சனையே.** 394

பொ - ரை: ஒருவாற்றானும் திருந்தாத யான் பிறவித்துன்பத் தினின்றும் உய்ய வந்து நின்ற சிற்றம்பலவரது தெற்கின் கண்ணதாகிய பொதிய மலையினிடத்து ஒரு முயற்சியுமின்றி இருந்த நான் உய்யும்வண்ணம், வந்து தனது இணைந்த மலர் போலும் கண்களால் இனிய நோக்கத்தைத் தந்து, பெருந்தேன் போல இனிதாய் என்னுடைய நெஞ்சம் உருக என்னைப் பிடித்துத் தன்வசப்படுத்திய நம் பெண்ணமுதம் இது அன்று; இதுவோ வருவதொரு வஞ்சனையின் வடிவு; அதனால் நீ வருந்தாதொழி என்றவாறு.

பற்பல பிறவிகளை எடுத்தும் வினைக்கு ஈடாகத் துன்ப இன்பங்களை நுகர்ந்தும் ஒறுத்தும் திருத்தியும் திருந்தாத யான் உய்வதற்காக இத்தகைய உருமேனி தாங்கிச் சிற்றம்பலத்துள் நின்றான் என்பார். 'திருந்தேன் உய நின்ற சிற்றம்பலவர்' என்றார். திருந்தேன் - ஒரு முயற்சியும் இன்றி வாளா இருந்த யான்: வினைப்பெயர். (43)

## துனியொழிந்துரைத்தல்

### 'பெத்தம்போல முத்தியில் நின்றது'

அன்று களவுப்புணர்ச்சிக்கண் நம் குன்றினிடத்து அரியும் யாளியும் திரிகின்ற அரையிருள் யாமத்தே தமது வேலே துணையாக வந்து அன்பை நமக்குத் தந்த தலைவர்க்கு இன்று நாம் உடன்படாது நிற்றலாகாது; பெத்த நிலையில் உயிரோடு ஒன்றி நின்றதுபோலவே முத்தியிலும் நிற்றல் வேண்டுமெனச் சிவத்தலைவி உயிர்த்தலைவரோடு புணர்ச்சிக்கு உடன்படா நிற்றல்.

**இயன்மன்னும் அன்புதந் தார்க்கென் னிலையிமை யோரிறைஞ்சும்**
**செயன்மன்னுஞ் சீர்க்கழற் சிற்றம் பலவர்தென் னம்பொதியில்**
**புயன்மன்னு குன்றிற் பொருவேல் துணையாப்போம் மென்னிருள்வாய்**
**அயன்மன்னும் யானை துரந்தரி தேரும் அதரகத்தே.** 395

பொ - ரை: தேவர்கள் வணங்கும் வேலைப்பாடு அமைந்த நல்ல வீரக்கழலை அணிந்த திருவடியையுடைய சிற்றம்பலவரது தெற்கின்கண்ணதாகிய பொதிய மலையிடத்து மேகங்கள் படியும் மலையில் செறிந்த இருளில் அயலிலே தங்கிய யானைகளை ஓட்டி, சிங்கம் யானைகள் புகுந்த இடத்தைத் தேடுகின்ற வழியகத்து, பொருகின்ற தனது கைவேலையே துணையாகக்கொண்டு இயல்பாகிய நிலைபெற்ற அன்பை நமக்குத் தந்தவர்க்கு யான் இவ்வாறு உடன்படாது நிற்கும்நிலை என்ன? இது தகாது என்றவாறு.

களவுநிலை - குலமும் குடியும் இடமும் எடுப்பும் ஆகிய அகங்கார மமகாரங்களோடுகூடிய பெத்தநிலை. அந் நிலைக்கண் நமது தலைவர் காடிடையிட்டும் ஒருவழித்தணந்தும் பிரிந்து பகலினும் இரவினும் வர, அதனைப் பொருட்படுத்தாது கலந்த நாம் எல்லாம் கழன்ற இந்த முத்திநிலையில் இவ்வாறு துணி புரியாமல் நிற்றல் கூடாது என்று சிவத்தலைவி சிந்தித்துக் கலவிக்கு உடன்பட்டவாறு உணர்த்துவது இப் பாடல். (44)

## புதல்வன்மேல் வைத்துப் புலவிதீர்தல்

### 'முத்தியினும் சுகம் புதிதாய்த் தோன்றியது'

தலைவி தலைவன் கூடிப் பிரிந்தவழிப் பின்னும் பரத்தையிற் பிரிந்தானென்று கேட்டுப்புலந்து வாயில் மறுக்க, தலைவன் வாயிலில் விளையாடிய புதல்வனை எடுத்து அணைத்து முத்தம் கொடுத்து உள்ளே கொண்டுசெல்ல, தலைவி அவனை வணங்கி அணைத்துக்கொண்டு எல்லார்க்கும் பொதுவாகிய எச்சிலைக் கொண்டுவந்தோ எம்மைக் கொண்டாடுவது எனப் புதல்வன்மேல் வைத்து முத்திநிலையினும் புதிய சுகத்தைப் பெரிதாக விரும்பிப் புலவி தீராநிற்றல்.

கதிர்த்த நகைமன்னுஞ் சிற்றவ்வை மார்களைக் கண்பிழைப்பித்
தெதிர்த்தெங்கு நின்றெப் பரிசளித் தானிமை யோரிறைஞ்சும்
மதுத்தங் கியகொன்றை வார்சடை யீசர்வண் டில்லைநல்லார்
பொதுத்தம் பலங்கொணர்ந் தோபுதல் வாவெம்மைப் பூசிப்பதே. 396

பொ - ரை: தேன் நிறைந்துள்ள கொன்றைப்பூவையுடைய நீண்ட சடையையுடைய ஈசரது தேவர்கள் வந்து வணங்கும் வளமான தில்லைநகர்க்கண் உள்ள பெண்கள் அனைவருக்கும் பொதுவாகிய தம்பலத்தைக் கொண்டுவந்தோ புதல்வா! நீ எம்மைக் கொண்டாடுவது; அதுநிற்க ஒளி விடுகின்ற பற்களோடு கூடிய நின் சிறிய தாய்மார்களின் கண்ணைத் தப்புவித்து அவர் காணாவண்ணம் ஏதோ ஒருவகையான் நின்னை எதிர்ப்பட்டு

எவ்விடத்து நின்று எப்படி இதனை நினக்குத் தந்தான் என்றவாறு.

இங்ஙனம் சிவத்தலைவி உயிர்த்தலைவனை நோக்கிப் புதல்வன்மேல் வைத்துப் புலவிதீர உசாவியது, முத்திநிலையினும் புதிய சுகம் பெறுதல் வேண்டியாம் என்க. (45)

## கலவியிடத்து ஊடல்

### 'ஆனந்தம் குருவடியே பேணல்'

புதல்வன் வாயிலாகப் புக்குப் புலவி தீர்த்துப் புணர்கின்ற தலைமகனைத் தலைமகள் ஏதோ ஒரு காரணத்தால் வெகுண்டு உதைப்ப, அவள் சினம் தணிய வேண்டி, அவளது காலை அவன் தலைமேல் ஏற்றுக்கொள்ள, அது குறையாக அவள் புலந்து அழா நின்றாள் என அவ்விடத்துள்ளார் தம்முள் கூறாநிற்றல். அஃதாவது, சிவகுருவின் திருவடியைச் சிரத்தினும் சிந்தையினும் மலர்த்துதலே ஆனந்தம் என்பதனைத் தலைமகள் உணர்த்தினதை உழையர் உரையாநிற்றல்.

**சிலைமலி வாணுதல் எங்கைய தாகம் எனச்செழும்பூண்**
**மலைமலி மார்பின் உதைப்பத்தந் தான்றலை மண்ணர்தில்லை**
**உலைமலி வேற்படை யூரனிற் கள்வரில் என்னவுன்னிக்**
**கலைமலி காரிகை கண்முத்த மாலை கலுழ்ந்தனவே. 397**

பொ - ரை: யான் வெகுண்டு மலைபோலும் வளவிய பூணை உடைய தன் மார்பிலுதைக்க அம் மார்பு வில்போலும் ஒளி பொருந்திய நெற்றியையுடைய என் தங்கைமாரது என்று கருதித் தன் சென்னியைத் தந்தான்; அதனால் மன்னனது தில்லையில் உலையிலே கிடந்து தொழில்திறத்தால் மிக்க வேலாகிய படையை உடைய ஊரனைப்போலக் கள்வர் இல்லை என்று கருதிக் கலைகளால் நிறைந்த காரிகையின் கண்கள் கண்ணீர்த் துளிகளாகிய முத்தமாலையைப் பொருந்தின; அதனால் இவள் புலத்தற்குக் காரணம் வேண்டுவது இல்லைபோலும் என்றவாறு.

உயிர்த்தலைவனது மார்பில் சிவத்தலைவி தன்சேவடி சிந்தையில் மலரத் தகுவது என உதைப்ப, தலைவன் தன் சிந்தையில் மட்டுமன்று சென்னியிலும் மலரத்தகுவதென்று ஏற்றானாக. சிவத்தலைவி சிந்தையைப் பரசமயங்களாகிற பரத்தையர்க் கிடமாக்கினமையின் சென்னியில் ஏற்றான் என உட்கொண்டு, கண்முத்தம் சொரிந்து கலுழ்ந்து, திருவடியைச் சென்னியிலும் சிந்தையிலும் பேணுவதையே ஆனந்தம் என்று அறிவித்தவாறு. (46)

## முன்னிகழ்வுரைத்து ஊடல் தீர்த்தல்

**'அநாதியே இன்பமாவதயர்ந்து
இருந்ததற்கு எண்ணி இன்பமாயினது'**

*கலவியிடத்து ஊடாநின்ற தலைமகளுக்குக் களவுக் காலத்திலே புணர்ந்த முறையாக முன்நிகழ்ச்சியை உரைத்து, இன்பம் நமக்கு அநாதியானது, அதனை நாம் மறந்து இன்று இருக்கின்றமையையெண்ணி ஊடலற்று, பின் அதனைத் தீர்த்துக் கூடி இன்பமாயினதைத் தலைமகன் உணர்த்தாநிற்றல்.*

ஆறூர் சடைமுடி யம்பலத் தண்டரண் டம்பெறினும்
மாறூர் மழவிடை யாய்கண் டிலம்வண் கதிர்வெதுப்பு
நீறூர் கொடுநெறி சென்றிச் செறிமென் முலைநெருங்கச்
சீறூர் மரையத ளிற்றங்கு கங்குற் சிறுதுயிலே. 398

*பொ - ரை: ஏறிச்செலுத்தும் இளைய விடையை உடையோனே! கங்கை தங்கிய சடைமுடியை உடைய அம்பல வாணரது அண்டம் முழுவதையும் யாம்பெறினும் ஞாயிற்றினது வளமான கதிர்கள் வெதுப்பிய நீறு பரந்த கொடிய நெறியில் சென்று, இதோ மார்பகத்துச் செறிந்துள்ள மெல்லிய முலைகள் எம்முடைய மார்பினிடை நெருங்கச் சிற்றூரின்கண் மாந்தோல் படுக்கையில் தங்கிய இரவில் யாம் கண்டுகொண்ட சிறிய துயிலுக்கு ஒப்புக் கண்டிலேம்; அதனை நீ நினைத்துப் பார்ப்பாயோ எ-று.*

*இறைவன் படைத்த உலகமெல்லாம் பெறுதலால் வரும் இன்பமும் அத்துயிலான்வந்த இன்பத்திற்கு ஒப்பாகாது என்றதாம். யான் இன்று எய்த இருக்கும் இன்பம் நின்னோடு என்னிடை அநாதியே அமைந்தது; அங்ஙனமாக அதனை மறந்து ஏதோ புதியதுபோல எண்ணி ஊடுவதால் பயனில்லை; ஆயினும் இன்று புலத்தலாலும் தீர்த்தலாலும் அதனை எண்ணி இருவரும் இன்பமாயினமை அறிவித்தவாறு. (47)*

## பரத்தையைக் கண்டமை கூறிப்புலத்தல்

**'இன்ப சுகம் புணர்வு எங்குமாகி
மற்றொன்று அறியா வகையாய் நின்றது'**

*தலைமகள் தலைமகனை நோக்கி நீ பிறர்க்கும் இவ்வாறா தியோ என, தலைமகன் நின்னையல்லது வேறு ஒருத்தியையும் அறியேன் என, தலைமகள் நம் வாயிற்கண் நம் மகன் தேருருட்டி விளையாடினான்; அவனை எடுத்து மார்போடு அணைத்தாள் ஒருத்தி; அவளை யான் கண்டு இவன் உன் மகனே; இது உன் இல்லே; இங்கு வா என அழைத்தேன்; அங்ஙனமாக, யான்*

அவளை அறியேனாக வைத்து நீ உரைப்பது என்னை? என்று புலவாநிற்றல்.

ஐயுற வாய்நம் அகன்கடைக் கண்டுவண் டேருருட்டும்
வையுறு வாட்கண் மழவைத் தழுவமற் றுன்மகனே
மெய்யுற வாமிதுன் னில்லே வருகென வெள்கிச்சென்றாள்
கையுறு மான்மறி யோன்புலி யூரன்ன காரிகையே. 399

பொ - ரை: நமது கடைவாயிலில் கண்டு நின் மகனென்று ஐயுற்று வளமான சிறிய தேரை உருட்டும் மை பூசிய ஒளி பொருந்திய கண்ணையுடைய புதல்வனைத் தான் வந்து தழுவ, அதனைக் கண்டு யான், உன் மகனே; உறவும் மெய்யாகிய உறவே; இது உன் இல்லமே; வருக எனக் கூற, கையில் பொருந்திய மான்மறியை உடையவனது புலியூர்போலும் காரிகை வெட்கிச் சென்றாள்; அதனால் யானவளை அறியாதேனாக வைத்து நீ மாயம் கூறவேண்டுவது இல்லை என்றவாறு.

உன் மகனே, மெய் உறவாம், உன்னில்லே, வருக என்று சிவத்தலைவி செப்பியதால் சிவத்தலைவிக்கும் பரத்தையர்க்கும் இன்பசுகமும் புணர்வும் ஒன்றாய் வேறு அறியாவகையாய் இருந்தமை உணர்த்தியவாறு. வேறற்ற சிவானந்த வெள்ளத்துள் திளைப்பவருக்கு வேறு ஞானம் தோன்றாதாம். (48)

## ஊதியமெடுத்துரைத்து ஊடல் தீர்த்தல்

**'அருளுயிர் பூரண ஆனந்த மாறல்**
**சிவத்துக்கு உரைத்துத் திறம்பாது இன்பம்**
**ஆக்கி மிகவும் அருள்மிக மகிழ்தல்'**

திருவருளாகிய தோழி, உயிர் எல்லோருக்கும் பூரண ஆனந்த மாதலாகிய ஊதியத்தைச் சிவத்தலைமகளுக்கு எடுத்துரைத்து, இம் முறையினின்று சிறிதும் திறம்பாது எல்லாரையும் எல்லா வற்றையும் இன்பமயமாக ஆக்கி விடுதலன்றோ அவர்க்குக் கடமையாவது; அத்தகைய பேரருளை அன்பாக எண்ணி யான் புலக்கற்பாலேமல்லேம் என்று கூறி ஊடல் தீர்த்து உயிரையும் சிவத்தையும் இணையச்செய்து மிக மகிழ்தலாம்.

காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் தக்கோர்தஞ் சங்க நிதிவிதிசேர்
ஊருணி யுற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கு மூதியமே. 400

பொ - ரை: ஊரன் கைம்மாறு வேண்டாது கொடுத்தலின் காரோடு ஒப்பன்: விரும்பியவற்றைக் கொடுத்தலான் கற்பகத்தோடு ஒப்பன்; கற்றவர்க்கு

நற்றுணையாவன்; பாணர்க்குச் சுற்றத்தொடு ஒப்பன்; நினைத்ததையெல்லாம் கொடுத்தலால் புகழையுடைய நல்ல சிந்தாமணியோடு ஒப்பன்; அழகிய தில்லைக்கண் விளங்கும் கூத்தப்பெருமானது திருவடிக்குக் குஞ்சித பாதமாகி அணிசெய்கின்ற கொன்றைப் பூவின் தன்மையை உடையவன்; சான்றோர்க்கெல்லாம் சங்கநிதியோடு ஒப்பன்; நாட்டு மக்களுக்கும் பகைவர்களுக்கும் தப்பாது பயன்கொடுத்தலின் விதியோடு ஒப்பன்; சுற்றத்தார்க்கு அண்மையிலுள்ள ஊருணியை ஒப்பன்; அனைவருக்கும் பெறும்பயனாவன் என்றவாறு.

இங்ஙனம் பரத்தையர்மாட்டுச் செய்யும் கருணையும் பொதுமையின் நிற்பது ஒன்றன்றிச் சிவமாகிய உன்பால் செய்யப்படுவதுபோலச் சிறப்பின்பாலது அன்று என்று தோழி புலவி தணிவித்தாளாம்.

இங்ஙனம் திருவருட்டோழி, தற்போதம் அழிந்து சிவபோத மிக்குச் செய்வன யாவும் தவமாகப்பெற்ற உயிர்த்தலைவனை, இறுதிவரை உடனின்று ஆனந்தமயமாக ஆக்கிய சிவத்தலைவியோடு சேர்ப்பித்து, சுத்தகேவலமாகிய வரைவின்கண் துரியமாகிய பள்ளியறையிடத்து உணர்வு ஒன்றிக்கிடத்தலாகிய அமளியில் வற்றாத முற்றாத பேரின்பம் துய்த்து மூவாது வாழவைத்தவாறு திருக்கோவையாரின் உண்மையும் அதன் விளக்கமும் ஆகும். (49)

இங்ஙனம் அறிவால் சிவனேயான மாணிக்கவாசகர் அருளிய திருக்கோவையாரும், சுத்தாத்வைத முத்தியின்பமாதலை விளக்கும் உண்மையும், அதன் விளக்கமாகிய உரையும் இனிது முடிந்தன.

சிவம்

★★★

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

--ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள்.

★★★

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

*(எண் - பாட்டு எண்)*

-------------

மாணிக்கவாசகர் அருளிய

# திருக்கோவையார்

மூலமும் உரையும்




ச. தண்டபாணி தேசிகர்


GO 1010

நூல் கிடைக்குமிடம் :



கௌரா புத்தக மையம்
9, செ. ஜான் சர்ச் வணிக வளாகம்,
ராக்கின்ஸ் சாலை, திருச்சி - 1.
gowraputhagamaiyam@gmail.com
www.facebook.com/gowrabookcentre

கௌரா ஏஜென்ஸீஸ்
4a/186, வெங்கடரங்கம் பிள்ளை தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 5.
gowra09@gmail.com
www.gowrabookfair.in



